உ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ

# மகாபாரத அம்மானை

## முதற்பாகம்.

இஃது

அதிவீரராமன்பட்டினம்

மகா-ா-ா-ஸ்ரீ

**சைது முஹம்மது**

அண்ணாவியாரவர்களாலியற்றியதை

தஞ்சை கரந்திட்டாங்குடி

அஷ்டாவதானம்

**க. இராமசாமிபிள்ளையவர்களாற்**

பற்பல பிரதிகளைக்கொண்டாராய்ந்தும்

அவற்றுள்ளிறந்தனவற்றை புதிதாகவியற்றியும்.


தஞ்சைமாநகரம்

உதாரமங்கலம் தோட்டம்

மகா-ா-ஸ்ரீ சுவாமிநாத முதலியாரவர்கள்

குமாரர்

ம-ா-ஸ்ரீ மீனாக்ஷிசுந்தர முதலியாரவர்கள்

பேருதவியால்

தஞ்சை

பூரணசந்திரோதய அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1892-ளு மே-மீ

# சரித்திரம்.

இந்நூலாசிரியர் அதிவீரராமன் பட்டினம் முஜிலீம் குலதிலக
ராகிய மகா-ா-ஸ்ரீ சைதுமுஹம்ம தண்ணுவியார் என்பவரால் சுமார் 120
வருஷத்திற்கு முன் தனக்கு ஆப்த்தமுள்ள வருணகுலத்தி லோர்நண்பன்
தான் பழனிக்குக் காவடிப் பிரார்த்தனை செலுத்தவேண்டிய விஷயத்திற்கு
நண்புக்குரிய அண்ணுவியாரிடம் பிரயாணம் சொல்லிக்கொள்ள ஆ! ஆ!!
உமது பிரார்த்தனையை யேற்றுக்கொள்ளும் சுப்பிரமணியக்கடவுளே இங்
ஙனம் வருவாராகில் உம்முடைய பிரார்த்தனையை முடித்துக் கொள்வீரா
வென அப்படியேநண்பன் சம்மதிக்க ஒரு சுதினம்நியமித்து ஊரடுத்தகட
ற்கரைப் பக்கத்தில் விஸ்தீரணமான பந்தல் முதலாகிய மகுடதோரணங்க
ளும் மிகவிநோதமாயமைத்தும் அந்நகரத்திலும் பிரதேயங்களிலுமிருந்து
இவ்வியப்பைப் பார்க்க விருப்புற்று சகல ஆடம்பரங்களுடன் சிசுமுதல்
விருத்தாள்வரையிலும் அவ்விடம் வந்து கூடியபின்னர் பிரார்த்தனைக்குரிய
நண்பனும் இன்னும் பலருடைய பாற்காவடியுடன் அநேக வாத்தியகோஷ
ங்கள் சப்திக்க வரும்போது அங்ஙனம் அருட்பிரசன்ன வித்துவான் அண்
ணுவியார் தன்னைமறந்து ஆனந்தபாஷ்பம் இருவிழி யருவிகளோட நின்று
ஓர்பதிகம் அத்தருணமியற்ற அப்பதிகம் பத்தாவது செய்யுள்பாடிய தரு
ணம் அங்ஙனஞ் சூழ்ந்தசர்வஜீவர்களுக்கும் மயிற்குச்சலிட்டு நிர்ச்சிந்தராயி
னர். அப்போது எந்தைபிராணுகியகந்தக்கடவுள் மயூரவாகனசமேதரராய்க்
கோடிசூரியப் பிரகாசத்துடன் பசியவண்ண கலாபப் பிரவையொளிரப்
பந்தரிற்புக நின்றஜீவர்களுடைய சிற்றறிவிற்கு சொப்பனுவஸ்தையென
ப்புலப்படும்படி சென்றவிஞ்சையனுகிய சண்முகத்தெந்தையின் பூரணகடா
க்ஷமுடையமஹாவித்துவான் அண்ணுவியாரவர்கள்யென்பதை யாவர்களும்
அறிவர்களே. பின்னர் அவரால் தசபுராணங்களியற்றியதி லிப்பாரத அம்
மானையொன்றென்றறிக. இன்னுமவருடைய மகான்மியமெழுதச் செவ்
வையாய் நன்குணர்ந்திலேன் அடுத்த யுத்தகாண்டத்திற் சரித்திரம் விப
ரமாயெழுதப்படும்.

இப்பாரதஅம்மானை ஓலையிலிருந்தெடுத்து, வில்லி, நல்லாப்பிள்ளை,
பெருந்தேவர் இவர்களது பிரதிக்கிணங்கப் ஷெ ஓலையில்-வனாந்தனவற்றி
விறந்தனவற்றைப் புதிதாகச்சிலவன வியற்றியும் சுத்தப்பிரதியாக இரண்டு
பாகமாய் பிராஞ்சுஇங்கிலீஷ் கவர்ன்மெண்டிலும் ரிஜிஸ்டர்செய்தச்சிட்டிரு
க்கும் இப்புத்தகத்தையாவது அதிலடங்கிய பருவம் சருக்கங்களையாவதுயா
ரேனும் அச்சிடத்துணிவரேல் ரிஜிஸ்டர் நிபந்தனைக்குட்படுவார்கள்.

K. RAMASWAMY PILLAY,
Astavathanam,
*Proprietor of the Book,*
Tanjore.

உ

# சிறப்புப்பாயிரம்.

தஞ்சைமாநகரம், இயற்றமிழாசிரியராகிய
மஹா-வித்துவான்
மஹா-ா-ஸ்ரீ
மதுரைமுத்து, உபாத்தியாயரவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அலையுறச்சூ ழுலகிலைந்தா மறைதனைப்ப
ராசரன்றன் மைந்தனம்பொற்
சிலையுறச்செய் தானண்ணு வியர்தமிழும்
மானையதாச் செய்துபெண்ணை
இலையுறச்செய் தான்றிருத்திக்
கடிதாசி தனிலச்சிட் டெ[illegible]ஞ்ஞான்று
நிலையுறச்செய் தான்றஞ்சை
ராமஸாமிப்புலமை நிறையுள்ளானே.



ஷெயார் மாணாக்கருளொருவராகிய
ம-ா-ஸ்ரீ
கோதண்டராம பிள்ளையவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சீர்பெருகு வடமொழிப்பா ரதமதனை
வில்லிபுத்தூ ராழ்வான் றென்சொற்
பேர்பெருகு விருத்தப்பா வாச்செய்தான்
புலவரன்பு பெருக நோக்கி
ஏர்பெருகு மண்ணுவி யார்பினரம்
மானையென வியற்றத் தஞ்சை
நீர்பெருகு ராமசா மிக்கவிஞ
னச்சியற்றி நிலைசெய்தானே

தஞ்சாவூர் கோட்டை வடக்குவாசல்

S. P. G. ஸ்கூல் தமிழ் உபாத்தியாயர்.

மகா-ா-ா-ஸ்ரீ

## இராமய்யா வஸ்தாதவர்கள்.

இயற்றிய,

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சீர்கொண்ட அதிவீர ராமபட் டினத்திடை திகழும் அண்ணாவியென்போன்
ஆர்கொண்ட பாரதச் செய்யுளை யாய்ந்தரும் அம்மானை யாய்வகுத்தான்
ஏர்கொண்ட மாக்களு மெளிதா யுணர்ந்துய்ய இஞ்சிசூழ் தஞ்சை நகர்வாழ்
பேர்கொண்ட அஷ்டாவ தானிராமஸ்வாமி பிள்ளையச் சிட்டா னரோ.

திருவையாற்றின் மஹாவித்துவான்

மகா-ா-ா-ஸ்ரீ

## மூத்துஸாமி பாரதியாரவர்கள்.

இயற்றிய,

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னலங்கொள் செல்விநக ரண்ணாவி பாரதத்தைப்
புகழ்ந் தம்மானை
சொன்னலங்கொண் டியற்றினதைப் பிழையறப் பார்த்தச்சிட்டே
துலங்கச் செய்தான்
மன்னலங்கொ ளஷ்டாவ தானமுயர் சோதிடமா
வைத்திய மின்னும்
பன்னலங்கொண் டுநிபுணன் ராமஸ்வாமிப்பெரும்
பாக்கியவான் மாதோ.

தஞ்சை கரந்திட்டாங்குடி

ம-ா-ஸ்ரீ மருதப்பாச்செட்டியார் குமாரன்

## கண்ணுசாமிச் செட்டியாரவர்கள்

இயற்றிய

வெண்பா.

விண்ணு டமுதமென மேவம்மா னைப்பாவால்
அண்ணாவி யார்பா ரதமளித்தார்—மண்ணுடர்க்
கச்சிற் பதித்தளித்தா னட்டாவ தானிமன்
மெச்சு மிராமஸ்வாமி வேள்.



ஸ்ரீ







ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ

# மகாபாரத அம்மானை.

## முதற்பாகம்.

### விநாயகர் துதி.

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ்சொன்னநாள்
ஏடாக மாமேரு வெற்பாகவங்கூ ரெழுத்தாணிதங்
கோடாக வெழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

முருகார் மலர்த்தாம முடியோனை யடியார் முயற்சித்திறந்
திருகாமல் விளைவிக்கு மதயானை வதனச் செழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதேவருங்கை தொழுங் கோவை யுறவுன்னுவாம்.

## கலைமகள்.

நிலவுடலப் பவளவிதழ்த் தவளநகைக் குவளைவிழி நிகரிலாவெண்
சலசவெழிற் கலசமுலைத் தரளவடத் துடியிடைச்சி சமயமோங்கும்
அலகில்கலைக் கடவுண்மனக் கடவுளருட் கடவுளெனை யாளநாவிற்
பலபனுவற் றமிழ்மொழியப் பரவசமுற் றுறையனையைப் பணிகுவாமே.

## கடவுடுதி வெண்செந்துறை.

பூப்திகண்மெச்சுநவ புண்ணியபுராணமிதை
மாபதவியுண்டாக வண்மையுடன்பாடுதற்கு
சிந்தைகுடியிருக்குந் தெய்வமேயெந்நாளும்
புந்திபெருகப் புகலுவேனுன்றனையே
ஈரேழுலகமுட னெவ்வுலகுமெவ்வுயிர்க்குஞ்
சீராய்நிறைந்திருக்குஞ் செம்மறனைப்பணிவேன்
அணுவுக்கணுவா யகண்டமூதண்டமுமாய்க்
கணிதத்துடனமர்ந்த கடவுடனைப்பணிவேன்

## அவையடக்கம்.

சொல்லும்பொருளணியுந் துறைநோக்குமாப்பறியேன்
கல்லாடங்காரிகைதொல் காப்பியமுங்கற்றறியேன்
வட்டினியல்பு மெழுத்துத்திரிபறியேன்
பாட்டியனூலாகியவெண் பாவின்றளையறியேன்
கோகனகப்பூவெதிராய்க் கொட்டியதுபூத்தாற்போற்
றோகையுடன்வான்கோழி தோன்றியெதிராடுதல்போற்
கஞ்சமலர்க்கண்ணனுட கைத்திகிரிக்கொப்பாக
மஞ்சன்விளையாடு மாத்திகிரிவைத்தாற்போல்
கவிச்சக்கிரவர்த்தியெனுங் கட்டாம்புலவர்கண்முன்
செவிக்கிதமாமென்றே சிறியேன்புகலலுற்றேன்
சிற்றறிவும்பேறறிவுஞ் செகத்திற்பிரித்தறியக்
கற்றறிஞர்முன்பாகக் கல்லாதான்பாடலுற்றேன்
மைந்தர்கனிவாய் மழலைமொழியாலுளறத்
தந்தைசெவிக்கிசைந்து தான்கேட்கும்வாறேபோல்
நாரணஷ்ணுஜி நன்மறையோனுலமைத்த
பூரணச்சந்ரோதயமால் பொங்கும்பிரசினியல்
கற்றோர்கள்யாருங் கருணையுடன்கேட்டுகந்து
பெற்றாரைப்போல பிழைபொறுத்துக்கொள்வாரே

## ஆக்கியோன்.

தென்மதுரைநாடனுயர் சிங்கப்பதாகையுளான்
தன்மதுரப்பாட றனைவிரும்பிக்கூறலுற்றும்
சமரப்பசும்பரியான் றூங்கியவெண்டந்தியுளான்
அமுதமதுரகவி யன்பாகப்பாடலுற்றேன்
பற்சமயமொன்றாய்ப் பயில்வனபிமாமரபோன்
தற்சமயந்தன்னிற் றசபுராணம்பகர்ந்தோன்
சந்தமிகுஞ்செல்விநகர்ச் சைதுமுஹம்மதென்போன்
இந்தப்புராணம் இயம்பினன்காணம்மானாய்

## அரங்கேற்றியோன்.

மண்ணேழின்மிக்க வளம்பெருகுமேனாடு
எண்ணேழின்மிக்க வெழிற்சோழன்மண்டலங்காண்
மூவுலகுமெச்சு முடிச்சோழன்மண்டலத்தில்
நாவிலுயருபுண்ய ராசியெனுநன்னாட்டில்
எம்மாதந்தோரு மெழிலிமிகக்கவிந்து
மும்மாரிபெய்யு முறையசம்பைநாடதிபன்
மேழிக்கொடிக்கதிபன் வீரமகிபன்குமரன்
வாழிப்புவிபுரக்கு மங்கையபூபாலகன்றான்
மூவேழுவள்ளலுமோர் மூர்த்திகரமானாற்போல்
பாவலரைக்காக்கப் பண்பாயவதரித்தோன்
வாடும்பயிர்க்கு மழையுதவும்வாறேபோல்
நாடும்பலபொருள்க ணன்கொடையாய்த்தானளிப்போன்
அங்கங்குளிர வகங்குளிரவேயார்க்குந்
துங்கமுடனிக்கதையைச் சொன்னானரங்கேற்ற
முத்திக்குப்பாதையிக மோக்ஷகதைசெவிக்குத்
தித்திக்கும்வாறாகச் செப்பினதையிப்புவியில்

## அச்சிற்கியற்றியோன்.

இஃது கண்டியூர்

மகா-௱-ஸ்ரீ பாக்ஷாராவுத்தர் அவர்கள் இயற்றியது.

---

மன்னவர்கண்மேவுதஞ்சை மாநகரினில்வாழ்வோன்
கன்னாவதாரன் கனகேந்திரன்புதல்வன்
பொன்னார்வசிக்கும் புயத்தான்புலவர்மெச்சுஞ்

சொன்னத்தியாகன் றுரைராஜர்போற்றும்வலன்
பஞ்சவிலக்கணத்தும் பல்சாஸ்திரநிபுணன்
துஞ்சாதவிழ்தமுறைச் சோதிடத்திலுந்திடவான்
விஞ்சையுணர்வோன் மிகுகாவியவீரன்
தஞ்சைநகரச்சுத் தலைவன்பிரதானி
சட்டவிஞ்சையோக சரஹணபவனருளை
இட்டமுறப்பெற்றே னீரெட்டவதானஞ்
சட்டமுடன்ராஜ சபைசிறப்பச்செய்யும்வலன்
துட்டநிக்கிரகன் றுரைராமஸாமியென்போன்
ஆவலுடன்செல்விநக ரண்ணவிசெய்தஇதைப்
பூவுலகோர்நன்றாய்ப் புகலப்பொருள்விளங்க
நாவலர்கண்மெச்ச நன்றாயாராய்ந்தியற்றிப்
பாவனைவாழச்சிற் பதித்துவிட்டானம்மானை

## ஆதிபருவம்.

---

## குருகுலச்சருக்கம்.

---

ஆக்குமா றயனா முதலாக்கிய வுலகங்
காக்குமாறு செங் கண்ணிறைகருணையங்கடலாம்
வீக்குமாறர னமவைவீந்தநாண்மீளப்
பூக்குமாமுத லெவனவன் பொன்னடிபோற்றி

### நூலின்வரலாறு. வெண்செந்துறை.

---

சந்திரகுலந்திற் றரித்தகுருகுலமும்
வந்தமுறையின் வகையுந்தொகையுரைப்பேன்
ஈசன்முடியி லிலங்கும்பெருமையுளான்
தேசிலரன்விழியாய்ச் சேர்ந்திருக்குஞ்சோமனுமாந்
தொல்லாழியைக்கடையத் தானுதித்தின்றவன்காண்
வில்லாலுயர்ந்த விதுவரசன் றன்பெருமை
வல்லாளராலும் வகுத்துரைக்கவொண்ணாதே
அல்லுக்கிறைவ னமுதகலையுடையான்
நாளுக்கோர்நண்பன் நலத்தவழகுடையான்

கோளிற்சிறந்தே குலாவுமெழிற்சந்திரனும்
வேளுக்குமேலாய் விரிந்தமதிக்குடையோன்
ஆளுக்சழகா யரும்புதனைப்பெற்றான்காண்
இந்துசுதன்புந்தி யினிதேன்மலர்க்காவில்
விந்தையுடனேயிருக்கும் வேளைதனிலேமகவான்
சேயனிரவியுறுந் தேர்வருதென்றெண்ணமற்
காயமெதிர்நின்றான் கதிரிட்டசாபமதான்
மங்கைவடிவா மலர்க்காவில்வந்தெதிர்த்தான்
இங்கிவனுங்காண வேந்திழையுமாலானாள்
இந்திரன்பேர னியல்பானவேந்திழையைச்
சந்திரன்மைந்தன் றயவாகவேபுணர்ந்தான்
இருவருடலுயிரு மேகவடிவாகவொரு
புரூரவானென்றோர் புரவலனைப்பெற்றார்காண்
புதன்மைந்தனான புரூரவானென்போனும்
மதன்போலழகுடையான் வான்வலியிற்கந்தனெப்பாந்
திக்கெல்லாம்போற்றவருஞ் செங்கோனடாத்தியவன்
சக்கரவர்த்தியென்ற தடாண்மைபெற்றான்காண்
தேவரிடுக்கண் டினந்தோருமேகளைந்து
மூவருமெச்ச முடிபூண்டிருக்கையிலே
மாயாசொரூபமுடன் வந்தவுணன்பொன்னுலகில்
காயாமலர்மேனிக் கண்ணனுடவூருவினில்
உண்டாய்ப்பிறந்த வுருப்பசியின்பேரழகைக்
கண்டானிரதமதிற் கைப்பிடித்துக்கொண்டகன்றான்
ஆகாயமீதே யவன்கொண்டுசெல்கையிலே
கூகாவெனக்கதறிக் கூப்பிட்டாளும்பரொலாம்
அஞ்சினாரந்த வவுணனுடனெதிர்க்கத்
தஞ்சமென்றபுந்தி தனையனிரதநடத்திச்
சாமமிரண்டாய்த் தனுவாளிபோர்புரிந்து
சேமத்துசமறுத்துத் தேர்ப்பாகனையும்வெட்டி
வில்லறுத்துநாணறுத்து மெய்முழுதும்புண்ணாக்கி
வல்லவுணனையழித்து மாதுதனைமீட்டுவந்தான்
வந்தபொழுதே மகபதியுங்கண்டுகந்து
அந்தமிகும்பெண்ணை யவர்க்கேவதுவைசெய்தான்
அலவன்மகன்சுதனு மரியவுருப்பசியுங்
கலவியனுபோகக் காமக்கடல்குளித்தார்
அப்போதிருவருக்கு மாயுவென்றவோர்புதல்வன்

துப்பாய்ப்பிறந்தவனூர் தொல்லுலகையாண்டிருந்தான்
ஆராகஷிகட்டி யரசாளுமாயுவுக்குப்
பாராகஷிகொள்ளவெகு பாலன்பிறந்தனனே
மகுடமுடியரசர் வந்தேபணிந்தேற்ற
நகுடனென்றநாம நராதிபனுமானனனே
ஆயுசுதனகுட னம்புவியையாளுமந்நாள்
தேயுமகிழச் சிறந்தமகனூறுசெய்தான்
னூறுமகஞ்செய்தா னுவலிந்திரபதியாம்
பேறுமகபதிப்பேர் பெற்றிருந்தானம்மானாய்
இந்திரபதம்பெற்று னிமையோர்க்குமேலானன்
சிந்தைகளிகூர்ந்தான் றேவவுலகிற்பதியாய்
ஓர்நாட்பவனியிலே யுல்லாசமுண்டாகிச்
சீர்நாட்டுமன்னவனைச் சேரப்புலோமிசையாள்
வரிட்டுப்பார்த்தா ளிவனுமெதிர்பார்த்தான்
சர்ப்பசர்ப்பவென்றான் றுங்கும்ரிஷிசினத்தாற்
சர்ப்பமதானான் றனையன்யயாதியென்போன்
பூவுலகமெல்லாம் பொருந்தவேயாண்டிருந்தான்
காவலர்களேற்றக் காசினியையாளுமந்நாள்
யயாதியெனுமன்ன னரும்வேட்டைதானாட
வியாகுலமில்லாதே விணைந்தான்றளத்துடனே
திட்டமுடன்கானிற் சிலவேட்டைகளாடித்
துட்டமிருகத்தைச் சுடர்வாட்கிரைகொடுத்தே
வந்ததளமந்திரிகண் மற்றோரையும்பிரிந்து
நந்தூர்வனத்தினிடை நாவறண்டுமன்னவனும்
எண்ணத்தையொக்கு மிவுளிதனைநடத்தி
தண்ணீரிருக்குந் தடந்தேடிச்செல்கையிலே
இடிந்ததுரவொன் றெதிராகக்கண்டவனு
நடந்தேதுரவையெட்டி நாவறகஷியாற்பார்த்தான்
அந்தத்துரவி லரிதாயொருமுழக்கஞ்
சிந்தனைகொண்மன்னன் செவியினிடங்கேட்டதுவே
என்னுவிடரோ விதிலென்றிவுளிவிட்டு
அன்னதொருகூப மதிற்குனிந்துபார்க்கலுற்றான்
காதிற்பணியுங் கழுத்திற்சரப்பணியுஞ்
சோதிப்பிரகாசந் துன்னுமுகந்தோன்றியவே
செங்கழுநீர்ப்பூவனைய தேசுடையபொற்கொடிக்கு
அங்கைதனிற்சேர வரியகயிரொன்றவிட்டான்

கூவலுன்மின்னாள்கயற்றை கொண்டுவெளிவந்ததற்பின்
ஆவலுற்றமன்னவனே ராடையவளுக்கீய்ந்தான்
தாயாருதந்தையெவர் தன்னூரின்பேரோது
நீயாரெனக்கே நிகழ்த்தென்றான்மன்னவனும்
மன்னாகேளென்றாதை மாட்டினிறைபளிங்கு
மின்னாருநாலும் விளையாடவாவிதனிற்
கூட்டியேவந்து குதித்துவிளையாண்டோ
நாட்டியவுணருட நாதன்மகளென்கலிங்கந்
தன்னையணிந்தா டடைசொன்னேன்கேளாமற்
பொன்னையனையாள் புனைந்தாண்மனம்புழுங்கி
மன்னன்மகளென்று மதியாதுதாசனமாய்ப்
புன்மொழிகண் மெத்தப்புகன்றேன்பொருக்காமல்
எல்லோருங்கூடி யெனைப்பிடித்துமித்தரவிற்
பொல்லார்கடள்ளிவிட்டுப் போனார்காண்புண்ணியனே
தள்ளும்பொழுதே தவறிவிழுமளவில்
நள்ளிவடவிழுதென் னன்கரத்திற்சிக்கியதே
அந்தக்கொடிபிடித்து யானிறைஞ்சுநேரமிதில்
உந்தனருளாலே யுற்றவெளிவந்தனென்றாள்
வெள்ளிமகளென்றே விளம்பினதைக்கேட்டரசன்
உள்ளநடுங்கி யுணர்வழிந்தானம்மானைப்
மன்னன்பயந்தவித மாதுநல்லாளுணர்ந்து
என்னபயமுமக்கு வேதுக்குமஞ்சாதீர்
உன்னையலாதன்புக் குயிர்த்துணையும்வேறுளதோ
என்னையோராடவரு மின்றளவுந்தொட்டதில்லை
தொட்டாய்முகம்பார்த்தாய் சோரபிமானங்காத்தாய்
மட்டாருந்தாரான் வதுவையெனைச்செய்யுமென்றாள்
அந்தமொழிகேட்டு வாரணங்கேயுன்பிறகே
வந்தாலுனக்கே வசையலவாமாதரசே
புகரோனிடத்திலேநீ போயுணக்கச்சம்மதித்து
மகிழ்வாயழைத்தானால் வந்துமணஞ்செய்வனென்றான்
நல்லதென்றுமாது நரபதியைவிட்டகன்று
வல்லபளிங்கிடத்தே வந்துபட்டபாடுரைத்தாள்
அப்போதுகோப மழல்போற்பொறிபறக்க
இப்போதவுணனைக்கொண் டிங்குவாவென்றுரைத்தான்
கவிசொல்லக்கேட்டுக் கடுகியேதூதுவன்போய்
அவியுநாளாச்சே யவுணாவாவென்றழைத்தான்

அசுரர்க்கிறைகேட்டு மையாவென்கூறமென்றான்
விசேஷமறியேன்பளிங்கு வெகுண்டேதோகூப்பிடென்று
சொன்னானீதாமதித்தால் சுங்கனிங்குவந்திடுவான்
என்றானவுண னிளைப்பெடுக்கவோடிவந்தான்
அன்னன்மயங்கி யலைந்துலைந்துவந்ததுவைக்
கண்ணிற்றழல்பறக்கக் கண்டானேசுங்கனவன்
காக்கும்பொருளே கடவுளேதேசிகனே
ஏர்க்காதுனக்கடிமை யென்னகுறைசெய்தனென்றான்
எந்தமதத்தாலே யென்சுதையைக்கூவலிலே
யுந்தன்மகடள்ளினது வுண்மைவழிகூறமென்றான்
ஐயனேயானென் றறியேனிதுகருமந்
துய்யனேநின்சுதையைத் தூஷணிக்கும்பெண்கடனைத்
தானடிமைகொள்வீர் தப்பாதென்றானையிட்டு
ஈனமுறுதென்னை இரக்ஷிப்பாயென்றுசொல்லி
நீராடப்போன நிருபன்மகடனையும்
வாராருமற்றுமுள்ள மங்கையருந்தானடிமை
என்றொப்பிவைத்து விருதாளையும்பணிந்து
அன்றுபிழைத்தாற்போ லறன்மனையிற்புக்கிருந்தான்
யயாதியெனுமன்னன் யன்னகரிற்சேர்ந்திருந்து
வியாதிபெருத்தான் விறன்மன்மதன்கணையால்
அன்னத்துவேஷமுட னணியாடையுமிழந்தான்
வின்னமிருந்தான் மெலிந்தான்பரதவித்தான்
காதலென்றவெள்ளக் கடலிற்கதிமாறி
போதமறந்து புலம்புகின்றகாலமதில்
நற்கோனெனும்புகரோன் நன்மகட்குமேவதுவை
விற்காண்யயாதிபனை விரைந்துவரத்தூதுவிட்டான்
சொன்னதுகேட்டந்தத் தூதருடனேகிவந்து
அன்னதொருசுங்க னருட்பதத்திலேபணிந்தான்
பாதம்பணிந்தயயா பார்த்திபனேயென்மகட்கு
நாதனீயாவாய் நடாத்துமுகூர்த்தமென்றான்
ஏதென்றுகேட்பளவி லென்மகளையல்லாது
மாதொன்றைவேறு மணமுடிப்பாயாமாகிற்
கொடியதொருசாபங் கொடுப்பேனுனக்குமென்று
கடியமணமுடித்தான் கன்னிகையைமன்னனுக்கே
அவுணன்மகடனைத்தா னரணங்குக்கேதொழும்பாய்
கவனமுடன்செய்யவந்தக் கன்னிதனைக்கூட்டிவிட்டான்
சுங்கனவன்பெற்ற சுதையுஞ்யயாதிபனும்

அங்கமுடன் வாழ்ந்தா னரண்மனையிற் புக்கயபின்
மகிழ்வாயிருவோரும் வாழ்ந்திருக்கு நாளையிலிப்
புகரோன் மகளிரண்டு புத்திரனைப் பெற்றெடுத்தாள்
மாதே நின்றோழி மடந்தையர்க்குச் சோலையிலிப்
போதே வெவ்வேருய்ப் பொருந்தமனை கட்டிவைப்போம்
என்றிவட்குச் சொல்ல விளங்கொடியுஞ் சம்மதிக்க
மன்றலணி மார்பன் மதின்மனைகள் கட்டிவைத்தான்
பார்க்கரன் பெற்றதொரு பைந்தொடிக்குத் தோற்றுமன்
மார்க்கவவுணன் மகடனையுமே புணர்ந்தான்
ஆழிபுவிமன்ன னவுணன் மகனோக்காற்
ரோழிசூலானவிதஞ் சுங்கன்மகளறிந்தாள்
தந்தைபுகர்க்கிந்தத் தாதி சூலானவிதம்
விந்தைதனைக்கேட்டு விருத்தனெனச்சபித்தான்
வெள்ளிசபித்த விதமறிந்துமேயரசன்
தள்ளரிதிச் சாபமென்றே தயங்கினனம்மானுய்
திரங்கியமெய்யுஞ் செவியடைப்புங்கண்மாழ்கி
நரம்புவெளிதோன்றி நடுக்கிருமலானன்காண்
பளிங்குமகடனது பத்தாவுக்கிக்கதியை
விளங்கிப்பிதாவான வெள்ளியிடம்வந்துநொந்தாள்
விருத்தனெனச்சபித்தாய் வேந்தன்பிழைபொருத்து
திருத்தமுடனிச்சாபந் தீர்த்தருளுமென்றாளே
தன்புருடனென்வார்த்தை தள்ளியேசெய்தபிழை
அன்பிலிராம லாரணங்கேநீயுரைத்தாய்
எண்ணமிதோராம லிரக்கமறச்சபித்தேன்
விண்ணவர்களாலும் விலக்கரிதுமீளாதே
என்றுபுகரோ னினியேதுபாயமொன்று
நன்றுனதுபத்தாவை நன்மையுடனேயணுகி
சம்மதிக்கவேமுதுமை தன்னைக்கடன்கொடுத்து
இம்மையிலேமீண்டு விவன்வாங்கிக்கொள்கவென
சொல்லென் றனுப்பவிதைத் தோகையரும்வந்துசொல
நல்லதென்றேராஜன் நாயகியைக்கொண்டாடி
தோழியுமிக்கச் சுதனென்றுபெற்றெடுத்தாள்
வாழிசெறிபூருவெனு மைந்தன்வளர்ந்தானே
மூத்தமகன்றன்னை முதலோன்முதுமைதனை
எத்தேயுனது விளமையெனக்கீயுமென்றான்
உரவனுரைக்கவிது வுற்றபுதல்வன்மறுக்க
பரவியிளையாள் பயந்தமகனைத்தேற்றி

தந்தைசொலைமிக்கத் தனிமந்திரமுளதோ
மைந்தனேயென்றான் மதல்வனிளமைகொடுத்தான்
இளமைதனைப்பெற்று னிராஜனுலகாண்டான்
வளமைசெறிமாதருடன் வாழ்ந்திருந்தானம்மானாய்
இளமைதனையீய்ந்த வினியசுதன்பூருவுக்கு
தளர்முதுமைகொண்டிளமை தானீய்ந்துடல்குளிர்ந்து
இன்னாளிளமை யெனக்கீய்ந்துநோயதனில்
உன்னாகநொந்தாயே யுற்றசுதனீயெனவே
தாருமுடியுந் தனிக்குடையுஞ்செங்கோலும்
ஆரும்வணங்க வாசையவனுக்கீய்ந்தான்
தன்சொன்மறுத்த தனையர்களைப்பார்த்து
நின்சொன்முறையி னிருபர்முடியியற்கை
மூவேழ்த்தலைமுறைக்கு முற்றுமற்போகவென்று
மாவேகமாய்ச்சபித்தான் மாதாவைப்பெற்றோன்போல்
உங்களுடகால்வழிக ளோதிவிக்குமென்றெழிலாய்த்
துங்கமுடனாயுதங்கள் சொற்பயிற்றவேகடவீர்
என்றிங்கிருவருக்கு மிச்சாபமேகொடுத்து
மன்றலிளைய மகன்றனையுமே வாழ்த்தி
உன்னரசின்கீழே யுலகங்குடியிருக்க
நன்னயமாவாழ்கவென்றே ராஜனிதுபுகன்றான்
அந்தப்படியே யவனுமுலகாள
எந்தப்புவியு மிவன்குடைக்கீழாய்வாழ்க
சுரருமகிழ்ந்திடப்பூ சுரர்சமுகங்கொண்டாடப்
பரதனெனப்பூருவொரு பாலகனைப்பெற்றான்காண்
வீரம்விசையம் மிகுத்தபலவானா
ஆருமதிக்க வரசாண்டிருந்தானே
அக்காலந்தன்னி லசுராதி மாபடைகள்
திக்காதியாவுஞ் செறுமினார்பொன்னுலகில்
தானவரும்வானவருந் தாவியமர்புரிந்து
வானவரும் வாசவனும் மாறிப்புறங்கொடுத்தார்
பொன்னாட்டிலேயசுரர் போகச்சிறைபிடித்தே
அன்னாட்டைநீத்தே யகன்றார்காணம்மானாய்
சூரசம்காரனைப்போற் றுரிததநடத்தி
வீரனசுரர்குலம் வேரறுத்தானிப்பரதன்
பிடித்தசிறையும் பெரும்பொருளுமேதிருப்பிக்
கொடுத்தான்மகபதிக்குக் கோலமிகும்பரதன்
முக்குலத்தோரு முறையாயடிவணங்க

எக்குலமும்போற்றவெழி லிந்துகுலத்தோனிருந்தான்
பரதனெனுமிக்கதொரு பார்த்திபனுக்கன்னுளில்
வரதனெனுமத்தி மன்னனுதித்தானே
அத்தியென்னுமன்னனுல காளுமவன்றனக்கு
புத்தியுடைய புதல்வன்பிறந்தானே
எத்தொழிலும்வல்ல ரியலாயுதத்தொழிலும்
மத்தொழிலுந்தேர்மா மதமாப்படைத்தொழிலும்
அரசர்தொழில்சுசதி யாவுமுணர்ந்ததினுற்
குருவென்றவன்பெயனாக் கூப்பிட்டாரம்மானுய்
வருகுலத்தோர்யாவனையும் மாறவேவென்றதனுற்
குருகுலத்தோனென்றுலகங் கூறியதேயம்மானுய்
அந்தமரபி லமுதத்தினை நடுவிற்
சந்திரனைப்போலுதித்த தனையனவன்சந்தானு
வில்லாற்சிலையால் விறல்வேற்கதாயுதத்தால்
மல்லாலெவர்க்கும் வலுவுளவனுனனே
சந்தானுவென்போன் றரணிபுரந்திடுநாள்
சிந்துவெனச்சேனையுடன் சென்றுனேவேட்டைசெய
காமனனையான் கனவேட்டைதானுடி
தாமுந்தளமுந்தவித்துத் தவனமுற்று
நானமுறுகங்கா நதியருகாச்செல்கையிலே
மானனையகண்ணுள் வடிவாலரம்பையனா
வெல்லுமெழிலாண் மின்னும்பணியிலங்க
முல்லைநகையாண் முழுமதியைப்போன்முகமாய்
தங்கச்சிலைபோல சந்தனத்தினீழலிலே
கங்கையுருக்கொண்டாசன் கண்முன்னேநின்றுளே
அற்பவிடாய்மீதி லாசையொழிந்தணங்கின்
பொற்புனலாடன்னைப் பூவிழியினுலருந்தி
பூமகளோவந்தப் புரமகளோபூமனுட
நாமகளோ வாமி நதிமகளோநாமறியோம்
என்றஞ்சிநிற்க விருகானிலந்தோய்ந்து
மன்றன்மலர்வாடி வன்கணிமைப்பறிந்தான்
ஐயமகன்று னகிலத்தணங்கிதென்று
தையலேயான்செய் தவமோ நீயிங்குவந்தாய்
வேந்தனுமைப்ப விழியிமைத்து நெஞ்சிளகி
சார்ந்ததயன்சாபமென்று தன்றுயரந் தானீங்கி
நின்றபடிகண்டு நிகரிலாப் பொற்புடையாள்
ஒன்றீனமில்லாத வுத்தமியென்றுட் கருதி

என்னிலுயர்ந்த விராஜாக்கள் வேறுமில்லை
கன்னியேநீயொப்பிற் கல்யாணஞ் செய்வனென்றான்
நாணிநடுங்கி நல்லுருவ மெய்மாறி
தோணவறிந்துவொரு சொல்லரசனோடுரைத்தாள்
எரிந்துன்னுடனடங்க வேதேது செய்தாலும்
புரிந்தல்பொறுத்தாற் புணர்வேனுனது புயம்
மறுத்தென்செயறவிழ்த்தான் மன்னுவனைப் பிரிந்து
பிறப்புமொழிந்தேயின் பேதித்துப் போவெனென்றாள்
என்னரசும்வாழ்வு மியல்புஞ் செங்கோன் முறையு
நின்மொழித்தட்டாம னிறுத்து வேனென்றுரைத்தான்
மாதுவசமானான் மன்னவனுங் கொண்டேகி
வேதமுறைநீதி விவாகமுடித்தான் காண்
இன்பம்பெருக விவர்வாழ்ந்திருக்கு மன்னாள்
அன்புடனேகர்ப்ப மமர்ந்தாளே யம்மானாள்
பருவநிறைந்துபெற்ற பாலகனைத் தானெடுத்துப்
பொருவுபுனலிற் புதைத்துவிட்டாள் பூவறிய
அன்றிந்தச்சேதி யரசனுக்குமேயுணர்க்க
ஒன்றுபுகலாதிருந்தா னுறுமனைவிகாதலினால்
பண்டையிலுமன்பு பதின்மடங்கதாயதிபன்
ஒண்டொடியைக்காமுற் றுருகியணைந்திருந்தான்
பின்னுமறுசேயைப் பெற்றபெற்றநாட்களிலே
முன்னுநடத்து முறைப்படியே தான்வதைத்தாள்
அன்னகர்மாக்க ளயர்ந்து நடுநடுங்கி
மன்னவன்முன்சொல்லவந்த வாய்மைதவறுதிருந்தான்
குற்றமில்லாத குருகுலத்துமன்னனுக்குப்
பெற்றவெழுசுதனைப் பிழையாமற்றாய்வதைக்க
பாலர்பலபெற்ற பரிவுடையமங்கையர்கள்
சாலவெகுபேர்க்கிதனைச் சாற்றவெருவினரோ
நாடுநகரு நடுங்கியேநொந்தழுது
வாடுஞ்செயலமைச்சன் மன்னன்றனக்குரைப்பான்
என்னமயக்கமுமக் கெய்தியவோமன்னவனே
கன்னியிவளலது காரிகையார்கிட்டாதோ
மூதண்டலோக முழுதுஞ்செங் கோனடத்துங்
கோதண்டவீர குருகுலத்திலேயுதித்த
எழுமகவுகளை யேன்வதைக்கப்பார்த்திருந்தீர்
வாழியொருசேய்தனக்கு மன்னர்மாதவங்கள்
செய்துகிடைத்தோருஞ் சேய்கிடையாதேங்கினரும்

மெய்திகிழப்பிண்டம் விழுங்கிச்செனித்தோரும்
இந்தப்படிக்கே இராஜாக்கண் முன்பினுமாச்
சந்ததியைப்பெற்று தலம்புரக்கவைத்திருப்பார்
தேடிக்கொளலாமித் தேவியுமக்காகாதாள்
கூடிலிவளைநீக்குங் குழவிபழிசெய்தாளே
காளியோநீலி கனபேயோரக்ஷியோ
ஆளியனையா யவளாசைவிட்டுவிடு
இனிமேற்சுதன்பிறக்கி லிப்படியேகொல்லாமன்
மனதிரங்கியேகாத்து வைப்பாளோபாராள
இன்றிந்தவார்த்தைக் கிசையாளேயாமாகில்
அன்றுபிடித்த வடவியிலேயோட்டிவிடும்
கொள்ளக்கிடைத்திடுமோ கொற்றவனேபுத்திரர்கள்
எள்ளத்தனையுமன மீரமுமக்கிலையோ
என்றேயமைச்ச னிருவிழிகண்ணீர்சொரிய
கன்றியேராஜன் கலங்கிமனந்தளர்ந்தே
நன்றென்றமைச்சனுக்கு நன்குபடப் புலர்ந்து
அன்றமுதன்மன்ன னருஞ்சுதன் மேலாசையுற்று
அழகுக்கழகா யமுதத்திரள்வடி வாய்க்
குழையிற் கயல்பாயுங் கொம்பனை யாடன்னுடனே
கூடிக்கலர்ந்திருந்தான் குருவங்கிஷ பூபன்
நாடியவளுமிரு நான்காஞ் சூலானளே
மன்னவனுங்கண்டே மாதினிட பாங்கியற்கு
அன்னசுதன்பிறந்தா லாரணங்குகைப்படுமுன்
என்னிடத்திலச்சுதனை யீட்டுமெனச் சொல்லிவைத்தாள்
கன்னிசுதன்பெற்றள் கைப்படுமுன் கொண்டுவந்தாள்
இதமாய்ச்சுதனை யெடுத்தே வசப்படுத்தி
பதமாமனையாள் பதத்தாமரை பணிந்தான்
நிறுத்தெங்குருகுலத்தை நின்கோபத் தீயிலெனை
வெறுத்தாலுநன்றுசுதன் வேணுங்காண் பெண்ணரசே
பொறுத்தேயெனக்கிப் புத்திரனைத்தந்துதவு
மறுத்தொன்றுஞ்சொல்லாதே மாதே மனதிரங்காய்
என்றிறைஞ்சிமன்ன னிரப்பதவள்பார்த்து
நன்றனதுவாய்மை நழுகினாய்மன்னவனே
உனக்குமெனக்குமினி யொட்டுண்டோவெட்டனில்லு
கனக்கவுனைப்பிரியுங் காலமிதென்றேதலுற்றள்
சித்திரவடிவே தேன்மொழியேயென்னுயிரோ
புத்திரனைக்கொன்றாற் புகழுண்டோவுந்தனுக்கு

சற்றுஞ்சுதன்மேற் றயவுனக்குத்தானிலையா
உற்றின்றெனைப்பிரிய வுனக்குமனங்கூடிடுமோ
மாதேநீயாரு வந்தவரலாறேதிப்
போதேபுனலிற் புதைப்பதேன்புத்திரனை
நண்பனேகேளாய் நன்வரவுநின்வரவும்
பண்பிதழியாத்தியொடு பான்மதியமேகமழும்
ஈசன்முடிமீ திருக்குமெழிற்கங்கையுநான்
வீசுகவமுசர்க்கும் வேசுவர்க்குந்தாயார்காண்
தாதாவெனத்தா மரைத்தவிசிற்றானிருக்கும்
வேதன்சபையிடத்தே வேந்தேநான்செல்லுகையில்
மருத்தென்பவனனெனை மானபங்கஞ்செய்யவெண்ணி
தரித்தமருங்கலையத் தன்கலிங்கமேபறக்க
ஊழிக்காற்றாக வுறவடித்துவென்றுகிலை
மீழப்பறித்தெரிந்தான் மெய்முழுதுந்தான்றெரிய
கொற்றவாயான்பிறந்த கோலமுடனிற்கையிலே
மற்றவையோரெல்லா மலர்க்கண்புதைத்தனரோ
காற்றைப்புகழ்ந்துவிரு கண்குளிரமாறுமற்
பார்த்தான்வருணன் படிமூவுலகசைய
சீற்றமுடனுன்முகனுந் தேயுவெனச்சினந்து
பார்த்தேவருணநீ பாரிற்பிறக்கவென்றான்
இச்சபையின்மான மிழந்துநின்றகங்காநீ
பச்சமுடன்வருணன் பாராளுமன்னனில்
பாரிலேநீயவன்றன் பத்தினியதாகவென்றான்
வேரிமலராசனத்தில் வீற்திருந்தானப்படியே
கோவிந்தன்மைந்தனிட்ட கொடியசாபந்துலைக்க
பூவந்தேன்யானும் புகழரசேயின்னமுங்கேள்
உம்பரிதுவறிந்து வுற்கைவிழும்வாறேபோல்
வம்புசுமந்த வசுக்கள்வந்துதாடொழுதார்
அன்னையேநீசெல்லு மதிசயத்தைக்கூறுமென்றார்
என்னையேவேத னிடுஞ்சாபஞ்செப்பலுற்றேன்
கேட்டவர்கள்வந்த கிருபைதனைக்கூறி
கூட்டியெராணியென் குலக்கொடியதாகவென்றார்
புத்தியிலாதேழ்வர் புன்மைமொழிபுகன்று
சத்தியமாய்த்தேனுவையென் றன்மனையிற்கட்டுமென்றான்
ஆகாதான்சொன்னமொழி யாமோவென்றேழ்வர்சொல்லி
ஓகோநலதெனவே யுற்றொருவன்சம்மதித்தான்
எங்களையும்வந்து இணங்கியேசோரனைப்போல்

துங்கமுடன்வசுட்டன் றுய்யமனைத்தேனுவைத்நான்
இரவிற்கரவாய்க்கொண் டேகையிற்றேனுவுந்நான்
விரவியிருக்கு மிடத்தேகொண்டேகியதே
எண்மரையுந்தேனுவையும் மெய்தி ரிஷிபார்த்து
பண்புபெறமக்கட் பதவிபெறச்சபித்தான்
எம்பதங்கள்யாம்பெறுவ தெப்போதெனநடுங்கி
செம்பதுமப்பாதஞ் சிரசேத்திகெஞ்சிநின்றோம்
அஞ்சியேகெஞ்சினதற் கந்தரிஷியிரங்கி
மிஞ்சியேயேழ்வர்களு மீள்வீர்பிறந்தாற்போல்
பேதையவள்கேட்கப் பெருக்கனெநோளிருந்து
ஏதமறத்தன்பதத்துக்குக் கெய்துமெனவுரைத்தான்
விண்வருஞ்செல்வ விளைவுகளுமேன்மைகளும்
எண்மருமின்றிழந்தோ மென்செய்வோமென்றிரைந்தார்
அஞ்சலெனவே யவர்கண்மனந்தேற்றுவித்து
வஞ்சகமிலாதே வருணன்குருகுலத்திற்
ருனரசுசெய்யுமன்னுட் டாரமாயானமைந்து
மானமுடனென்வயிற்றில் வந்துதிப்பீராமாகில்
பூவிற்பதம்படுமுன் பொன்றுவிப்பேனங்கிவனை
காவலன்றன்பானிறுத்திக் கழிப்பேன்பிறப்பையென்றேன்
வார்த்தையிவைகேட்டு வசுக்களெனைப்பணிந்து
ஆர்த்தநிலத்திலழி யம்மாவெனபணிந்தார்
நதியுற்றகங்கையிலே நானுருக்கோண்டேயிருந்தேன்
சதையக்கடவுளுநீ சந்திரகுலத்துதித்தாய்
நீவேட்டையாடியந்த நீத்தத்துறையருகின்
மாவேட்டையாகவென்னை வந்துகண்டுகொண்டுவந்தாய்
தேன்பாகுமொன்ருகச் சேர்ந்ததுபோனுமிருவர்
ஊன்போலுயிர்போல வொற்றுமூகிச்சேர்ந்தமையால்
அந்தவசுக்க ளவர்நம்வயிற்றமைந்து
நந்திஞரேழ்வர்களு நாதாவறிகவென்ருள்
மாதிவணஞ்சொல்ல மகிபன்மனமகிழ்ந்திப்
போதேநமது பிறவிதனைப்புகன்றுய்
மயக்கப்பிறவி யவையறியா தெந்தனுக்கு
வியக்கப்பிறப்புணர்த்து மெல்லியேயேழ்வருடன்
இப்போதுயேகுதலா லெண்ணிஞஃங்கிளையோன்
செப்பாயிருப்பதென்கொல் செய்வதினியாதெனவே
முக்குலத்தின்மிகக முதன்மையிவனையல்லால்
இக்குலத்திலில்லை யினிமேல்விளைவுமில்லை

ஆதலாலின்னே னரசினுக்குவேணுமென்றாள்
மாதரசேயின்னுமொரு மைந்தன்பிறந்ததற்பின்
பொன்னுலகினுமிருவர் புக்குவோமென்றுரைத்தான்
மன்னுபோவேறு வனிதையைச்சேர்ந்து
உண்பனவுமுண்டு வுலகெலாந்தானுண்டு
நண்பனேநீயு நடவுமிருமென்றுரைத்தாள்
இப்புதல்வன்றன்னையுகந் தென்னிடத்திற்கூட்டிவிட்டாற்
கைப்படுத்துவேன்வளர்ந்த காளைப்பருவமதில்
என்றாளிவளு மிசைந்தேகரத்தளித்தான்
அன்றேதான்கங்கைக் ககன்றாள்சுதனுடனே
பாலனையும்பாரியையும் பார்த்திபன்விட்டேபிரிந்து
மாலைப்பொழுதுகமா மன்னன்கிலேசமுற்றான்
அம்மாதுபோல வரியபடத்தெழுதி
எம்மாதிறையே யிரங்கியெனையாளுமென்றான்
உன்வாய்திறந்து வுரியமொழிபகர
எந்நாட்செலுமோ வெனவேமனந்ததும்பி
நித்தநினைந்து நெடுமூச்சுத்தானெறிந்து
பித்தனைப்போலப் பிதற்றி யுலகாண்டிருந்தான்
ஆர்க்கும்பகரா தடக்கியடக்கிமன்னன்
ஊக்கமதுகைவிட் டுருகினன்காணம்மானாய்
விட்டுப்பிரிந்த விகாரக்கடுங்கனலாற்
சுட்டுடலைவாட்டத் துயரராகிமன்னனுமே
இன்னுளிருந்தோ மினிச்சகிக்காதென்றொருநாள்
மின்னுருமார்பனன்று வேட்டைக்கெனநடந்தான்
நால்வகைச்சேனையுடன் நரவாகனமீதே
கோல்வேற்படையுடனே கோமான்வனமடைந்தான்
வேட்டைகளாடி விளைந்துநதியோரமுற்று
சேட்டிளம்பாலனொடு தேவியையுந்தானினைந்தான்
சந்திரதிலகத் தருநிழலிற்காணுமற்
சுந்தரியின்மிக்காளென் றேகையேநீயெங்கொளித்தாய்
எப்போதுகாண்பே னிளங்கொடியேயென்றுருகி
துப்பாயகானந் துடக்தலைந்துமேபார்த்தான்
காதலிமுன்னின்றிடமுங் காலடிகணின்றிடமும்
மாதுலவிநின்றிடமு மன்னன்மிகத்தேடிப்
பார்த்தயர்ந்துநின்று பரதவித்துமூச்செறிந்து
எத்தவுயிர்க்குயிரோ யெங்கொளித்தாயென்னசெய்வேன்
பிரிந்தநாளெண்ணியேமுன் பேசுந்திசைநோக்கி

கரிந்தமரம்போலமன்னன் கண்கலங்கிநிற்கையிலே
ஆண்போற்புயத்திற் றய்யவரிவில்லிலங்க
நாண்டாணமோர்கரத்தி னன்பாகவேயிலங்க
மார்பின்முன்னூலும் வயிரப்பதக்கமின்ன
சார்பாவெகுபணியுந் தலையிற்சிகையொளிர
உததிநடுவி லுதயரவிக்கொப்பாக
நதியினடுவிலொரு நண்பனெழக்கண்டானே
கந்தனோமாலீன்ற காமனோவிந்திரனோ
சுந்தரனைப்பார்த்துச் சோர்வடைந்துமேயரசன்
தன்னுருவுந் தன்வடிவுந் தானாகநிற்பதுவை
பன்னுசுதனென்றறியான் பண்பாகப்பெற்றெடுத்தோன்
அன்னவனுந்தந்தையிவ னாமென்றுணராமல்
மன்னுதனுவளைத்தே மாமோகனவாளி
பார்பதியாண்மைந்தன் பரிவானகாங்கையனும்
மார்பொழுகவாளிவிட மன்னன்மயங்கினனே
பொழிலார்நதிநடுவிற் பொன்மின்மறைந்ததுபோல்
எழிலியிடைமறைந்தா னியல்பானகாங்கையனும்
மன்னவன்மோகாஸ்திர மயக்கந்தணிந்தபின்னர்
தன்னகரிபோய்ப்புகுந்தான் சாருநதிமின்பார்த்தே
பத்தாவயர்ந்ததுவும் பாலன்மறைந்ததுவும்
முத்தானபல்லாண் முகஞ்சோர்ந்துளமுருகி
நதிவடிவைவிட்டிலங்கு நங்கைவடிவாகி
பதியனையவெண்ணியுந்தான் பாலனுடன்வரவே
சென்றாளரசன் றிருமனையினுட்புகுந்து
நன்றாய்நதிமாது நண்பனிடம்வந்துநின்றாள்
பாதத்தில்வீழப் பண்ணினாடன்மகனை
கோதற்றமன்னன் குழந்தைதனைத்தழுவி
வாடுந்தருவின் மழைபொழியும்வாறேபோல்
நாடுநேயக்க ணதியாள்புனலுக்குத்தாள்
மீண்டுநதிமடந்தை வேந்தன்றனைப்பார்த்து
ஆண்டகையேயுந்த னருமைக்குமரனென்றாள்
தெய்வவிரதனிவன் சேயன்பேர்காங்கையன்காண்
மெய்யிற்பலநூலின் வெள்ளங்கரைகடந்தோன்
அருந்ததிகேள்வ னருளாற்றுளாமுடியோன்
விரிந்தமதிப்புடையோன் மெல்லடியைத்தான்போற்றி
விற்றொழிலும்மாத்தொழிலும் மேவும்பலபடையின்
நற்றொழிலும்வேத நான்காகமநூலும்

கற்றானிவன்போலிக் காசினியிலேயொருவர்
முற்றுரிவன்றனையே மும்மூர்த்திகளலது
மற்றொருவர்வெல்ல வசையிலேக்காண்மன்னவனே
சுற்றமுடன்மூவுலகுஞ் சூழ்ந்துவந்துவணங்கும்
சந்தனையொப்புமெந்தன் கண்மணியுநீயுமுயர்
இந்தவுலகாண்டே யிருங்களெனவுரைத்தாள்
சீராருமன்னனுக்குச் செப்பியவனைப்பிரிந்து
தாராரர்குழன்மாது தண்புனலினுட்புகுந்தாள்
வருத்தமிரவிகண்டே மாறும்பனிபோல
திருத்தமுடன்மன்னனிந்தச் சேயாற்றுயர்போக்கி
சீர்பெருகக் கார்பொழியத் தேசஞ்செழித்தோங்கப்
பார்செறியதன்னகரும் பல்லுயிரும்வாழ்ந்திருக்க
தனிக்கோனடாத்தியந்தத் தாரணியையாளுமன்னுள்
மனக்கவடில்லாமன் மகனுக்கிளவரசுப்
பட்டமுங்கட்டிப் பரிந்தாசனத்திருத்தி
அட்டதிசைமன்ன ரடிவணங்கச்செய்துவைத்தான்
ஆனநாண்மன்ன னடர்வேட்டையில்விருப்பாக்
கானகத்திற்புக்கிக் கனவேட்டைதானுடி
வானையுலாவும் வனாகடந்துசேனையுடன்
பானுமகனீராடும் பருவனாயின்பாரையெய்தி
எப்படையுந்தானு மிறங்கினார்பாரருகில்
குப்பனவேவாசங் குமுகுமெனத்தான்வீச
பாசறைகண்முற்றும் பரிமளிக்கத்தான்சுகந்தம்
தேசத்தரசனுற்றுத் தேர்ச்சாரதியுடனே
அந்தநதிக்கரையி னச்சார்பின்வாசமெய்திற்
சிந்தைமகிழ்ந்தரசன் சென்றுனிருகரையும்
யோசனைமுற்றும் யுயர்வாசங்கொப்பளிப்ப
காசினுடலங் கதிர்க்கான்றெழுகிநிற்க
தேகங்களிக்கத் திசைமன்னர்மெச்சிருக்க
ஈசன்களித்துகந்த வேந்திழையைக்கண்டானே
கண்டுருகிமன்னன் கன்னிகையார்கூறுமென்றான்
மண்டலமன்கேட்க மாதுவெட்கித்தானுதுங்கி
நினைவைமறந்து நெடுங்கைகுவித்திறைஞ்சி
தனபதியென்றுதையிந்தச் சார்புதனிலோடம்விட்டு
மக்ஷம்பிடிக்கும் வலையனெந்தன்றுதையென்று
அக்ஷரம்பொயின்றியந்த அன்னநடையாண்மொழிந்தாள்
உருகிமெலிந்தரச னுட்காமவேட்கையினுற்

கருகியொளிகுறைந்து காவலவன்ருதைதன்பாற்
சென்ருனவனெதிர்ந்து சீர்பாதந்தெண்டனிட்டு
மன்ருருமார்பன் வலவனைக்கண்காட்டலுற்ருன்
பாகனுக்குமன்னன் பகர்ந்தவிதமறிந்து
வாகின்பரதவனை மற்ருேன்றனித்தழைத்து
மன்னனினைப்பு மனவிருப்புந்தானுரைக்க
கன்னிசெய்யுந்தவமோ கடவுளதுகற்பனையோ
ஒப்பிலாமன்னனிவ னுன்மருகனுகவுந்தான்
எப்பிறவியும்பிறந்து என்னதவஞ்செய்தனையோ
மன்னவர்க்குவேந்தாய் வளருங்குருகுலத்தோன்
என்மகடன்ருேள்பொருந்த வேற்குமோவல்லாது
பட்டந்தனக்குரிய பண்பானகங்கைமைந்தன்
இட்டமுடனியற்ற வென்னதொழிலென்மகட்கே
கேட்டருளுமென்ருன் கிளர்வதறியாவலவன்
மூட்டுதழல்போன்ற மொழியுமுதல்வன்செவியிற்
கேட்டமெனதிற் கிலேசமிகவுண்டாகி
முன்னமதத்தான் முனிசாபமுற்றதென
தன்னிதையநோகத் தனிநகரம்போயடைந்தான்
சேர்ந்தநாண்மோகத் தீயாலுடன்மெலிந்தே
நேர்ந்தவலையன்மகளை நினைந்தேமயன்மிகுந்து
புலையன்கலத்திற் புகுந்தவமுதமென
அலையிற்றுரும்பா யனற்காமநோயடைந்தான்
கங்காசுதனுன காதன்மகன்கண்டிதனை
எங்காதலெந்தையுனக் கென்னதினுன்மெய்யிளைப்பேன்
சாரதிமன்னன் றளர்ச்சிவந்தவாறுரைக்க
வாருதியீன்ற மகன்காங்கயன்கேட்டு
பொற்றேரின்மீதெழுந்த பொற்பானுதயமென
விற்றீரனேமிரதம் மீன்வலையனூரடைந்தான்
காங்கையன்வாரதுவைக் கண்டுமேமீன்வலவன்
பூங்கமலப்பாதம் புயமுறவேதான்பணிந்தான்
பணிந்தபரதவனைப் பத்தியாய்த்தான்றழுவி
அணிந்தமணிமார்பா வண்ணலேநீயெனக்குப்
பாட்டனராக்கங்கையல்ல பண்பானநின்மகள்காண்
நாட்டமிலாயோசனையேன் ஞாலமுழுதுமறிய
எல்லோருமெச்சுவகை எம்பியுலகாள்வ
தல்லாதுபட்டமெவ ராளவல்லவொன்றுணர்வீர்
இட்டமுடனின்றளவு மென்ருயுளுள்ளமட்டுங்

கட்டிவைப்பேன்பட்டங் சனபகையுந்தீர்த்துவைப்பேன்
மண்ணுசைபெண்ணுசை மற்றுசையுமொழிந்தேன்
கண்ணுலமின்றிக் சதிகிடைக்காதென்றாலும்
தந்தையுடபாக்கியத்தாற் சாருவேன்மோக்ஷமென்றான்
சந்தனனையானுன் கன்னிதந்தையற்களிப்பாய்
வாய்மைதவருக்காங்கை மன்னன்விரதமொழி
வேய்மன்னரினிமையா விண்ணோர்களுமறிந்து
பெய்தார்மலர்மாரி பிசகாச்சபதனெனச்
செய்தார்மகிழ்ச்சி செகத்தோரும்விண்ணோரும்
வீட்டுமனென்றே வியப்பாகநாமமிட்டு
கூட்டிபலபேருங் கொம்பனையாடந்தையுடன்
சம்மதிசெய்வித்துச் சரன்வியாளபுத்திரனும்
எம்மன்னர்போற்று மிராஜனிடமடைந்தார்
யோசனைதூர மூலாவும்பரிமளமெய்
வீசுமந்தக்கன்னிகையை வேந்தன்முகம்பார்த்தான்
மைந்தனெனுங்காங்கை மதல்வன்றனைப்பார்த்துச்
சிந்தைமகிழ்ந்தரசன் சேர்ந்துமுகத்தோடணைத்து
தாதைக்கிளமை தனையீந்தோனெப்பாக
நீதந்தஜீவ னிறுத்தினுகண்மணியே
தந்தைக்குதவு தரமாயிரமடங்கு
எந்தையேநீயன் றெனக்களித்தாயிமமையிலே
மைந்தனுக்கேத்துங்கை மாறேதுசெய்வனென்ன
எந்தவகையாலுவப்பே னெண்ணிக்கிருபையுற்று
வீடுதனைநீயும் விரும்புநாளல்லாது
ஈடுளமைந்தாவுன் னிடத்திலேகாலன்னணுகான்
அடவிலானுளிலெம னண்டாதகலநிற்கக்
கடவதெனவரத்தைக் காங்கெயனுக்கன்றீய்ந்தான்
மாமனெனவந்த வலவனிந்தராஜனிடங்
தாமக்குழலாடன் றையலாைமுன்னிறுத்தி
வாய்பொத்தியேகுனிந்து மன்னனடிபணிந்து
ஆய்வுற்றமன்னு வடியேன்மொழிகேளீர்
இம்மாதென்விந்துமல்ல வென்மனையாளீன்றதல்ல
பெம்மான்வசுமரபிற் பேராளனோர்தவசு
செய்தவருந்தவத்தாற் சிவன்விடைமேல்வந்துநிற்க
வெய்தாப்பதத்தில் விழுந்தேயுபசரித்தான்
நாடியதென்கொலலெனவெ நாரிபாகன்கேட்க
மூடுஞ்சடையாளா முக்கணுவெந்தனுக்கு

சந்ததிவேண்டுந் தயவாவுதவுமென
இந்தப்பிறப்பிதனி லீய்ந்தோமிரண்டுபிள்ளை
மைந்தனுமொன்று மகளொன்றுதப்பாது
வந்துபிறக்க வரமருளியேமகிழ்வா
ஈசனகல விறைவன்மனமகிழ்ந்தான்
வாசவனீய்ந்த வடிவாய்விமானதில்
ஆகாசவீதியிலே யவ்சுமமன்னேகுகையில்
ஏயாந்தமானவசும் இல்லாடனேநினைந்தான்
புளகித்துடல்கெழுமிப் போகமிகப்பொங்கி
இளகித்தரள மினம்போற்பொழிந்ததுவே
உணர்வற்றநேரம் உகந்ததொருநாதம்
புணரித்தடத்திற் புக்கியதுவீழ்க
முனிவன்சபித்ததினுன் முன்னேரமடந்தை
நனிமீன்வடிவாகி நாரமதிலேவசிப்பாள்
வீழ்ந்த தரளமெனு வீரியத்தைத்தானியாய்
யாழ்ந்தவாயால்விழுங்கி யன்றுமுதற்கர்பமுற்ருள்
ஈன்றபொழுதங்கு வெனதுவலையுட்படவே
ஆன்றதனைப்பார்த்தே னுண்பெண்ணிரண்டதனைக்
கண்டுமெகிழ்ந்தேன் களிகூர்ந்துடல்குளிர
கொண்டுநற்கேழ்விக் குறிப்பாவிருவரையுங்
வானவர்வேந்தன் வசுமுன்னேவைத்துநின்றேன்
மீனவனென்ருனதர்க்கு வேந்தன்விதானமிட்டு
மக்ஷகெந்தையென்றும் மடந்தையற்குப்பேருமிட்டான்
பக்ஷமதாய்க்கொண்டுவநதாய் பாலரிருவரையும்
உன்பிள்ளைதப்பாது வுற்றதொருபாலகனை
என்பிள்ளையாக வெனக்களித்துப்பெண்டனையே
கொண்டுபோய்நீயுமிந்தக் கோதையைநீவளென்ருன்
கண்டுமொழியாளைக் காவலனேயான்வளர்த்தேன்
அரசர்குலக்கொழுந்தை யன்றுமுதலின்றளவும்
வரிசையுடனே வளர்த்திடமன்வங்கிஷத்தில்
கந்தமறிந்தேதோவுன் கண்வலையிற்சிக்கினது
எந்தன்மரபென்றே யிழிவாகவெண்ணுதே
என்றவனுஞ்சொல்லி யிதமுற்றகங்களித்து
நன்றெனவேயந்த நாயகியும்ராஜனுமா
காளியும்வந்து கலந்தாணதியெனும்வேய்
தோளியுமுன்புயந் தோய்ந்தானிவன்விடையோன்
என்னப்புவியுளாப்ப வந்தனெறியுடனே



பன்னவுலகம் பரிவாய்ப்புரந்திருந்தான்
கங்கைகொங்கையின்பங் கலந்துகுலைந்ததற்பின்
எங்கேயெனத்தேடா திம்மாதனைப்புணர்ந்தான்
சுரும்புமலருமெனத் தோகையுடன்சேர்ந்தொழுகி
விரும்பிப்புணருமன்னன் மெல்லியருஞ்சேயிரண்டு
பெற்றாண்மதியிரவிப் பிரகாசமுற்றதுபோல்
கற்றோர்புகழ்ந்தேத்தக் காவலனுங்கண்டுகந்து
சித்திராங்கதனெனவுஞ் சித்ரவீரன்னெனவும்
புத்தியுறுமன்னன் புகழானபேருமிட்டான்
அன்பாய்வளர்ந்து மவர்பருவமானதற்பின்
முன்பாந்த்மையன் முளரிப்பதம்பணிந்தார்
உங்கள்குருவே யுகந்துமனதிலுன்னி
பொங்கியகல்வி பொருபடையுங்கற்கவென்றார்
தாதைசொற்கேட்டு தமையனடிதொழுது
ஓதிப்படைத்தொழிலு முள்ளதெல்லாங்கற்றார்காண்
எத்தெழிலுங்கற்ற விருவோர்திறமறிந்து
அத்தாதையுந்தாயு மன்புகந்தாரம்மானாய்
மெச்சுமணிமக்கள் மிகுமூன்றுபேர்களையும்
முச்சுடராமென்று முதலோன்முறைநடத்தி
தன்னிரண்மொழித் தலைநாள்விதிப்படியே
பொன்னுலகின்மன்னன் புகுந்தான்புகழுடனே
தந்தையிறந்ததற்பின் றம்பிபுவியாள்வதற்குச்
சிந்தைமணிமகுடஞ் சென்னிதனிலேற்றி
திறைசூழுலகத் திசையனைத்துமேகாக்க
அரியாசனத்திருக்க வன்புகுளிர்ந்தேற்றினனே
காங்கையனார்சொற்படியே காசினியெல்லாங்குடைக்கீழ்
தாங்கியசெங்கோலினொடு தான்புரக்குநாளையிலே
கங்குறனிலேயோர் கந்தருவன்வந்துபுக்கி
அங்கவனைக்கொன்றே யகன்றான்காணமமானாய்
சித்ராங்கதனெனுமச் செம்மலிறந்திடவே
சித்திரவீரனுக்குச் செம்பொன்முடிசூட்டினனே
அரசற்கரச னரியாசனத்தேற்றிப்
பரவையுலகிதனைப் பண்பாகவாளுமென்றான்
மானுபிரமனெனு மந்தாகினிகுமரன்
தேனானசொற்கீழ்ச் செகமுழுதையாண்டான்காண்
திக்கரசர்மெச்சத் திறலரசர்கப்பமிட
மிக்கபுவிக்கெல்லாமேல் வேந்தாயிருந்திடுநாள்

காசிக்கரசன் கனதவத்திஞலுதித்த
தேசுற்றபொற்கொடியா டேன்மொழியாண்மூவருக்கும்
வண்மைச்சுயவரமு நாட்டிவதுவைசெய்ய
திண்புயத்தன்கங்கைசுதன் நீண்டாஞேர்பெண்ணேயுந்தான்
விளையார்ந்தகன்னியவர் வேட்டல்விருப்பின்றியந்தக்
கனையாத்திமைந்தனுக்குக் கன்னிமணங்கூடாது
என்றிவர்களல்லாது வெத்தேசமன்னருக்கும்
மன்றன்மணவோலை வாகாயனுப்பிவிட்டார்
மாமலனாநாடும் வரிவண்டுபோலாக
கோமன்னரொன்ற குழாங்கணெருங்கினரோ
மன்னுபகீரதியாண் மைந்தனிதையறிந்து
தன்னுடையதம்பியொடுந் தானைகடல்சூழ
காசிநகர்ஞேக்கிக் கனகரதமேறியெழில்
ஈசன்மகன்போ லிவர்வரவைக்காசிமன்னன்
கேட்டுமெதிமயங்கிக் கேவலமாத்தானெதிர்ந்து
நாட்டமுடனே நயந்தழைத்துக்கொண்டேகி
சுற்றெங்குமுள்ள துரைமக்கள்வந்ததற்பின்
மற்றெந்தமன்னவையும் வந்துவந்துகொண்டுசென்ருன்
எல்லோருமாக விசைந்தமணப்பந்தரிலே
வல்லோரும்வந்திருந்து மந்தாகினிமகனேக்
கண்டுகரங்குவித்துக் கருதிஞர்முன்பிலிவர்
விண்டவிரதமொழி மேதினியெல்லாமறியும்
இன்றிங்குவந்தகுறிப் பேதன்றரசரெல்லாம்
கன்றியிருந்தனர்பின் காசியரசன்மகளேச்
செப்பொற்றகொங்கைச் சேடியர்கண்மின்பணியால்
ஒப்பற்றலங்கரித்து வொண்மாலைகைக்கொடுத்தும்
மன்னவர்களுர்பேர் வலுமைகளேயும்முனைத்து
இன்னவர்களின்னவர்க ளென்றறியக்கன்னியர்க்கே
மூவர்க்குங்கூறி முறைமுறையேசேடியர்கள்
பாவுற்றகங்கைசுதன் பால்வந்துனைக்குமுனம்
தாவியே மின்மூவரையுந் தான்பிடித்துத்தேரேறி
ஏவியேதம்பி யிளவலுடன்மீண்டானே
வந்தவரசரையும் மாகாசிமன்னனேயும்
சிந்தைதனிலெண்ணுமற் சிறையெடுத்துச்செல்கையிலே
பல்கோடிராஜர்களும் பரவைப்பெருந்தளமும்
கொல்வோமெனவே குழுமிவளேந்தனரோ
மன்னர்படைசூழ மந்தாகினிபுதல்வன்

பின்னவனைப்பார்த்துயிநதப் பெண்கள்பதனமென்று
சிங்கம்போற்சீறிச் சிறுவில்லைநாணேத்தி
புங்கமழைபோற் பொழிந்தான்கணைமாரி
தேர்த்துருளையத்துத் தேர்ச்சாரதிகளத்து
காரொத்தசேனைகளைக் கண்டவிடந்திற்பிணமாய்
சாரும்பரிகர்கள் சமரிற்பிணமலையாய்
ஊரும்புரவி யுருளுங்கொடிகளின்மேல்
மன்னர்சிலர்மறைந்தார் மானங்குலைந்தலறி
இன்னதிசையென்றறியா தேசெறித்தேயோடலுற்றார்
சென்னிபரவத் திரிபுரசங்காரமென
மன்னோர்நடுங்க வடிக்கணைகடானேவி
வீரியமன்னர் வெருவிப்பயந்தோட
ஈரும்பிறைவாளி யேகுமிடங்கண்டுகொல்ல
உய்த்தவிருட்படல மோடுஞ்சுடர்போல
எய்த்தரசரோட விவன்போர்புரிந்ததனால்
தருப்பித்துமன்னர் தலைகெட்டுவோடியபின்
நெருப்பொத்தவெங்கோப நீங்கியேவீடமெனும்
தன்னகரியேபுகுந்தான் றானைகடல்சூழ
அன்னவாரிலொருமின் னம்பையென்பாள்வீமென்முன்
மன்னாயந்திருந்தேன் வாகனையசாலுவனை
என்னையவனெடுநா ளிச்சித்திடுவேந்தன்
நீசெய்தபோர்க்கு நிலைநிற்கமாட்டாமல்
சாவுண்டுங்காயமுண்டுந் தப்பியேபோனார்கள்
அன்னோனிடத்தி லணுகுவேன்விட்டுவிட்டால்
என்றாண்மனதிரங்கி யேகென்றேயோட்டிவிட்டான்
அம்பிகைக்குமம்பா லிகைக்கு மணியாளன்
எம்பியெனவே யிசைந்துமணமுடித்தான்
சென்றவம்பையென்பவளைத் தீயகொடுஞ்சாலுவனும்
வென்றுதெவ்வாக்கொண்டவுன்னை மெய்தொடேனென்றிகழ்ந்தான்
பாவியிகழ்ந்துரைக்கப் பைந்தொடிமீண்டிங்குவந்தே
ஆவலுடன்மணஞ்செய் தாளுவாவென்றுரைத்தாள்
கங்காசுதனுங் கடிமணமொவ்வாதுரைக்க
மங்கைசலித்து மலர்க்கண்ணானீருகுத்து
ஐயன்பதத்தி லணைந்துவிழுந்தழுது
துய்பனேசாலுவர்க்குத் தூதனுப்பிக்கொள்காக்ஷி
என்னைவிரும்புகின்று னிபானவனைநத்துகின்றேன்
அன்னவிதம்வீடுமெனும் அதிவேகத்தூதுவிட்டான்

மீன்பாயுங்கண்ணியலா மீண்டுவரத்தள்ளிவிட்டான்
நான்போகச்சாலுவனு நாடாதேதள்ளியபின்
இந்தவிதநானலைந்தேனென்னசெய்வேனென்றுரைக்க
அந்தமகள்சொற்கேட் டழகானகாசிமன்னன்
ஓலையுந்தூது முகந்தூநயந்தனுப்பிக்
காலவேன்மன்னவனைக் கையேற்கவேணுமென்றான்
அவ்வாறுதூத ரடிவணங்கிச்சொன்னதற்கு
ஒவ்வாதவார்த்தை யுதாசித்தனுப்பிவிட்டான்
தன்னைமறுத் தம்பையென்பாள் சாலுவன்மேன்மாலாகி
அன்னவன்பாற்சென்றா ளவன்மறுக்கவிங்குவந்தாள்
எம்பியுஞ்சாலுவனுக் கேழையோவென்றிகழ்ந்தே
அம்பையின்றுன்ப மளவற்றதுன்பமென்றான்
ஈதுசொற்கேட்டு வியல்காசிமன்னனுக்குத்
தூதர்வந்துசொல்லத் துன்பமுடனேயழுது
அம்பைதனைப்பார்த்தே யரசன்கனிந்திரங்கி
செம்பொன்முடிமன்னன் சிறுவிதனக்குரைப்பான்
என்போலரசர் யெவர்மொழியைமாறுகினும்
வன்பாமழுப்படையோன் வார்த்தையெனக்கீறுசெயான்
அம்முனியைக்கண்டு வரசன்பணிந்துரைப்ப
சம்மதியானாகிலுந்தன் றன்னாலியன்றவகை
பார்த்துக்கொள்ளென்றான் பரசுராமன்பதத்தை
மூத்தமகளுடனே முடிகித்தொழுதிறைஞ்சி
வந்தனமென்றான் மழுப்படையோன்றான்கேட்க
எந்தையுணர்க விவள்செயலெல்லாமுரைத்தாள்
வனிதைசொற்கேட்டு மகாமுனியுமஞ்சலென
உனதுமனதுதனி லுற்றபடிமுற்றுவிப்பேன்
அஞ்சாதேயென்றா னனேககுலமன்னவரை
மிஞ்சாதேவென்ற. விரவுமழுப்படையோன்
வரதமழுராமன் மாதுதனையுங்கூட்டி
இரதமீதேறிவழி யெய்தினன்காணம்மானாய்
மன்னுமிமதங்கி மகன்வரவையேயறிந்து
நன்னதியாண்மைந்தனெதிர் நாடியிருகாதம்
தேசிகன்பாதஞ் சிரசுதனிலேற்றி
வாசவனன்ன வசுகாங்கையனுரைப்பான்
எந்தன்குருவான வெந்தையே யென்குலத்தோர்
தந்தவமன்றோநின் றருள்கிடைத்ததென்றேத்திப்
பெற்றேனெனப்புகழ்ந்து பேணிநகரடைந்து

உற்றேமணித்தவிசி லோசனைவைத்தேயிருந்தான்
கற்றோனைத்தேசிகனுங் கண்ணாலெதிர்பார்த்து
பொற்றோளாய்நின்றன் புயம்பொருந்தவோர்மாது
தன்னைவதுவை தயவாகச்செய்யவந்தேன்
இன்னன்முனிசொல்ல விதயமுடனடுங்கி
மின்னிலமைச்செய்துதந்த மேலாம்விறற்குருவின்
பன்னுகமலப் பதம்பணிந்தங்கேதுசொல்வான்
பரிமளகந்தையினாற் பண்டுவிரதம்பகர்ந்தேன்
ஒருவரறிந்தநல்ல வொன்சித்தமோர்ந்திருந்தும்
இந்தவிதமெந்தன் இருசெவிக்குத்தீயதொப்பாய்
புந்தியிற்கேழ்வி பொருக்குமோபுண்ணியனே
என்னுடலமாவி இசைந்தழிந்துகெட்டாலும்
மன்னுமணஞ்செய்வேனா மாண்டாலுமாமுனியே
இந்தவகையன்றி யெவையெவைநீர்சொன்னாலும்
உந்தன்மொழிதவறா தொற்றிசைவனென்றுரைத்தான்
மறுத்திவன்சொல்ல வளைப்புயமோராயிரமும்
அறுத்தபடையான் அடரும்வடவையைப்போல்
வெறுத்துவெகுளிபொங்கி விம்மித்துடித்துநெஞ்சம்
கறுத்துச்சிவந்துமிரு கண்ணாற்பொறிப்பறக்க
தேரேறிவில்வளைத்துச் செருச்செய்யவேணுமென்றான்
வீராபிஷேகன் வெருவிப்பதந்தொழுது
வணங்கவணங்க மகாகோபமாகிநின்றான்
குணங்கொண்டுயிரோடே கூறுமொழிதான்மாறி
நரகம்புகுவதிலு நற்குருவோடேபொருதி
விரதம்வழுவாமன் மெய்யிறத்தன்மோக்ஷமென்றே
தானும்வரிவிற் றனையெடுத்துத்தேரேறு
மாநதிசேயுடனே மழுராமனுமெதிர்த்தான்
வில்வளைத்துநாணேற்றி வெஞ்சாயுகம்விடுத்துப்
பல்விதமாய்ப்பல்கோடி பாணந்தனைத்தொடுத்தார்
அந்தாந்தரமு மலைகடலுந்தூர்ந்திடவே
இந்திரனும்வானவர்க ளெல்லோருங்கண்புதைக்க
மண்ணடுங்கவிண்ணடுங்க வானோர்களுநடுங்க
எண்ணடங்காப்பன்மலைக ளெல்லமிகநடுங்க
பாணமொடுபாணம் பகர்முனைகளோடுசென்று
சேணுலகுந்திக்குந் திசைகடலுமேகொதிக்க
ஓர்கணையையோர்கணைக ளூடேமலாந்துசென்று
கூர்கணையைக் கூர்கணைகள்கோலச்சிறகரிய

அம்பரமுமிம்பருமெய் யக்கினிகணின்றெறிய
உம்பர்களுமானுடரு மொக்கவபையமிட
பத்துநாளிந்தப் படியேபகலிரவு
முத்தீதாநின்று முனைந்துபொருதலுற்றார்
வீடுமனப்போ வெகுண்டுவெரிவிற்குருவின்
நீடுசிலையு நெடுநாணுந்தானறுத்தான்
கோதண்டம்பூட்டறவே கொற்றமுனிகோபமுற்று
மூதண்டமுநடுங்க முன்னோடித்தேரோடே
வீசினானூற்றிருபான் விற்கடைபோய்வீழ்ந்ததுவே
மூசியேவீடுமனு முன்முனியைத்தேரோடே
நூற்றிருபத்தெட்டு நுவல்விற்கடைதூரஞ்
சீற்றமுடனெறிந்தான் சிந்தைநொந்துமாமுனியும்
இன்றுமுதற்க்ஷத்திரியற் கேவுபயிற்றெனென
அன்றுசபதமிட்டு மாணையிட்டூர்புகுந்தான்
வீரமழுவாளி வென்றிடாதூர்புகுதப்
பாரரசர்மெச்சநதி பாலகனுமூர்புகுந்தான்
மாலையிடவந்த மடந்தைமதிமயங்கி
நீலவிழிமானு ணெடுமூச்சுத்தானெறிந்து
பையரவைவெல்லும் பரவைக்கரசனைய
வையமகிழ்கங்கா மகனைவெல்வதாரெனவே
எண்ணியேகானத் திடைசேர்நதியக்கிமனே
நண்ணித்தவமுயன்று ளூன்மூன்றுநாளாக
முன்னான்குநாளாய் முளரித்தடந்தனிலே
மின்னுளியற்றும் விரதத்தவமறிந்து
அம்பிகைதோன்றியுனக் கருளேதுவேணுமென்றாள்
தும்பைமுடிமன்னவனைத் துணிக்கநான் நாளுக
வேணுமருடருவாய் மெனபரமசுந்தரியே
தோணும்பகவதியே சுந்தரவாலாம்பிகையே
பூகநிழலிற் பொருந்தும்பராபரையே
தாகமுடன்றுயேநின் றன்கதியேநாடிவந்தேன்
அருக்கன்றனைமுடியி லன்பாய்த்தரித்தவளே
கருத்தின்படியெனக்குக் கைதாவெனப்பணிந்தாள்
அறமூர்த்தியாளு எம்பையைப்பார்த்தேதுளைப்பாள்
திறன்மூர்த்தியானலுஞ் சேயிழையையாளுக்க
ஒண்ணுதுவாளு லுயர்சிகண்டியாய்ப்பிறந்து
புண்ணூந்துயரகலப் பொன்றுவிப்பர்வீடுமனை
என்றுவரமீய்ந்தாள் இவ்வியற்கிசொற்படியே

அன்றுசிகண்டியென்வி யாகசேனன்மகவாய்
ஆறுமுகன்போ லரியவிறலுடனே
தேறியவீரநர சிங்கமெனவேபிறந்தான்
பிறந்துவளர்ந்து பெருங்கல்வி விற்றொழிலும்
சிறந்தபலபடையுந் தீர்க்கமுடன்கற்றிருந்தான்
இவ்வாறிவனிருக்க வெழில்சித்திரவீரன்
பௌவநிறைசூழும் படியெலாந்தாணுண்டு
மங்கையர்களின்பசுக வாரிதனிற்குளித்து
அங்கசனைப்போல வனுபோகமுங்களித்து
காளாய்முதுமை நணைதினையுநாணேயின்
மீளாவழினை விரும்பினன்பூமிவிட்டான்
பூமிதனித்திருக்கப் போர்வேந்தன்றுஞ்சியபின்
நாமவேல்வீடுமென்பூ நற்றுதினிதிருந்தான்
சந்திரகுலத்திற் றரிக்சகுருகுலமும்
வந்தவிபரம் வகையுமெடுத்துரைத்தோம்
சம்பூருவச்சருக்கந் தன்னையெடுத்துரைத்துக்
கெம்பீரமாகக் கிளர்த்துவேனம்மானாய்

குருகுலச்சருக்க முற்றிற்று.

சம்பவச்சருக்கம்.

அரியகங்குலி னன்னைதன்வடிகொண் டலகையாகியநங்கை
பரிவுபொங்கவந் தெடுத்தனைத்துவந்துளம் பரிந்துடன்பாராட்ட
வருசுமாமுலைப் பாலுடனவளுயி ருண்டமுமுருகார்மெய்க்
கரியகோவலன் செய்பதாண்மலர்களென் கருத்தைவிட்டகலாவே.

---

சித்திரவீரன் செகமிழந்துபோனதற்பின்
பத்தமுடைய பரிமளகந்தையென்பாள்
வீடுமனையழைத்து மேதினிபாழாகாமல்
சேடுமுடிசூடிச் செகம்புரக்கவேணுமென்றாள்
பல்கேள்விநூலின் பயனுமறிந்தவனீ
செல்காவனையவனே செம்மைக்குருகுலந்தான்
உன்னளவின்மங்கி யுலகமிருண்மூடுவதேன்
இன்னிளையான்றேவி இருவரையுநீசேர்ந்தால்
காலுக்குகாலாக் கான்முளையுமுண்டாகும்
கோலுக்குநேராய்க் குருகுலமுமங்காது
தாய்சொற்படிகேட்டாற் றன்விரதமாறாது
வாய்செப்பினேன்மகனே மாறாதேயென்றுரைத்தாள்

என்னவகைமொழிந்தா யெல்லாமறிந்திருந்தும்
இச்குலமுமங்கா திருக்கவேவேணுமென்றாள்
தக்கவதுக்கேற்ற தந்திரங்கள்வேறிலையோ
மழுராமன்கையாலே மன்குலமுன்னற்றதனுல்
அழகாயமங்கையர்க ளரியதவமியற்றும்
முனிவனருளாலே முளைமுளைத்தப்படியே
தொனியின்முன்னூலின் றெகைமுறைபேசெய்குவது
விதியாயியற்கையதே மெய்யிதுவென்மெய்நடுங்க
சதியானவம்மொழியைத் தவிவென்றடிபணிந்தான்
பணிந்தமகன்முகத்தை பார்த்துவிழிநீரோட
மணந்தங்குமெய்யாண் மயங்கியுணவழிந்து
என்செய்வேன்பாவிகுல மிந்தவகைமெங்குவதேன்
முன்செய்ததீவினையான் மூவாசைவிட்டமகன்
சாகுநாண்மட்டுஞ் சபதமறுதெனவே
தோகைகலங்கிமிகச் சோபித்தகந்தெளிந்து
பின்னுமகனைப் பிரியமுடனேபார்த்து
இன்னமொருசேதி யியம்புகுரோனின்மனதுக்
கேற்குமோவென்று ளியம்பென்றான்வீமனும்
பார்க்கரன்றந்த பனிநதியிற்றந்தைசொல்லால்
மார்க்கம்போவாற்கோட மாநதியில்விட்டிருந்தேன்
தீர்கமுடன்றந்தைமுதற் செப்புமொழிதப்பாமல்
அந்தத்துறைக்கு மதிகாரநானுகச்
சிந்தைக்கிசைவாயென் செய்காரியப்பெரும்
வந்தமனுடருக்கு மறுகாமலோடம்விட்டு
நந்தலறவிசைந்து நானிருக்குமன்னாளில்
மாயனதுவுந்தியிலே வந்ததொருநான்முகத்தோன்
சேயன்வசிட்டனுட செம்மல்சராசனென்போன்
சராசன்றவத்திற் றனையனுப்வந்துதித்த
பராசனொருபோது பண்பாயவ்வாற்றருகில்
வந்தணுகிற்றேணிதனின் மாதேயெனையேற்றி
அந்தக்கரைவிடுப்பா யாயிழையேயென்றுரைத்தான்
நன்றென்றுவங்கமதி ஞனவரைத்தானேற்றி
சென்றேநதிநடுவிற் சீர்முனிக்குநன்முகூர்த்தம்
வந்ததுகண்டு மகிழ்ந்தென்முகம்பார்த்து
யிந்தமுகூர்த்த மெவர்க்குங்கிடைக்சரிது
மின்னேயின்னேரமிதின் மேவிஜனித்தசுதன்
தன்னேரின்மிக்கச் சகலகலைவல்லவனுப்

மும்மூர்த்திகள்பிறப்பு முக்காலமுமறிவான்
இம்மாத்திரமென் றியல்சொல்லப்போகாது
நான்சேரச்சம்மதியோ நன்னுதலேயென்றுரைத்தான்
மீன்சேர்புலவு வெடுப்பாந்துற்கந்தமுடல்
யோசனைக்குநாறுமென்றே னுன்புலவைத்தான்மாற்றி
வாசமிகுயோசனைதான் மட்டுங்கமழவைப்பேன்
உன்னியேபால னுதித்தபிறகுன் றனையுங்
கன்னிப்பருவமென்ற காட்சிகுலையாதுவைப்பேன்
என்றுரைதற்கு விசைந்தாண்மகிழ்ந்தவனும்
குன்றுத்திலேயோர் குகைமறைவுமுண்டாக்கி
கடும்புலவுமாறக் கமண்டலத்தினீர்தெளித்து
உடம்புபரிமளிக்க வொண்முனிவன்செய்துவைத்தான்
துற்கந்தம்விட்டெழுந்து சூரியன்போன்மெய்யிலங்க
நற்கந்தவீசியபின் நன்முனிவன்றான்சேர்ந்தான்
அப்போதுடனே யவதரித்தான்கோபாலன்
முப்போதுமோர்ந்த முனிபாய்ப்பிறந்தனனே
தங்கக்கொழுந்தனைய தண்சுடர்ச்சிக்கம்புரிநூல்
அங்கத்திலங்க வவன்வந்தடிதொழுது
மாதாவேயென்னை மனதிற்கருதிலப்போ
வேதாவறிய விரைந்துவருவனென்று
வேதவியாசனெனு மெஞ்ஞானப்பேருடையான்
தாதையுடன்சென்ற தன்பிறப்புந்தானுணர்த்தி
மற்றுமிகுபேர் வருபிறப்புந்தானுணர்த்தி
உற்றபலபே ருயர்பிறப்புந்தானுணர்த்தி
முற்றேற்றமியாவு முழுதுமெடுத்துணர்த்தி
பிற்றேற்றமெல்லாம் பெருமலையிற்றனெழுதி
தவமேயுணர்வாகத் தானிருக்கின்றனவனை
புவிமேனினைத்தவுடன் புண்ணியனே வந்திடுவான்
வந்தாலவனாலே வண்ண மடனெண்ணும்வகை
சிந்தாதுகைவசமாஞ் சிந்தைதனைச்சொல்லுமென்றாள்
என்மனதுமொத்தேன்கா ணென்றேயேமுன்பயந்த
உன்மகனையேகருதி யுற்றபடிசெய்கவென்றான்
காங்கையனுஞ்சம்மதிக்கக் கான்முளையைத்தானினைத்தாள்
ஆங்கவனுங்க்ஷணம்வந் தன்பாயடிதொழுதான்
வேதாவின்மிக்க வியாசன்முகம்பார்த்து
கோதுபட்டதிந்தக் குருகுலநின்பார்வையினாற்
சீருலகமெல்லாஞ் செழித்துத்தழைத்தோங்க

பாருலகையாளவல்ல பாலனருள்கவென்றாள்
ஈன்றாளுரைக்கிசைந்து யேந்திழையைத்தான்பொருந்தச்
சான்றோனுரைத்தளவிற் றானேயம்பிகையை
முன்னழைத்துவைத்துமறை முன்னூல்களாற்றேற்றி
இன்னலுடன்றாவி யிழந்தாளைத்தான்பொருத்தி
வைத்தாண்மலரணையின் மாமுனியுந்தானெருங்க
கைத்தாளம்போன்றமுலைக் காரிகையாண்மெய்நடுங்கி
அஞ்சியவளிருகண் ணலர்ந்திலாளோர்காலும்
கஞ்சன்மரபோன்யோகத் தோடேகருப்பதித்து
மணக்குந்திருமேனி மாதாவின்பாலணுகி
இணக்கவிழிமலரா தேயிருந்தலக்ஷணத்தால்
ஆயிரப்பத்தானைப் பலத்துடனே ராண்குமரன்
தாயகண்களில்லாமற் றோற்றுமென்றுதானுரைத்தான்
அம்பாலிகைக்கு மழகாகவோர்குமரன்
சம்போகத்தோடருளத் தான்வேணுமென்றுரைத்தாள்
உதையனமதிபோ லுலகமெலாஞ்சானுள
அதியவிறல்வீர ளுகவருளென்றுரைத்தாள்
நன்றென்றறியா ணயந்திருக்குமஞ்சணையில்
சென்றண்டமாமுனியைத் தேன்மொழியாடான்பார்த்து
வெருவிவெயர்த்துடலம் வெட்கிவெளுத்திருந்தாள்
கருதியவளிடத்துங் காதற்கருப்பதித்து
மின்னாளிருந்த விறலின்குறிகுணத்தாற்
சொன்னான்சுவேதநிறத் தோன்றலுதித்திடுவான்
ஈதுகுறையலலா லிவன்றனக்கோர்குற்றமில்லை
ஆதலினல்வீரியவா னாவானெனவகன்றான்
வேதப்புனிதன் விளம்பியகன்றதற்பின்
தீதுற்றகண்ணான் றிறல்திருதராட்டிரனும்
மன்னர்தொழத்தக்க மலர்தாளாண்பாண்டுவையும்
மின்னற்றுடியிடையார் மேதினியிற்றான்பயந்தார்
பாராளவந்தவிரு பாலரையுங்கண்ணாலே
நேர்பார்த்துமக்ஷகந்ததை நெஞ்சஞ்சலித்தவளும்
இன்னமும்பிள்ளைக் கியலாசைகொண்டவளாய்
அன்னமகனை யகங்கருதியேயழைத்தாள்
வாதான்வியாதன் மகனேநீயின்னமொரு
சந்தாரமேவுபுயச் சந்ததிதான்வேணுமென்று
அம்பிகைக்கேற்ற வறிவுதனைப்பயிற்றி
நம்பிமுனிவனிட நங்காநீசேருமென்றாள்

அம்பிகையுமிந்தமுனிக் கஞ்சியவனைச்சேரக்
கும்பித்துழன்றுமனங் கூசியவடோழிதனை
மஞ்சத்தின்மீதமைத்து வைத்தாண்மருங்கணைய
அந்தமடந்தையுட னன்பாகச்சேர்ந்தணைந்து
தஞ்சமென்றேயம்பிகைபோற் றனிருந்தாளத்தாசி
விந்தையுடனேமுனியும் மேவிக்கருவமைத்தாள்
ஒத்திதமுற்று வுகந்தணைந்துச்சேர்ந்தமையால்
உத்தசுதனு முதிப்பானவன்பேரும்
சத்தியவான்காணத் தருமவிதுரனென்றான்
புத்தியுடையான்காண் பூட்டியவில்வல்லான்காண்
மன்பலற்குமிக்க வலிவாகையுள்ளவன்காண்
என்புணற்பிற்றுயே யினிச்சேய்தனையொழிப்பாய்
என்றுநயந்துரைத்து விமையோர்பதிபுகுந்தான்
வென்றியுள்ளவீரன் விதுரன்பிறந்தனன்காண்
மைந்தரொருமூவர்களும் மண்ணில்வளர்ந்ததற்பின்
சந்தனுவின்மைந்தன் சகலகலைபயிற்றி
விற்றொழிலும் வாட்டொழிலும் வேற்றொழிலுங்கோற்றொழிலும்
மற்றொழிலுமூவாறு மற்றும்படைத்தொழிலும்
எல்லாம்பயிற்றி யிவர்சமர்த்தரானதற்பின்
வில்லால்வலியானு மேல்யோசனைபுரிந்தான்
கண்ணில்லானானாலுங் கான்முளையாய்முன்னுதித்தான்
அண்ணலிவனென்றே யவனைமுடிசூட்டி
சேனாபதிப்பட்டந் திறல்பாண்டுவுக்கீந்து
ஆனன்முதுவர்செல்வம் ஆணியெனச்சொலியே
கங்கைமகன்பாண்டுவுக்கே கற்பித்தானம்மானாய்
அங்கமைச்சன்பட்ட மருள்விதுரனுக்கீய்ந்தான்
கலநீத்தாள்பெற்றெடுத்த காளையிருவர்களும்
நலநாங்கணிகைதரு நம்பிவிதுரனுமாய்
மெச்சுங்குருகுலமாம் வெற்பினிடந்தனிலே
முச்சிகரம்வந்து முளைத்ததுபோலொத்ததன்றே
திக்குமிருநான்கு திசைமன்னர்தான்வணங்க
தக்கொடியுடனே தாரணியையாளுமன்னாள்
காந்தாரமன்னனுட கன்னிதனையந்தகற்கு
பூந்தார்புனையப் புகலவென்றுதூதுவிட்டான்
சந்தனுவின்மைந்தன்விட்ட தானாபதியேகி
அந்தரசையந்தகற்கு னஞ்சுதையையீயுமென்றான்
தூதனுரைக்கத் துணுக்கிட்டுமெய்மறந்து

நாதன்மனையணுகி நாயகிக்குங்காதலிக்கும்
நாட்டமில்லாற்கு நதிமைந்தன்பெண்கேட்ட
வேட்டறனையே விரித்துரைத்தானம்மானைப்
ஈவதில்லையென்றாலு மெண்ணான்மடங்கல்வெறி
காய்வதெனவந்து களப்போர்வினைவிளைத்துக்
கன்னிதனைச்சிறையாய் கைப்பிடித்துக்கொண்டகல்வான்
முன்னமேகாசிதனிற் மூன்றுசிறையெடுத்தான்
நோக்கில்லாற்கீயமறை னூலோன்விதித்ததென
ஏக்கமுடன்றாதை யிசைப்பமகள்கேட்டு
அக்கமில்லாதானென் னாளனவனில்லாணன்
திக்கிலொருவனையென் றிட்டிகொடுபார்க்கேன்
கற்பின்றிறத்தாளுங் கண்ணிரண்டுமென்றுமூதல்
பொற்பட்டத்தாலே பொதிந்துமறைத்துவைத்தாள்
புத்திரிதான்சம்மதிக்கப் பூபதியுந்தான்மகிழ்ந்து
சத்துவத்தாலம்பிகையாள் சந்ததிக்குத்தானீய்ந்தான்
திருநாட்டிரனுக்குச் செய்துமணம்வாழ்ந்திருக்க
கருதுதந்திதேவி கதையுரைப்போமம்மானைப்
புந்திக்குநாமகளாம் பொற்புக்குப் பூந்திருவாம்
சிந்தித்தகற்பினுக்குச் செய்யவருந்ததியாம்
சந்ததமும்வாய்மைதனைத் தாங்கவல்லபூமானும்
குந்திபெனும்பேருடையாள் குந்தளதேசம்புரக்கும்
சூரனெனுமன்னன்மக டோகைமயிலாள்வளர்ந்தாள்
பாரமரபிற் பரிவானமங்கைகுந்தி
வளர்ந்துவிளையாண்டு மாதுறுநாட்சூரனிடம்
வளங்கொடுருவாச மாமுனிவன்வந்தடைந்தான்
அந்தமுனியை யரசன்புகழ்ந்தேத்தி
எந்தன்பெருந்தவமோ வென்குலத்தோர்செய்தவமோ
பொன்னடிபென்சென்னி புனையவேபெற்றெனென்று
கன்னிமகளையவன் கைக்கருமஞ் செய்யவிட்டான்
தந்தைமொழிமாறுமற் றபோநிதியின்குற்றேவல்
அந்தமுனிமனதுக் கன்பாகச்செய்துநின்றாள்
கழங்குபந்துவம்மனையுங் கனகக்கொடியூசல்
வழங்கும்விளையாட்டு மற்றெவையுந்தான்மறந்தாள்
ஒருநாட்புரிதொழில்போ லோராண்டுமெட்டாக
வருநாட்களெல்லா மகிழ்ந்துபணிசெய்துநின்றாள்
செய்தபணிவிடையுஞ் சிந்தையையுமோர்ந்துமுனி
மெய்ம்மையுடையாண் மேலேதயவாகி

மாதுதனைமுன்னழைத்து மாமுகத்தைத்தான்பார்த்து
தாதுசெறிபூங்குழலாட் சந்ததிநோக்கில்லையென
என்றுமுனிசொல்ல வீணைத்தாடனையிறைஞ்சி
நன்றெனவிதிவசத்தை நானேதுசெய்யவல்லேன்
கொடியவளேயானெனினுங் கோமுனியேயுன்பாத
முடுகித்தொழுதிருந்து மோகூந்தனக்கிசைந்து
புத்திரனில்லாதிருந்தால் பொல்லாதாளென்னைவிட
இத்தலத்தில்வேறுமுண்டோ வென்செய்வேனென்றுநின்றாள்
சின்னவயதிலிவள் செப்பும்விரகறிந்து
மன்னுகருணைவெள்ள மாமுனிக்கிப்பொங்கியதால்
அன்னமேயொன்றினுக்கு மஞ்சாதேயென்றுசொல்லி
கன்னமதிலோர் கருதுமறையோதிவித்து
தேவர்தனில்யார்யாரைச் சிந்தைதனினினைந்து
ஆவலுடனிம்மறையை யன்றோதிஞல்வருவார்
அக்கணத்தில்வந்து மவர்போற்சுதனளிப்பார்
மக்கடனைப்பெற்று மகிழ்ந்திரென்றுவாழ்த்திவிட்டார்
கிட்டாவரங்கள் கிடைத்ததெனமகிழ்ந்து
மட்டார்குழலாண் மாமுனியைத்தான்பணிந்தாள்
செய்யகமலத் திருவனையாய்நீயெனக்கு
மெய்யைவருத்தி மிகுந்தேவற்செய்ததினுல்
உன்பேரிலன்பு வுததிபெருகியதால்
பொன்போலுனக்குமறை போதித்தோமென்றுசொல்லி
துருவாசவனுந் துரிதமுடனேகலுற்ருன்
வெருவாண்மறையின் வியனுமறிவமென்று
தவளக்கதிர்க்காந்தி தங்குமணிமண்டபத்திற்
பவளக்கொடிபோலப் பைங்கிளியாடானிருந்து
ஆதவனையுன்னி யருமறையைத்தான்பகர்ந்தாள்
சிதநறைத்தேன்மலரைத் தேடுஞ்சுரும்பதுபோல்
ஒல்லைப்பொழுதி லொளித்திருந்துவந்தாற்போன்
முல்லைத்தரளநகை மொய்குழலாண்முன்புவந்தாள்
செம்பொன்னுடையுஞ் செறிக்கவசகுண்டலமும்
பைம்பொன்முடியும் பதக்கமணிவடமும்
பவளக்கதிர்காந்தி பாயுமுடலழகாய்
குவளைக்கிணைவிழியாள் கோமகன்முன்வந்தணுகி
மிக்கபதுமினியாண் மெல்லியலைக்கையார
தக்கமுகமலர்ந்து தானணைந்தானம்மானாய்
கன்னிகன்னியன்றேவென் கற்புநீயோர்ந்தறிவாய்

என்னநடுங்கி வெழிற்குந்திநாணிநின்று
பதரித்துணிக்கிமனம் பற்றுதரற்றுசலும்
உதையனகலநின்று ஒண்ணுதலைத்தான்பார்த்து
என்னமதிகொண் டென்னையழைத்தாயென்றழன்று
உன்னுழையிலெந்த னுருமாறிவந்தமையாற்
பொருந்தாதிருந்தாயுன் புன்மதிநோய் போக்குதற்கு
மருந்தேகொடுக்கும் வகையறியமாட்டேனே
எந்தன்கரமாயிரமும் யான்மறைத்துக்கொண்டுவின்று
உந்தனிடம்வந்தேன் னுனக்கிம்மறைபுகன்ற
குருவுநினது குலமும்படும்பாடும்
ஒருகணப்போதி லுணர்த்துவேனென்றுரைத்தான்
அருக்கனுடறனிலு மாயிரம்பத்தாமடங்காய்
உருத்துக்கொதித்தேபின் னொண்டொடியைத்தான்பார்த்தான்
தாதைக்குப்பூவுலகோர் சாற்றும்வசைக்சேபயந்தேன்
ஈதலதுநின்கைக் கிணங்குவேனென்றுசொன்னாள்
என்னையளித்ததிதிக் கெண்மடங்குசீர்பெரவே
நின்னைப்புகழ்படுத்தி நீடும்விளைவுண்டாக்கி
பூலோகமெல்லாம் புகழவெனைப்போல
மாலானமைந்தன் வரவேயுனக்களித்து
மன்னுசுதன்புவியில் வந்தேபிறந்ததற்பின்
உன்னையுங்கன்னிவடி வுண்டாக்கிவைப்பெனென்று
கரமாயிரத்தோன் கதிர்முகநூராயிரத்தோன்
திரமாய்ப்புகன்றளவிற் றட்டிநகையுங்கொடுத்து
வல்லியுமொத்து மலர்ப்பஞ்சணைசேர்ந்தாள்
எல்லவனன்புற் றிதமாய்மகிழ்ந்தணைந்தான்
ஈருடலுமோருடலா யின்புற்றனந்தமுற்று
மார்பிருகச்சேர்ந்த மயக்கத்தின்மாதிருக்க
நளினபதிநடந்தான் நாரியுணர்வானதற்பின்
வளமாகத்தன்னை மணந்துவரங்கொடுத்து
இனன்சொன்னநட்பிவைக ளெல்லாமனதோர்ந்து
நலம்பொங்குருன்மாதர் நற்குறிகடான்றோற்றக்
குலம்பொங்குங்குந்திநலங் கொள்கையுளாடானகி
இந்திரன்கைக்கு மிபங்காத்தான்கைதனக்கும்
சந்தமுடன்மேலாகத் தானுதவுங்கைத்தலத்தான்
வீரமகிபனருள் மெய்யனெனுமங்கையப்பன்
காருலகிலீயுங் கரம்போலுதவுகையான்
சூரமகிபனருள் தோன்றலெனுங்கன்னனுந்தான்

ஈரமுடன்பூமி யிருண்மாற்றவேபிறந்தான்
பூமியிருண்மாறப் புவிபுரக்கும்புண்ணியனை
சேமமணிக்குண்டலங்கள் சேரவரும்பாலகனை
தன்னைப்பயந்தோன் றனைப்போலழகுடையான்
மன்னைக்கண்பார்த்தே மலர்க்கண்களாறேட
பெற்றேனியான்குதலைப் பேச்சரியப்பெற்றிலனே
செற்றேனையென்மகனே தேடக்கிடையாதே
கொள்ளவரிதான கோதிலாமாமணியை
த்தள்ளமுதேயுன்னைவிட்டுச் சீவனிருப்பேனோ
பேதைமதிகேடாய்ப் பின்வருவதோராமல்
ஆதவனைப்பற்றி யறிவிலாதேயழைத்தேன்
பதராதிருந்தாற் சிதராதேபாலகனே
சுதனேவுனைப்பிரியத் தொல்லைவிதியென்றழுது
பாரமரபுக்குப் பழுதாமெனப்பயந்து
நீர்பொசியாப்பொட்டகத்தில் நேரிழையுந்தான்பொதிந்து
பரதேவதையாம் பாஞ்சுடரோகாக்கவென்று
விரைவாய்நதியதனில் விட்டுவிட்டாளம்மானாய்
அஞ்சலெனக்கங்கை யலைகரத்தாற்றாலாட்டி
விஞ்சையுறுஞ்சூதநகர் மேவினதேயம்மானாய்
சூதர்கோனில்லா குறைமருங்குதானடைந்து
ஆதவன்சேயை யழகானபெட்டியொடும்
தன்மனையிற்கொண்டுசெலத் தாராளன்கணகுளிர்ந்து
மன்மகனேயல்லாது மற்றொன்றுமல்லவென்று
இன்பமுடனே யியல்பாகத்தான்வளர்த்து
துன்பில்லாச்சூதன் சுதன்பருவமானதற்பின்
கல்விமறையுங் கனத்தபலபடையும்
வல்விற்றொழிலும் வகையாய்ப்படிப்பதற்கு
அந்தணன்போலே யவ்னைவுருப்படுத்தி
பந்தமழுராமன் பாலிலனுப்பிவைத்தார்
ஆசானைக்கண்டு அவன்றாள்சிரசேத்தி
வாசாமகோசரமாய் மன்னவனுங்கற்றுணர்ந்தான்
வித்தைகளெல்லாம் விபரமுடன்றானறிந்து
எத்தலமுமெச்ச விவன்சமர்த்தனானதற்பின்
நாதனெனும்பரசு ராமனவன்மடியில்
போதமுடன்பள்ளி புரிந்தான்காணம்மானாய்
வில்வித்தைமிக்கான் வேந்தன்பலங்குறைக்க
வல்வித்தைமாயன் வரிவண்டுபோற்புகுந்தான்

வண்டுபோற்பூந்து மணித்துடையைத்தான்றுழைக்க
மிண்டுவருத்தம் விதனம்பொருத்திருந்தான்
தனியாழியான்றனேக்கத் தன்னிரத்தம்பொங்கியந்த
ஈரம்பரவ விருடிவிழித்தெழுந்து
சோரியைப்பார்த்தான் சுரும்பிபறந்தேகியபின்
வீரியனித்த விதனப்பொருத்தவனை
யென்றுகேட்க வெழிற்றுயிலுக்கீனமறப்
போதவருத்தம் பொருத்தேனெனவுரைத்தான்
அங்கவன்பார்த்திவனை யந்தணனல்லவென்று
யிங்கிவன்க்ஷத்திரிய னென்றேமனதோர்ந்து
உன்குலம்பேரு ருரையென்றானம்மானைப்
கோபத்தைக்கண்டு குலைந்துநடுநடுங்கி
வாய்பொத்திநின்று வரலாறுதானுரைத்தான்
பண்டுசபரம் பகர்ந்ததுவுங்கேட்டிருந்தும்
கொண்டந்தணன்போற் குறிப்பானவித்தைகற்றாய்
உற்றந்தக்கால முணர்வுதமோறிக்
கற்றதொழிலுனக்கு கைக்குதவாதென்றுசொன்னான்
அப்போதுகெஞ்சி யடியிற்சிரசேத்தி
எப்போதுன்பாத மிதயந்தனின்மறவேன்
தஞ்சமுனதுபதஞ் சற்குருவேகாத்திடென்று
அஞ்சியஞ்சிக்கெஞ்சி யவன்புகழத்தானிரங்கி
தன்கைவரிவிற் றனைக்கொடுத்தேயேகுகென்றான்
நன்கைமலரா னளினப்பதம்பணிந்து
தன்பதியிற்சார்ந்திருந்தான் றையல்குந்திமாதேவி
அன்புடனேகன்னிவடி வாயிருந்தாளம்மானைப்
கன்னிப்பருவமுள்ள காரிகைக்குவேட்டலென்று
என்னகரிமன்னருக்கு மேமுடங்கரூன்விடுத்தான்
ஓலைதனைக்கண்டே யுறவர்பலகோடி
வேலையெனச்சூதநகர் மேவினர்காணம்மானைப்
அவ்வரசர்க்கெல்லா மணிமாலைசூட்டாமல்
நவ்விழியாள்பாண்டு நண்பனுக்குமாலையிட்டாள்
குந்திக்கும்பாண்டுவுக்குங் கொற்றமணமுற்றியபின்
பிந்தியேமத்திரர்கோன் பெண்ணொன்றுதானீய்ந்தான்
சித்திரமொத்த தெரிவையிருவரையும்
அத்திரவீர னரியமணம்புரிந்து
இன்பமுடனே யினிதாகவாழ்ந்திருந்தான்
பின்பொருநாளிற் பெருங்கானில்வேட்டைசெய்ய

சென்றுபுலிகரடி சிந்துரங்கண்மான்மரைகள்
பன்றிமுயன்முண்மாப் பகடுவரையோனாய்
வென்றியுள்ளசிங்கமுதல் வில்வளைத்துக்கூர்கணையால்
கொன்றுவிலங்கைக் கொலைசெய்துமீள்கையிலே
இல்லாளுந்தானு மெழின்மான்கலையாக
வல்லான்முனிவன் மருவினன்காணம்மானாய்
பாண்டுவங்கண்டு பரிவிற்சரந்தொடுத்தான்
மாண்டுபிணைவீழ்ந்தளவின் மற்றகலையோர்முனியாய்
வில்வேந்தைப்பார்த்து மிகுகோபந்தான்மூண்டு
சொல்வானுனக்கேதுந் தோடங்கள்செய்ததுண்டோ
பூவாளிக்கஞ்சி பொருமான்கலையாக
மேவாமுனமே விரைவாகவில்வளைத்துக்
கூர்வாளியாலறுத்துக் கொன்றுவிட்டாயென்போலப்
பார்வாழுமின்றைப் பஞ்சணையிற்சேருமன்னாள்
மாளுவாயென்றுமுனி மாண்டான்வனந்தனிலே
எளிதமாயந்த ரிஷிபத்தினிதானும்
கூடத்தழலிற் கொழுனனுடன்மடிந்தாள்
ஈடேற்றமன்ன னிடைந்துபெருமூச்செறிந்து
நினையாப்புறத்தில்வந்து நேர்ந்தபெருஞ்சாபம்
வினையாற்றளம்பி மெலிந்துபரதவித்து
சாபத்தாற்கொன்றகொலை தானெல்லாமொன்றாகி
சாபமாய்நந்தனக்குச் சம்பவித்ததென்றுணர்ந்து
காமக்குரோதக் களிப்பாம்வினையகற்றி
நாமத்தவமுயற்சி நாடினன்காணம்மானாய்
சிற்றின்பந்தன்னின்மனஞ் செல்லாதுஞானமுற்று
முன்றின்பந்தன்னின்மன மூண்டானேமன்னனுமே
தவத்தின்மிகுந்தரசு தானிருக்குமன்னாளில்
நவமாம்வியாசனரு ணல்வரத்தாற்காந்தாரி
சூலொன்றிநூறுசுதன் றேற்றங்கருவமைந்தாள்
வேலொன்றுங்கூர்விழியாய் மெய்ச்சுதனில்லாதோற்கு
திறமைப்பதந்தனிலுஞ் செல்வமோடின்பமில்லை
மறுமைப்பதிதனிலு மற்றுமோர்மோக்ஷமில்லை
ஆகையாலுமு மரியமகப்பாக்கியந்தான்
தோகையேகிட்டுதற்கு சூரனகுலக்கொழுந்தே
அந்தமுனிபாத மகத்தினினைந்தாக்கால்
வந்திடுவானெந்த வகையவனுஞ்சொன்னபடி
கேட்டுநடந்துமுத்தி கிட்டும்படியாக

நாட்டங்கைக்கூடுமென்று நாயகிக்குபாண்டுரைத்தான்
சொன்னமொழிகேட்டுத் துருவாசன்வந்ததுவும்
அன்றவருக்கேவ லடிமைபணிசெய்ததுவும்
போதித்தமந்திரமும் பொன்னிரவிவந்ததுவும்
ஆதித்தன்கன்னனையே யன்றளித்துப்போனதுவும்
கோதென்றுவிட்டுநங்கை கொற்றவற்குமற்றதெலாம்
நாதனேயந்தமறை நானறிவேனென்றுரைத்தாள்
இந்தவரம்பெற்ற விளங்கொடியேயென்னிடத்தில்
முந்தவேசொல்லாமன் மூடியதேன்சிந்தையிலே
நன்றுபின்னென்றேதாம னுயகியம்மந்திரத்தால்
இன்றறத்தின்மூர்த்திதனை யேயழைத்திடென்றுசொன்னான்
தருமாதிபனைத் தயவாய்மனதிலுன்னி
அருமாமறையா லழைத்தாளவனுவந்தான்
வந்தித்ததெய்வமெதிர் வந்ததெனவணங்கி
சிந்தைக்கிணங்கிமலர்ச் சேக்கைதனிற்சேர்ந்து
கருத்தங்கியேவளர்ந்து கலையெண்ணிரண்டுமொன்றாய்
உருத்தங்கியப்போ லுயர்சந்ததியீன்றாள்
வாரந்திதிநாள் வளர்கரணயோகமெல்லாஞ்
சேரநன்றான திரமானலக்கினத்தில்
நவகோளுமாக்ஷியுச்ச நன்றானவேளையிலே
தவமேமிகுந்த தருமன்பிறந்தனனே
பூலோகமெல்லாம் பொருந்தவொருகுடைக்கீழ்
மாலாகக்காக்கவல்ல மன்னவர்க்குமன்னனென
சாத்திரத்தின்மிக்க தவமுனிவர்தான்கூற
கோத்திரத்திலுள்ளோர் குளிர்ந்துகளிகூற
பாலன்முகம்பார்த்துப் பாண்டுமகராசன்
சாலவுடல்புளகந் தான்கொண்டகங்கூர்ந்தான்
முன்னமிருந்த முசிப்புந்துயர்நீங்கி
மன்னனளவில்லா மகிழ்வியுடன்றானிருந்தான்
பூந்தாளாள்குந்தியொரு புத்திரனைப்பெற்றவிதங்
காந்தாரிகேட்டுக் கலங்கியுணர்வழிந்து
அவனிமுழுது மரசாளமிக்கான
தவமானபட்டந் தனக்குச்சுகுர்த்தான
புத்திரனைமுந்தப் பொருந்தியவள்பெற்றுவிட்டாள்
சத்தியமாயென்வயிற்றிற் றருமீராறுண்டாக
எந்தனுதரத்தி லிருந்துவெளியாகாமல்
சிந்தைகலங்கிமிகத் தியாண்மனங்கனன்று

சோபாக்கினியின் கொரேமதனாலே
மாபாவிதன்வயிற்றில் வன்கறனையெடுத்து
ஆங்காரமாக வகுலையக்குத்தினதால்
பாங்கானசூற்கலங்கிப் பாரிதிலேசாய்ந்ததுவே
சூற்பையிரத்தமொடு தொல்லுலகில்வீழ்ந்தளவிற்
காப்பனெனவந்தான் கணத்தில்வியாதனென்பான்
வந்துசினந்து வருதூறுதாழியிலே
அந்தவிரத்தமெல்லா மன்பாயெடுத்துவைத்து
சிந்துமிரத்தஞ்சிதரிய மண்ணையெல்லாம்
பிந்தியொருதாழியிலே பெண்ணுகென்றேயமைத்து
அண்டத்தைசற்ப மடைகாக்கும்வாருக
வண்குற்றதாழியெல்லாம் வன்கரத்திற்றனணைத்து
கொண்டுமொருப்சோரி குழந்தைவடிவாமளவும்
அண்டியணைத்திொன்று வந்தமுனிதானகன்றான்
வேதமுனிசொற்படியே மெல்லியடைகாத்திருந்தாள்
மாதுதனைப்பாண்டுமன்னன் மற்றுமின்னம்வேண்டுமென்றான்
காந்தனுரைப்படியே கந்தாவகனைமனம்
நேர்ந்தாண்மறையா னிமிஷத்தில்வந்தணைந்தான்
செஞ்சுடருச்சி சிறந்திருக்கும்வேளையிலே
அஞ்சலுடன்மற்றுளகோ ளாட்சியுச்சமாயிருக்கும்
அக்காலந்தன்னி லனிலன்மகன்வீமன்
மிக்கானவீரியமாய் மேதினியிலேபிறந்தான்
அன்னாளுதைய னலரிபுகுமளவில்
முன்னாள்வியாதன் மொழிந்தமொழிப்படியே
தாழியினுள்ளே தந்துருவமுற்றியபின்
சூழ்புவியையாளத் துரியோதனன்பிறந்தான்
வாரியொலியதனை மாற்றிமுழவமென
பரியொலிக ளுலகெல்லாம்பொங்கியதே
உக்துகுலத்தோர்க் குவகைநீர்போங்குமுன்னே
அந்தரத்திற்சோரிமழை யன்றுசொரிந்ததுவே
கோள்கணிலைபாற்றீமை கொண்டதொருநாளிற்
றேள்கடனிற்கொடியோர் சேரப்பிறந்தனரே
நூற்றொராளிலொரு நுண்ணிடையுந்தான்பிறந்தாள்
மாற்றார்நடுங்க மலைப்பாம்பின்குட்டியொப்பாய்
மக்கள்பெருக்கமதான் மாதாமனமகிழ்ந்து
திக்கினமக்கொப்பே தெனவீறுடனிருந்தாள்
மக்களூறு மகளொருத்திதன்னாலும்

தக்கதலைவன் றலைமையால்வீருளுள்
சுந்தரக்குந்தி துணைவனுடசொல்லாலே
இந்திரனையுன்னி யிசைத்தாண்மறையாலே
விந்தைநினைக்க விடுவனேதான்விரைந்து
வந்துவனிதை மனங்களிக்கவேசேர்ந்தான்
நன்னிமித்தமெங்கு நடக்கப்புவிமகிழ
இன்னவக்கோட்க ளிசையுநல்லலக்கினத்தில்
பங்குனித்திங்கட் பரிதிபயினுளில்
பொங்குபுவிமன்னர் புலிமுன்மான்போனதேங்க
திக்கெங்கும்வென்று செயகம்பந்தாளுட்டி
தக்கவிசையனென்று தன்பேர்தரிக்கவல்லான்
மாபாரதக்கதைக்குள் வாகையுள்ளவில்வீரன்
பூபாரந்தீர்க்கப் பிறந்தனன்காணம்மானுய்
பார்த்தனளனைப் பரதனையுந்தானினைந்தால்
எத்தகரும மெவர்க்குமேகைகூடும்
என்றுவியாத னியன்மேரிற்கோட்டிவைத்த
வென்றியுள்ளமூவரிலே மிக்கானவனுதித்தான்
கற்பகப்பூச்சிந்திக் கடவுளர்கள்கொண்டாட
வெற்பின்முனிக்கணங்கள் வேதமங்கலம்பாட
அந்தரத்துந்திபியார்த் தம்பொன்மழைபொழியச்
சுந்தரச்சங்கின் றெனியோசைதான்முழங்க
முகூர்த்தநன்றென்றிசைந்து முச்செகமும்போற்றியதே
பகுத்தவறிவுடைய பார்த்தன்றனைப்பார்த்து
மன்னவன்பாண்டு மனைவிபெறுங்குந்தியின்மேல்
பன்னுங்கருத்துப் பரவைபோற்பொங்கியதே
என்னுயிரன்ன யிளையாளுநின்போல
மன்னுசுதன்பெறவே மந்திரத்தைப்போதிவிப்பாய்
என்றுகொழுன னியம்புமுனிவரன்சொல்
ஒன்றின்னமுண்டு வுயிர்க்குயிரோகேட்டருளும்
மற்றொருவர்க்கிந்த மறைபோதித்தேனுகில்
பெற்றசுதனல்லான்மேற் பிள்ளையில்லையெந்தனுக்கும்
அன்றுட்டுமோர்முறையே யல்லாதுமில்லையெனச்
சொன்னளவள்போற் சுதனூறுபெற்றதற்பின்
தங்கைதனக்கிந்தமறை சாற்றுவேனென்றுரைத்தாள்
மங்கையிதுசொல்ல மன்னவனுமேதுரைப்பான்
எல்லாவிலங்கினமு மேவதைக்கவேணுமென்று
பொல்லாநினைவாய்ப் புலிகள்பலகுட்டிபெறும்

பாருலகமெல்லாம் பலபோகங்கொள்ளவெறுன்
சிருலவுநன்னினைவாய்த் தேனுவொருகன்றீனும்
தேனேயுலகுதனிற் றேய்ந்ததெதுவாழ்ந்ததெது
மானேயுலகாள மைந்தனென்றுபோதாதோ
என்றுதெளிந்தோ னியம்பமனஞ்சம்மதித்து
நன்றென்றுதங்கையற்கு நாட்டமேறைபோதிவித்தாள்
மந்திரத்தான்பெற்ற மயின்மத்திராதேவி
புத்திரவாஞ்சை பொருவிலாவாசையினல்
உதையன்புதல்வ னுபயனையுமோர்நினைவாய்
இதையத்திலுன்னி யினியமறையாலழைப்ப
ஒருவனைப்போல வுபயருமேதானணைந்தார்
பருவரலில்லாது பாலர்கருவிளைந்து
உருவிளங்கிப்பால ருபராய்த்தான்பிறந்தார்
திருமன்னியமுகுர்த்தஞ் சீர்மையுள்ளனேரமதிற்
பரிக்குநகுலனெனும் பண்பாளன்றன்னுடனே
தரிக்குந்தவஞான சாத்திரவான்சாதேவன்
என்றபிதான மிசைந்தபுகழுடையோர்
வென்றியுடன்பிறந்தார் மேதினிகள்கொண்டாட
தன்மவடிவாந் தருமன்வயவீமன்
வின்முரண்டுபெற்ற விசையன்பரிநகுலன்
சாத்திரத்தின்மிக்க சகாதேவனைவருமாய்
கோத்திரத்தார்கண்கள் குளிரவேதான்வளர்ந்தார்
சாதிமருங்குந் தடக்கரமும்வாகனமாய்
நீதிவிளங்க நெடும்பிறையைப்போல்வளர்ந்தார்
சினிபாறேன்குழல்யாழ் தெள்ளமுதைத்தள்ளவல்ல
ஆனரசமான வருங்குழலைச்சொற்பகர்ந்து
கண்டனையசொற்கேட்டுக் காதுகளிகூர்ந்து
வண்டமருந்தார்புனைந்த மாதாமனமகிழ்ந்தார்
இந்தவிதமா யிவரைந்துபேர்களுமாய்
மந்தமொழிதிருந்தி மறையோர்கண்முன்றிருறும்
சென்றுவிளையாடிச் சிங்கம்புலிகரடி
கொன்றிபஞ்செய்து குறும்புகளைந்திடுவார்
அந்தமுனிவரர்க ளன்பிவர்மேலுண்டாகி
சந்தமிகுமுப்புரிநூல் சாற்றிமறைபயிற்றி
எண்ணெண்கலைக்கடல்க ளெல்லாங்கரைகடந்து
பண்ணெண்புராணம் பலபாடைகற்றுணர்ந்தார்
மார்பகன்றகல்வி வனப்பின்னிறைந்புகழ்ப்

போர்புரியுமாலைப் புயத்தினுபர்ந்தகொற்றம்
கண்ணிறைந்தவன்பு கரங்கொத்துவீசுகொடை
பண்ணிறைந்தசெஞ்சொற் பலன்படைத்துவாழ்ந்திருந்தார்
காதலைப்பார்த்துக் களிகூர்ந்துபாண்டுமென்னன்
பூதலத்தையாண்டு புகழோங்குநாளையிலே
மாரனுக்கின்ப மணிமகுடந்தான்சூடி
காரணமதாய்வசந்த காலம்வந்துதோற்றியதே
கூளமுடனங்கி குலத்தோர்தலத்திருந்தால்
மூளுமென்றுசொன்ன முதுவாய்மைதப்பாமல்
என்கணைக்காத்தாம லீசனிடங்கொடுத்தான்
பொன்கதிரார்மார்பிற் புனைந்தானெடியோனும்
நாமகளைநான்முகனு நாவிலேதான்சுமந்தான்
காமருவுமிந்திரனுங் கண்ணாயிரமானான்
பாண்டுவிரதமதைப் பார்ப்போமெனப்பதறி
தாண்டிமதனுஞ் சரமாரிதான்பொழிந்தான்
விட்டபூவாளி விரதந்தவஞானங்
கட்டாங்கவசங் கலங்கவினைப்படுத்தி
மன்னனுடலம் வடுவாய்த்துளைத்ததுவே
துன்னுமதநோயாற் சுழல்வண்டுபோற்கலங்கி
பெருமூச்செறிந்து பெருகப்பரதவித்து
திருமாதெனவனப்புச் சிந்துகின்றமத்திரைமேன்
மோகித்துச்சென்று முடுகிகுருக்கத்தியின்கீழ்
தாகித்துச்சேர்ந்து தனுமாரனூல்வழியே
விம்மியேலீலா விதங்கடனைப்பாராட்டி
அம்மிகுமாதையணைந் தனுபோகமும்மிரங்கி
துயில்வானைப்போலரசன் றுஞ்சினானம்மானாய்
மயிலாளழுதலறி வாய்கரணநாவரண்டு
மத்திரையாளோலமிட மாதுகுந்திகேட்டெழுந்து
புத்திரரோடு புகுந்தழுதுவோலமிட்டாள்
கூக்குரற்கேட்டுக் குழாமாக்குலத்தோர்கள்
எக்கமுடனே யிணைந்தாரொலிபோல
மன்னன்மடிந்ததனுன் மண்டலமெல்லாமிரங்கி
அன்னநடைக்குந்தி யழல்புகுவேனானுமென்றாள்
மைந்தர்களைவர் மனத்துயரந்தானீங்கி
புந்திபலதன்னையற்குப் போதித்தாரம்மானாய்
அன்றுதிமூலமென்ற வாம்பறனைக்காத்தோன்
பொன்றுததன்மர்மற்றப் புத்திரரையும்மழைத்து

மூவுலகுங்காக்கு முகுந்தனியான்கண்டீரோ
தேவரமுதாரத் திரைபுகுநான்கண்டீரோ
இரணியனைக்கம்பத் திருந்துமுடல்கிழித்தும்
மரணமுறவாலியையு மாய்த்தவனும்யானலவா
அன்றுகடலை யடைத்தன்னகர்புகுந்து
பொன்றவரக்கனையும் போர்புரிந்தஞனலவா
மாயவனும்யான்காணும் மன்னுலகினீர்காணும்
தாயவனேயஞ்சலெனச் சாற்றஹரியென்றோர்ந்து
செங்கமலக்கண்ணனைத் தெய்வவிரதனுடன்
வெங்கண்ணிலானும் விதுரனுமேவந்துகண்டான்
வந்துபணிந்தவரை மாயனெதிர்நோக்கித்
தந்தையிறந்த தனையரிவரைவரையுங்
காவலரோமங்காமற் காக்கக்கடவதென்றார்
பூவவரைக்காக்கப் பொருந்தாநினைவானல்
இப்போதவர்சடனை யெனதுவசப்படுத்துந்
தப்பாதிராச்சியத்தைத் தந்தையுளநூற்றுவரும்
ஆளும்படியோ ருருவினையும்வாராமல்
நாளுமகிழ்ந்திருங்க ணன்றாகவென்றுரைத்தார்
கண்ணனுரைத்தமொழி காங்கையனுந்தான்கேட்டு
எண்ணுமுமக்குள்ளவுருத் தெங்களுக்குங்கிட்டாதோ
பாண்டுமிறந்ததனுற் பஞ்சவர்க்குத்தாகுதியுண்டோ
நீண்டவனேபஞ்சவர்மே னின்போலுநானலவா
பாருலகினூன்முறைமை பண்பாகவைவருக்கும்
வாருதிசூழ்பூவாழ வைப்பேனெனவுரைத்தான்
அந்தமொழிகேட்டு வைவரையுமொப்பிவைத்து
வந்தமுடிமன்னவரும் மாயவனுமூர்புகுந்தார்
ஈரன்பதின்ம ரிவரைந்துபேர்களுமா
சீரன்புடனே செறிந்தாரோழாநாளில்
காசிபர்ல்லாடான் கத்துருவென்பாலீன்ற
ஆசுசெறிசற்பவர்க்க மானூர்காணூற்றுவரும்
பின்புவனிதைமகன் பெருங்கருடனைப்போல்
வன்புமனவயிர மானுனனிலமகன்
ஒவ்வாதஒவ்வுதல்போ லூசிமுனைசேர்ந்ததுபோல்
தேவ்வாயவரவர்க டேசத்திருந்தனரோ

---

சம்பவச்சருக்க முற்றிற்று. ஆக சருக்கம் 2.

## வாரணாவதச் சருக்கம்.

அருமறைமுதல்வனை யாதிமாயனை
கருமுகில்வண்ணனைக் கமலக்கண்ணனைத்
திருமகடலைவனைத் தேவதேவனை
இருபதமுளரிக ளிறைஞ்சியேத்துவாம்

ஈங்கிவ்விதமா இவர்கள்வளர்நாளதனிற்
றீங்கோருருவாய்ச் செனித்ததுரியோதனன்றான்
பாங்கனெனவே பரிதிசுதனைத்தழுவி
ஆங்குவலிகூறி யகமகிழ்ந்தானம்மானாய்
வண்டுமலரு மருவுமலருமென
கண்டுதேன்பாகு கலந்ததகமையெனக்
உயிரோடுடல மொத்திருக்குந்தன்மையைப்போல்
மயிலும்புயலுமென வண்மையுற்றாரம்மானாய்
இந்தவிதமா யிசைந்திருக்குநாளையிலே
சிந்தையழல்போன்ற தீயதுரியோதனன்றான்
கான்வேட்டையாடிக் கங்காநதிபடியத்
தான்வேட்டைமானவர்போற் றம்பிதுணையைவருடன்
சென்றுவிளையாடித் திங்கள்குலக்காளையர்கள்
அன்றசனமருந்தி யாற்றங்கரையருகில்
இற்றையிரவுக் கிவ்விடத்திற்பள்ளிகொண்டு
மற்றாநாட்செல்வோமக மானகருக்கென்றுரைத்தான்
ஆலமுளத்தி லமர்ந்தசுபக்ஷமுளான்
நீலன்சொற்கேட்டு நிகழாதுசம்மதித்தார்
அந்தப்படியே யவ்வாற்றருகாக
கந்தத்தொடையலணிக சாளையர்கள்கண்டுயில்வார்
எல்லோருந்தூக்க மிசைந்தநிசிவேளையிலே
பொல்லானெழுந்திருந்து போதமுள்ளகன்னனுடன்
தம்பியருங்கூடித் தளவீமன்றன்னுடைய
செம்பதுமக்கைகாலுஞ் சேரவரிந்துகட்டி
பார்க்கடலிலன்று பனிவரையைத்தாழ்த்ததுபோல்
கார்க்கடலுக்கொப்பான கங்கைதனில்வீழ்த்தினரோ
வீழ்ந்தான்பதறி விசைத்துதைத்துமெய்ப்பிணிகள்
தாழ்ந்துபொடிப்பொடியாய்த் தானறுத்தான்வல்வீமன்

பூசமறுத்தவனும் பைம்புனலைனிந்தியலை
வீசுங்கரைசேர்ந்தான் மெய்நித்திரைதெளிந்தான்
தானேயுருண்டு தவறிவிழுந்தோமெனவே
மானுபிராமன் வயவீமனேதுசெய்தான்
தம்பியரோடண்ணாவுந் தானுருண்டுவீழ்வொண
உம்பலனையா னுடனலியாதேயெடுத்து
மெல்லவிலக விருப்போடுநால்வரையும்
வல்லபுயவீமன் வைத்தனன்காணம்மானாய்
அந்தக்குளிரி னவஸ்தையுங்கண்ணோராமல்
சந்தமுளவைவர்களுந் தான்றுயின்றாரவ்விடத்தில்
பத்துத்தலையரக்கன் பண்பானதம்பியன்றான்
நித்திரையுமீண்டு நிலைப்பட்டவாறுகண்டு
மன்னுமிருட்சுடரை மாய்க்குமரவின்விடம்
துன்னியநெஞ்சான் றுரியோதனன்மீண்டு
கட்டியுருட்டியுமக் கங்கையிலேதள்ளவிவன்
அட்டகிரியொன்று யமர்ந்தபுசபலத்தான்
தாழ்ந்தானெழுந்தான் றவுடாகக்கட்டறுத்து
ஆழ்ந்தநதிகலங்க வங்கையினாலேநீந்தி
காலாலுங்கையாலுங் காரறலைதானடிக்க
மேலாய்ப்படுத்தவர்மேல் வெள்ளம்பெருகியதே
நன்னிருளினூற்றுவருநனைந்துவுடனடுங்கி
வெள்ளம்பரவியதே வேந்தர்வெருண்டோடினரோ
தாமனருளாலுந் தன்வலுமையாலுமுயர்
வீமன்கரையில் விரைந்தடைந்தானம்மானாய்
வந்துகரையேறியிந்த மாபாவிசெய்ததென்று
சிந்தையுன்னியொருவரையுஞ் செப்பாதினிதிருந்தான்
தன்முன்றருமருக்குந் தம்பியர்க்குந்தானுரைத்து
வன்மமனதில்வைத்து வாய்வசதனிருந்தான்
பின்னுமந்தப்பாவி பெருவாவியிற்கழுவை
துன்னநிறைத்துவைத்துத் தோயம்விளையாடுமென்றான்
வீமன்கழுமேல் விழுமுனரியளியாய்
தாமன்முனையைக்காட்டித் தப்புமென்றேயேகினனே
வஞ்சமறிந்து வலுவீமன்கையாலே
அஞ்சப்பிடுங்கியதை யக்கரையின்மீதெறிந்தான்
கையினீர்வாரிக் கடுத்தந்ததூற்றுவர்கள்
மெயில்விழவெறிந்து வெகுண்டடந்தவீமனுமே
என்கரத்துக்காளிக் கிசைந்ததிடாய்போலாக

வன்பெலியாக்காட்டால் வயவீமனனலவே
என்றுரைத்தவர்க்கூத யிவர்தூற்றுவரறிந்து
சென்றுற்பயமுந் திடுக்கிட்டுடல்குலைந்தார்
வன்பகையாச்சந்த வலுவீமன்றூற்றுவர்க்கும்
துன்பமறவிங்கிவனைத் துஞ்சவகைசெய்வதற்கு
என்னவகைவஞ்சமதா லிங்கிவனைக்கொல்வமென்று
மன்னன்மனநொந்து மயங்கினன்காணம்மானாய்
ஐவர்க்குமன்பாக யசனமிடவிரும்பி
தொய்வுற்றசிந்தைத் துரியோதனனழைத்து
நாமசனஞ்செய்வோமே னம்பார்களைவரென்று
காமுருவர்போலிருந்து கைக்கருமக்காரர்களை
ஐவர்க்குமன்பா யசனம்படையுமென்றான்
தெய்வத்தையொப்பார்க்குஞ் சியோதனர்க்குமன்னமிட்டார்
சாதமுடனே சமைத்தபதார்த்தமெல்லாம்
கோதகலப்பஞ்சவருங் கோமானுமுண்டதற்பின்
ஆலம்பொதிந்த வளைபகிரும்வேளையிலே
சாலவெனக்குத் தயிராகாதென்றுசொல்லி
மன்னனெழுந்திருந்தான் மற்றவர்களுண்பதன்முன்
பின்னன்மயிராய்ப் பெருமானுந்தோற்றுவித்தான்
ஞானசகாதேவ னஞ்சிதனிலுண்டெனவே
தானமுடன்சைகை தருமனுடனுரைத்தான்
தயிருமயிரெனவே தானருந்தாதைவர்களும்
உயிரும்பிழைக்க வுதரியெழுந்திருந்தார்
செய்தவிந்தத்தீவினைக்குஞ் சிவனிழந்திலனென்
மெய்தயங்கிநொந்து மெலிந்தான்சொடியோனும்
ஆலோசனையா யனிலன்சிறுவனையே
பூலோகந்தன்னின்முதற் பொன்றுவிக்கவேண்டுமென்று
அடுத்துக்கெடுக்கும்வகை யாகாதவனினைந்து
தொடுத்துநயவழியாய்ச் சொல்லிமனைக்கழைத்து
உண்பதுநீமெத்தவென்று வுற்றவர்கள்சொன்னதுண்டு
பண்புடையாயுண்பதைநான் பார்த்தெனதுகண்குளிர
வேணுமெனநாடி விருந்துனக்குச்செய்துவைத்தேன்
காணவேயுண்ணுமென்றான் காளையுமேசம்மதித்தான்
அன்பாய்ச்சமைத்த வசனம்பதார்த்தமெல்லாம்
வன்பானவீமனுக்கு வகையாய்ப்படையுமென்றான்
தின்னுமளவுந் தெவிட்டாதொருக்காலும்
உன்னுதரம்வீங்க வுகந்துபருகவென்றான்

இந்தவசனம்போ லெமக்கனுகாதென்றுசொல்லி
சிந்தைமகிழ்ந்தவ்வசனஞ் சேரப்பருகிவிட்டான்
மட்டில்லாப்பாற்குடமும் வாய்வைத்தருந்தியதின்
ரெட்டபலநஞ்சையெல்லாந் தொண்டைமுட்டவுண்டுவிட்டான்
வாய்கழுவுமுன்னே மயங்கிவலுவீமன்
செயலற்றுநஞ்சாற நியங்குமந்தவேளையிலே
வயமுற்றெகுவின் வடத்தாற்பிணித்திருக்கி
பயமற்றுமிக்க பருங்கல்லுடன்பிணித்து
கயமுற்றகங்கையிலே கட்டிவிட்டானம்மானாய்
நீர்வழியேயோடும் நெடியபெருமலைபோல்
சார்வழியேவீமன் கடுகியேயோடினனே
ஓடும்விசையி லுருக்குவடந்தான்றேய்ந்து
நாடியகட்டெல்லாய்போய் நாகருலகம்புகுந்தான்
பாதாளஞ்சென்ற பவனன்குமாரனையே
வேதாளம்போல மிகுந்தவரவினங்கள்
சென்றுவயவீமனுட தேகமெல்லாந்தான்கடிக்க
அன்றுண்டநஞ்சுக் கவுஷ்தமாயுற்றதுவே
பற்குறித்தபாம்பினங்கள் பற்றேய்ந்ததல்லாது
மற்குறித்ததிண்புயத்தான் வாடிலனென்றேமயங்கி
தங்களைவனெனுஞ் சற்பவிராஜன்சபையில்
இங்கிவன்வாறெல்லா மெடுத்துரைத்தாரம்மானாய்
வாசுகிமன்னன் வழுத்துமுறைகேட்டு
ஆசுகன்மைந்தனிவ னாகுமெனத்தெளிந்து
தேசிகமாமுனிவர் செப்பியசொல்லாலறிந்து
மாசுணவேந்தனன்று மாருதியைவந்துகண்டு
ஊரேதுபேரேது வுன்குலமுன் றந்தைதிருப்
பேரேதெனக்கேட்கப் பெற்றியொன்றும்பேசாமல்
கையாலேவாயதனைக் காட்டினன்கைக்கரணம்
நைவானதாகமென்று நாகமன்னன்றானறிந்து
அமுதகலசமொன்று வன்பாயுதவுமென்றான்
தமயனின்மிக்கானோன் சாற்றும்படிகொடுத்தான்
தீர்ந்திலவென்றாகமென்று செங்கையினாற்சைகை செய்தான்
வேந்தனின்னமொன்று விரும்பியுதவுமென்றான்
பற்றாதெனமீண்டும் பாணியினாற்சைகைசெய்ய
மற்றோனுமீண்டு மைத்தொன்றுதவுமென்றான்
மூன்றுகலச முரண்வீமனுண்டதற்பின்
தோன்றியதாகத் துயர்தீரவில்லையென்றான்

அக்குறிப்புகண்டு வரசன்புதுமையுற்று
மிக்கவலுவீமன் விரும்பிக்குடிக்குமட்டும்
ஈயுமெனச்சொன்னளவி லின்பமாய்த்தான்கொடுத்தார்
ஓய்வில்லாதன்பத் தொருகலசந்தான்குடித்து
ஐய்தவனந்தீர்ந்து யேப்பமிட்டானேறிடிபோல்
காயமெலிவுங் களைதீர்ந்தானம்மானாய்
மாருதியைப்பன்னாக மன்னன்முகநோக்கி
பேருனையுமென்னப் பிசகாமெடுத்துரைப்பான்
எக்குலத்தின்மிக்க வெழிலாங்குருகுலத்தில்
மிக்கதொருபஞ்சவரில் வீமன்காணென்பேரு
தின்மைகளெல்லாந் திரண்டோருருவெடுத்த
துன்மதியான துரியோதனன்பாவி
அசனத்தினஞ்சுகலந் தன்பாயெனக்களித்து
நிசமாயுடன்மயங்கு நேரமதிற்கங்கையிலே
கட்டியேவிட்டுவிட்டான் கார்வழியேவந்துனது
பட்டினஞ்சேர்ந்தேன் பரிந்தெந்தனைக்காத்தீர்
என்றிவன்சொல்ல விருகண்புனற்றுளிப்ப
நன்றென்றரண்மனையில் நாகமன்னன்கொண்டுசென்று
இன்றுநீபெற்றபல னெய்துமோமற்றவர்க்கு
வென்றியமுதோர்கலச மேதினியிலுண்டோர்க்கு
ஆனைப்பலங்களுனக் காயிரமுண்டாகுமென
சேனைதளம்வெல்வாய்நீ சிங்கமென்றுனேபுயங்கன்
இங்கிவனைக்கங்கையிலே யிட்டதுரியன்பாவி
சங்குததியிற்கதிரைச் சாய்த்ததொருமாலையொத்து
இருட்போலிருந்தா னிதையங்களிகூர்ந்தே
அருட்கோன்றரும னனுசனைக்கண்காணாமல்
வாடினார்நால்வர் மயங்கினாளன்னைகுந்தி
தேடினாள்காணா டிடுக்கிட்டகஞ்சோர்ந்தாள்
ஐயனேகண்ணா வருளாளாவாழிசெறிக்
கையனேவஞ்சரிடங் காட்டிக்கொடுத்தகன்றாய்
பிள்ளைகளைப்பெற்றேன் பிழைத்தேனெனவிருந்தேன்
உள்ளமழலெரிய வுய்வனோநானென்றிடைந்தாள்
வீமனைக்காணாமல் வேறுவேறாய்ச்சிதறி
திமையறியாதவனைத் தேடினர்காணம்மானாய்
கங்காநதிக்கரையுங் கானங்கடன்மலையுஞ்
சிங்கக்கொடியானைத் திக்கெல்லாங்காணாமல்
மாதாமுன்னாகவந்து மைந்தர்கள்கண்ணீர்சொரிந்தே

தீதானமாபாவி செய்தவினையேயொழிய
வன்பூதமைந் துவினில் வாயுவிலாதங்கமென
மூன்பாகவந்தமைந்தர் மூன்ருென்றையும்பார்த்தாள்
தாதையிழந்த தனையனைமூதாதையிடம்
கோதையழைத்தேகிநின்று கோவென்றலறலுற்ருள்
தனையன்சிறுவருடன் ருயாரையும்பார்த்து
புனல்மன்னவன்மகனும் புன்கண்சலிப்பகற்றி
மாய்ந்திடான்வீமன் வருவானெனத்தேர்ந்து
காய்ந்தவரொல்லாங் கலங்குவார்காண்மினென்று
சொன்னிமித்தம்பன்னிமித்தஞ் சுகமாம்பல்லோர்வாக்கு
நன்னிமித்தமென்றே நாட்டமுடனேயிருந்தார்
விதுரன்மனதிரங்க வீமெனுந்தானிரங்க
சதுரின்குலத்தோர் தலத்தோர்களுமிரங்க
கண்ணிலான்ருனுங் கருதியேதானிரங்கி
விண்ணடுங்கவேயவனு மேதினியிற்கூறலுற்ருன்
கேடுநினைந்தோர்க்குக் கேடுவருமீதிலென
நாடியேநன்மைசெய்தா னன்மைகிட்டுமென்றுரைத்தான்
உரகபதிவேந்த னுலவைபதிசுதனை
திரைசூழுலகமதிற் சேர்த்துவருகவென்று
மன்னுலகந்தாங்குகின்ற மாசுணத்துக்கொப்பான
பொன்னெளிருந் தன்மையுறும்போகிகளுக்குரைக்க
அந்தமொழிகேட் டரவினங்கடானெருங்கி
சந்தபுயவீமன் றன்னைசிரசேற்றி
மூன்வந்தநீர்வழியாய் மூசிப்பறந்துசென்று
தன்மன்றனக்கிளையோன் றன்னைவெளிவிட்டதுவே
அன்பத்தோராயிரமால் யானைப்பலத்துடனே
இன்புற்றுவீம னெழுந்தான்நதியைவிட்டு
தேடியவன்னை திருத்துணைவர்கண்குளிர
வாடும்விதுரன் வருணன்மகன்கண்குளிர
சுற்றமுலகோர் சுபக்ஷமுடன்மகிழ
பற்றற்ருர்நெஞ்சம் பதைத்துநடுநடுங்க
மறைந்தபரிதி மற்ருநாள்வந்ததுபோல்
இறந்துபிறந்ததென வெய்தினன்வீமனுமே
பண்டுபோற்சேர்ந்து பரிவாய்வளருமன்னாள்
கொண்டல்சுதனுடனே கொற்றவர்களைவருக்கும்
நூற்றுவர்க்குமிக்க நுவலும்படைபயிற்ற
எற்றகிருபர்க் கியம்பினன்காங்கையனும்

கோதமன்பேரன் குனிவின்முதலான
வாதுபலபடையின் வண்மைபயிற்றினனே
பலபடையும்பாலர் பயின்றுவருகுமன்னாட்
குலபதியும்வேறோர் குருவேணுமென்றெணியே
விற்றொழிற்கும்வல்லான் வேதியனுமென்றோர்ந்து
பற்றொழிற்குமேலாம் பகருந்துரோணனென
எண்ணியவனையநந் தேடூதுவிட்டிருந்தான்
அண்ணலவன்வரலா றுய்ந்துரைப்போமம்மானாய்
நாரியுடன் ஈசனயந்தமகிஷியிலே
காரிகையேயுந்தன் கருத்தகவானிலுறு
மச்சமறுப்போலுலக மங்கையற்குண்டோசொலென
நிச்சயமாயென்றோழி நிலத்திலொருத்தியுண்டு
அங்கவளுக்குண்டெனவே யவளாரொனக்கேட்க
துங்கவில்லீசன் றுரோணன்மனைவியென்றாள்
ஈதறியவேண்டி யிசைந்தேசிவனெழுந்து
நாதன்றுரோணன் நகரிதனைச்சேர்ந்து
மன்னுமிருடி வடிவுகொடுநடந்து
அன்னநுகர்ந்திருந்தா னரியதுரோணன்மனையுள்
தாட்பூட்டியகதவு தானேநவியாமல்
வேட்பொடித்தகண்ணுன் விசிதமனைக்குள்ளாகி
அன்னமிடுமென்று ரத்துரோணன்னறிந்தான்
மின்னாளைப்பார்த்து மிகுபெரியோருக்கமுது
செய்யென்றசொற்படிக்குத் தேவியரும்போனகத்தை
ஐயமென்றவீச னவர்சமுகங்கொண்டுவந்தாள்
இப்படிப்பிக்ஷைக் கிசைகிலேனென்விரதம்
துப்பாய்ப்பிறந்தபடி சோறிடுவாரிற்புசிப்பேன்
சொன்னவசனமிதைத் துரோணருக்குத்தேவிசொல
அன்னபடியே யவர்கேயமுதிடென்றான்
துணைவனுரைக்கத் துயினீத்தளகமதால்
அணிகொளபிமான மடங்கலையுந்தான்மறைத்து
பொற்றட்டிலேயமுதைப் பொற்கொடியுங்கொண்டுவந்தாள்
கற்றொட்டுவில்லெடுத்தோன் காற்றையவண்மேலேவ
வீசினான்வாயுவவண் மெய்மானந்தோன்றிடவே
காசிலரனம்மறுவுங் கண்டான்றன்காமவெள்ளம்
பொங்கவேயங்கிருந்த புன்மேலினைத்துவைத்து
மங்கைதருமமுதை வாங்கியகன்றனனோ
மாதுமனைபுகுந்து மற்றும்பதார்த்தவகை

போதவெடுத்துவந்து புனிதன்றனைப்பார்த்தாள்
காணுமனின்றிடத்திற் காரிகையாடான்பார்க்க
தோணுமவிந்திரியஞ் சொரிந்தபுல்லைத்தான்சுருட்டி
கட்டியிருந்ததொரு கற்கியெதிரேபோட்டாள்
மட்டமிவுளியந்த மங்கையிட்டபுல்லருந்தி
கெற்சித்தனுமனிக்கக் கேட்டுத்துரோணன்வந்து
உற்சாகமாயிவுளி யுள்ளமெய்முகம்பார்த்தான்
மாப்போன்முகமும் மனுப்போலுருவுடைய
தீப்போற்குழந்தைபரி சேர்முன்னிடம்பார்த்தான்
கண்டுமொழியாளே கடிதில்வாவென்றழைக்க
தண்டாமரையாள்போற் றையலரும்வந்தணுகி
இக்குழந்தைவந்த வியல்பேதெனக்கேட்டான்
மிக்கவிருடிவந்து வெறுமாய்கையானதுவம்
நின்றிடத்திற்புல்லி னிறைந்திருந்தவீரியத்தை
துன்றியபுல்லோடே சுருட்டித்துரகமுன்னில்
வைத்தேனெனவுரைத்தாள் மாதேயிப்பாலகனை
உத்தேவளர்ப்பா யொருநாளுஞ்சாகாது
மைந்தனுனக்கிதனை வண்மையாய்க்காத்திடென்றே
அந்தமுனிசொல்லவதற் காரணங்குசம்மதித்து
பெற்றபிள்ளைபோல பிரியமுடன்வளர்க்க
உற்றுவின்பால்வேண்டி மூத்தமனேயென்றுரைத்தாள்
என்றுமனையா ளியன்முனியைப்பாத்துரைக்க
நன்றுநமக்கரசு நானிலத்திற்பாதியென்று
வாய்மைபகர்ந்தோன் மகனரசுதானிருந்தான்
சேய்மகிமையாலவன்முன் சென்றுவுவாங்கவெண்ணி
மன்னியர்கசேனன் வளர்கொலுவைத்தானடி
முன்னூலிலங்க முனிவர்கோன்சென்றனனே
மாமுனியைக்கண்டு மகிபனியாரெனவே
வோமகனேயுன்றுதை குருநண்பன்யானுமென்றான்
மன்னர்க்கும்வேதியர்க்கு மானிலத்தினண்பனெனச்
சின்னச்சொற்சொன்னநீ சீச்சியெனச்சினந்தான்
பொய்சொல்லக்காரியமேன் பூபாலாவோர்பசுவு
மெய்சொல்லிக்கேட்கவந்தேன் வேந்தாயெனக்களிப்பாய்
இரக்கனிவந்து மிதமிலாப்பேச்சுரைத்தாய்
தனைக்குளுனக்கீய்ந்தாற் றர்ம்மமோசெல்லுமென்றான்
என்சொற்பொய்யென்று யிதமில்வாதானுகி
வன்சொற்பகர்ந்தேயிரு மாப்புமேலாடியதால்

நண்பனென்றன்றுரைத நாடுபுகுநாளிற்
பண்புடனேபட்டம் பகுந்தருள்வேன்பாதியென்றான்
இப்போதென்னோடே யிடறுவாயாமாகில்
அப்பாதியுன்னரசை யாளவுநான்கொள்வனென்றான்
தனுவிற்றுரோணன் றானுரைக்கவேயரசன்
கனத்தவெகுளிபொங்கி கைபிடித்துத்தள்ளுமென்றான்
தள்ளும்பொழுது தழல்போன்றுமுனிவெகுண்டு
எள்ளளவுந்தன்ம மிரக்கமில்லாமாபாவி
மனதறிந்துநஞ்சருந்து மன்னுவுனேரதத்தில்
எனதுசிஷன்கரத்தா லெப்படியுமேபிடித்து
மன்னர்சபையிலுனை வரணணச்செய்வனெனப்
பதினான்குவிஞ்சை பயின்றோனிடம்பயின்று
மதியாலெழுநாளின் மழுராமன்பக்கவிலே
விற்றொழில்களெல்லாம் வியனுகக்கற்றுணர்ந்தோன்
உற்றவசிட்டனேயே யொத்தபெருமையுளான்
தன்மகனோடுந் தலைவியொடுதானகன்று
வன்மமுடன்கங்கா மகன்நகரினேக்கினனே
என்னாட்டின்மிக்க வெழிலாங்குருநாட்டிற்
பொன்னாட்டுமெத்தின் புறத்தேநெருங்கினரோ
ஆசான்வரும்வழியி லப்போதோர்சோலையின்வாய்
தேசானவைவருடன் சிற்றமுள்ளநூற்றுவரும்
பங்குசரியாகப் பந்துவிளையாடலுற்றார்
அங்கமுடனூற்றுவர்க ளாடிமுடியுமட்டும்
வீமனெறிந்த விசையினாற்பந்தெழும்பி
தோமென்றிரைக்கடலின் றூரத்திற்புக்கியதே
பந்துபோச்சென்றுவிடப் பாம்பனையநூற்றுவரு
நிந்தைபேசித்தரும னெற்றிதனிற்கல்லுவைத்தார்
கோதண்டவீரக் குருக்களதைக்கண்டதட்டி
ஏதென்றெடுத்துவிட்டு விவன்மேலென்குற்றமென்றார்
மாமணிப்பந்தையிவன் வாருதியிற்போக்கிவிட்டான்
கோமுனியேபந்தைக் கொடுத்தருளவேணுமென்றார்
பந்துதருவேன் பதராதேயென்றமர்த்தி
எந்தமுகத்தி லெறிந்தானெனக்கேட்டார்
அத்திசையைக்காட்டவரி யாசுகத்தைத்தானேவி
சத்தியுள்ளவாசுகத்தின் றன்குதைக்கோர்வாளிவிட்டார்
இந்தப்பந்தேகிவர வென்றேசரந்தொடுக்க
அந்தப்படிபந் தழைப்பித்தாரம்மாறைப்

தருமனதைவாங்கித் தம்பிகரத்தளித்தான்
அருள்வீமன்பார்த்தனுட அத்தத்தினிற்கொடுத்தான்
பார்த்தனதைப்பார்த்திப் பாழானபந்தலவா
மூத்தவெனதண்ணுவை மோசற்படுத்தியது
ஈதோவெனவே இடிபோனிலத்தறைந்தான்
கோதானபாதாளங் கொண்டதுறவில்விழ
கந்துகம்வீழக் கண்டந்தநூற்றுவரும்
அந்தமுனிக்கு மகங்கோபமானதுவே
பாத்தனெழுந்துமுனி பங்கயப்பூந்தாளிணையை
எத்திச்சிரமே லெளியேன்பிழைபொருப்பீர்
முன்னமெடுத்தளித்தேன் மூண்டசினத்துன்மதியால்
இன்னமெடுத்திடவோ வென்றுமுனிசீறினனே
சீறுமுனிபதத்தைச் சேவித்தருச்சுனனும்
ஏறுகணைவில்லெனிலு மென்கரத்திற்றருமென்றான்
பாசமுடன்வில்லீய்ந்தும் பந்தெடுக்கவல்லாயோ
நீசிறுவாவென்னமுடி நின்பதத்தைச்சேர்ந்தமையால்
பந்தெடுக்கவல்லேன்விற் பாணந்தருதியென்றான்
சிந்தைமகிழ்ந்துமுனி செங்கரத்தின்வில்லீய்ந்தான்
கோதண்டம்வாங்கிக் கொடுங்கணைகோர்த்தெய்துவிட்டு
மாதங்கவீரன் வரவழைத்தான்பந்ததனை
கருத்துமிவன்றீரக் கைவிசையுந்தான்பார்த்து
தரித்தசபதமிவன் றன்னுனிறைவேறும்
என்றிவன்மேலன்பா யிசைந்தகிருபையுடன்
அன்றுமுதலெந்நாளு மாதரவாய்த்தானிருந்தான்
வில்விசையன்றன்னை விரும்பிமுனியழைத்து
சொல்லீமெக்குத் துரோணன்யான்வந்தனென்றான்
எவிஞன்சென்றே யிசைந்தான்முனிவரவை
ஆவலுடன்காங்கையனு மன்றெதிர்கொண்டேபணிந்து
மிக்கவுபசாரமுடன் மென்மேலுபசரித்து
திக்கரசன்மாமுனியைச் சிங்காசனத்திருத்தி
எந்தாய்வரனீயா னென்னதவஞ்செய்தனென்றான்
சந்தோஷமாமுனிவன் மூன்கோடியாசுரைத்தான்
பண்பாயுகந்துவதிற் பல்கோடியாசுரைத்து
நண்பாகேளிங்குவர நாடியிருந்தவிதங்
சருவித்தொழில்பலவுங் கற்கவனத்தியதும்
பரசுமுனிகமல பாதத்திற்சேர்ந்ததுவும்
முற்றும்படைத்தொழில்கண் மோசமறக்கற்றதுவும்

மற்றுமவனை மறுவாளியென்வசத்தில்
ஒப்பிவைத்துமன்னனுக்கு வுடன்கேடனுயிருந்து
தப்பிலாப்பல்படையுந் தான்பயிற்றசொன்னதுவும்
அவனென்னிடத்தி லதின்பின்புகற்றதுவும்
எவருநிகரலவென் றெத்தொழிலுங்கற்றதுவும்
அன்புபெருகி யவனென்மேலாதரவாய்
பின்பவனைப்போலே பெருமையுடன்வைத்ததுவும்
தன்புதல்வனுக்கவனே தானேகுருவாகி
வன்படைகளெல்லாம் வசமாப்பயிற்றியதும்
மண்புவியைவிட்டு மறுமைக்கவன்செலுநாள்
பண்புடையநாடுமெக்குப் பாதியொருபாதிமகன்
என்றவன்சொற்றதுவு மியான்றவசிலெய்தியதும்
வென்றிரிஷிவடிவாய் வேணியரன்வந்ததுவும்
ஈசனருளாலேமா விக்குமரன்பெற்றதுவும்
தேசரசன்மாண்டு சிறுவனரசாண்டதுவும்
பாதகிபன்றன்சேயிடத்திற் பாற்பசுவுக்கெய்தியதும்
மாத்தலத்தாசைகொண்டு வந்தானெனனினைந்து
பேச்சுக்குப்பேச்சுப் பெயர்த்துநிந்தைகூறியதும்
வாச்சியனையவென்னை மானபங்கஞ்செய்ததுவும்
மாணுக்கன்கையாலே மன்னுவனைப்பிணித்து
நாணுமன்மன்னர் நகைக்கவுன்னைசெய்வனென்று
வஞ்சினங்கள்கூறியிங்கு வந்தேனின்னுதரவா
வந்தேனெனவுரைக்க மன்னன்மனமகிழ்ந்து
சந்தானமார்பன் றனையனூற்றைவரையும்
விற்குருவின்பாதம் விரைந்துபணியுமென்ற
சொற்கருதிச்சேய்களெலாந் தூயோனடிபணிந்தார்
காலில்விழுந்தெழுந்த காளையரைக்கைகாட்டி
நூலின்வலியானை நன்மனதிற்கேற்றபடி
இங்கிவற்கெல்லா மிசைத்தேபடைபயிற்றி
தங்குமிதிற்றிறத்தான் றன்னுலேயுன்சபதம்
பழுதுவாராதெப் படிமுடியுமென்றெழுந்து
தொழுதநூற்றைவரையுந் தூயோன்கரத்தளித்து
என்போலநீயு மினியவுலகாளுமென்று
பொன்பார்விளையுமொரு பொன்னகருந்தானீய்ந்தான்
அன்றுமுதலாநூற் றைவருக்கும்விற்றொழிலும்
வென்றிமழுவாட்கெதையும் வெற்றிகிரியின்றொழிலும்
கொற்றமுள்ளவாகனமேற் கொள்ளும்பயிற்சிகளும்

மற்றகருவிகளின் மழுராமன்ராகவன்போல்
வெஞ்சிலையின்மிக்க விசையன்றிறலறிந்து
எஞ்சியுடன்காயப் புருவானிரவியெதிர்
அஞ்சொன்முனியாவரினு மன்பிவன்மேலுண்டாகி
நெஞ்சினிறைய நிரம்புங்கலைபயிற்றி
அகலாதகல்வி யபேகைஷமேலாடியதால்
அகலாதுவாசா னடிகாத்திணைபிரியான்
கற்றதிறனுங் கருத்துணர்வுங்கைவிசையும்
மற்றெவருங்கண்டு மகிழாதவருளரோ
ஏகலவனென்றோர் கிராதன்முனிதாளிறைஞ்சி
பாகமடைந்துகுரு பத்தியுடனாடோரும்
பற்குனனையொத்துவரும் பண்பானவில்வீரன்
விற்குருவுமெச்ச வினவிக்குருசமுகம்
ஐயனேவித்தைக் கருடகஷிணையெனிடம்
மெய்யனேவேண்டும் விருப்பேதுகூறுமென்றான்
வலக்கைப்பெருவிரலை வாகாயருள்கவென்றான்
துலக்கப்பெருவிரலைத் துணிக்ககருவிதொட்டான்
வேண்டாமெனவே விலக்கினார்விற்குருவும்
ஆண்டவனேகேட்டீ ரபத்தவரக்காரியமேன்
என்றான்விரலருத்தா லேதுபலனெனக்கு
நன்றாய்மனதறிந்தே னம்விரலாவைத்திரென்றான்.
ஆனாற்பெருவிரற்கொண் டத்திரமெய்யேனினிமே
னானேவேனென்றே நயந்துவிரதம்பகர்ந்தான்
கிராதன்மேலன்பாய்க் கிருபையுற்றுமாமுனியும்
சராசனநூல்யாவுந் தடையறப்போதித்தனனே
அங்குலிபைக்கூபமதி லந்தமுனிபோட்டனென
புங்கமொடுபுங்கமுறப் போர்விசையனெய்தெடுத்தான்
தழைந்தவடவிருக்கந் தன்னிலைகளுள்ளதெல்லாம்
அழைந்ததுளைபரவ வத்திரமொன்றெய்யுமென்றான்
இமைக்குமுனங்கணையா விலையெலாந்தான்றுளைத்தான்
அமைக்கப்படிநாட்டி யதிலேசுழனிறுத்தி
சுழலுக்குமேலாகத் தோன்றுசதிர்லெக்குவைத்து
உழலுஞ்சுழலுக் கொருநூறுதுளைநிறுத்தி
அச்சுழலின்கீழே யதிலேழிடப்பலகை
மச்சுப்போலிட்டு வகைக்கோர்துளைநான்கு
நாலுக்குநேர்துளைத்து நுட்பப்பசுந்தருவின்
கோலிவரம்பெடுத்துக் குளம்போற்செலநிறப்பி

அப்புக்குட்டோற்றுகின்ற வந்தநிழலாட்டமதை
குப்புற்றுச்சைகை குறித்துநான்கம்பெடுத்து
எழுநாறுளைவழியே பேவேகியேயுழலுஞ்
சுழனுன்கதுதுளையுட் டோன்றுமந்தநான்குதிக்கும்
அற்றுவிழவீசுமென்றே யாசாரிதானுரைக்க
சொற்றபடியக்கணத்திற் சோராதுவீழ்த்திவைத்தான்
இப்போலனேக வியல்பானசோதனைகள்
தப்பாதுசெய்தான் றனுமாறனஞ்சயனும்
இந்தவிதங்கண்டா னிவன்போலவில்வலிக்குச்
சிந்தையுறுவீரர் செகத்தினிலுமில்லையெனப்
பூவினிலுள்ளோரும் பொன்னுலகில்யாவர்களு
மூவுலகுளோரும் மும்மூர்த்தியுமகிழ்ந்தார்
வில்லாசிரியனையே மீண்டொருநாணீர்த்துறையில்
பல்லாலோர்வேதியனைப் பற்றிக்கராப்பிடிக்க
கண்டோர்கடாஞேடிக் காளையற்குத்தானுரைக்க
தண்டால்வலியன்முதற் றுனூற்றுநால்வர்களும்
நிராயுதனுவேதியனை நின்றபடிபார்க்கலுற்றூர்
கராவவத்தைமாற்றுதற்குக் காண்டிபனேடிவந்தான்
அன்றிபத்தைக்காத்த வாதிமூலம்போலே
சென்றுத்திகிரியொன்று சீர்விசயனெய்தானே
வன்முதலையைப்பிளந்து மறையோன்றனைமீட்டான்
என்னுயிரைக்காத்தாய்நீ யென்செய்வேன்கைமாறு
தன்னுயிருக்கொப்பாச் சரமுதவினுன்மறையோன்
இருவரிதையமுமொன் றின்னுயிருமெய்யுமென
மருவியநல்வினையான் மறைமோற்கிசைந்திருந்தான்
பூசாபலமுடைய புத்திரற்கேயல்லாது
ஆசான்மனமேற்க வார்தானடக்கவல்லான்
சேயர்களெல்லாந் திறமாகக்கற்றபின்னர்
நேயன்றுரோணகுரு நீள்காங்கையன்முன்வந்து
நின்குலத்திலுற்ற நிகரில்லாக்காளையற்கு
தன்கருத்தும்விற்றொழிலுந் தக்கசிரமந்தொழிலும்
தானரங்கமேற்றிவிப்பேன் றக்கவனேகாணவென்றுன்
மாநதியாண்மைந்தனெடு மன்னன்விதுரன்முதல்
மற்றரிஷிபெரியோர் மானிலத்தின்மன்னர்முதற்
சுற்றத்திலுள்ளோர்கள் சூழ்சமுகமாயினரோ
விலாசமணியரங்க மேவிப்பெலிகொடுத்து
உலாவுமரிமான்கலைப பூருங்கிளர்திருவை

கைதொழுது தாள்பணிந்து கற்ருேர்ந்தவிற்குருவின்
ஐதிகமுமாசனத்தி னரங்கினை திராயமைத்து
சான்ருேர் தவத்தோர் சடைபின்முடியோர்மூத்தோர்
என்ருேரினீச்தோ ரியல்பாகவதரொடு
சாரணர்புத்தரிரு சட்சமயமிக்கோர்கள்
ஆரணங்கற்ருே ரறிஞர்கர்கணிகரொடு
மன்னுகுருகுலத்தோர் மற்றுமுள்ளராஜர்களுந்
துன்னுதிரைபோலச் சூழ்ந்திருந்தாரம்மானை
சத்தரிஷிமற்றரிஷி தனதன்முதலிந்திரனும்
நான்முகனுநாரணனு நக்கன்முதன்மற்றவரும்
மானவிமானமிசை வந்துமொய்த்தார்வானடங்க
தருமன்முதலான தனையரிருகுருவின்
சரணம்புகுந்து சமராயுதத்தொழில்கள்
விரவும்பலபடைகண் மேன்மையுறச்செய்துநின்ருர்
நுட்பமிகுவிற்ருெழிலு நுதிவேலின்வாட்டொழிலும்
மட்பகைவன்சக்கரம்போல் வாசியேற்றத்தொழிலும்
ஒருவர்க்கொருவர்பல வுன்னிதமாக்கற்றதெல்லாம்
தருமக்கடவுண்முதற் சந்ததிகளெல்லோரும்
அரசர்குழாந்திகைப்ப வங்கரங்கமேற்றிநின்ருர்
காணுச்சிறப்பிவர்கள் கற்றவித்தையென்றுமெச்சி
சேணுடர்பூவிலுளோர் சேரப்புகழ்ந்தனரோ
ஆயுதமனேகவித மானமுறைபயிற்றி
பாயும்பரிகரிதேர்ப் பயிற்சிமிசப்பயிற்றி
ஆயும்பரிநகுல னன்றிவுளிமீதேறி
பம்பரம்போலப் பரிசுழலவட்டமிட்டான்
வெம்பரிக்கால்பந்தடிப்ப வேடிக்கையாய்நடத்தி
மல்லகதியும் மயூரம்போலூர்கதியும்
வெல்லுஞ்சரகதியு மிக்கசயகதியும்
தாவுகதியைந்துமிவன் ருடாண்மையாப்பயிற்றி
மாவின்கதிகள் வகையறிந்துமுற்றியபின்
தேவர்மகிழத் திறல்வாயுவின்கதியை
மூவருமெச்ச முடிகிநகுலனுமே
வாயுகதிவிட்டு மனக்கதியாய்த்தான்முடுகி
ஆயுமுலகெங்கு மணிநொடியிற்சுற்றிவந்தான்
இவன்போற்பரியி னிதையமறியவல்லன்
சிவன்பாரளந்தோனுந் தேர்ந்திலானென்றுரைத்தார்
உம்பர்மலர்மாரி யுயர்நகுலன்மேற்சொரிந்தார்

சம்புமயன்மாலுஞ் சந்தோஷமானார்கள்
ஞானச்சகாதேவ னட்டத்தொழின்முதலாய்
தானத்தவர்மகிழச் சாரிமுடித்தனனே
வாயுசுதனும் வணங்காமுடியோனும்
ஆயுதவர்க்கமுத லடவாமுயன்றதற்பின்
மேரனையதண்ட மிகவேயெடுத்தவர்கள்
காரிடியையொத்துக் கனத்தவொலிமேலாட
தண்டின்முனையொன்றினுடன் றாக்கியதிர்ந்திடவே
மண்டலங்கள்யாவு மட்டேள்களுமெழும்ப
தாவியடிப்பத் தடிப்பாக்ககெடுத்து
கோவித்தடார்த்துக் குதித்தானேகொக்கரித்து
மனவயிரங்கொண்டு வயவீமனிற்குகின்ற
நினைவுதனைக்கண்டு நிமிஷமசுவத்தாமன்
கல்விகரைகண்ட கருணேசன்றான்விரைந்து
மல்வீமன்றன்னை மகிழ்ந்தேவிலக்கிவிட்டான்
இருவருந்தண்டத் திகன்மாறினின்றதற்பின்
குருகுலவில்வீரன் கோதண்டஸ்ரீராமன்
தேசிகன்பாதஞ் சிறந்தேபணிந்தேத்தி
காசிலாக்காங்கேயன் கண்குளிரவில்லெடுத்து
தேவரவுணரொரு சித்ரதிசயிப்ப
மூவருங்கண்குளிர மூர்த்திகளுங்கொண்டாட
விற்றொழிற்குமிக்க விசையனிவனல்லாது
மற்றொருத்தரொப்பிலென வைத்தவிலக்குள்ளதெல்லாம்
பொய்த்தாலும்வேதம் பொருவாளிபொய்யாது
மெய்த்தாதிபர்புகழ வீசினன்காணம்மானாய்
கரியாளிசற்பங் கருடனழல்சலிலம்
இரும்ரவியேகக்கடவு ளென்னும்விநோதக்கணைகள்
எய்தான்சுழலு மிலக்குத்தொகையுந்தான்றுளையும்
செய்தானிகல்விசையன் றேசத்தரசர்மெச்ச
சிங்காதங்குறத்துச் சிங்கமெனவேயெழுந்தான்
வெங்கதிர்மைந்தன் விசையனியற்றியபோல்
இலக்குகளெல்லா மிணையொத்துச்செய்துவந்தான்
தலத்தரசரெல்லாந் தனஞ்செயனையொக்குமென்றார்
இவ்வார்த்தைகேட்டு வெழில்விசையனானதை
அவ்வாறுகண்டா னருக்கன்மகனர்ச்சுனனை
விற்போர்புரிய விரைந்துவாவென்றுரைத்தான்
பொற்பாருமெய்யான் புளகாங்கிதனாகி

நன்றென்றிருவர்களு நாடியேசம்மதித்து
வென்றிலாவில்வளைத்து வெஞ்சாயகந்தொடுத்தார்
கண்ணிமைத்துமூடுமுனே காண்டீபமன்னவனும்
அண்ணல்வரிவின்னு ணறுத்துமுடிபறித்தான்
அம்பனந்தமேவி யவனுடலெல்லாமறைத்து
தம்பமுடன்மாயச் சரக்கூடமேவகுத்து
கன்னனுருத்தோற்றங் காணுமற்பண்ணுவித்து
மன்னுசிங்கநாதம் வகையாமுழக்கினனே
பொன்னுலகோன்முன்மகிழ்ந்து பூமாரிதான்பொழிந்தான்
மன்னவருங்காங்கையரு மற்றோர்களுமகிழ்ந்தார்
கோமுனியும்புன்முறுவல் கொண்டுகளிகூர்ந்தார்
க்ஷேமமுடன்சூழ்ந்திருந்தோர் சேரநகைக்கலுற்றார்
மானபங்கங்கையேற்று வள்ளலந்தக்கன்னனுமே
தேனுலவுந்தாராய் செருவிற்கிரசனுத்து
என்சினந்தீர் வினியமுகத்தாமரையால்
பொன்கலசமாயரங்கப் பூசைசெய்வேனென்றுரைத்தான்
சிறியிடிபோற் சினந்துசமர்செய்யவரக்
கூறரியகோபமுடன் கோதமனங்கேதுரைப்பான்
உந்தனுடவீர மொருக்காலேசொல்லுவதேன்
வந்தமுடிமன்னர் மகிழ்ந்தாரொபோதாதா
சூதமகனோர்குடையிற் றெல்லுலகெல்லாம்புரக்கு
நாதமகளோடுசமர் நண்ணிமுடிகொள்வாயோ
இன்னகுலமென்னு மியல்பிலாக்கானிறு
சின்னமரபோன் சினமேதெனச்சினந்தான்
எறுபட்டநாய்குரைக்கு மேதவன்மேற்குற்றமென்று
சிறுமுனிகோபமறத் தெய்வவிரதன்பகர்ந்தான்
துற்குணனான துரியோதனன்பகர்வான்
நற்குலம்பெற்றான்மோக்ஷ நண்ணுமோதேசிகனே
கற்றோர்நலனிறைந்த கன்னியர்கள்வண்மைநெறி
யுற்றோர்கள்வீர ருயர்வாழ்வின்மிக்காரார்
கொற்றவர்கணற்றவரோ குலத்தாலுயர்ந்தோர்கள்
மற்றுமவர்க்கே மரபுவடிவில்லையென்றே
அரிதுணினிற்பிறந்தா ரரன்வேயினிற்பிறந்தான்
பரவைதனையுண்டமுனி பண்பாக்கடத்துதித்தார்
சரத்திற்பிறந்தனர்காண் சண்முகவேலாயுதனும்
பரிக்குட்டியாய்ப்பிறந்தான் பண்பசுவத்தாமனுமே
எனறுபகர்ந்தே யிரவிசுதனைத்தழுவி

அன்றங்கதேசமதை யாளமுடிசூட்டிவைத்தான்
தம்பியர்கள்யாவரையுந் தானவன்சொற்கீழ்ப்படுத்தி
அம்புவியாண்மன்னவரை யவனடிக்கீழாக்கிவைத்து
நக்கன்றனதனுட னன்பானவாறேபோல்
மிக்ககொடைக்கன்னனுடன் வேந்தனுமேநண்பானான்
வின்முனியைத்தெய்வ விரதனடிதொழுது
மன்மகனேயாளாக்கி வைத்திருமக்கழகே
சந்ததிகளெல்லாஞ் சமர்த்தனென்றபேருமக்கே
வந்துற்றதுந்தன் மகிமையென்றுதான்புகழ்ந்து
மிக்கபலவிதமா வெகுமதியுந்தானுதவி
தக்கபலமன்னவருந் தன்குலத்திலுள்ளோரும்
வருணன்மகன்போலெண் மடங்காவரிசைசெய்தார்
கிரணமுடித்தோமேற் கிருபன்றுரோணனையும்
வைத்துநூற்றுவரையும் வாகனங்கண்மீதேற்றி
மெய்த்தன்னகரிவலம் வீதிவந்தாரம்மானைப்
அன்னகரமெங்குமெழி லாலார்த்திதானேந்தி
பொன்னகரிசுற்றிவந்து புங்கமனைபுகுந்தார்
குருவாந்துரோணன் குருகுலத்துக்காளையரை
ஒருநாளழைத்து வுயர்யாகசேனனைத்தான்
மாத்தேரிற்கட்டிவர வல்லீரோவென்றுரைத்தான்
தூய்த்தோனேயுத்தரஞ் சொன்னாலேபோதுமென்றார்
வாய்சொன்னாற்போல வகையாக்கொண்டுவந்தால்
சேயனையீருங்களைப்போற் சேவகராரென்றுரைத்தார்
ஆசாரிசொன்னவுட னங்கர்கோன்றன்னுடனே
தேசுடனேநூற்றுவருஞ் சிங்கமெனுமைவர்களும்
நாலக்குமிக்கான நான்குவகைச்சேனையுடன்
திருவுறையும்பாஞ்சால தேயமெருங்கினரே
பாரசையவஷ்டகசம் பம்மியேமண்டியிட
மேரசையத்திக்கசைய விண்ணுலகந்தானடுங்க
சிரசாயிரமுடைய சேடன்முடிகுலுங்க
முரசாயிரங்கோடி மொய்த்திடிகள்போற்குமுற
குருநாட்டுச்சேனைவருந் தூளிரவினயக்குறுக
வருவதுவைப்பாஞ்சால மன்னனுக்குத்தானுரைப்ப
புலியைமாதங்கவினம் போர்புரியவந்துதென்றால்
மெலியவிருப்பதுண்டோ விரட்டுவேனென்றுரைத்தான்
பொலிவுற்றசேனைப் புணரிபுடைசூழ
வலியச்சருவிவரு மன்னர்சினந்தனரே

சாகரமுஞ்சாகரமுந் தானெதிர்த்தவாறேபோல்
சேகரமாகவிருவர் சேனைசெருமூண்டதுவே
வேலாளும்வேலாளும் வில்லாளும்வில்லாளும்
காலாளுங்கால்ளுங் கைகலந்தாரம்மானாய்
பாஞ்சாலனப்போது பற்கடித்துக்கண்சிவந்து
தேஞ்சார்ந்தவீய்ப்போற் செருமுனைந்தான்சேனைகண்மேற்
தனுவளைத்துநாணேத்தி சரமாரியாய்ப்பாணம்
முனைமுகத்திலெக்காய் முகில்போற்சொரிந்தனனே
ஒரோருடம்புதனி லோராயிரங்கணைகள்
ஆருருவவோர்கணையி லாயிரம்பேர்தட்டுருவ
வீசினான்வேகமொடு மேகம்வருஷித்தாப்போல்
தேசிகர்கோன்விட்டபடை சேரமடிந்திடவே
பேரானசூறைப் பெருங்காற்றிலேறுபட்ட
வாரார்சருகினம்போன் மற்றோர்பறந்தனரோ
ஒப்பிலாவித்தை யுணர்ந்தபலகாளையரும்
குப்பலாய்வந்து குறுகிவளைந்தனரோ
கன்னிப்போர்கொண்டடர்ந்த காளை துரியோதனன்றன்
வன்னத்துசமறுத்து மரவுருளையச்சறுத்து
மின்னற்கிரணமுடி வீழப்புவிமீதே
துன்னுசரமாரி சொரிந்துமவனுணறுத்து
கவசம்பொடிப்படுத்திக் காந்தாரிசேய்மார்பில்
அவசம்பிறந்திடநு றம்பெய்தான்பாஞ்சாலன்
தரிப்பதுநில்லாமற் றான்மானபங்கமுற்று
பொருப்பொத்தமொய்ம்பான் புறங்காட்டியோடலுற்றான்
சிலதன்படும்பாட்டைத் தேரிரவிசேய்பார்த்து
மலைவில்லெடுத்து வடிக்கணைகடான்விடுத்தான்
கார்பொழியும்வாறதுபோல் கன்னன்கணைபொழிய
தார்புனையும்பாஞ்சாலன் றானுமெதிர்வில்வளைத்தான்
ஒப்பொத்துநின்று ஒருசாமமட்டாக
நிப்புற்றற்கண்டு நிருபர்கோனூற்றுவரும்
அங்கர்கோனுக்குதவி யாகியேவந்தடர்ந்தார்
துங்கமலைப்பாஞ்சாலன் றொடுத்துச்சரமாரி
காற்றுமழையுமெனக் காலகோடிகணையால்
நூற்றுவர்தேரு நொடியிற்பொடிப்படுத்தி
கைப்பிடித்தவின்னாண் கணையைப்பொடியாக்கி
மெய்ப்பரவுகன்னனையும் வீரங்குலைத்துவிட்டான்
தேரிழந்துகன்னன் றிடுக்கிட்டோட்டம்பிடிக்க

சூரனென்றநூற்றுவருஞ் சூழ்ந்தோடினரவன்பின்
தருமன்வயவீமன் றூர்நகுலசாதேவன்
பொருமுனையில்வின்னும் போக்கியும்வாளோடுசென்றார்
சிங்கத்தையொத்த திறல்விசையனங்குருமுன்
பங்கமாய்ச்செல்வதிலும் பாஞ்சலன்றன்னுடனே
செய்வோமுயித்தஞ் செயிக்காட்டால்ஜீவனென்ன
அஞ்சாதவன்முன் னணித்தேர்தனைநடத்தி
வெஞ்சாயகங்கள் விடுத்தான்றனஞ்சயனும்
கடல்போலவந்த கனபடையும்வீரனையும்
அடன்முழுகவைத்து அம்பாற்றூரத்திவிட்டான்
இன்னேரஞ்செய்த வியல்பாமுயுத்தமெல்லாம்
நின்னாட்டங்கண்டிலையோ நித்திரையோவென்றிகழ்ந்து
பெற்றவர்க்குச்சேயா பிறந்தோர்க்குச்சோதரமா
உற்றவர்க்குமன்பா யுயிர்பிழைப்பேன்யான்வீர
சிங்கமெனவேயுன் சித்தமிதிலுற்றறிந்து
பங்கப்படாதபடி பையலேரீபேகுசென்றான்
உத்தரவின்றிங் குணர்த்தினையானுமிகச்
சித்தன்சிறியன் செருச்செய்யலாகாதோ
கன்னிப்போராகக் கருதியுந்தன்பேரில்வந்தேன்
உன்னிற்செருப்புரியா துயிரோடுசெல்வதிலும்
செத்தாலும்வீரந் திகழும்புகழலவோ
பத்தாதவனெனவே பாஞ்சாலாவெண்ணாதே
சிங்கநீயென்றுரைத்தாய் சிங்கத்தின்கண்பறிக்குஞ்
சங்கையிலானுன்றனக்குச் சரபப்புள்ளென்றுரைத்தான்
இந்தவிதஞ்சொல்ல விருகண்ணழல்சொரிய
சந்தமுடன்வில்வளைத்துத் தானேர்ந்தாரேயிருவர்
சீயமிரண்டுஞ் செருப்புரியும்வாறேபோல்
மாயச்சிலதனுடன் மன்னவனும்போர்புரிந்தான்
காரிரண்டுபோலிருவர் கார்முகங்களொத்தனவே
தேரிரண்டுதானுமிரு செம்மலைகளொத்தனவே
அம்புமயமாக வந்தரங்கசேர்ந்தனவே
தும்பையணிந்திருவர் சோராதுநின்றனரோ
சரமுஞ்சரமுனையுந் தானொன்றோடொன்றுகௌவி
திரையிலரலையெழுப்பித் திரிந்தசிலகணைகள்
புவிகடனைத்துளைத்துப் போகியுலகுற்றசில
சவியுடனண்டமெலாந் தானுலவிநின்றசில
ஓர்கணையையோர்கணைக ளூடேபிளந்தசில

கூர்கணையைக்கூர்கணைகள் குறுக்கேதறித்தசில
ஒன்றுசிரகொன்றரிந்து வோடுங்கணைகள்சில
குன்றுதழல்பரப்பிக் கொன்றசிலகணைகள்
வானோரசுரர் மனுராக்ஷசர்நடுங்க
கானூர்மிருகக் கணங்கணடுநடுங்க
இந்திரனுந்திக்கிலுள வெண்மர்களுந்தானடுங்க
சந்திரனுமாதித் தனுந்தேர்விரைந்தோட்ட
அட்டநாகங்குலுங்க வட்டகெசங்கணடுங்க
அட்டகிரிக ளசையவலைசுவற
குனித்தசிலைநிமிராக் கொள்கையாவில்லிரண்டு
நினைப்பிற்பலகோடி நீள்சரங்களெய்துநின்றார்
ஏழுநாளாக வினையொத்திரவுபகல்
தாழ்விலாவெம்போற் சரமாரிதூற்றலுற்றார்
எட்டாநாளன்று வியல்பானபாஞ்சாலன்
கட்டாகநாகக் கணைதொடுத்தான்பார்த்தன்மெயில்
தேவர்களைத்துரத்துந் தீயவிடங்கொப்பளித்துக்
கோவமுடன்வார கொடுங்கணைகண்டேவிசையன்
சற்பவைரியெனுந் தன்கருடபாசம்விட்டான்
விற்பனன்விட்ட விஷக்கணையைத்தான்விழுங்க
சிந்துரமென்னுந் திறற்கணையைமன்னேவ
இந்திரன்மைந்தனரி யென்றகணையான்மாற்ற
வன்னிக்கணையேவ மாத்திவருணாஸ்திரத்தால்
துன்னுமுகிற்கணையைத் தூற்றினான்பாஞ்சாலன்
அன்னகணையைவாயு வஸ்திரத்தான்மாற்றினின்றான்
மருத்துக்கணைதொடுத்தான் மன்னனந்தப்பாஞ்சாலன்
உருத்தாதிசேடனுட வொண்கணையினான்மறுத்தான்
இருட்டுக்கணையை யிறைவன்றொடுத்துவிட
விரட்டியொளியாக்க விட்டான்மதிக்கணையை
ஆயிரங்கையா னருங்கணையைத்தானேவ
ஆயிரங்கண்ண னருங்கணையினான்மறுத்தான்
இந்திரபாச மிறைவன்முனிந்தேவ
கந்தப்பிரமன் கணையாலறுத்துவிட்டான்
உந்திதனிலுதித்தோ னுத்தகணையேவ
உந்திபூத்தோன்கணையா லோர்நொடிக்குண்மாற்றினனே
[illegible]கணையைக் கடிதில்பாஞ்சாலன்விட
வண்ணச்[illegible]ர்கணையான் மாற்றிவில்லுந்தேரறுத்தான்
வின்றண்[illegible]ரம்பு மிழந்துவெறுங்கையோடே

சொன்னேரத்துள்ளாய்த் துணிந்தாளிபோற்பாய்ந்தான்
ஆயுதமில்லாமனிரா வாயுதனுப்பாய்ந்தது வைத்
சியமெனனின்ற திறல்விசயன்கண்டேனே
ஆயுதமிலான்மே லமர்வாளியொன்றுதென்
வாயுவெனப்பாய்ந்து மற்பொருதவாருமென்றான்
விற்போரின்மிக்க விசயனுடன்பாஞ்சாலன்
மற்போர்கள்செய்திறத்தை வானவருமெச்சினரோ
சேர்ந்துவிசைகொண்டு திறமுடையபாஞ்சாலன்
காந்தியைவாயுவெனக் கைக்கொண்டுதானெழும்பி
யோர்கடிகைதூர முயர்ந்தமதிலோரமதில்
வாரமுறுபார்த்தனுடன் மன்னவனுந்தான்குதித்தான்
மாயன்சிவனையுன்னி வல்விசயன்றானெழும்பி
ஆயனருளெண்கடிகைக் கப்பாற்குதித்தனனே
அவ்வேளைபாஞ்சால னயர்ந்தானதுவறிந்து
வெவ்வாசித்தேரான் விரைந்துகானூற்பிணித்து
தேரின்மேலேற்றிச் செருச்சிங்கநாதெனவே
பேரின்விஜயசெய பேரிமுழக்கினனே
சிங்கநாதத்தொனியெண் டிக்குஞ்செவிடாற்ப
துங்கப்பதினெண் டொனிவாத்தியமுழங்க
தேவர்துதிபரவத் தேவேந்திரன்மகிழ
மூவர்மகிழ முனிவோர்களிகூற
பரிவாகியவிசையன் பாஞ்சாலனைவிட்டு
குருனைவேந்தனுக்கி கொண்முன்னமேகுருவும்
கன்னனொடுநூற்றுவனாக் கண்டுசினந்தேமுனியும்
முன்னொருவனைச்செயிக்க முடியாதேயோடிவந்தீர்
கற்றசமத்துகளுங் கங்கைமகன்வீரியமும்
உற்றகுலத்தோ ருயர்ந்தோர்மகத்துவமும்
எந்தன்சபதமிவை யெல்லாம்பழுதாக்கி
வந்ததேபோதுமென மாமுனிவனைந்திருந்தான்
சிந்தனைகொ டுரோணனிடந்தெய்வவிரதன்வந்து
சந்தேகமெண்ணுதீர் தனஞ்சயன்வென்றேவருவான்
என்றுரைக்கமன்னவர்க ளெல்லாமொருமுகமாய்
நின்றிடத்தேபார்த்தார் நெடியபிறையாய்வதுபோல்
வழிமேல்விழிபரவ மன்னர்நின்றுநோக்குகையில்
அழகாய்விருதோசை யார்வாரங்கேட்டதுவே
கங்கைமகன்கண்குளிர்ந்தான் காவலருமெய்மகிழ்ந்தார்
அங்கர்கோனூற்றுவரும் அபமானமேயடைந்தார்

கொங்குலவுகங்கைமகன் கோடிமுடிமன்னவனை
அங்கெதிர்கொண்டேயழைத்து வன்புடனேவாருமென
கோடிநரபாலர் குறித்தெதிராய்ச்சென்றளவில்
ஆடவர்கள்சிங்க மருச்சுனனுவந்தெதிர்ந்தான்
அரசர்பரவிநிற்கு மாசாரவாசலிலே
இரதந்தனைவிட் டிரங்கித்தனஞ்சயனும்
தேசிகன்பாதஞ் சிரசேற்றிநின்றளவில்
வாசவன்மைந்தன் மலர்க்கரத்தைத்தான்பிடித்து
கண்ணதனிலொத்திக் கருணையானந்தபஷ்பம்
வண்ணமுடன்றுளிப்ப மார்போடுறத்தழுவி
அன்றென்சபதமதை யன்பாமுடித்தாய்நீ
இன்றுனக்குக்கைமாறு யேதுசெய்வேனென்றிரங்கி
தவத்தாலேபெற்ற சரமொன்றுதானுதவி
நவச்சமரிலெக்காலு நல்விசையமுண்டாகக்
கடவதெனமுனிவன் கண்குளிரவாழ்த்திவிட்டான்
திடமுற்றவீமனைச் சேவித்தடிபணிந்தான்
வெற்றிபெற்றவீரியனை மெய்யோடுறத்தழுவி
கொற்றவாயுத்தசெயங் கொள்வாய்நீயெக்காலும்
கண்ணிலாமன்னன் கமலப்பதம்போற்றி
அண்ணல்விதுர னடித்தாமமைபணிந்தான்
நல்விசையமுண்டாமென் னுளுமெனவாழ்த்திவிட்டான்
தருமன்பதம்பணிந்து தனுவிற்றொழில்கொடுத்த
குருவினடிபோற்றிக் கொற்றவனுமேதுசொல்வான்
மன்னவனையான்பிணித்தேன் மாமுனிநின்னேவலினால்
சொன்னசபதஞ்சிற்றத் துகழ்த்தீர்த்தாட்கொள்கவென்று
என்றஞ்சிக்கேட்டளவி லேந்தன்முனிமற்றோரும்
நன்றிவன்சிந்தையென நாடிக்களிகூர்ந்து
ஒன்றிமுனிமகிழ்ந்து வுத்தாரந்தான்கொடுக்க
நன்றுரைகள்சொல்லி நயனஞ்செலந்துளிப்ப
பிள்ளைசெயுந்தீமை பிதாபொறுக்கும்வாறேபோல்
தெள்ளுமுனிசொற்காகச் செய்தேன்பொறுக்கவென்று
கட்டவிழ்த்தான்பார்த்தன் காவலனைப்பார்த்துமுனி
மட்டலவுதாரானென் வாய்மைபொய்யென்றேதியவுன்
வன்மதமுந்துற்குணமு மாய்ந்ததோமன்னவனே
என்முகத்திலாவீய்ந்தா லேதுபயனென்றுயே
இதங்கெட்டசொற்பகர்ந்தா யென்றுகரந்தொட்டிழுத்து
சதங்கொண்டபாதிபுவி தாரொனெனத்தள்ளினையே

ஒப்பிலாமன்ன வொருசிறுவன்கையாலே
கைப்பிலாவன்குரங்காய்க் கட்டுண்டுவிங்குவந்தாய்
மன்னர்நகைக்க மதிபெருமைதானிழந்து
சின்னங்கள்பட்டாயுன் றேசமெல்லாநானுச்சே
எம்பாதியும்பின் னிரங்காதாநின்னுடைய
செம்பாதியுமெனக்காய்ச் ஜீவனுடலுமெனக்காய்
ஆச்சுதேதீயோய்நின் னாட்சியுள்ளசிமையெல்லாம்
வாச்சுதேயெந்தனுக்கு மன்னாநின்வாழ்வடங்க
தந்தேனுடனுயிருந் தான்போய்ப்பிழையுமென்றான்
நொந்தேதலைநிமிர்ந்து நோக்கினான்மாமுனியை
மானபங்கமாகவிந்த மன்னர்சபைநடுவே
தேனர்போற்கட்டிவந்த செய்கையொன்றுபோதாமல்
என்மனதுநோக வியம்பாதெல்லாமிசைத்தாய்
உன்முடியைத்தானறுக்க வுற்றதொருபுத்திரனும்
என்னுடனேயூடாடி யேவினாற்போர்புரிந்து
உன்னிடத்திற்கொண்டுவந்த வுத்தமன்றாள்தான்சேர
பொன்னையனையவொரு புத்திரியும்பெற்றுகந்து
அன்னவனுக்கேயா னரியமணஞ்செய்வனென்று
விரதம்பகர்ந்துமனம் வெந்துழன்றுமீண்டனனே
அரவம்பிடித்த வலவன்போலேமயங்கி
தன்னூரைநோக்கிமிகத் தானடந்துவானவன்போல்
மன்னேன்கலைக்கோட்டு மாமுனிபோலொப்பான
மிக்கமுனிவோர்கண் மெல்லடியைத்தான்பணிந்து
தக்கசுதனென்றுந் தனையையொன்றுந்தான்வேண்டி
பக்குவமாய்வேழ்வி பரிவாகமுற்றியபின்
அவ்வேழ்விக்குள்ளே யரிதாம்பெரும்பூதம்
செவ்வேயெழுந்துகையிற் செம்பொற்றட்டொன்றேந்தி
மாமுனிகைக்கிந்து மறைந்தங்கவாகுதிக்குள்
யேமப்பொற்றட்டி விருந்தபிண்டம்ரெண்டினையும்
மன்னவன்கைக்கிந்துன் மனைவியர்கைக்கீயுமென்றான்
வன்னிவரும்பிண்டமதை வாங்கிலர்கள்தேவியர்கள்
தேவிமார்பிண்டமதைத் தீண்டாதிருந்திடவே
கோவமாய்வேழ்வியிலே கொட்டினான்பிண்டம்தை
வலையம்புரள மணிக்குண்டலந்தயங்க
இலங்குகிரணமுடி யிந்துகதிர்போலிலங்க
சிலையுடன்கைமெய்யுந் திகழ்கவசமுமிலங்க
குலவுஞ்சியக்குருளை குன்றிற்குதிப்பதென

தலைநகங்களிக்கத் தடந்தேரினேடுதித்தான்
துலங்கிரவியுச்சிமையந் தோன்றினன்போற்றேன்றினனே
வந்தவயவீரன் வடிவுஞ்சௌரியமும்
தந்தையும்பார்த்துண்மகிழ்ந்தான் றக்கோருமெய்மகிழ்ந்தார்
சங்குஞ்சலசலங்க தார்முரசுதான்முழங்க
எங்கும்பரிமளச்சாந் தேத்தியினைக்கலுற்றார்
துங்கமணிமகுடத் தோரணங்கடானிரைத்தார்
அன்னகரியெல்லா மலங்காரஞ்செய்தமையால்
பொன்னகரியஞ்சப் புனிதமுற்றதம்மானாய்
சுபமுலவுபாற்கடலிற் றேன்றுமமுதமென
உபயாசன்றீப்புரத்தி லுன்னஞ்சுருதியினல்
மாதரழகெல்லாம் வகையாகத்தான்றிரட்டி
சோதகலோர்பெண்ணுருவங் கொண்டவடிவமென
மெய்யழகுவெள்ளம் விரவிற்பரந்தொழுக
தையலொருத்தி தலைப்பட்டாளம்மானாய்
முன்னமிலங்கை முடியரக்கர்வம்மிஷங்கள்
தன்னைக்கருவறுக்கத் தாளொருத்திதோன்றியபோல்
மன்னர்குலங்களெல்லா மாளப்பெருமாயக்
கன்னியழன்முகத்திற் கற்புடையாடான்பிறந்தாள்
தங்கச்சிலைதனிலுர் தக்கவழகுள்ளாடன்
அங்கத்தைக்கண்டிவளே யர்ச்சுனனுக்காகுமென்றான்
வில்விசயன்றன்னெழிற்கு மெல்லிநல்லாடன்னெழிற்கும்
அல்விலகுமாமணியு மாணிமுக்துங்கோத்ததொக்கும்
பொன்னினகமணியைப் பூண்பதித்ததொக்குமென
முன்னுதித்தகளை முனிமுடியைக்கொய்திடுவான்
பின்னுதித்தாள்வேந்தர் பெருங்குடிக்கிரஞ்சமதாம்
மூண்டகரும முடிந்ததெனமகிழ்ந்து
ஆண்டரிஷிக ளவரவரைத்தெண்டனிட்டு
மகஞ்செய்தவரில் வசமாய்நினைப்போல
சுகம்பெற்றாரில்லையெனத் தோன்றறனைவாழ்த்திவிட்டார்
மக்கள்வளர மகிட்சிமிகவளர
மிக்கபொறிவளர மென்மேலும்வாழ்ந்திருந்தார்
சுடரிற்பிறந்ததிட்டத் தூய்மன்றுரோபதையும்
வடிவுற்றிலங்கி வளர்ந்தார்பருவமுற்றூர்
பருவமுறும்பாலன் பண்பார்துரோணனெனுங்
குருவினடிசிரசு கொண்டுகோதண்டமுதற்
கருவித்தொழிலெனக்குக் கற்பித்தருளவென

வரிவிற்குருவு மகிழ்ந்தான்மனதோடே
இவனன்மரணமக் கென்றேயறிந்திருந்தும்
தவருதியல்பாயத் தனுநூல்பயிற்றிவைத்தான்
விற்றொழில்களெல்லாம் விறலாககற்றதற்பின்
பற்றொழில்களெல்லாம் பரிவாய்ப்பயின்றிருந்தான்
கடைந்தகழைத்தழலைக் காண்பித்துவேவதற்கு
உடந்தையுறவதுபோ லொத்துப்பயிற்றிவைத்தான்
இவ்வாறமைந்தே யிவனிருக்கநூற்றுவரும்
வெவ்வாசிவீரன் விசயன்முதலைவர்களும்
ஒழுகிப்பழகியிவ ரொத்துவருநாளையிலே
பழுதற்றசொல்லும் பகையற்றசிந்தையுமாய்ப்
பொறையுந்தயவும் பொருந்தொழுகும்புத்தியுடன்
நிறையுநெறியு நிலைஞானக்கேள்வியுமாய்த்
தருமம்விளங்குந் தருமன்குணமறிந்து
உருமைத்துணைவ ருயர்வலியுந்தான்பார்த்து
கங்கைமகன்விதுரன் கண்ணில்லானும்மகிழ்ந்து
இங்குதருமற் கிளவரசுப்பட்டமென்று
தந்தையுடபட்டந் தனையனுக்கேதக்கதென
சந்தமணிமகுடந் தருமன்சிரசேற்றி
வேண்கவிகைநீழலிலே மேதினிகள்வீற்றிருக்க
பண்புடையசேனை பதிப்பட்டமுமீய்ந்தான்
காங்கையர்க்குமன்னனுக்குங் கார்முகவிதுரனுக்கும்
பாங்கின்மனதுக்கிணங்கப் பாருலகைப்பஞ்சவர்கள்
ஆண்டுலகங்காத்து வருமையுடன்வாழ்ந்துநெறி
பூண்டுபுவிதழைக்கப் புத்திரர்செங்கோல்புரிந்தார்
காகுதியுடையவர்கள் காசினியையாளுமன்னன்
ஆகுதியெல்லாமைவருக்கே யாச்சுதெனநடுங்கி
தீய்ந்தமனத்தான் சிகிநேரரவுயர்த்தான்
காய்ந்தகொடும்பாவி காராவுருவனையான்
புழுங்கியழன்றமனம் புண்ணாகநொந்திடைந்து
அழுங்கிமெலிந்துபெற்ற வையன்பதம்பணிந்து
எம்பியருமியானு மிடைந்துசலித்திருக்க
உம்பதமுஞ்செல்வ முதிட்டிரனுக்கேயளித்தாய்
தங்களரசியலாற் றம்பிமார்சத்துவத்தால்
எங்களனைவருமா யெள்ளளவுமெண்ணறியான்
ஐவரரசிருக்க யாங்களவர்க்கடிமை
செய்வதடவோகின் சித்தத்துக்கொத்ததுவோ

என்றுகுலத்துக் கிடராஞேனீ துணைக்க
அன்றுசிறுவனுக்கு மக்கமில்லானேதுசொல்வான்
சீர்தூக்கிப்பாராமற் செப்பினுயிவ்வசனம்
பார்தாங்குமெம்பியுட பட்டமவன்பால்ர்பெற்றூர்
எந்தன்முதுவரசு யெல்லாமுனிக்கலவோ
அந்தமுடனெல்லோரு மன்பாயிருந்திரோல
உங்களுக்கொத்த வுரமுந்தயிரியமும்
இக்குலகிலார்க்குண் டெதிரரசர்வேறமுண்டோ
தந்தையிழந்த தனேயருக்குத்தாதைபதம்
சிந்தையுடனீந்திலமேற் றேசத்தார்தானகைப்பார்
வீடுமெனுக்கும் விதுரனுக்குமேராது
மாடதனிலுள்ளபல மன்னவருமேபகைப்பார்
என்றுசொல்லப்பொல்லா னிருதாளும்பூண்டழுது
மன்றலணிகன்னன் மனமிசைந்நற்றேளன்
சகுனிமுதலாயத் தக்கதுணைவருண்டு
பகைகள்சுடர்முன் பனிப்போலேமாறிவிடுந்
தருமனேப்பார்த்தித் தலம்விட்டொருநாட்டில்
இருவென்றுநீயுரைத்தா லேகுவாரப்படியே
சந்ததியென்ற தயவென்மேலுண்டானுல்
இந்தவரமொன்றீய்ந்தீ லித்தேசம்யான்பெறுவன்
பாதகன்சொன்ன பயிற்சிப் பழிமொழிக்கி
தாதையுமொத்தான் றயவில்லாப்பாவியைப்போல்
என்செய்வேனென்று இருந்தேவிசாரமுற்று
நன்சொல்லால்வீடுமனை நம்பியையுந்தானழைத்து
புன்சொன்னினைவுடைய பொல்லானரவுயர்த்தான்
என்சொல்லுங்கேளா தியல்பானவைவருடன்
ஒத்திரோனென்று ஞெதுங்கியிருப்பனென்றுன்
பத்தியிருக்கில்வினேப் பற்றருதென்றுசொன்ஞன்
நீதியறியா னெறிகெட்டசேதிசொன்ஞன்
தாதையயேதம்பியரோ தானிதற்சென்செய்வனென்றுன்
இருதிறமைந்த ரிருப்போரிடமானுல்
பொருதுவர்மேன்மேவிப் பொல்லாப்புவாராமல்
தருமஞேடைவரையுந் தான்சதமாமைந்தரையும்
வரிசையின்வெவ்வேறே வைத்தால்வினேயகலும்
நண்புவளர்ந்திருக்கு நன்மையாய்வாழ்வரென்று
பண்பில்லான்சொல்லப் பதறியேகாங்கையனும்
காதுதனேப்பொத்திக் கடுத்தேயெழுந்திருந்து

ஏதுனைத்தாய்நல்லோர்க்கு மீசனுக்குமேற்காது
அறந்தப்பச்செய்தா லரசும்பெருவாழ்வும்
குறைந்திம்மையிற்கெடுவாய் கோனரகிலேயுறுவாய்
நின்வாக்காற்சொன்னுப்போ னீதியில்லாச்சொல்லிதனை
என்வாக்காற்சொல்லே னிடறுனக்கென்றேகினனே
ஏகியபின்விதுர னென்சொன்னுயண்ணுநீ
போகியனையான்சொற் புன்மதிக்குளுள்ளாகி
அற்றேன்சிறுவ ரிருந்தோர்க்கடைக்கலமாய்
பெற்றேனைப்போற்பாத்தாற் பிள்ளையெல்லாம்வாழ்ந்திருக்கும்
சற்றேபிறக்கணித்தாற் றன்சேய்க்கேகேடுவரும்
கற்பித்தோன்காற்ப னுயிைக்கசடர்கடன்
துற்புத்தியாண்மையினுற் சோர்ந்தேயிழந்திடுவார்
பொறுத்தாரரசாள்வார் பொங்கினூற்காடுறைவார்
சுறுத்தநினைவுங் கருத்துமறிந்தேன்காண்
நஞ்சூட்டிகங்கையிலுன் னந்தமொல்லாந்தள்ளிவிட்டார்
ஐந்திரட்டிப்பெலனு யம்புவியில்வீமன்வந்தான்
மீன்றூண்டிக்காரன் மிதப்பிற்கண்ணுனதுபோல்
தான்றூண்டிக்காக்கவலன் றக்கபிராணுதலினுல்
செய்ததொருதீவினைகள் செய்தவர்க்கேயல்லாது
எய்துமோமற்றவர்க்கு மெய்தாதொருக்காலும்
சின்னவயதிலெந்தன் சேய்கேட்கவில்லையென்றாய்
மன்னிலைபெற்றான் மதிப்பானேமற்றவனை
படித்துநாங்குத்திற் பதரிலரிசியுண்டோ
சடுத்தமேஎின்மனதிற் றக்கபடியென்றகன்றான்
மந்திரிசொற்கேட்டு மயங்கியேயந்தகனும்
தந்திரமேதென்று சலித்தேமெலிந்திருந்து
மயங்கித்தெளிந்ததற்பின் மன்னவர்களைவனையும்
தயங்கவேகொல்லமனஞ் சம்மதித்தானந்தகனும்
துற்புத்திமந்திரியாந் துட்டன்புரோசனனை
கற்புற்றபஞ்சவனைக் காய்ந்துகொல்லவஞ்சனைகள்
எல்லாம்வகையா யியம்பிக்குருடனிவன்
வல்லானேயென்றன் மகனேயுலகாள
வைத்தாலுனைப்போல மந்திரிகள்வேறுமுண்டோ
நெய்த்தாரைவேலோய் நினைத்தன்முடித்தியென்று
நூற்றுவருந்தந்தையுமாய் நட்பமுடனுவன்று
மூத்தவனைவனையு முன்னேவரவழைத்து
எற்றதுணைவருட னியல்வாரணாவதத்தில்

தோற்றமுடன்வாழ்ந்திருங்கள் துய்யபுரோசனனை
மந்திரியாக மகிக்ஷியாய்வைத்திருந்து
அந்தவுலகெல்லா மரசாளுமென்றுரைத்தான்
தாதைக்கிழுத்தோன்சொற் றான்கேட்டடிபணிந்து
பேதமிலாவுத்தாரம் பெற்றெழுந்துகங்கைமகன்
பக்கமடைந்து பணிந்தாரெடுத்தணைத்து
தக்கவிழிநீர்க டான்சொரிந்துவாழ்த்திவிட்டான்
சிற்றப்பன்பாதஞ் சிறந்தைவரும்பணிந்தார்
பெற்றப்பனையிழந்த பிள்ளைகளைத்தான்றழுவி
ஆபத்துவந்தவைக்கு மாதியேகாத்தருள்வாய்
மாபுத்தியோபுவி வண்மையுடனாளுமென்று
வீமன்றனையே விதுரன்றனித்தழைத்து
மாமந்தரப்புயனே மந்திரியைநம்பாதே
அரக்கினலுங்கட் கரமனைதானென்றியற்றி
இறக்கமறக்கொல்ல விசைந்தங்கவன்வாரான்
தச்சனொருவன் றனையானுனக்கனுப்பி
அச்சமரவேசுறங்க மவனலியற்றுகிறேன்
உன்றுய்துணைவருட னேடிப்பிழையுமென்று
தன்மனுரைத்துத் தனையர்களைவாழ்த்திவிட்டான்
குந்தியுடன்பஞ்சவருங் கோமானுரைத்தபடி
மந்திரியுஞ்சேனைகளு மானகர்விட்டேகினரோ
காடுகடந்து கனவாரணாவதமாம்
நாடுகடந்து நகரடைந்தாரம்மானைப்
பொன்னகரின்மிக்காகப் பொற்பாயலங்கரித்து
நன்னகரிகோட்டைபுக்கார் நன்மையுள்ளபஞ்சவர்கள்
மங்குலுலவு மணிமாளிகைபுகுந்து
சிங்கமெனவே செகமெல்லாமாண்டிருந்தார்
மும்மாரிபெய்ய முடிமன்னர்தான்வணங்க
எம்மாநிலமு மியல்பாய்த்தழைத்தோங்க
ஓர்கவிகைக்கீழா யுலகங்குடியிருக்க
சீர்கவியச்செங்கோல் செலுத்தியரசாண்டிருந்தார்
இந்திரன்போல விவர்வாழ்ந்திருக்கையிலே
மந்திரிதுரோகிவெகு வஞ்சனைசெய்யத்துணிந்தான்
அரக்காற்சிறக்க வரண்மனையுண்டாக்கவென்று
உரக்குந்திறல்வேலை யோங்கிநடந்ததுவே
சிற்பர்முறையே திறமாம்பணிநடக்கும்
உற்பன்னந்தன்னை யுயர்விதுரன்றானறிந்து

தக்கமதியுந் தருமங்குடியிருக்கு
மிக்கவொருசிற்பனுக்கு மிகுதிதனமளித்து
சற்பனையாமாளிகையுட் டானேர்சுரங்கமதை
உற்பனமாயுண்டாக்கி யோர்கான்வழிச்சார்பு
மட்டுங்கொடுபோய் மன்னர்பிழைக்கும்பொருட்டாய்
திட்டமுடனமைத்துத் திரந்தபுழைவாயைக்
கற்றாணிலைடைத்துக் காற்றின்மகன்காதில்
உற்றோதிவைத்து வுகந்துவாவென்றுரைத்தான்
தருமக்கடவுளுரை தான்கேட்டுக்கம்மியனும்
கருவுத்தரண்மனையிற் கம்மாளரோடிசைந்து
ஒற்றலங்கார மொழுகுமணிமாளிகையை
விற்றுங்கமேக வியன்மண்டலந்தொடவே
அலங்கமருவு மரண்மனையுற்றேறுமல்
கலங்காதொருசுரங்கங் கானளவுந்தான்முடித்தான்
தான்முடித்தசூழ்தனைத் தானறியவீமனுக்கு
மானமுடனெல்லாம் வகையாய்விரித்துரைத்து
இந்தத்தூணின்கீ ழிருக்குதுகாணச்சுரங்கம்
விந்தையுடனித்தூணை வீமாவுனையலது
வன்மையுடன்பிடுங்க வல்லார்களாருமில்லை
உன்மனதுதானறிய வோதென்றான்வல்விதுரன்
துற்புத்தியான துரோகியெனுமந்திரிதான்
பொற்புற்றமாளிகையிற் பொங்குமழன்மூட்டுமென்னாள்
தூணைத்திரந்து துவாரவழியாய்நீங்கள்
பேணியேயோடிப் பிழைத்திடுவீரென்றகன்றான்
சிற்பனுரைத்ததெல்லாஞ் சிந்தையிலேவைத்தடக்கி
அற்பமதிமந்திரியை யரவோடிணங்குதல்போல்
அடுத்தவன்சிந்தை யகப்பொருளுந்தானேர்ந்து
தொடுத்தபடிமுடிக்க துரியோதனர்க்கினியான்
உள்ளொன்றையெண்ணி யுயிரொன்றதாயிருக்கும்
கள்ளன்றனையே கருத்துக்கிசைந்தவர்போல்
பாங்குற்றிருந்துகடற் பாரெல்லாமாணைசெல
நாங்குதிசைமன்னர் நளினப்பதம்பணிய
எப்புவியுமாண்டு வினிதிருக்குநாளையிலே
தப்புடையவேடர் தளமாகக்கூடிவந்து
நாட்டுபுகழ்தரும னாட்டினிரைசாய்த்து
ஓட்டியேசென்றாரவ் வொல்லையிலேவூரவர்கள்
முறையிட்டாரசார முன்னேயதுகேட்டு

விறலுற்றவர்ச்சுனனும் வீமனெதிரேகி
சேனைபுடைசூழச் சென்றேநிமிஷமதில்
கானவர்களெஞ்சங் கலங்கவேதேர்நடத்தி
வில்வேடர்தங்களுட மெய்யெல்லாம்புண்ணாக்கி
கொல்வாளியெய்து கொடுமரங்கடானறுத்து
வெள்ளம்போல்வந்தபல வேடரையுந்தானறுத்து
கொள்ளைப்பொருணிரையுங் கொற்றமுடன்றிருப்பி
வேடர்பலபாடியெல்லாம் வெந்தழலைமூட்டிவைத்து
வீரவிசயனையும் வீமனையுநாட்டவர்கள்
சேரப்புகழ்ந்து செயமாகவாழ்ந்திருந்தார்
கற்பத்தையாதர் கருத்தாகக்காப்பதுபோல்
வெற்பின்புயத்தரும வேந்தனபயங்காத்தான்
தொல்லுலகமெல்லாந் துதிக்கச்செங்கோனடத்தி
மல்லற்புவிபரந்து வாழுமந்தநாளையிலே
இன்றிரவின்மன்ன ரிருக்குமணிமாளிகையை
வென்றியுட்டீயிட்டு வேகவிடென்றுத்தாரம்
சொன்னான்கொடிய துரோகியொருவனுக்கு
மன்னனன்றென்று மனம்வைத்தவனிருந்தான்
இந்தவிதமா யிவர்களிருக்கையிலே
கந்தாவகன்சேய் கருத்தாயிவையறிந்து
தப்பாமலின்று தழன்மூட்டுவாரெனவே
மெய்ப்பாகமந்திரியை வேட்டைவிளையாடுதற்கு
சேனையுநீயுந் திறமாகவாருமென்று
மானவயவீமன் வழுத்தமனமகிழ்ந்து
சதுரவகைச்சேனைச் சலதிபுடைசூழ
கதமென்றுசென்றுவிறற் கானகத்தினூடேகி
துட்டமிருகத் தொகுதிசதகோடி
பட்டுவிழச்சரத்தின் பாசத்தான்மாற்றிவித்துப்
பரிதிகுடதிசையிற் பாயுமளவாகச்
சருவிவிளையாடித் தானகரிசேர்ந்தனரோ
நகர்சேர்ந்தபின்வீம னற்பாதந்தான்போற்றி
அகஞ்செல்கவுத்தார மண்ணலருள்கவென்றான்
என்னுயிர்போல விருக்குமதிமந்திரிநீ
உன்னுடனன்ன முணவாசையாயிருந்தேன்
எந்தனுரைதட்டா தெமதுமனையிடத்தில்
வந்துவனநுகர்வாய் மந்திரியேயென்றுரைத்தான்
உண்பதுனன்ன முடைப்பதுவுமுன்கலிங்கம்

ஐண்புக்கினியானே நான்வீட்டிற்போவதெனத
தட்டாதேயென்று தயவாய்க்கரம்பிடித்து
மட்டாருமார்பன் மனைபகத்திற்கொண்டுபுக்கான்
இன்றுநஞ்சிவ னிறத்தனிசமென்றேவி
கன்றிமெலிந்தொருசொற் காதலிக்கிச்சொல்லிவிட்டு
வருவனெனவொந்தனிடம் வண்மையாய்ச்சொல்லுகென்றான்
விரவிமின்னானிடத்தின் மேவிமறைமொழியாய்
நன்றியுடன்சொன்னதுண்டு நானவனுக்கோதியசொல்
இன்றுதவிர்கென்று விசைத்திடெனவொற்றன்விட்டு
வீமனுரைக்கும் விருந்துக்குத்தானிசைந்து
தாமதமில்லாது சம்மதித்துதானடந்தான்
பஞ்சவர்களன்பாய்ப் பரிந்திவனைபொக்கவைத்து
சஞ்சலமில்லான் சகலபதார்த்தம்படைக்க
உண்டுகளித்து வுயர்பாக்கிலையருந்தி
மண்டுகளபமுறை வண்மையுடன்பூசியபின்
சுரவாரமைச்சனையோர் கட்டிற்றுயில்புரிய
விரவியமைத்து வீமனுடன்மற்றோரும்
தாங்களுரங்குஞ் சயனமலரணையிற்
பாங்கினுடனேதான் பள்ளிகொண்டாரம்மானைப்
எவருந்துயில வியல்வீமனித்திரைபோய்க்
கவனமுடனிருந்தான் கங்குலர்த்தமாகுமட்டும்
நினைவாய்த்துயிலாம னித்திரையைத்தானீத்து
நனவின்விழித்திருந்தா னள்ளிருளின்மட்டாக
எதோவெறியி னிடர்பரவவில்லையென்று
மாதாவையுந்துணையு மற்றோரையுமெழுப்பித்
தம்பியரைத்தம்முனையுந் தாயடியில்வீழுமென்று
தும்பிபோன்முன்பிடுங்குந் தூண்டுவாரத்தின்வழி
அருச்சுனனைமுன்னைவிட்டு யாயுடனேமற்றோரும்
பொருப்பாயவனுடனே போமென்றனுப்பிவிட்டு
தாதைசகாயன் றனையெழுப்பித்தன்மனையை
மோதியேயுண்ணுமென்று மூட்டிமுழையிற்புகுந்து
பண்டுபோற்றானூற் பரிவாய்முழையடைத்து
தண்டில்வலியான்சுரங்கத் தானடந்தானம்மானைப்
விம்மியழலோன் வெடிபடவேதானெழுந்து
கம்மண்டலமழவுங் காந்திகொழுந்தெழவே
வெடிபட்டிடவரக்கு மேன்மாடந்தான்றகர
இடிபட்டிடப்புடைகொண் டேயெழுந்துமந்திரியும்

பொல்லாதான்சொல்லைப் பொருந்தும்புரோசனனும்
வெல்லாவழிநேற்ற வேடனாவர்தாயுடனே
நஞ்சிட்டுப்பஞ்சவரை நாடியேகொல்லவென்று
வஞ்சரிஷிவடிவாய் வந்துறைந்தவேடுவரும்
நன்மையுடையோரை நாடியேகொல்லவந்த
தின்மையுடையோர்கள் செத்தார்காணம்மானாய்
அக்கினிதேவ னழன்றெரியவன்னகரோர்
மக்கினர்கண்ணீர் வடித்தனர்காணம்புவியில்
சீர்பரவுமக்களெல்லாஞ் சேரவழுதனரோ
வார்பரவுபூமான் மழுங்குமுகமானான்
வேந்தர்பலரும் வியனகரிலுள்ளோரும்
காந்தரக்குமாளிகையைக் கண்ணுற்றுளங்கலங்கி
சோதித்தாரேழுபிணந் தோற்றும்படியாலே
ஆதித்தனொத்தமுடி யைவர்களுந்தாயுமென
பின்னொன்றுமந்திரி பிசகில்லையென்றேங்கி
தன்னைமறந்து சலித்தழுதார்மாந்தரெல்லாம்
தங்கயேறதுபோற் றரணியின்மாந்தரெல்லாம்
எங்குமிரங்கி யிடைந்தழுதாரம்மானாய்
வல்லரக்குமாளிகையின் மாய்ந்தார்களைவரென்று
அல்லலுற்றகாங்கையர்க்கு மாளோடிச்சொற்றனரோ
இப்பாதகத்தை யெனதுசெவியிற்கேட்க
தப்பாதெழுதிவைத்தான் றனையனென்றுசிந்தைநொந்து
விரதன்விதுரனுடன் விற்குருவுந்தானழுதார்
கரியைமுதற்காத்தோன் காத்திலனேயென்றழுதார்
ஐவர்தனக்கே யனைவர்களுமிரங்கி
தெய்வவிரதன் சிலைக்குரும்பார்த்தன்விறல்
தன்னைநினைந்து சலித்துத்தமொழி
உன்னையிழந்தேயா முய்வதெவ்வாறென்றழுதார்
பெற்றசுதனற்றுதவப் பெற்றிலேனென்றனுயிர்
செத்துவிடுமுன்பகையைச் செற்றெனுயிர்தந்தாயே
நீசெத்தத்தோடே நினதுசௌரியமு
மேசெத்துப்போமோவென் னின்பமுறுஞ்சுதனே
கொஞ்சவயதிற் குறைவற்றவித்தைகற்றாய்
மஞ்சனேயிவ்வளவின் மாள்வதறியேனே
பார்த்தனேயுன்றிறத்தைப் பார்த்துமகிழ்ந்திலனே
கூத்தனேவஞ்சாமற் கொள்ளவல்லானின்னுயிரை
வானவரிற்றானவரின் மானுடரிராக்கதரிற்

ரூனுனக்குநேராய்த் தனுப்போரில்வல்லார்யார்
என்றேகுருவழுக வின்சுதன்கண்ணீரொழுக
அன்றிருகண்ணில்லானு மன்புடையர்போலழுக
சுனேமேற்சுடர்போற் றுரியோதனன்முதலோர்
நனிமேல்வெதும்பினர்க ணற்சிந்தைவேருக
மாளிகைவெந்தோனா மன்னனெடுத்தடக்கி
காளமனேயான் கனசடங்குசெய்ததற்பின்
செத்தார்கள்பஞ்சவர்கள் சீமைநமதாச்சே
யுற்ருதரவா யுளங்கூர்ந்தினிதிருந்தார்
பார்த்தனுடமுன்னழகு பாதையொளிதோற்றுவிக்க
தோற்றியபின்பொற்பார் துணைவர்துடர்ந்துசெல்ல
இந்தப்படியே யிருகாதந்தானடந்து
அந்தச்சுரங்க மதிலோரிடந்தனிலே
பாதைநடந்து பழக்கமிலாராதலினுல்
வாதையுடன்காலின் வலியாற்படுத்திருந்தார்

## வேத்திரகியச்சருக்கம்.

சீதநாண்மலர்க் கோயின்மேவுசெந் திருவிணுபகன்றேவநாயகன்
வேதநாயகன் விரதநாயகன் விபுதர்நாயகன் மேனேநாட்
போதகாதிபன் மூதலேவாயிடைப் பொறைதளர்ந்துமுன் பொதுவிலேவி
தாதிமூலமே யென்னமுன்வருமாதி நாயகனடிவணங்குவாம் [னேநங்

---

நால்வருடனன்னே நடுச்சுரங்கமீதுதுயில்
காலேதனில்வாயுசுதன் கண்டுநலதென்றுகந்து
தாயைத்தலேதனிலுந் தன்மனேயும்பார்த்தனேயும்
ஆயும்வலக்காத்தி னத்தமொன்றின்மற்றவனாத்
தாங்கினுன்சென்றுன் சரவேகசீக்கிரமாய்
பாங்கின்சுரங்கம் பதிங்காதமுங்கடந்தான்
அங்கோரிருண்ட வடவிநடுவாக
தங்காச்சுரங்கந் தலேப்பட்டதம்மானுய்
முன்னூற்றுக்காத மூரணுகத்தானடந்து
மின்னுனபூமி விடியுமளவுதனில்
அங்கநலியா தவர்கடயின்மாறுமல்
பங்கமில்லாதுகொண்டப் பாரிற்கிடத்தினனே
மானுடர்வாசம் வரக்கண்டரக்கியென்பாள்
கானமதிலிக்காலங் காணவேவந்ததென்று
தெய்வரம்பைபோல்வா டிசமூம்பிறையெயிற்றுள்

செய்யவனற்கொழுந்தைச் சிறுமயிர்முடியாள்
மாருதியைக்கண்டு மயலாகியுள்ளடக்கி
யாரும்புகுதா வடவிதனிலிங்கள்
வந்தவகையேதென்ன மாருதிநீயார்கொலெனச்
சிந்தையுடன்வீம சேனனவனைக்கேட்க
இரக்கமிலாதோ னிராவணன்போலென்றமையன்
அரக்கனுளனொருவன் யானைபுலிமான்மரைகள்
தின்னும்பெருவாயன் செஞ்சுடருமஞ்சவலி
யுன்னும்பெலத்தானு முன்னூற்றந்தானோர்ந்து
என்னையருந்துவென விங்குவிட்டான்வந்தேருன்
உன்னையெநோக்கியதா லுற்றபலம்போச்சு
மன்னவாவுன்மேலே மயலாய்மதியிழந்தேன்
கன்னல்கழித்தாற்போல் காணுமுருவமுனான்
உன்றனையுமெந்தனையு மோர்சணத்தின்மாய்த்திடுவான்
நன்றியுடனென்னை நயந்துபுணர்வாயேல்
ஓர்கடிகைக்குள்ளாக வுன்றனையேயானெடுத்து
மேருகிரிக்கப்பால் விடுவேனெனவுரைத்தாள்
இரக்கமறவனத்தில் யாயிளைஞரெம்முனைவிட்
அரக்கிதனைத்துடர்வ தரசருக்குத்தானழகோ
அசுரனெனினு மரக்கனேயாமெனினும்
இசைகின்றனைவ னெதிர்த்தபோதென்வலியைப்
பாராயரக்கன் படும்பாட்டையென்றுரைக்க
ஈரமுடையவன்சூ னிவ்வார்த்தைசொல்லுமக்கால்
பூமிநடுங்க புயங்கமுடனெளிய
காமக்குளம்போலக் கண்கோபுரவெயிராய்
ஆலவிழுதா யடர்ந்தபெருரோமமுமாய்
சாலப்பெருமண் டம்பம்போனூசியுமாய்
பொருப்பின்பெரும்பாம்பு போனூசிரோமமுமாய்
செக்கிற்பெருத்த செவியின்பெருந்துளையாய்
தக்கபெருவரையைத் தான்போற்பெருவயிராய்
பருப்பதம்போலப் பணைத்தபெரும்புயமாய்
பெருத்தமரம்போற் பிறங்குந்தடக்கரமாய்
சுனையிற்பிறத்தபெருஞ் சூகூவகங்கையுமாய்
பனைமுப்புரிபோன்ற பாரக்கரவிரலாய்
மன்னுமிதற்கிசைந்த மற்றவவயமுமாய்
வன்னச்சிகர மலையிட்டொருதலையாய்
வீமனைநோக்கி விரைவாகவந்துநின்று

ஆமடாநீயோ வரக்கியர்க்குமாளாவாய்
என்றுசினந்து யிருகண்ணழல்பறக்க
கொன்றுதின்றுவுன்னுயிரைக் கோவிலிலேவைத்திடுவேன்
ஆசைமையதீர வரம்மையர்கடோள்சேர்போ
பூசையிபத்தைப் புணரவிசைந்திடுமோ
என்றிடிபோல விரைந்தான்வெடிசிரிப்பாய்
அன்றதுகண்டு வடல்வீமனேதுசொல்வான்
சிகரிபெருத்துஞ் சிறிதாயுளியிருந்தும்
இகலிலெதுபெலக்கு மிலங்காபுரிப்போரில்
வென்றதெவர்தோற்றதெவர் விண்டுரையாயென்றுரைத்து
கன்றியெதிர்க்குமுன்னங் காதற்சகோதரரும்
வென்றியுளதாயும் விழித்தெழுந்துதானெதுங்கி
நின்றவனைப்பார்த்து நெடிதுயிர்த்தபின்வீமன்
சென்றவனைப்பாய்ந்தெயிறு தெற்றவெதிர்குத்தினனே
குத்துவிழவே கொடுங்கோபந்தானுாறி
முத்துவிரன்மடக்கி முகத்திலவன்மொத்தினனே
வாயுவெனவெழும்பி மார்பிலிவனுதைத்தான்
தீயன்மராமரத்தைச் சென்றுபிடிங்கிவந்தான்
மாருதியுமந்த மரத்திலிருமடங்காய்
வேருடனேதான்பிடுங்கி வீசினன்காணம்மாறுப்
ஒருவர்க்கொருவர்வெகு வுன்னதமாய்த்தான்குதித்துப்
பொருதிப்பொருதிப் பொடிந்ததிருமரமும்
இருவர்கள்கையி லிருந்தமரம்போனபின்பு
சருவித்திண்மல்லுயுத்தந் தானேர்ந்தாரம்மானுப்
காலாலுதைத்துங் கரங்களாற்றுன்புடைத்துஞ்
சேலாகப்பாய்ந்துஞ் சிரங்களான்முட்டிநின்றும்
இரணியனைமாய வரிகூராய்ச்செய்ததுபோல்
நிருதனுடல்கிழிந்து நிணங்குருதிசிந்தும்வண்ணம்
பரவியிரண்டு பகுப்பாய்ப்பிளந்தெரிந்தான்
பொருதியிரண்டுமொன்றாய் புகுந்தான்சமர்தனிலே
திரும்பவரவே திகைத்தானவ்வீமனெதிர்
இருந்தவொருகோரைகிழித் தேயிடும்பிமாற்றிவைத்தாள்
கன்னிசெய்கைகண்டு கதாயுதனும்போர்மூண்டு
பின்னுமிருமடங்கு பேராயிகல்புரிந்து
மலையுமலையுமிகல் வன்போர்புரிந்ததென
கலகமுடனிகல கண்டுநிசாசரனை
ஒன்றிரண்டாக வுறப்பிளந்துகாறலையாய்

வென்றியுடன்மாற்றி வீமனுமேவிட்டெறிந்து
காயுஞ்சினந்தீர்ந்து கால்வீராவேசமுடன்
வாயுசுதனின்றளவில் வானிருந்தோர்சொல்லெழுந்த
வீராவுனக்கும் விறலாமிடும்பனுக்கும்
தாராருமார்பன் சராசந்தவீரனுக்கும்
கீசகனுக்குங் கிளர்ந்தசற்பகேதுவுக்கும்
பாசமுடைய பதினாயிரமியானை
சத்துவங்களுண்டிவர்க டன்னிலேயொன்றுகொன்றான்
முத்துமவன்கையான் முடியும்விதிப்படியே
முன்னீபிறந்தாற்போன் மோகமுடனுன்றாயும்
மன்னுகனையில்வைத்துன் மாதாபுனன்மூழ்கு
நேரமதிற்காலுதைந்து நீவிளையாடும்போதுன்
காலுதைக்கவேர்பரிந்து காடுந்தருவினமும்
அப்போதரனுமையு மாகாயவீதியிலே
மெப்பாவிமானமிசை மீதிருந்தநாரிகண்டு
வேணியனேயிங்கிரங்க வேணும்விமானமென்றாள்
தோணவிரங்கியிந்தத் தோன்றலாயொன்றுரைத்தாள்
கொண்டலளித்த குமாரனிவன்போர்வீமன்
தண்டில்வலியன் றயிரியத்தின்மிக்கவன்கேள்
பதினாயிரமியானைப் பண்பாம்பிலவனென
இதமாய்ப்பதினா யிரவாரணப்பெலனும்
நானீயந்தேனிருமென்போ னல்கென்றுமையுரைத்தாள்
யானேந்துகையானு மன்றபதினாயிரமா
சத்துவமுந்தானீய்ந்து தான்போனார்நீயிலகில்
உத்தபெலனெல்லா முனக்குவந்துசேர்ந்தமையால்
என்பதினோராயிரமி யானையின்பலத்தாற்
பண்புற்றிடும்பனையும் பட்டுவிழக்கொன்றுவிட்டாய்
இவன்றன்பெலன்றானு மிப்போதுனக்காச்சு
என்றசரீரி யியம்புமொழிகேட்டு
இன்றுணையுந்தாயு மிவனுற்பகைதுலைப்போம்
என்றுமகிழ்ந்தே யிதையங்களிகூர்ந்தார்
கன்னியரக்கிவந்து காதனேய்திருமென்றாள்
நீயரக்கியான்மனிதன் நின்றனுக்குமெந்தனுக்கு
மேயிலக்கோவல்லாது மேலானவென்றமையன்
தானிருக்கயான்முதலே தானுமணம்புரியேன்
உன்னுணக்கையாகவந்தா யுன்பாட்டிலேசலென்றான்
வீமனிவைசொல்ல விழியிரண்டுமொரேட

மாமுகங்குன்றி மடிவேன்றணையான
அண்ணனைமுன்னு லடவிதனிற்றேற்றேன்
கண்ணிரக்கமில்லாது கைநெகிழ்வாய்நீநினைத்தாய்
என்றிவன்சோம்பித் திரங்கும்படிபோலே
கன்றிமெலிந்து கனைவாளைக்குந்திகண்டு
அய்யோமகனே யபத்தமாய்ப்பெண்பழியை
கையேர்க்கவேண்டாமிக் கன்னிகையைவேட்டுமென்று
தருமாவுனக்குமிது சம்மதியென்றேதுமென்றாள்
திருமேவுமன்னவனுஞ் செங்கைதனைப்பிடித்து
தம்பியேயென்வாய்மை தட்டாதேவேட்டுமென்றான்
உம்பல்பெலந்தொண்ணூற் றேரரயிரத்தானும்
நன்றென்றானப்போது நாதன்வியாதனையே
அன்றுநினைத்தளவி லந்தணனும்வந்தனனால்
பாதகமலம் பணிந்தைவருந்தாயும்
ஏதெனக்குபுத்தி யெனவேதியன்பகர்வான்
இவ்வனந்தான்விட் டெழும்போதேயந்தணர்போல்
அவ்வேத்திரகீய மானபதிசேருமென்று
வீமனுக்குராக்ஷசியை வேழ்வியுடன்வேட்டல்செய்து
மாமுனியுந்தானகன்றான் மாருதியுமங்கையுமாய்
கந்தனும்வள்ளியும்போற் கானுமலைச்சார்பும்
உந்திக்கனைகளினு முற்றசுனைச்சார்பும்
சேர்ந்தணைந்தசம்போகத் திண்மைப்புணர்ச்சியிலே
சார்ந்துமகிழ்ந்திருந்தார் தையலுமேகெற்பமுற்றி
இருட்பிழம்பென்ன விருண்டிலங்குமெய்யோடும்
பொருப்புருக்கொண்ட புயமும்புறம்பாயும்
அம்புநிறைத்த வனையரோமத்துடனே
தும்பியெனப்பிறந்தான் றேன்றனரகாசுரன்போல்
இடியொத்தசொல்லி னியல்பாங்கடோற்கயனும்
வடிவுற்றதந்தை மலர்ப்பாதந்தான்பணிந்து
உன்னுமளவி லொருநொடியில்வந்திடுவேன்
என்னவேயைவர் சிருதாளையும்பணிந்து
இங்கிருக்கவுத்தார மெங்களுக்கேதாருமென்று
சங்கையுடன்கேட்டளவிற் சம்மதித்துவிட்டுவிட்டார்
வல்லகடோற்கயனு மாதாவிடும்பியுமாய்
சல்லவனத்திற் றருகித்திரும்பியபின்
அந்தணர்களைப்போலே யைவருடனேயாயும்
அந்தமுளவேத்திரகீ யந்தானிடைசார்ந்தார்

அதிதியாவருட னுயுமவர்க்கண்டவுடன்
பதியிலுளமறையோர் பண்பாயெதிர்போற்றி
வந்தவிருந்தினர்கண் மகிழமறையோர்கள்
முந்தமுகவணக்கஞ் செய்தேமுசிவகற்றி
மறையோர்பெருநகரில் வண்மையுடன்கொண்டணுகி
முறைமுறையாயன்ன முசியாவிருந்தளித்தார்
ஒருநாளைப்போலாக வுற்றபலநாளும்
திருநாட்சிறப்பாகச் செய்திருந்தாரம்மானாய்
தன்னகரிபோலாகச் சஞ்சலமொன்றில்லாமன்
மன்னவர்கள்சிந்தை மகிழ்ந்திருந்தாரவ்வூரில்
எந்தமனையு மிசைந்துவிருந் துண்டிநாள்
வந்தியைவரோடு வைகியுறைந்திருக்கும்
அந்தமனையந்தணனில் லாளுமிரங்கியழ
குந்தியறிந்துந்தனுக்குக் கொண்டசலிப்பேதெனவே
எனக்குவருந்துயரை யென்னனையேநீகேளு
வனச்சக்கிரவர்த்தியெனு வல்லரக்கன்பேர்பகனும்
அன்னவன்முன்னின்னகரி லானமனுவையெல்லாம்
வின்னலுறவே விழுங்கிவருநாளில்
இன்னகரிலுள்ளா ரிராகூதனைத்தான்வணங்கி
பன்னும்மனுவையெல்லாம் பதையாமற்றின்றுவிட்டால்
பின்னுன்பசிக்குப் பிடித்தேதருந்திடுவோய்
இன்னாளேமுதலா யெத்தேசகாலமட்டும்
ஈரெட்டுவண்டி லிசைந்தகரிசோறும்
ஒரெட்டுவண்டியிலே யுற்றபலதோசைகளும்
ஆரெட்டுவன்பகடு மாளொன்றுமேபலியாய்
எரிட்டுநீபுசிக்க வெந்நாளுந்தாரனென்று
சொல்லவவன்சம்மதித்தான் சோராமலம்முறையாய்
இல்லொருநாளா யிசைந்தேகொடுத்துவந்தோம்
இற்றைநாளென்முறைவந் தெய்தியதென்கண்ணனையப்
பெற்றசுதன்மூன்றிற் பெலிகொடுத்தேன்முன்னிரண்டை
இருப்பதொருமகனுக் கின்றுவினைமூண்டதென்றாள்
எதுக்குமஞ்சாதே யென்சேயரைவர்கண்டாய்
வாதற்குபெற்ற மகனனுமன்போல்வலியன்
இடும்பன்றனையே யிரண்டாயப்பிளந்துகொன்றான்
கடும்பகன்றன்னையுமே கண்டித்துக்கொன்றிடுவான்
அவனைப்பெலியாக வரக்கனுக்குவொப்புவிப்பாய்
தவனப்படவேண்டாந் தாரேனவனையென்றாள்

அன்னையனையா ளருளியசொல்லான்மகிழ்ந்து
மின்னயனையான் மிதவைவெள்ளிவெற்பெனவே
சோறுங்கறியுந் துலையாப்பதார்த்தமுடன்
மாறிற்பலதோசை வற்கப்பெருமலையும்
எல்லாமெடுத்து யிருபத்துநால்சகட்டில்
நல்லாளெடுத்தேற்றி நாட்டும்பகடிணைத்து
வீமனையுமேபெலியாய் விட்டாரரக்கனுக்குத்
தாமதியாமற் சகடுதனையோட்டி
அல்லரக்கனிற்கு மடவிதனைநோக்கி
கல்லிணைத்தோளான் கடுகவேசெல்கையிலே
நீலநதியடுத்த நெட்டைமலைமீதேறி
வான்மண்டலமளவு வல்லரக்கனிற்குநிலை
கண்டிவனேடியித்தங் கையாடிற்கொண்டுவந்த
உண்டிகெடுமென் றுகந்தேயிருகரத்தால்
வாய்பிதுங்கவாரியுண்டான் மண்ணையுண்டமால்போல
தீய்பரவுகண்ணிருதன் றின்பதைக்கண்டேநகைத்து
ஆனைப்பசிக்குடைய வாகாரந்தன்னையொரு
பூனைக்கடுவனதைப் போனீதானுண்பதென்று
சீறியதட்டிச் சிறுபயலேயென்பசிக்கு
சோறுகொடுவா சுருக்காவெனப்பகர்ந்தான்
பாயும்புலிமுன் பசுவேதமோதுதல்போல்
வாயொன்றும்பேசாமல் வயிர்பிதுங்கவாரியுண்டான்
வண்டிலீரொட்டனமு மலைவாகவாரியுண்டு
உண்டுகெடற்றோசை வுண்ணத்துடங்குவதை
கண்டுநிருதர்பிரான் காலாக்கினிக்கோபங்
கொண்டதட்டியோடிவந்து குத்தினன்காணம்மானை
வென்னிடத்தினுங்கழுத்தும் வீமனையேகுத்திடவும்
துன்னிவிக்கிநின்றதெல்லாஞ் சோராதிரங்கியதே
விக்கினந்தீர மிடையன்றித்தோசையெல்லாம்
மொக்கினேனேயாமன் மூசியேகுத்தலுற்றான்
காந்தியேகுத்திக் கரமிரண்டுந்தான்சலித்து
சார்ந்தனங்கடோசையெலாந் தானீயருந்துகினும்
உன்னுடலுக்குள்ளவது வோடியெங்கும்போகாதே
தின்னுவுன்னையான்பிடித்துத் தின்றேயெனதுபசி
போக்குவேனென்றான் புரிந்தேழுமூன்றுவண்டி
வீக்கும்பதந்தோசை வீமனருந்திடவே
எல்லாம்பருகிவிட்டா னென்றேதிரிசகட்டில்

மல்லாரும்வாளரக்கன் வாகாய்த்திரிசகட்டில்
கைபோட்டானென்றுசொல்லி காளையதைத்தீண்டாமல்
நெய்யேற்றவேலானு நின்றானருந்துமட்டும்
தூந்தநெருப்பதனை தூராதெழுப்பியபோல்
சாந்தபசிமிஞ்சியதாற் காரரக்கன்கோபமுற்று
எந்தன்பசிக்கு விறையாகவந்தாய்நீ
எந்தவகையா யிவையெலாந்தின்றுவிட்டாய்
பஞ்சப்பயலே பசிதீர்ந்திலவெனக்கு
நெஞ்சுரங்கீறி நிறைசோரியுஞ்சோறும்
மதுரம்பெறவருந்த வாடாபயலெயென்றான்
சதியாலிடும்பனைமுன் றான்பிளந்தாற்போற்பிளக்க
கிட்டேவாவென்றான் கிரீடிக்குமூத்தவனும்
முட்டினனிவரக்கன் மூசினன்மால்வீமன்
வீரக்கரங்கட்டி விரைந்தரக்கன்மார்பொடிய
தீரனிவன்குத்தச் சினந்தவனுங்குத்தினனே
தாக்குவார்கன்னமதிற் றவாயிலேபுடைப்பார்
வீக்குவார்கையான் மிதிப்பார்பதத்தாலே
சிரமுஞ்சிரமுந் தெரிக்கப்பொருதலுற்றார்
உரமுமுரமு மொடியப்பொருதலுற்றார்
பொருப்பையனைய புயம்புயத்தோடேபொருதார்
நெருப்பைவிழியுகுப்ப நீள்சினத்தோடேபொருதர்ர்
முட்டியுத்தஞ்செய்து முரணாய்ப்பொருதையிலே
ஒட்டிவிலாவி லுதைத்தானெடிந்திடவே
கரத்தையொடித்தெறிந்தான் கரதுகளைப்பிய்த்தெறிந்தான்
உரத்தைப்பிளந்துவைத்தா னெண்புயத்தைப்பேர்த்துவைத்தான
இடையைமுரித்துவைத்தா னீரறனைப்பிய்த்தெறிந்தான்
துடையைமுறித்துவைத்தான் துண்டித்தெலும்பொடித்தான்
தலையைத்திரிகிச் சகட்டிலேபோட்டுவைத்தான்
மலையொத்ததிண்புயத்தான் மானதியின்மூழ்கிவந்தான்
நாலாறுவண்டிலையு நன்னகரிதானோக்கி
மேலானவீமன் விரட்டிவந்தானம்மானைப்
சோரியொழுகத் தொலைந்தபகன்களம்போல்
தேரிரவிபோயொழிப்பச் செக்கர்வானம்பரந்த
ஏகச்சக்கரக்காவி லிருந்தவரக்கனையே
சாகமுட்டியாற்பொருதித் தான்முனிவரூர்புகவே
அனந்தமுனிவரெதி ராகத்துதித்தேத்தி
கனிந்தமொழிமாதர் கண்ணெச்சிறுன்சுழிய

ஆலாத்திதானெடுத்தா ரன்னகருளோர்களெல்லாம்
மாலொத்துத்தான்காக்க வந்தானெனப்புகழ்ந்து
தொன்னகர்க்குத்தீராத் துன்பப்பெருந்துயரை
இன்னலறவின்று விவன்றொலைத்தானென்றேத்தி
ஆறெட்டுமேக மனையபகடிழுத்த
வீறிட்டவாளரக்கன் வெஞ்சிரத்தைத்தான்பார்த்து
யெட்டுமலையொன்று யிணைத்தபுயம்பார்த்து
பட்டதிவனெந்தப் படியென்றதிசயித்து
இன்றுபிழைத்தோநா மெல்லாருமென்றிசைத்து
வென்றிவயவீமனுட மேனியெல்லாந்தான்பார்த்து
உம்பர்கோனஞ்சி யொதுங்குநிசாசரனைத்
தம்பிநீகொன்றவிதஞ் சாற்றென்றேகேட்கலுற்றார்
போனகத்தையெல்லாம் பொருந்தியேயுண்டதுவும்
தானகத்தைவந்து தடக்கையாற்குத்தியதும்
விக்கல்தவிர்ந்து மீண்டியுத்தஞ்செய்ததுவும்
தக்கவரக்கனையே தானொருக்கிப்போட்டதுவும்
தலையைத்திரிகியதுந் தானதியின்மூழ்கியதும்
மலைவுற்றவின்னகரம் வந்ததுவுங்கூறுகின்றான்
பெப்பேச்சுந்தானொழிந் திப்பேச்சேபேச்சாகி
தப்பாதுவந்துவந்து தான்முனிவர்கேட்கலுற்றார்
அற்புதமாக வவரவர்கடான்கேட்டு
தற்பரனாரிங்கிவனைத் தானனுப்பிகாத்ததென்பார்
தெய்வசகாயமிந்த செகமுனியால்வந்ததென்பார்
ஐயவருந்தெய்வமென்பா ராச்சரிப்பாரோசரிப்பார்
மூவெட்டுவெண்டிலடை மூரறனையுண்கவல்லான்
ஆவிட்டகடுகெட்டி ஞனரிதுபாரமென்பார்
ஊக்கமுடையான்று னுண்கமட்டுந்தான்முறையாய்த்
தீர்க்கமுடன்விருந்து செய்வோந்தினமுமென்பார்
இந்தப்படிமுனிவ ரெல்லோருஞ்சொன்னபின்பு
சந்தமுடன்பெலிக்குத் தானேயனுப்பிவைத்த
பாப்பான்றனையுமவன் பாரியையுமேவணங்கி
மூப்பானவன்னையையும் முன்னோனையும்வணங்கி
தன்னைவணங்கிநின்ற தம்பியைத்தான்றழுவி
வன்னிசகாயன் மகனும்மகிழ்ந்திருந்தான்
ஆசாரஞ்செய்தன் னகரிலுள்ளவந்தணர்கள்
ஓசாரமாக வுபசரித்தேயன்னமிட
அன்னையுடன்பஞ்சவர்க ளன்பாயனமருந்தி

பொன்னுலகஞ்சேர்ந்தார்போல் புந்திமகிழ்ந்திருந்தார்

## திரௌபதி மாலையிட்ட சருக்கம்.

பஞ்சவர்களிவ்வாறு பார்ப்பார்புரத்திருப்ப
வஞ்சகமாய்த்தானரக்கு மாளிகையிலவர்களுந்
துஞ்சினர்களென்றமொழி தொல்லுலகஞ்சொற்றமையால்
சஞ்சலித்துப்பாஞ்சாலன் றானழுதானம்மானாய்
ஆளிலளக னதிவீரன்வாள்விசயன்
றோளுக்கிசையவொரு தோகைதனைப்பெற்றேனே
செய்ததவம்பலித்த தென்றேமகிழ்ந்தேனே
மெய்திகழும்விற்காளை வேட்டல்செயப்பெற்றிலனே
என்னசெய்வேனென்றே இரங்கிப்பரதவித்து
முன்செய்ததீவினையோ மூண்டதெனமயங்கி
வானிலெளுந்தசொல்லும் வானவன்சேய்பார்த்தனுக்குள்
தேனுரியாளென்றமொழி தீதாகப்போகாதே
என்றுதெளிந்தே இறந்திலாரைவரென்று
அன்றுகண்ணுற்கண்டோ ரைந்தாறென்றையமுற்று
மாதற்கரசி வடிவழகைத்தான்பார்த்து
பேதுற்றேமன்னன் பெருமூச்சுத்தானெறிந்து
இந்தவழகுக் கிசைந்தோன்விசயனல்லால்
புந்தியுறுமன்னர் பொருந்தாரேயென்றயர்ந்து
ஆயிரத்தெண்மாத்து வழகானதங்கமதிற்
சேயரத்னமாமணியைச் சேர்ந்திலங்கச்செய்யாமற்
குன்றின்மணிபதித்த கொள்கைபோன்மற்றவற்கோ
வென்றியெழின்மகடான் வேய்ந்திடுவாண்பாலையென்று
கண்ணுற்றரளங் கலுழக்கனிந்துருகி
புண்ணூர்ந்திதயம் புழுங்கினனம்மானாய்
வேந்தன்கனிந்திரங்க மிக்கோர்கடான்றேற்ற
எந்தலேயையவ ரிறவாரிறைகாப்பார்
வான்மொழிகளோர்காலு மங்கியதுமில்லையென்று
தேன்மொழிக்கிவேட்டலென்று தேசப்புரவலர்க்கு
மங்கைதார்சூட்டி லவனேமணவாளனென்று
பொங்குமணவோலை பூரித்தனுப்பினக்கால்
எங்கிருந்தும்பஞ்சவர்க ளெய்துவாரில்லையென்ன
நங்கைதார்சூட்டினரே நாயகனுமென்றுரைத்தார்
அந்தப்படியேவரசன் மணவோலை
எந்தத்திசைக்கு மெழிதியனுப்பினனே

ஓலைதனைக்கண் டரவர்பலகோடி
வேலையெனப்பாஞ்சால வேந்தனகர்மேவினரே
வாசமலர்நாடும் வரிவண்டுபோலாகத்
தேசமன்னரெல்லாஞ் செறிந்தனர்காணம்மானை
பொற்பொழுகுசிங்காரப் பூசாபலம்படைத்த
கற்புலவுபாஞ்சாலன் கன்னிமணக்கோலமென்ற
சேதிதனைக்கேட்டு செப்பினாரந்தணர்கள்
ஈதைவருந்தாயு மிருந்தபிராமணரும்
காதுதனிற்கேட்டுக் கல்யாணஞ்செய்துகொள்ள
போதமனம்வைத்தினிய புந்திகொடுதேரினரோ
ஈசனளித்தபடிக் கேராதென்றெண்ணுமற்
பூசுரருங்கொள்ளாப் புணரிபோலேகினரோ
அக்கூட்டத்தோடாயு மைவர்களுமேகினரோ
தொக்காகக்கூடித் துரிதமுடனடந்தார்
கானமலையுங் கடுஞ்சுரமுந்தானீந்தி
வானவர்போற்செல்லும் வழியிற்பராசன்மகன்
நீர்நிறைந்தவாவியென நின்றானவனடியில்
சீர்நிறைந்தவைவர்களுந் தெண்டனிட்டாரம்மானை
வேதனின்மிக்கானே மெஞ்ஞானமுள்ளோனே
ஓதுமொழிகேட்டவ் வூர்புகுந்துவாழ்ந்திருந்தோம்
தீயிற்பிறந்தவொரு சேயிழையாளர்ச்சுனர்க்கு
வீயுற்றதார்நாளை வெய்துவளோகூறுமென்றார்
இன்றுபகலு மிரவும்விரைந்தேகி
மன்றலைப்பெற்றீரேல் மாறாதவெற்றியென்று
சொல்லிவியாதன் றுறந்தற்பின்பஞ்சவர்கள்
செல்லுசெல்லென்றே திறலாய்விரைந்துசென்றார்
மல்லற்புயாசலத்தோர் மாய்ந்திரவிபோமளவும்
எல்லினடந்தா ரிருட்படலந்தான்மூட
அல்லூடந்தா ரர்ச்சுனன்கைமெய்யொளியால்
பெற்றசுதனுற்றதிருப் பேரர்வரக்கங்கைநதி
உற்றதுயரிளைப்பு மோடவிடாய்தீர்த்தனளால்
குத்திரவிஞ்சைமன்னன் குறுகிக்கடும்போர்செய
சித்திரத்தேரோடுஞ் சேர்ந்தெரித்தானம்மானை
இருட்டுள்ளிருளாக வெத்திசையுந்தோற்றுமல்
மருட்கொள்ளவேவளைத்தான் வாள்விசையன்வில்வளைத்தான்
இமைக்குட்பலகோடி யெய்தானழற்கணைகள்
தமைச்சுற்றியேவளைத்தோன் தன்றேரெரிந்ததுவே

தேரொரிந்துதானுஞ் சினத்திலவியுமுன்னே
கூரிசைந்தகோல்விசைய கொற்றவாதஞ்சமென்றான்
விற்குதையிற்றாங்கி வெளிப்படுத்திவிட்டதற்பின்
சற்குருவென்றே சரணஞ்சிரசணிந்து
தோழனைப்போலத் துடர்ந்தான்வழித்துணையாய்
ஆழப்புனலா றவன்றுணையாய்த்தானீந்தி
எதிர்க்கரைசேர்ந்ததற்பி னேவரசுமற்றவனும்
மதிக்குந்தருமனொடு மற்றோருந்தானேகி
சவுமியமாமுனியைத் தாடொழுதுவாழ்வுபெற
நவமதுடனே நடந்தார்வழிதொடர்ந்தே
கங்குல்புலர்ந்ததற்பின் கால்விசையாய்த்தானடந்தார்
பொங்குபனியகலப் போதுதையமானதுவே
மனங்கண்மலர்ந்தமல ராத்தடமுங்காவலர்ந்த
இனம்புள்ளுமாவு மிரைந்தமுரசுசங்கம்
கானும்வரையுங் கடந்திளைததீரென்றுதென்றல்
தானும்விடாய்தீர்த்த தண்முளரிக்குள்ளொருமா
தேனுகரவண்டினங்கள் சேரப்புறத்திரங்க
தாதுமலர்மார்பர் தானடந்தாரம்மமானாய்
புன்மைவினைவாந்திருட்டுப் பூனைசூடுண்டோடும்
பன்மையாமன்னர்முகம் பங்கயமாய்வெட்குதற்கு
வாலரவிபோல வயங்குஞ்செழுங்கொடியைத்
தாலிகட்டவாருமென்று தான்குயிலுங்கூவியதே
நாடிவந்தமன்னரெல்லா நாடியின்றேயோடனிசம்
கூடுவதற்கேவேட்டல் கோதையென்றுராகமொடு
வண்டுசொல்லிப்பாட மகிழ்ந்துமயிலாடியதே
பூவெல்லாம்வண்டு புனலெல்லாஞ்செங்கமலம்
காவெல்லாம்பூங்கனிகள் கஞ்சமெல்லாமஞ்சனங்கள்
மாவெல்லாஞ்சாலி வரம்பெல்லாமுத்தினங்கள்
பாவெல்லாந்தான்விளங்கும் பாஞ்சாலநன்னாடே
அந்நாட்டிருக்கும் அலங்காரமேன்மைதன்னை
பன்னாளுநாவலராற் பாடிமுடியாதே
மானாடுநீங்கி மணிநகரைக்கிட்டினரே
வானாடுதொங்கு மணிமதிளைக்கிட்டினரே
ஈரெழுலக மெடுத்துண்டமாயவன்போல்
நீராழிபேரகழ்சூழ் நீள்புரிசைகண்டனரே
பொற்கோபுரங்கள் புரிந்தெங்குநின்றிலங்க
நற்கோபுரச்சிகர நாட்டுந்துசமிலங்க

வீஞனமன்னர் விருதாவிற்சூழ்ந்துவர
ஆஞனசிங்கமிவ னைவர்வரக்கண்டெதிராய்
மிக்கவெழின்மாதை வேட்டல்செயவாருமென்று
தக்ககொடியாடல்கையாற் றனழைப்பதொத்ததுவே
மணங்கண்முரசம் வானிடிகள்போன்முழங்க
கணபல்லியங்கள் கடலோதையைமாற்ற
உயர்சங்கினங்களொலி யும்பர்பதியைமுட்ட
இயல்பஞ்சவாக்கியங்க ளெல்லாமிகமுழங்க
பொன்னகரமஞ்சுதற்குப் பொற்பின்சிறப்போங்க
நன்னகரியைச்சூழ நாலுன்குகோணமெலாம்
தேரும்பரியுந் திறற்கரியுங்காலாளும்
காருங்கடலுங் கலந்ததெனக்கண்டுபுக்கார்
சிங்கமோரைந்துந் திகழ்பசுவின்றோல்போர்த்து
சங்கப்பசுவினங்க டன்னேடொழுகியபோல்
ஐயர்குழுவோடு மன்னையொடும்பஞ்சவர்கள்
செய்யபெருநகரி சேர்ந்தனர்காணம்மானுய்
சேர்ந்துகுலாலன் றிருமனையிலன்னையைவைத்
தாந்தம்மோடொத்துவந்த தாபதர்கள்சங்கமொடு
தூக்கணங்களொப்பாகத் தூங்குமன்னர்பேரவையில்
பாக்கணங்களேகமமும் பார்ப்பாரும்புக்கினரோ
பஞ்சவரும்பார்ப்பாரும் பாஞ்சாலன்பேரவையில்
சஞ்சலமிலாப்பாஞ்ச சன்னியமாய்நண்ணியங்கு
மன்னர்சபைநடுவில் வந்தவர்கடானிருப்ப
கன்னிமயங்குங் கலக்கம்விரித்துரைப்பாம்
அன்னமறந்தா ளனையுந்துயின்மறந்தாள்
தன்னைமறந்தா டனஞ்சயனைத்தானினைந்தாள்
நெய்மறந்தாள்பான்மறந்தா ளிங்காவிசாரமுற்றாள்
மைமறந்தாள்கைமறந்தாள் வண்காதன்மேலானுள்
தனஞ்சயனில்வந்தாள் தனஞ்சயற்குமாலானுள்
மனஞ்செய்யேன்மற்றவற்கு வன்னிதனின்மாய்வனென்றாள்
எந்தன்மனம்பொருந்தா வெண்ணெண்ணமன்னவர்கள்
வந்துமொய்த்ததென்கொடியாண் மாளவோவென்றுசொல்வாள்
ஓயாத்துயரா யுழன்றுமெலிவாளைத்
தாயானதாதியர்க டான்றேற்றவுந்தேறாள்
விற்பிடித்தகையும் விசயனும்பொற்றேருருவும்
நற்படத்திலேயெழுதி நாயகிமுன்வைத்தவுடன்
பார்ப்பாண்மகிழ்வாள் படர்ந்துபெருமூச்செறிவாள்

எர்ப்பானைப்போற்படத்தை யேந்துவாள்கண்ணில்வைப்பாள்
தந்தைகுரித்திருக்கத் தான்வான்மொழிந்திருக்க
சிந்தைக்கிசைந்தானைச் சேரோனேயாமாகில்
வன்னிக்கிரையாய் மடிவேன்மடிவனென்று
கன்னிக்கரசி கனவிரதங்கூறினளே
கூறிப்படுப்பாள் குலைந்தேயெழுந்திருப்பாள்
தேறிற்றெளிந்தழுவாள் சீசீயென்வாழ்க்கையென்பாள்
துயரான்மெலிந்து துணிந்தேபரதவித்து
அயர்வாண்மயங்கி யணைமீதினிற்சாய்ந்தாள்
சாய்ந்தேதுயின்று டடங்கண்ணுனீரோட
ஆய்ந்தார்துயிலி லரியகனுக்கண்டனளே
அஞ்சனடையாய்நீ யஞ்சாதென்றோர்முனிவன்
பஞ்சவர்கள்வந்துறைந்தார் பார்ப்பார்வடிவாகி
தாதிமாரோடுசென்று தானவையைநீபாராய்
கோதையேயின்ன குணமாயிருப்பனென்ன
அந்தமொழிகேட் டவையிலேதாதியொடும்
சிந்துவெனவரசர் திரண்டசபைநடுவே
போனதுபோலும் புரோகிதர்போற்பஞ்சவர்கள்
ஞானமுனிசொற்போ னடுவேயிருந்ததுவும்
அன்னேனைப்பார்க்க வவனிவளைப்பார்த்ததும்போல்
மின்னார்கண்மன்னர் விறலெடுத்துச்சொற்றதும்போல்
வில்வளைக்கமாட்டாமல் வேந்தரெல்லாநாணியபோல்
வல்விசயன்பார்ப்பானுய் வந்துவளைத்ததும்போல்
மாலைவிசயமுனி மார்பிலணிந்ததும்போல்
சாலவரசர் சமர்முறியவென்றதும்போல்
சக்கிரிவீட்டிலவர் தான்கூட்டிசென்றதும்போல்
மிக்ககுந்தியைவருமாய் வேட்டுமென்றுசொன்னதும்போல்
தாதைமயங்கியபோற் றூன்முனிவன்சொல்லாலே
மேதையுடனைவருக்கும் வேட்டல்புரிந்தாற்போல்
விரவிக்கனவுகண்டு மெல்லிவிழித்தெழுந்து
அரசர்சபைநடுவில் அந்தணர்கள்வந்திருந்தால்
பார்த்துவாவென்றவரிற் பஞ்சவர்கள்போற்குறிப்பு
தோற்றினுல்வந்தெனக்குச் சொல்லென்றோர்தாதிவிட்டா
வந்துகணத்தில் வளர்சபையெல்லாம்பார்த்து
அந்தணரைப்பார்த்து வாயிழைக்குத்தானுரைத்தார்
கண்டகனவெனக்கு கைவந்ததென்றுகந்து
அண்டர்கோன்மைந்தனெனை யாள்வானெனமகிழ்ந்தாள்

தையன்முகத்தெளிவைத் தாதிமார்கண்டேத்தி
தெய்வப்புனலாற் றிரௌபதியைநீராட்டி
மாமணித்தூசை மருங்குதனிற்புனைந்து
காமன்கணையனைய கண்ணுக்குமையெழுதி
சிந்தூரந்தீட்டி சிறந்தகுழன்முடித்து
மந்தரக்கொங்கை மறைத்தார்பொற்கச்சாலே
மெய்யொன்றுந்தோற்றமன் மின்பணியாலேமறைத்து
கையிரண்டுக்கேற்ற கனபணியெல்லாம்பூட்டி
அலர்த்தகுங்காலி லணிந்தேபதப்பணிகள்
இலக்குள்ளதெல்லா மியல்பாகத்தான்பூட்டி
மைக்குழலின்மாலையின்மேல் வண்டுபெந்தரிட்டுவரக்
கைக்கினியமாலையொன்று காரிகையாள்கைக்கொடுத்தார்
குருசிற்றனுத்தாரங் கொண்டந்தத்தாதியர்கள்
அரசர்சபையி லணியிழையைக்கொண்டுசென்றார்
பார்த்தவராண்மை பறிபட்டுநெஞ்சுழல
ஆர்த்தவேள்வித்தீயி லப்பஞ்சவர்க்காக
அனலிற்பிறந்தாட்கே யரசர்மெழுகாயுருகி
மனதையுயிர்பறிக்க மன்சபையிலேற்றிவைத்தார்
உதையகிரியி லுதிக்குமிளங்கதிரை
நிதிமணப்பந்தர் நிறுத்தல்போனின்றனளே
போனவுடனரசப் பூசுரனைப்பார்த்தயிர்த்தாள்
மானேர்விழியாளை வாசவன்சேய்பார்த்திருந்தான்
மன்னர்சமர்த்து மறுகிமனதுருக
தன்னுயிரில்லாச் சடமோவியத்தையொத்தார்
மனக்காதல்விம்ம மதியற்றபூபாலர்
எனக்குனக்கென்றேபி னேமாந்திருந்தோரை
சுடரிற்பிறந்ததிட்டத் தூய்மனெனுமன்னர்பிரான்
வடம்பணிகொண்ட மகாமேருவொத்தொருவில
சரந்தூணியுமச் சபையிலேதான்போட்டு
வருந்தாதிவ்வில்லை வளைத்துநாணேத்தியபின்
அண்டகடாக மகடரெஞ்சுமச்சுழன்மேல்
கொண்டவிலக்கைக் குறித்தேயறுத்தோற்கு
தானனியல்சூட்டுமென்றன் றங்கையெனவுரைத்தான்
மானமுடையான் வழுத்துமொழிமன்னருற்றார்
அப்போதுதாதியர்க ளரசர்பெயர்குறித்து
துப்பாண்மைசொல்லத் தொடங்கினர்காணம்மானாய்
வரிசேர்ந்தகண்ணாய் வணங்காமுடிவேந்தன்

துரியோதனனிவன்காண் சோலைக்கிளிமொழியே
துச்சாதனன்முதலாய்த் தொண்ணூற்றியொன்பதின்மர்
நச்சாரரவுயர்த்தோ னற்றம்பிமார்களிவர்
மல்லினுக்கும்வில்லினுக்கு மால்சல்லியனிவன்காண்
வெல்லுஞ்சகுனியிவன் மிக்ககொடைக்கன்னனிவன்
வீரற்குவீரன் விறலசுவத்தாமனிவன்
சூரன்வசுதேவன் றோன்றல்பலபத்திரனிவன்
காயாமலர்மேனிக் கண்ணனிவன்பெண்ணரசே
மாயோன்றுணையிவன்காண் வல்லியமாஞ்சாத்தகிபேர்
மாலைக்கடல்புகுத்து மன்னுசராசந்தனிவன்
கோலுக்கிவனைக் குறிக்குஞ்சிசுபாலன்
பகைவேரறுக்கும் பகதத்தன்காணுமிவன்
இகலில்வலிய விராடனெனும்வள்ளலிவன்
சேரனிவன்சோழனிவன் றென்பாண்டியனிவன்காண்
சீரினையொத்தித் திரிகர்த்தமன்னனிவன்
காசிப்பதியனிவன் கலிங்கசக்ரவர்த்தியி
பூசன்மதியாத பூரிசிராவிவன்கான்
மாகதர்மன்னனிவன் மருவுசாதேவனிவன்
கேகயமன்னனிவன் கீசகனுமிங்கிவன்காண்
தெங்கணமன்னனிவன் சினப்பதியனிவன்
கொங்கணனிங்கிவன்காண குலிந்தப்பதியனிவன்
வங்கனிவன்கன்னடர்கோன் மற்றுமிவன்சினன்
சிங்களர்கோன்வங்கன் றிராவிடர்கோனிங்கிவன்காண்
கஞ்சப்பதியனிவன் காம்போசமன்னனிவன்
அஞ்சவருணனிவன் அமைந்தநேர்பாளனிவன்
சகத்துக்கரசனிவன் சவ்வீரமன்னனிவன்
உகந்தரமன்னனிவன் ஒட்டியர்க்கேவேந்தனிவன்
சிந்துப்பதியனிவன் செம்மல்விராடனிவன்
குந்தளமன்னனிவன் கோமான்மராடனிவன்
கொல்லத்துமன்னனிவன் கூர்ச்சரத்துவேந்தனிவன்
பல்லவராசனிவன் பப்பரவர்வேந்தனிவன்
மாளுவர்கோமானிவன்காண் வன்னபதிமன்னனிவன்
சாளுவதேசத்தனிவன் றூர்விதர்ப்பராசனிவன்
நிடதப்பதியனிவ னீள்காஞ்சிப்பூபனிவன்
அடற்கேரளனிவனகா ணம்போசமன்னனிவன்
இந்தப்படியாக வெண்ணேழுதேசமன்னர்
சந்ததிறற்பெருஞ் சாற்றிமுடிந்ததற்பின்

யிவர்களியாரெனினு மிந்தவரிவில்வளைத்து
தவர்கொண்டிலக்கறுத்தோர் தண்புயத்தின்மாலையிடும்
என்றந்தமின்னு ரியம்பமனங்கடுத்து
ஒன்றும்பகராது வோவியமாநின்றனளே
மன்னர்பலரு மதியழிந்துமாழாந்து
மன்னுசிவனல்லால் வளைக்கவல்லாரில்லையென்று
வில்லெடுத்துக்கைசோர்ந்து வெட்கம்போகாதபடி
நல்லகுணத்தோடே நழுவினார்மன்னர்சிலர்
தன்குலத்தோர்வில்வளைக்கத் தானெழுந்தோனைத்தடுத்து
நன்கிலக்காணும்வளைத்த னம்மான்முற்றுதெனவே
வல்லபலபத்திரனை மாயன்விழித்துரைப்பான்
பல்லுலகும்போற்றும் பரிவானவில்விசயன்
அந்தணரோடே யதோவிருக்கிறான்பாரும்
சிந்தனையில்லான் சிலைவளைத்திலக்கறுத்து
மாலையுந்தாங்கி மணம்புரிவான்வந்தமன்னர்
ஏலவேவில்வளைக்க வேலாதலக்கழிந்து
சாலமுகநாணித் தன்சார்பிற்போவரென
நீலநிறத்தா னிகழ்த்தவிருந்துவிட்டார்
வேந்தர்குழுவோடு வில்லதனைத்தான்பார்த்து
மாந்திப்புறங்கொடுத்தார் மன்னர்சிலர்சிலர்கள்
இருகைக்கடங்கா திமையமனையவில்லை
ஒருகைக்கடக்குதற்கு வொண்ணுதென்றேகினர்காண்
வல்லியமொத்து வரிவில்லைத்தானிறுத்தி
சல்லியனுநாணேற்றிச் சாணிற்கக்கீழ்வீழ்ந்தான்
வில்வேதமோர்ந்ததனு வீரசராசந்தனுமே
மல்வாகுனுலுவிரன் மட்டிருக்கக்கீழ்வீழ்ந்தான்
மாகதனும்வில்வளைக்க மாட்டாமலேவீழ்ந்தான்
தாகமுடனீலனுமோர் சாணிற்கக்கீழ்விழ்ந்தான்
அந்தகன்மைந்த னறியாமல்வந்ததென்று
யிந்தவரிவில் லெடுக்காமல்மீண்டோமேல்
எண்ணார்கண்மன்ன னனவேகிவில்லெடுத்து
திண்ணேடுநால்விரலிற் றிக்கியேகீழ்வீழ்ந்தான்
ஆசாரிமைந்தனுமோ ரங்குலியெனக்கொணர்ந்து
பேசாதுபோட்டுப் பிரப்பட்டானம்மானய்
ஆனுக்காணுசையுறு மாளழகன்வில்வீரன்
மானுற்றகன்னனெனும் வள்ளலெழுந்துசென்று
ஈசன்கையிலை யெடுத்தநிருதனென

தேசுடன்வில்லைத் திறமாகத்தானெடுத்து
வளைத்துநாணேற்றி மயிற்கடைக்குளேறுதன்முன்
இளைத்துவிழமாய னீய்போலிருந்துதைத்தான்
விற்கால்பறித்த விசையான்மணிமகுடம்
பொற்கோபுரம்போலப் போயதேசேணளவாய்
மணிமகுடம்போயும் வல்விசையான்மன்னவனும்
பணிமின்னிடவெழும்பிப் பாரிலேவீழ்ந்தனனே
பூட்டும்பணிதயங்கப் பொற்பானமெய்தயங்க
சேட்டினிளங்கதிர்போற் றேகந்துகட்பரவ
வாலரவிபோல வயங்குந்திருமேனி
கோலமிகமழுங்கிக் கூசிமெலிந்தேகினனே
கன்னனைக்கண்டு கலங்கியேமன்னரெல்லாம்
இன்னலுற்றேவில்லி னிடஞ்செல்லாதேயிருந்தார்
அரவக்கொடியன்முத லானபலமன்னரெல்லாம்
ஒருவில்லுக்காற்ற துணர்வற்றாரம்மானாய்
மன்னர்பதைபதைப்பு மாவிறலுந்தான்மயங்கி
வின்னமுடனிருப்ப வேதியன்போல்வில்விசயன்
கன்னியுடன்பிறந்த காளைமுகநோக்கி
வன்னிகுலத்தோர் வளைத்திலக்கைவீழ்த்துவித்தால்
தார்சூட்டுமோவுனது தங்கையெனக்கேட்டான்
சீர்சீர்த்தியுள்ளதிட்டத் துய்மனெடுத்துரைப்பான்
அரசற்கிழிவோதா னந்தணரோவில்வளைத்தால்
பிரியத்துடன்யானே பெண்டாரோனென்றுரைத்தான்
மேருகிரியையரன் மேனாள்வளைத்ததென
பாரவரிவில்வளைத்துப் பாணந்தனையெடுத்து
அந்தரந்தன்னி லமர்ந்துசுழன்மேலிலக்கை
இந்திரகுமார னிசைந்தறுத்தானம்மானாய்
வண்மையுள்ளவில்லை வளைத்திலக்கைவீழ்த்தியபின்
பொன்மழையும்பூமழையும் பொன்னுலகோர்தான்சொரிந்தார்
வில்லுக்கிவன்மேரு வில்லியாம்விற்குருவாம்
செல்லொக்குங்கையனெனச் சேரத்துதிக்கலுற்றார்
தக்கனார்வேள்வி தவிடாயுடைத்தெறிந்த
மிக்கவீரன்றானோ வில்விசயனல்லதெவர்
சந்தேகமில்லையிவன் றானேவிசயனென்று
கொந்தார்குழலிகளி கொண்டுமலர்மாலையிட்டாள்
செங்கழுநீர்ப்பூந்தாரைத் தேர்விசயன்றிண்டோளில்
பங்கயக்கையாற் பணிந்தணிந்தநற்கோலம்

நீலமணிக்கிரியி னீண்மாமணிக்காந்தி
காலுமருவியொத்த கண்குளிர்ந்தான்பாஞ்சாலன்
வாழ்ந்தான்விசயனென்றே வானோர்கடானார்த்தார்
தாழ்ந்தாரரசரென்று சார்ந்தமறையோரார்த்தார்
அந்தரதுந்துபிக ளானபஞ்சவாக்கியமும்
யிந்தவுலகி லிசைந்தபலவாத்தியமும்
சலதியின்மன்னர் சபையைமதியாமல்
பலகலைவல்லானும் பைங்கொடியுந்தானெழுந்தார்
கேசரியாமன்னவர்க ளுணமெல்லாங்கீழாக்கி
தேசிஞெடுதுணைவர் சேரமருங்கில்வர
வெல்விசையகேசரியாய் வில்விசயன்செல்வதனை
கல்விரவுசிந்தையினுன் காந்தாரிசேய்பார்த்து
பைங்கிளியைத்தானுமொரு பார்ப்பானுர்கொண்டகல
இங்கிருந்தமன்னவர்க ளேதுசெயவந்தீர்கள்
வேந்தரணிமுறைமை வேஷத்தைவிட்டருங்கான்
பூந்துசருகருந்தும் பூசுரர்போலென்றுரைத்தான்
ஆலங்குடியா யமர்ந்தமனத்தான்சொலவே
மேலுஞ்சினங்தெழுந்தார் வேலைமகராலயம்போல்
மன்னர்கொதித்தே வரக்கண்டுபாஞ்சாலன்
கன்னியுடன்பிறந்த காளைதிட்டத்தூய்மனுமே
தச்சப்பயலாண்மை தான்கொண்டுலகாளு
நச்சாடரவனையாய் நாணுதிகலெதிர்த்தாய்
அன்றுநீபட்ட வவதிமறந்ததல்லால்
இன்றொருவிஞணேற்ரு தெல்லோரும்கீழ்வீழ்ந்தீர்
பஞ்சைப்பயலே படைகையினிலெடுக்கும்
விஞ்சைதெரியாத வீணுவெனவுருத்தான்
முப்புரமன்று முதல்வனெரித்ததுபோல்
ஒப்புடன்வந்த வுரவர்தளமுனையும்
நீருக்குவேன்பார் நிமிஷத்திலென்றுசொல்லி
மாருச்சினமாய் வரக்கண்டேவில்விசயன்
எதுக்குக்கோப மெவராகிலுஞ்செயித்தோர்
மாதுக்குயேற்ற மணுளனெனநினைந்து
பேசாதிருங்கள் பிரமனேடிந்திரனும்
கூசாதெமன்வரினுங் கொல்லுவேன்பார்த்திரென
உன்சிறையாங்கன்னிகையு முன்வசமென்றொப்பிவைத்து
வன்சினமாய்வில்லை வளைத்துமழைமாரியென்ன
வீசினுன்மேகம் வெருக்கொண்டொதுங்கிடவே

தூசியாய்நின்ற துரியோதனன்படையை
ஒன்றுபிழைத்தோடா தொருநொடியிற்குள்ளாக
கொன்றுபிணங்கள் குருதிதனின்மிதக்க
செய்தானலறி சிறுவன்முனைந்தெதிர்க்கக்
கொய்தான்கொடிமாக் கொடுமெறமுனுனுமற
அம்பறுபதேவி யவன்புயமுமார்புகளும்
தும்பிதுளைப்ப தெனத்துளைக்கச்சோபமுடன்
ஓடினன்கன்ன னுடைந்துபகதத்தனவன்
சாடினன்மேன்மேற் சரபஞ்சரமாகத்
தேருருளையச்சிறொடுத் தேர்ச்சாரதிகொடிமா
வேருடனேகெட்டவன்றன் மெய்யடங்கப்புண்ணுகி
சத்துருமக்கென்றபகை தத்தனுலைந்தோடினனே
பத்துக்கணையாற் பறந்தான்சகுனியென்போன்
பூரியெதிர்த்தவன்றன் பூரியுடன்வில்லுமற்று
தேரும்பொடியாகித் தேகமெல்லாம்புண்ணுகி
ஓரியெனவுளறி யோடினனங்கவன்பின்
தாரிலகுமார்பன் சல்லியன்வந்தேயெதிர்க்க
அரைக்கணந்தன்னி லவன்றேரும்வில்லறுத்து
விரைத்தேயவன்றனுட மெய்யெல்லாந்தான்றுளைத்தான்
பங்கயவந்ததிங்கிவன்றான் பார்த்தனெனவறிந்து
சிங்கம்போற்றண்டுகொண்டு சீறினன்காணம்மானுய்
சீறிவருமுனமே தேயுசகாயன்புதல்மன்
மீறியேகைகால்பிடித்து வீசினன்காணம்மானுய்
அந்தரமட்டாயெழுந்து அம்புவியிலேவீழ்ந்து
நொந்தெலும்புதானொடிந்து ஞேய்கொண்டுபோயினனே
அரவக்கொடியா னதிர்ந்துவருமளவில்
தருமற்கிளையான் றனுவளைத்துநாணேற்றி
சர்ப்பக்கொடியறுத்துச் சாரதியைத்தானறுத்து
வெற்பொற்றதோள்கடன்னை வீசியொன்றேடொன்றுவைத்து
சதமானதூற்றுவருஞ் சஞ்சலப்பட்டேயோட
விதமானவீமன் விரட்டினன்காணம்மானுய்
ஆசாரிமைந்த னரைநாழிகைநேரம்
தேசானபார்த்தன் செயுமுயுத்தந்தான்பார்த்து
மடிந்தவுடல மறுத்துயிருபெற்றாற்போற்
திடங்கொண்டிவன்விசய தீரனெனவறிந்து
முறிந்தவனைப்பூப்போன் முறிந்தோடிப்போயினனே
அறிந்தேவிசயனென்று மாசாரிசேயகல

எத்தேசமன்னவரு மிவ்வாறுதானறிந்து
பெற்றோர்க்குச்சேயாகப் பேருயிர்கொண்டோடினரே
துற்குணத்தாலே துரியோதனன்பாவி
விற்குணங்கள்கெட்டு மேனியெல்லாம்புண்ணாகி
சிலமுள்ளவாகனங்கள் சேரப்பறிகொடுத்துக்
காலிரண்டுமேபிடரி காணவிரைந்தோடினரே
விசயன்விசனென்று வெருவிப்பயந்தோடி
திசைகெட்டுத்தானேகிச் சேர்ந்தார்காணம்மாளுய்
தாமனும்பத்திரனுஞ் சாத்தகியுஞ்சீர்த்தியுள்ள
வீமன்விசயனுட வெற்றிகண்டுகண்குளிர்ந்தார்
சீர்சராசந்தன் சிசுபாலனுந்திகைத்து
கார்சிலைவீரன் கனவிறலைப்பார்த்தகன்றார்
சேரன்வளவன் செழியன்களிகூர்ந்து
வீரன்விசயனென்றே மெய்குளிர்ந்துதானகன்றார்
மன்னவர்களெல்லாந்தன் மாநகரிசேர்ந்ததற்பின்
கன்னிதனைவிசயன் கைப்பிடித்துமட்பகைஞன்
இல்லறத்திற்றுயிடத்தி லேகியேவாயினின்று
வல்லநகர்மன்னனிடம் வாங்கினேமையமென்றார்
எல்லவருங்கொள்ளுமென்று ளிசைந்தோர்கனியதென்றார்
நல்லகனியைவர்களு நாடிப்பொசியுமென்றாள்
வாசம்பெருகு மலரொன்றெனப்புகன்றார்
நேசமாயைவர்களு நேர்ந்துபுனையுமென்றாள்
அல்லக்காண்டாயேயோ ராயிழையென்றேபுகன்றார்
சொல்லைத்தான்கேட்டவளுந் தோன்றவெளியில்வந்தாள்
மாதுதனைக்கண்டு மயங்கியுணர்வழிந்து
ஏதுசெய்யப்போரே னென்னவிதஞ்சொல்லிவிட்டேன்
என்றுபுலம்பி யிருகண்ணுநீர்சொரிந்தாள்
அன்றுதரும னவளடியில்வீழ்ந்துசொல்வான்
மறைநாலுபொய்த்தாலுன் வார்த்தையொன்றும்பொய்யாதே
இறைமுன்விதித்ததுவு மிப்படியேதானிருக்கும்
ஆகையாலந்தமின்னை யைவருமேகொள்வமென்றார்
தோகையேயொன்விதிக்கென் சொல்வேனெனவிடைந்து
பாத்தனைப்பெற்ற பனிமொழியுஞ்சஞ்சலித்து
மூத்தவனோடைவரையு மொய்குழலையும்பார்த்து
மன்னனிடஞ்சென்றவன்றன் வாய்மையறியுமென்றாள்
சொன்னபடியே துரோபதியொடைவரும்போய்
அணங்குதனையாங் கனைவருமேதான்மகிழ்ந்து

மணஞ்செய்வோமென்றுதரு மன்னுரைத்தானம்மானாய்
வேந்தனுரைக்க வியாகுலமாய்த்தான்மயங்கிச்
சோர்ந்துவிழுந்து துணுக்கிட்டுமூச்செறிந்து
நேர்ந்ததுவும்பார்த்தனுக்கே னீள்வான்மொழிந்ததுவும்
சார்ந்தவிசயனுக்குத் தானேவின்னாணேற்றி
வல்லிலக்குவீழ்த்தியது மாலைதரித்ததுவும்
வில்லியருச்சுனனே மேலுமேகொள்வதென்றான்
இசையாதுமன்ன னியம்பவிறற்றருமன்
அசையாவியாத னனுகமனநினைத்தான்
ஊசியுங்காந்தமுமா யொத்தேநொடியில்வந்தான்
வாசிமன்னரியாரு மறையோனடிபணிந்தார்
பணிந்தோர்க்கியல்பாகப் பண்பானவாசுரைத்து
மணந்தாமிஷமான வாறேதெனக்கேட்டான்
ஐயாவொருமகளை யைவருமேவேட்டுமென்றார்
துய்யோனேயென்மனது சோர்ந்ததெனவுரைத்தான்
பஞ்சவர்கடன்பிறப்பும் பாவைநல்லாடன்பிறப்பும்
வஞ்சமறச்சொல்வேன் மகிழ்ந்துகேளென்றுரைத்தான்
முன்னாளோர்மன்னன் முறையாயுலகமெல்லாந்
தன்னுருயிர்போலத் தான்காக்குநாளையிலே
சீராசரொன்றினொடு வொன்றுசெருமூளாமற்
பாரரசர்க்குற்ற பகையெல்லாந்தானறுத்து
தன்னுயிர்போன்மன்னுயிர்க்குந் தானிரங்கியேகாத்து
மன்னுயிர்க்குமோர்குறையும் வாராமலேகாத்தான்
செங்கோற்றராசின் முனைபோலத்தேயமெல்லாம்
மங்காமற்காப்பளவின் மன்னரெல்லாந்தான்வணங்கி
அரசர்குருவென் றவனுக்கேனாமமிட்டார்
வரிசையுடனரசர் வாழ்ந்திருக்குநாளையிலே
தேவருலகெல்லாஞ் சிறைபிடித்துக்கொள்ளைகொண்டு
மாவலிமையாயவுணர் வானுலகைப்பாழ்படுத்திப்
போனார்மகவானிப் பூபதியைத்தான்போற்றி
மானுபிராமாவென் வாழ்வைநிலைசெய்யுமென்றார்
அஞ்சலித்துச்சொல்ல வரசர்குருவெழுந்து
விஞ்சைமகவானளித்த மென்றேரின்மேலேறி
போரவுணர்சேனை பொடியாகத்தூட்படுத்தி
தாரசுரர்பேர்நாமந் தானறவேகொன்றுவிட்டு
பிடித்தசிறையும் பெருங்கொள்ளையுந்திருப்பி
நொடிக்குள்ளேபொன்னுலகை நோக்கியேதான்மீண்டு

வச்சிராயுதற்கு மகுடமுடிதான்சூட்டி
பச்சமாய்வாழ்ந்திரென்று பாலித்தான்மன்னவனும்
இறந்தோர்க்குயிரீய்ந்தா யென்றனரசியர்தாய்
சிறந்தோனேநீயெனக்குச் செய்தநன்றியான்மறவேன்
அரசர்குருபுவிக்கு யமரர்குருவென்புவிக்கு
விரைபொங்குந்தார்மார்ப வேண்டியதுகேளுமென்றான்
எற்கும்பொருட்டா யெனக்கோர்குறையுமில்லை
காக்குந்தகமையல்லாற் கையேற்கேனென்றுரைத்தான்
எற்பதிகட்சி யெனவேமனமறுத்தாய்
காப்பதுனது கரமென்றுதானுரைத்தாய்
பாத்திபாவென்சொற் பழுதுவரலாகாதே
தோற்றுமியாதேனுந் துரிதமாய்க்கேளுமென்றான்
ஜீவனைக்கேட்டாலுஞ் செல்வத்தைக்கேட்டாலும்
ஆவலுறும்பஞ்சகன்னி யான்றருவைக்கேட்டாலும்
அந்தக்ஷணமே யருளுவேன்கேளுமென்றான்
இந்திரன்சொல்ல விறைவன்மனமகிழ்ந்து
மூவுலகின்மாதுகளு மோகிக்கும்பெண்ணாக
நாவிலுறைமாதுமுத லாலிரண்டுலெக்ஷுமியும்
ஒவ்வாதபேரழகா யோர்பனிரெண்டாண்டாகச்
செவ்வாய்ப்பிரமனுட செய்தொழிலாய்ச்செய்துதந்தால்
வேண்டுவேனல்லதொன்றும் வேண்டேனெனவுரைத்தான்
தாண்டுமுனக்கப்படியே தாரேனெனவனுப்பி
வேதன்பதத்தை விரைந்திந்திரன்பணிந்து
நாதனேயோர்வரந்தா னல்கென்றுபசரித்தான்
தந்தேனுனக்கேது தரவேணுமென்றிசைப்ப
மைந்தாவுயரரசன் வாய்மைதனைக்கூறினனே
நன்றென்றிசைந்துபதி னாலுலகிற்றேசையெலாம்
ஒன்றின்றியேசேர்த்தா னேரேழ்சமுத்திரம்போல்
பொன்னையுறவைத்துப் பொருந்துதங்கமாக்குதல்போல்
அன்னவழகெல்லா மறவைத்தோராழிசெய்தான்
பின்னுமறவைத்தோர் பெருமலையதாக்கிவைத்தான்
பன்னுமதனைப். பணிக்கோபுரமாக்கி
மீண்டுமறவைத்தோர் மெல்லியர்க்குக்காணுமட்டுங்
கூண்டுதிரட்டிக் குறித்தோர்திரைக்குள்வைத்து
நுண்மதியாக நுவன்றவயவங்களெலாம்
வண்மைபெறவீராறு வச்சிரமாய்த்தான்வகுத்தான்
உருமுற்றியென்னவடி வோவென்றுபார்ப்பதற்கு

திரைபற்றிநீக்கித் தெரிசித்தானம்மானாய்
ஞானந்தமொழி நல்லறிவுதான்பிறிந்தே
ஆனந்தமையல்கொடு வாயிழையைத்தானெருங்க
பெற்றநீதந்தையல்லோ பேதித்தாலோகமெல்லாம்
முற்றும்பேதித்திடுமுன் மோகந்தவிர்ந்திடென்றாள்
சற்றுமனமெண்ணுமற் றவினான்கற்பழிக்க
நற்றிறனென்று நடுங்கியேயோடலுற்றாள்
ஓடுதல்கண்டிவனு முற்றேதுரத்தலுற்றான்
நாடியெங்குந்தானோடி நாரிபாதச்சிலம்பின்
புக்குறைந்தாளங்கிவனும் போயினனஞ்சாமற்
தக்கமடந்தையருஞ் சத்தியுமேதானிருக்க
ஐந்தானனத்தோ டயன்செல்லநாரிகண்டு
பைந்தாரரனெனவே பாதந்தனைமுடக்கி
சீற்றமுடன்பார்க்கத் திடுக்கிட்டுளங்கலங்கி
மாற்றரியசாபம் வருமென்றேயோடிவிட்டான்
அயன்போனபிற்றை யரனணுகுமப்போது
உயருமைமுன்போல வுண்டானாளஞ்சுதலை
மதத்துத்திரியானே மான்மகனென்றேதலுற்றாள்
கதக்கொடுஞ்சொல்லாய்முக் கண்ணியுரைத்திடவே
சங்கரன்கேட்டு தடக்கண்மிகச்சிவந்து
அங்கயனுக்குள்ளசிர மைந்தினடுத்தலையைக்
கிள்ளினனீசன் கிளர்கரத்தையச்சிரந்தான்
அள்ளிப்பிடிக்க வரன்பித்தாய்நின்றலைந்தான்
கவ்வுங்கபாலக் கரத்தோடுகங்காளன்
எவ்வுலகிலுந்தா னிரந்துண்டானம்மானாய்ப்
சூலபாணிக்குத் துடர்கலகந்தான்றீர்க்க
மாலுமெதிர்நகைத்தான் மண்டையிமேதானகைத்த
தேதுசிவனுக் கிடர்விளைக்கக்காரணமென்
றேதுகரத்தைவிடு முன்னினைவைச்சொல்லுமென
மாயாவினோதாவுன் மாய்கைதனிற்சிக்கேன்காண்
காயாமலர்மேனிக் கண்ணுசெந்நீர்நிறைய
தந்தாலொழியவிவன் றன்கைவிடேனென்றுரைக்க
சிந்தாகுலந்தீரச் செந்நீருனக்களிப்பேன்
அரன்கரம்விட்டிறங்கென் றுதியுரைத்திடவே
வரன்கரம்விட்டிறங்கேன் வாங்கெனைநீகையிலென
நன்றென்றொருவிரலி னாராயணனேற்றே
அன்றேயோர்மோட்டுருவா யண்டமெல்லாந்தான்வளர்ந்து

சங்கரந்தானெற்றி தனைப்பிளந்துதானொழுகுஞ்
செங்குருதியெல்லாஞ் சிரத்திற்களித்தனனே
பேராறுபோலப் பெருகும்பிரளயத்தை
சோராக்கிபாபஞ் சுருசுரொனவாங்கியதை
குடிக்கக்குடிக்கக் குமுகுமெனச்செந்நீர்கள்
வடிக்கவடிக்க மாபூசைகொண்டதுவே
உண்டுதெவிட்ட வொழுகும்பிரளயநீர்
மண்டிக்கபாலமுக்கான் மட்டுநிறைந்ததுவே
அட்டைகுடித்ததென வச்சிரந்தானங்குலியின்
ஒட்டுசிக்கிவிட்டு வுலகெல்லாமுண்டுமிழ்ந்தோன்
இன்னங்குறைக்கு மியானுமிணையுனக்குப்
பன்னும்புவியிற் பலவுயுத்தமுண்டாக்கி
தாரோனெனவே தலத்திலமைத்துவைத்தான்
ஏறேறினோனு மிடுக்கண்டவிர்ந்திருந்தான்
அன்றுமுதலாக வாதிமூலக்கடவுள்
இன்றுவரைக்கு மியலுயுத்தமுண்டாக்கி
வைத்திரத்தமீய்ந்தான் மறுத்தின்னப்போர்மூட்டி
நெய்த்தோர்சிரந்தனக்கு நேர்ந்தளிப்பதென்றறிநீ
இந்தக்கலக்கம்வர வேதென்றுமைசலித்து
அந்தமுடைய வமரர்குருவென்போன்மேல்
கோபமிகுந்துவுமை கூறாப்பெண்கேட்டமையால்
சாபங்கொடுத்தாளுன் றனுடலமைந்துதுண்டாய்
நாறக்கடவதென்று ஞாராயணமூர்த்தி
வீறுற்றபாதமதின் வென்பாற்கடறனிலே
சேரப்பணிந்தருளித் தீரும்வகைசொல்லவென்று
நாருற்றதாயே யெனநயந்துகெஞ்சிநின்றான்
பிறவித்தொடர்பலவும் பெற்றிவளேயேசேர்ந்து
துறவுற்றொருரிஷியாய்த் தோகைதனைச்சேர்ந்து
அப்பிறவிதீர்ந்ததற்பின் னைவராய்த்தான்பிறந்து
செப்பணையகொங்கைமின்னைச் சேரக்கடவதென்றாள்
பாதச்சிலம்பிருந்த பாவைதனைக்கூவி
வேதற்குத்தப்பி வினைவிளைத்தாயெந்தனுக்கு
ஆசையிலாதா லயனைவெறுத்தோடிவந்தாய்
வேசைபோலைவருக்கு மேதாரமாயிருப்பாய்
அடங்காமயல்கொண் டலைவாயெனச்சபிக்க
இடங்காணாதுந்த னிருபதத்திற்சேர்ந்தேனே
குறித்தோனேயென்னைக் கொளவுநானெப்பிறப்பும்

பிறித்தேவிடாதவுன்றுட் பேதமின்றிநான்சேர
என்புருடனல்லா திகலிலயலோர்மயலாய்
வன்புடனேகற்பழிக்க மாட்டாமற்போசவரந்
தாவென்றிருபதத்திற் தன்கண்பொதிந்துகெஞ்ச
ஆவென்றிரங்கிநல்ல தப்படியாமென்றுரைத்தாள்
அம்பிகைசாபத்தா லேந்துதுண்டமானேனும்
சம்பிவெகுகாலந் தானுறியேகிடந்து
பின்புபலபிறவி பெற்றிவணங்கைச்சேர்ந்து
வன்போற்பிறவி வணங்கும்ரிஷியானான்
நாரிநளற்கு நளாகினியாய்த்தான்பிறந்து
பாரதனிலே பதிவிரதநாயகமாய்
அந்திரிஷிக்கே யவள்பாரியாயிருந்து
கந்தனும்வள்ளியும்போற் காசினியிற்சேர்ந்திருந்தார்
அன்புபெருகி யருளாதரவாக
இன்பமுடனே யினிதாகவாழ்ந்திருந்தார்
மிக்கவழகாலு மெல்லிவழிப்பாட்டாலுந்
தக்கதவசுதனைத் தான்மறந்தானம்மானாய்
இன்னுமேக்கொண்டெம் மெழிற்றவத்தையாமறந்தோம்
மின்னாள்வெறுத்தகல வேறுவிஞ்சைநெஞ்சில்வைத்து
மேனியெங்கும்புண்ணாய் வெடிநாற்றமுள்ளவனாய்
ஈனமுடன்மனித ரெல்லாநிந்தித்திடவே
கொண்டான்வியாதிபொதுக் கோதையின்மேலாசைவைத்தான்
கண்டான்வடமினன் சற்புடையபொற்பாவை
இப்படியல்லோவாய்க்கு மொன்றனுக்கென்றேமகிழ்ந்து
எப்பொழுதுமுன்னிருந்த வேற்றம்போற்பாரர்ட்டி
வேட்டோன்சொல்லுக்கிணங்கி மெய்யைமுழுக்காட்டிவைத்து
கூட்டானகந்தமதைக் கொற்றவன்றன்மெய்திமிர்ந்து
வாசங்கமழ மணாளனையோர்கூடைவைத்து
வேசைமனைமட்டு மிவள்சுமந்துகொண்டிறக்கி
பரத்தைமுலைக்குவட்டிற் பத்தாவைச்சேரவைத்து
வருத்தமறச்சுமந்து மனையிற்கொடுவருவாள்
முகஞ்சலியாமன் முழுதுமிதுதொழிலாய்
சுகஞ்செய்மணாளனுட சொற்கிதமுற்றேநடந்தாள்
கொழுநன்றனையொருநாட் கூடையிலேவைத்திரவிற்
கழுவிருக்குமாண்டவிமேற் காணுதுமோதினளே
கூடையிடிபட்டளவிற் கோபம்வந்தேயந்தரிஷி
சாடையறவிடியத் தானறுப்பாயென்றுரைத்தான்

விடியாதிருக்கவென்று மெல்லிசபித்துவிட்டு
கடிதாய்ப்பரத்தையிடங் கணவனுமேசேர்ந்ததற்பின்
மீண்டுமெந்தக்கூடையிலே வேட்டோன்றனைச்சுமந்து
பூண்டுமெனையணுகிப் பூவையினிதிருந்தாள்
அன்றுகதிருதய மாகாததேதெனவே
சென்றுபரிதியிடந் தேவர்முறையிடவே
மீளுத்தாள்சாபமதை மீறமுடியாம
ஞனித்தோர்தன்னை நடத்தேனெனவுரைத்தான்
கற்புடையாய்மாற்றிவிடு கண்டித்தசாபமென
பொற்புடையாளம்முனிபாற் போய்க்கேளுமென்றுரைத்தாள்
அந்தரிஷியை யடிவணங்கித்தான்போற்றி
யிந்தனுடசாபமிதை நீக்கிவிடுமென்றுசொன்னூர்
மாருதசாபமதை மாற்றிஞனந்தரிஷி
வீருனமாது விடியும்படியுரைத்தாள்
அக்காலந்தன்னி லசனமிடுஞ்சோற்றில்
தொக்கானவெச்சின்மிகச் சோர்ந்துவிழுந்திடவே
அருக்குளியாமலெச்சி லாயமர்ந்தசோற்றையெல்லா
மருக்கமழமாது மகிழ்ந்தேயருந்திவிட்டாள்
இந்தப்படியா யிணையில்லாச்சோதனைகள்
அந்தமுனிகண்கண் டதிசயித்தேயுண்மகிழ்ந்து
எந்தன்மனமிசைந்த வேந்திழையேயுந்தனுக்கு
என்னவரம்வேண்டு மெனக்கேளுமென்றுசொல்லி
உன்னையன்றிவேறெனக்கு வுற்றதென்னவேண்டுமென்ருள்
பண்டழகின்மிக்கபஞ்ச பாணனுக்குமேன்மையெழிற்
கொண்டுமெயதீரக் கோதையுடன்புணர்ந்தான்
மானுங்கலையாகி மற்றமற்றயோனிகளாய்
தானுமச்சேவாகிச் சமைந்துபுணர்ந்திருந்தான்
பற்பலுருவெடுத்துப் பாவைதனைப்புணர்ந்து
அற்புதமாக வகங்கூர்ந்தானம்மாளுய்
பன்னளுமன்பாய்ப் பரிவாக்ச்சேர்ந்திருந்து
மின்னளேயான்றவசு மெத்தநாள்விட்டிழந்தேன்
பன்னுதவம்புரிவேன் பாவையேயென்றுரைக்க
கன்னியுனக்கேற்க கைக்கருமஞ்செய்வனென்ருள்
நன்றென்றவன்றவசு நாடியிருக்கையிலே
ஒன்றியவனுக் குகந்தபணிசெய்திருந்தாள்
கார்குழலாயுன்னுடைய கற்பதனையானறிய
வார்புனலத்தான்றிரட்டி வாவென்ருனம்மாளுய்

மாதுதிரணீர்திரட்டி மாமுனிக்கியெந்நாளுங்
கோதைசெறிதன்றலையிற் கோட்டைபோற்கொண்டுசெல்வாள்
இந்தப்படியேந் திழைபூசைக்கேயுதவ
சிந்தைக்கிணங்கிவருஞ் சேயிழையைத்தான்பிரிக்க
மங்கைபுனறிரட்டும் வாவிக்கணாதனிலே
புங்கமுடன்பசுவைப் பொலியுமொருகாளையைப்போற்
காண்பித்தான்பார்த்ததற்பின் கைக்கிக்கார்தான்றிரளும்
மாண்பற்றுணின்று மயங்கினளம்மானை
கோதைமருண்டு குலைகுலைந்துமெய்நடுங்கி
எதுசெய்குவோமெனநெஞ் சேங்கிவெறுங்கையுடன்
சென்றாண்முனிபார்த்துச் சிறியிந்தநேரமெல்லாம்
என்செய்தாய்நீஜலங்கொண் டெய்தாததென்னெனவே
தன்செய்கையெல்லாந் தளர்ந்தேவிரித்துரைத்தாள்
புன்செய்கைபார்த்தாய் புரிந்தெனைவிட்டேகுகென்று
காந்தனுரைக்கக் கலங்கியகண்ணீரோடு
மாந்தியிருந்தவசு மன்னினளம்மானை
ஈசனருந்தவசுக் கெய்திமுகமைந்தோடு
பாசமுடன்வேண்டும்வரம் பாவைகேளென்றளவில்
நாதாவெனக்குறிய நண்பனேவேணுமென்றாள்
கோதாயளித்தமின்னங் கூறுனக்குத்தேள்வையென்றான்
கணவனளிக்கவென்றாள் கனிந்தின்னங்கேளெனவே
மணவனருளகவென்றான் மற்றேதுவேணுமென்றான்
வேட்டோனருள்கவென்றாள் வேறேதுவேணுமென்றான்
தேட்டாளன்வேணுமென்றாள் செம்மன்மனங்கொதித்து
ஐந்தானவாய்தனிலு மைந்துதரநான்கேட்க
மைந்தனுடனே மணவனேவேணுமென்றாய்
விடஞ்சார்ந்தகண்ணுளுன் மெய்விரகலாகிரியால்
அடங்காமயலானி வைவர்க்கும்பாரியென்றான்
ஈசனேயெந்த னெழுத்தோதவளமலை
வாசனேயெந்தன் மணவனைந்துபேராக
யென்னையேகொள்ளவர மீயென்றிரந்துநின்றாள்
சொன்னபடியேஞானச் சோதிநல்கியேகினனே
அந்தரிஷியு மமரர்குருவென்போனும்
வந்ததொருபஞ்சவர்காண் மங்கையுமம்மாதலவோ
சத்தியுரைத்துவுஞ் சம்புபின்புசொற்றதுவும்
சத்தியங்காண்பாரிலது நப்பாதேமன்னவனே
என்றந்தமன்ன னிதயவிழிதெரிய

வென்றின்பஞான மியல்பாகப்போதிவிக்க
நன்றென்றுசம்மதித்தா னற்றுருபதேயனுமே
அன்றுதருமனேமுன் னனமணக்கோலமதாய்
மன்னனிடத்தின் மணவறைமேன்மாதைவைத்து
உன்னுசடங்கியற்றி வுற்றேவலத்தில்வைத்து
பின்னுஞ்சடங்கு பிரதாபத்தோடியற்றி
மங்களமேள மணமுரசுதான்குமுற
சங்கினம்விம்மத் தனஞ்சயனேசுற்றிவந்து
பொங்கும்பலசடங்கும் பொற்பாகமுற்றியபின்
அங்கிதனிற்பிறந்தா ளந்தழலின்மீண்டுபுக்கி
துங்கமுளகற்பவளுஞ் சோதித்துமுற்றியபின்
மற்றுமன்னல்லோரும் வரிசையுடனிவ்வாறு
உற்றுமணந்தா னுகந்துசெய்தாரம்மானய்
தேருங்கரியுந் திறற்பரியுங்காலாளும்
பாருந்தனமுமெந்தன் பாக்கியமுழுமமென்று
சங்கையுடன்சிங்கா தனத்திருந்தேயைவர்களும்
பொங்குபுவியாளுமென்று பூபதியுந்தானுரைத்தான்
திக்கெல்லாம்பஞ்சவர்கள் சீர்த்திமொழிமேலோட
மிக்கபாஞ்சாலனருண் மெல்லியலைக்கொண்டொழுகி
பாராண்டிருக்கின்றார் பஞ்சவர்களென்றமொழி
சீராருமந்தகனுஞ் சேர்ந்தமக்களுற்றுவரும்
கேட்டுமயங்கிக் கிலேசித்துளங்கலங்கி
தோட்டுணையாங்கன்னனொடு சுற்றத்தார்மன்னவரும்
நால்வகைச்சேனை நரலைப்பெரும்படையும்
வேல்விதத்தின்மிக்கான் வேந்தர்களும்வீரர்களும்
சென்றந்தவைவர் சிரமறுத்துவாருமென்று
வென்றியுடனே விடைகொடுத்தானந்தகனும்
அந்தகன்சொற்கேட் டாழியேழும்பெருகி
வந்துபாஞ்சாலனகர் மண்டிவளைந்ததுபோல்
அடங்காப்பெருஞ்சேனை யாரவாரித்துவர
விடங்கால்கணையுடைய வேந்தன்மகன்பஞ்சவரும்
வேணபெரும்படையும் வெள்ளம்போற்சூழ்ந்துவர
நாணமிலாவேந்த னரலைப்பெரும்படையுஞ்
சென்றெதிர்த்தார்வென்றி செருச்சிங்கம்போலாக
அன்றுதிட்டத்துய்ம னரியபெருவில்வளைத்து
சல்லடைக்கண்போற் சரத்தாற்சடந்துளைத்து
மல்லற்படையீசன் மாய்வதுபோன்மாய்த்துநின்றான்

தாதையவனைவிடத் தான்போர்முனைந்துநின்றான்
நகுலசகாதேவர் நாரணனைத்தானினைந்து
இகலிலிவர்போல வில்லையெனப்போர்புரிந்தார்
மேரனையதண்டுவய வீமன்கரத்தெடுத்து
தேரொருநூறைஞ்ஞூறு சிந்துரம்பத்தாயிரமா
ஓரடிக்கிலக்கமென்ன வூதியடித்தெறிந்தான்
குசவன்சடையிலொரு கோட்டானைபூந்ததென்ன
விசனமறவீமன் வினைந்துடைத்தானம்மானாய்
திக்கெல்லாமெச்சுஞ் செயவிசயன்வில்வளைத்து
மிக்கவிட்டிஞாண வின்னாண்டொனிகுனித்து
ஆறிலக்கஞ்சொச்ச மரியபட்டவர்த்தனரை
நீறுபடப்போரி னிமிஷத்திற்றுனறுத்து
தோறுத்துவில்லறுத்து தேர்ச்சாரதியறுத்து
காரனையவானைக் கணங்கள்பலவறுத்து
மூனுலகஞ்சொச்ச முடிமகுடவர்த்தனரை
நாணங்கெடத்தேர்வின் ஞணிமுதலாயறுத்து
மணிகள்பதித்த மகுடந்தனைப்பறித்து
அணிகள்செறிமார்பை யம்புக்கூடாக்கிவைத்து
சீருலவுமன்னவர்கள் சேரப்புரங்கொடுத்து
கூருலவுவாளிமுனை கொண்டல்போலேசொரிந்து
மிகைகற்றிவன்பொருதி வீரசிங்கம்போலாக
பகதத்தன்றேர்நடத்திப் பார்த்தன்மேற்சென்றெதிர்த்தான்
மாவுடன்மாவும் வலுக்கொண்டுபோர்மூண்ட
தாவிவிடுசொரதியுஞ் சாரதியும்போர்மூண்டார்
வளைத்தசிலைநிமிரா வாளிபொழிந்தனரே
இளைத்திலோர்சாம மேவிற்போர்மூண்டனரோ
இத்திறலென்ன விவனுக்கெனவிசயன்
தத்தனுக்குந்தத்தெனவே தானொடியிற்பல்கணைகள்
ஏவிக்கொடித்தே ரிவுளியிருட்சாரதியும்
மாவில்லுநாணு மறுத்துடலெல்லாந்துளைத்தான்
வீசும்பலபடையும் விற்கணையாற்றூளாக்கி
ஆசுகமென்மே லவன்மேற்றுளைப்பதனால்
பார்த்தான்திகைத்தான் பரதவித்தான்மூச்செறிந்தான்
ஆத்தாமல்வென்னிட் டகன்றனன்காணம்மானாய்
சகுனியுடன்று சகாதேவன்மேற்பொருதான்
தகனனிகற்கச் சரமாரிதான்பொழிந்து
சகுனிதெரித்தோடச் சல்லியனும்போர்மூண்டான்

நகுலனவன்போரி ளுடியேவில்வளைத்தான்
நெருப்புநெருப்புமிக னேர்ந்தகொடுமையெனப்
பொருப்பொத்ததிண்புயத்தார் போர்மூண்டாரம்மாளுய்
அம்புமுனையம்புகவ்வி யந்தரத்திலேயெழும்பி
பம்புஞ்சிலகணைகள் பாதாளந்தட்டுருவ
இருவருமேயொத்து இளையாதிகல்வலியால்
ஒருவர்க்கொருவ ருவமையறப்பொருதார்
கருவிநகுலனவன் கார்முகத்திளுணறுத்தான்
மருவில்வளைப்பதன்முன் மாத்தேர்கொடியறுத்தான்
திண்டேர்பொடியத் திகழுங்கதாயுதங்கைக்
கொண்டேயுடைத்தான் கொடித்தேர்பொடிந்ததுவே
கண்டுவயவீமன் கதாயுதத்தைத்தான்பரித்துக்
கொண்டுவவனைக் கொதித்தேவிரட்டினனே
சல்லியனஞ்சித் தரியாமலோடிடவே
வல்லியம்போனூற்றுவரும் வந்துவளைத்தனரோ
திண்கதைக்கொண்டவர்க டேரெல்லாந்தான்பொடிய
ஒண்கடிகைக்குள்ளா யுடைத்தெறிந்தான்வீமனுமே
அனுசர்கள்பட்ட வவதிகளைப்பார்த்து
குனிவில்வளைத்துக் கொடுஞ்சாயகந்தொடுத்தான்
சற்பத்தான்விட்ட சரமெல்லாந்தானவிலக்கி
பற்பமாய்த்தேர்பொடியப் பவனன்மகனடித்தான்
தேர்பொடிந்துவீழ்ந்த சியோதனனைப்பார்த்துருத்து
போர்பொருதித்தேசம் பொறுவரவேதாளுள
ஆசைமிகுந்தாயோ வாமடாதச்சன்மகன்
தேசநீயாளத் திறஞ்செய்வானஞ்சாதே
தச்சப்பயனுன் றனைக்கிப்பிறந்தான்போல்
மிச்சமுடன்றிரிந்தான் மேன்மையாநீதுணிந்தாய்
எல்லாமறிவோ மெனவேயிடிபோல
வல்லாளன்றண்டான் மகுடத்திலேயடித்தான்
நீறுபொடியாக நிர்த்தூளிதானுக
பூமிமகுடம் பொடிந்தேசிரசதனில்
தூறியகாயமொடு சோரிபரவியதே
சீறியேவெய்யோன் சிறுவன்சரந்தொடுத்தான்
மாரியெனவீசுகின்ற வாளியெல்லாந்தான்விலக்கி
தேரும்பொடியாகத் திண்கதையாலேபுடைத்தான்
இரதம்பொடிந்தளவி லேண்டாதச்சப்பயலே
அரசன்றொழிலெடுக்க வாருக்குநீபிறந்தாய்

ஈனப்பயலேநீ யென்பாதிக்காரனையே
மானமுடன்பூவாள வைப்பதுவுநீதானோ
இலச்சைபொறைநாண மெள்ளளவுமுண்டானால்
அலச்சலாயிந்த வவதிப்படுவாயோ
என்றிவன்சொல்ல விருகண்ணொருப்பெரிய
குன்றனையவேறோர் கொடிமுடித்தேர்மீதேறி
சூறினன்சாபத் தொடையாற்சொரிமழைபோல்
மாறிவிலக்கரிதாய் மட்டில்லாமற்சொரிந்தான்
தட்டிநெருங்குமுன்னே தடியைப்பொடித்துவிட்டான்
கிட்டியெடுத்தெறியக் கேசரிபோற்பாயுமுன்னே
மட்டிலாவாளியவன் மார்பகமுங்கைத்தலமும்
ஒட்டியேவீச வுளநொந்தயர்ந்திருந்தான்
மலைகள்கலங்கின் மனங்கலங்காவீமனவன்
நிலைகள்கலங்கி நிலமதனில்வீழ்ந்தளவிற்
தச்சப்பயலிச் சமர்த்தனோவென்றுருத்து
வச்சிரக்கையான் மகன்றேர்முடுகவிட்டான்
சற்பக்கொடியானுந் தம்பிமார்நூற்றுவரும்
உற்பனக்கன்னனுக்கே யுற்றுதவியாகவந்தார்
வீமனகுலன் விறற்சகாதேவனுமாய்
தாமன்சகாயன் றனக்குதவியாகநின்றார்
இந்திரன்சேயு மிரவிதருஞ்சேயுஞ்
சந்திரனுஞ்சூரியனுந் தானடுங்கப்போர்புரிந்தார்
சாமமிரண்டாய்ச் சமமொத்தவெம்போரில்
வீமன்றனக்கிளையோன் வெஞ்சாயகவிசையால்
சரபஞ்சரமாய்ச் சரப்போர்வைதான்போர்த்து
கிரீடம்பரிகொடுத்து கெட்டுடைந்தேயோடினனே
மன்னவனுந்தம்பியரு மாய்ப்பனினிவீமனென்று
கன்னனுக்குமுன்னே கடுகியேயோடலுற்றார்
சங்கக்குருநாட்டுத் தானைபறந்தேகியபின்
சிங்காதமுழக்கிச் சென்றார்கள்பஞ்சவர்கள்
வெற்றிமுரசதிர விருதுபலமுழங்க
பற்றிநகர்சேர்ந்திருந்து பாராண்டாரம்மானாய்
வீடுமனுமந்திரியு மிக்ககுருசேயும்
பீடுடனேதானிருந்து பேசினரோர்தலத்தில்
பன்றியுடனிணங்கி கன்றும்பீதின்பதுபோல்
இன்றந்தகனு மிணங்கினன்சேயருக்கு
பாதிக்குடையவரைப் பாதகஞ்செய்தோட்டிவிட்டு

மாதுக்குச்சீதனமாய் வந்தபுவியாளுமவர்
பக்கல்வினையாய்ப் படைவிட்டான்வெங்கொடியோன்
ஒக்கன்முறைமை யுசாவுதலுமில்லாமற்
சென்றான்கொடியோன் செருவிற்படும்பாடு
நன்றாயறிந்து நகைப்போமெனவிருந்தான்
பொங்குதிரையைப் பொருவும்படைகளெல்லா
மங்கிமடியக் கொடுத்துமனமுழன்று
ஒப்பில்லாவீர ருடலெல்லாம்புண்ணாகி
தப்பில்லாமானபங்கந் தானேத்தபேருடனே
தானுமுனைமழுங்கித் தன்னகமும்புண்ணாகி
ஈனமுடன்றன்மனதி லெண்ணாதெல்லாநினைந்து
சூடுபட்டபூனையெனத் துக்கித்துநாணமுற்று
கேடுகெட்டுபாடுபட்டோங் கெட்டோமெனவெருவி
பீடடைந்துசிந்தைப் பிலமுநலங்குலைந்து
நாடடைந்துவீடுபுக்கார் நால்வர்களும்போய்நெருங்கி
எங்குபோய்வந்தீர்க ளேதுசமாசாரம்
உங்கண்முகம்வாடி யுள்ளகமுநொந்தாப்போல்
எங்களுக்குத்தோற்றா தெமையறியாதேகியதும்
பங்கமுடன்வந்ததுவும் பார்த்திபனேகூறுமென்று
வில்லுக்குவல்ல விதுரனிவைகேட்க
சொல்லுக்குச்சொல்லேதுஞ் சொல்லாதிடைந்திருந்தான்
அண்ணாவேநீயெனிலு மாசைமக்கள்போனதுவும்
புண்ணாகிவந்து புகலாதிருந்ததுவும்
இரக்கமுடனீ விசைக்குநினைவானால்
புரக்கும்புகழான பூபதியேகூறுமென்றான்
சமருக்குப்பாஞ்சாலன் றன்னகரிலேசார்ந்தார்
அமரின்பிரஸ்தாப மியானறியேனென்றுரைத்தான்
எதிவனுக்கு மெமக்கும்பகையேது
தாதையிறந்த தனையரன்றன்காவில்விழ
ஓதியசொல்லு முறுதிமறந்தனையோ
ஐவருக்குந்தந்தை யமர்ந்திருப்பானுமாகின்
மெய்வருத்தஞ்செய்யும் விரகுனக்குமுண்டாமோ
கங்கைதனின்மூன்றுதரங் கட்டிவிட்டுப்பார்த்தாயே
பொங்குகழுவைப் புதைத்துவைத்துப்பார்த்தாயே
ஒருரிருப்பகற்றி யோட்டிவிட்டுப்பார்த்தாயே
சீரார்மனையரக்காற் செய்தகட்டும்பார்த்தாயே
அன்னத்தினஞ்சையிட்டு வன்றுகொல்லப்பார்த்தாயே

கன்னிமணத்திற் கனயுத்தஞ்செய்தாயே
சின்னவர்கட்கெல்லாநஞ் தேயங்களீய்ந்தாயே
பன்னகரிலேயலையப் பஞ்சவரைவிட்டாயே
ஐயவர்பிழைத்திருப்ப தல்லவென்றுங்கொல்லவென்றுந்
தொய்வுற்றமக்களொடு சூழ்படையுவிட்டாயே
போனவர்கண்மீட்டதுவும புந்திநொந்துமீண்டதுவும்
ஞானமுள்ளவீசனய ஞாராயணனறிவான்
காலம்போம்வார்த்தைநிற்குங் காந்தாரிநாயகமே
மேலுனக்குகேடு மிகுந்தபிறச்சூடும்
கண்கெட்டுமெண்பிசைந்து காதலரெல்லாமிழந்து
புண்பட்டுசிந்தை புலம்புதனீபின்பலவோ
கற்றுமந்தவத்திரிக்கு காதிலென்னசொன்னாலும்
சற்றுமறிந்திடுமோ தன்றொழிலேமேலாடும்
சொன்னதுனக்குஞ் சூனருக்குமாக வல்லாற்
பின்னொருத்தர்க்காகவசை பேசினனென்றெண்ணாதே
உற்றமொழியொன் றுரைக்குறோனண்ணேகேள்
பெற்றபிள்ளைசோற்கேட்டுப் பேதித்தேயைவர்களை
கண்குறையக்கண்டு கடும்பகையாநெஞ்சிலுற்றாற்
றிண்குறையாய்ப்பெற்றெடுத்த செல்வரையெல்லாமிழந்து
ஓயாக்கலக்கமதர்க் குள்ளாகிநொந்திருப்பாய்
நீயாளுஞ்செல்வ நிலவரமாய்ப்பாழாகும்
இப்போதுதோற்றா தினிமிறினுற்றெரியும்
தப்பாதுசொன்னேன் சரன்வியாளபுத்திரனும்
ஒக்குமென்றான்சேயுடனே யோசனையுமொக்குமென்றான்
திக்குகொளந்தகனுஞ் சேயரும்பேசாதிருந்தார்
பேசாதிருந்த பெருமையறிவமென்று
ஆசாரிமைந்தருட னவ்விருவருமெழுந்தார்
எழுந்தவிசையு மிவர்நினைவுந்தான்பார்த்து
அழுந்தியசிந்தையுரு வந்தகனுமைந்தர்களைப்
போருக்குப்போயுலைந்து புந்திநொந்துவந்ததெல்லாந்
தாருற்றதாதையின்றன் றுளில்விழுந்தேயுரைக்க
மயக்கமிருந்து மதிகெட்டுணர்வழிந்து
நயக்குமகனையெலா நண்பாயருகழைத்து
பஞ்சவரையிப்ப பரிந்தழைத்திடாதிருந்தால்
தஞ்சமுடனவருக்குஞ் சார்பாவார்நால்வர்களும்
ஆதலானீங்க ளரிகண்டயாளியைப்போற்
போதமெலிந்திடுவீர் பூவெல்லாமாண்டிடுவார்

என்றுபகர விசைந்துநலதென்றதற்பின்
நன்றியுடனே நயந்தந்நால்வரையும்
கிட்டவழைத்துக் கிருபையுடனே துரைப்பான்
திட்டமுடனூற்றுவருஞ் சேகரமாயைவர்களும்
ஒட்டியேயொத்திருக்க வொன்றன்யொன்றுசீருமற்
கட்டுத்திறத்திருக்கக் கற்பித்துவையுமென்றான்
விதுரனேடிவ்வாறு வேந்தனுரைத்திடவே
நதிமைந்தன்மற்றவரு நன்றென்றாரம்மானாய்
உன்கைகிருபமுமோ ரொற்றுளுந்தானனுப்பி
மன்கொண்டவைவர் வரத்தூதனனுப்புகென்றான்
வீடுமற்குமந்திரிக்கு மேற்கவரசாள
நாடுமுற்றுமீய்வனென்று நம்பிக்கையோலையுடன்
தானுபதியனுப்பத் தாரணியெல்லாம்புரக்குஞ்
சேனுபதிதருமன் சேவடியைத்தான்பணிந்தான்
வைத்தான்முடங்கலையும் வாய்மொழியுந்தானுரைத்தான்
நெய்த்தார்கமழ்வேலா னெஞ்சுவகையாய்மகிழ்ந்து
மாமனுக்குமைத்துனர்க்கும் வண்மையுள்ளதம்பியர்க்கும்
தாமமணிமார்பன் சம்மதிக்கத்தானுரைத்து
அன்னுடுவிட்டு அழகாங்குருநாட்டின்
மன்னனபஞ்சவர்கள் வாகானசேனையுடன்
சேர்ந்தார்கள்பஞ்சவர்கள் சீர்த்திதிருதராட்டிரனும்
ஈய்ந்தானிளையோ னியல்பானபட்டமெல்லாஞ்
சேங்கோல்விளங்கச் செகமெல்லாந்தான்விளங்க
எங்கோன்றரும னினிதாயுலகாண்டான்
சீர்வளரமேன்மேற் செகமெல்லாமும்மாரி
கார்பொழியப்பார்வளரக் காட்சியுடனாண்டிருந்தார்
நீடாரமார்பர் நெடுங்காலம்வாழ்ந்திருந்தார்
சேடானகன்னி திகழுந்திரௌவதிதன்

## இந்திரப்பிரத்தச்சருக்கம்.

### காப்பு விருத்தம்.

வேதமும்வேதம்விளம்புமெய்ப்பொருளு மப்பொருள்விதங்களும்பஞ்ச
பூதமும்புலனும்புலன்களின்பயனு மப்பயன்பொதுவுறநிகழு
நாதமுமாகிப்படைத்தளித்தழித்து ஞானமாய்நிறைவுறநிறைவுற்
றாதியுநடுவுமுடிவுமாய்நின்ற வாழிபானடியிணைதொழுவாம்
சீராறுமைவருடன் சேர்ந்தநூற்றுவரும்
ஏராயிரண்டலவொன் றேயென்றிசைந்திருந்தார்

எத்திசையும்போற்ற விகலார்நடுநடுங்க
அத்தினமெனனு மரியபெரும்பதியில்
கலக்கமில்லாமலிந்தக் காசினியையோர்குடைக்குள்
துலக்கமுடனாண்டு துங்கமுடன்வாழ்ந்திருந்தார்
ஒற்றுமையுடனன்பா யுறைந்திருக்குமன்னாளில்
வெற்றிசெறிதெய்வ விரதன்விதுரன்குருசேய்
சுற்றமதிற்சூரன் றுருபதன்மாயன்றனொடு
மற்றுமுள்ளபந்துசன மானவர்கள்சம்மதிக்க
மன்னவர்களெல்லாம் வளைகடற்போற்சூழ்ந்திருக்க
பன்னுதருமனுக்கு பட்டாபிஷேகமென்று
சீரார்மகுடந் திருமுடியிற்றான்சூட்டி
பாராழிசூழுலகைப் பாதியாய்த்தான்பிரித்து
அஞ்சுகெடிஸ்தலங்க ளன்பாய்ப்பொதுவில்வைத்து
மிஞ்சந்தகன்விதுரன் வீடுமனுசான்சேய்க்கும்
இருவர்க்குந்தான்பொதுவென் றேபிரித்துவேறுவைத்து
அருளுற்றநாட்டையெல்லா மாத்தியிலேபோற்பகிர்ந்து
மங்கலம்பொங்குபஞ்ச வாக்கியங்கடான்கறங்கத்
துங்கமுடன்வலமாய்த் தொன்னகரிசூழவந்து
நன்னகரிலேசிறிது நாட்பஞ்சவரிருந்து
மன்னர்மதிக்க மகிழ்வுற்றாரம்மானாய்
ஆயுந்தரும னரசாளவேணுமென்று
பேயுந்துயின்ற பெருங்காட்டைத்தான்காட்டி
அந்தத்தலத்தி லரணகருமுண்டாக்கி
சிந்தைக்கிசைந்தவருஞ் சேகரமாய்வாழுமென்றான்
நாட்டமிலாதா னவின்றமொழிப்படியே
கேட்டுநடந்தனர்காண் கேசவனுமைவருமாய்
மென்காண்டவப்பிரத்த மென்னும்வனம்சேர்ந்து
மன்காப்புச்செய்ய மயனைமனநினைந்தான்
விண்டழைத்தவப்போது விச்சுவகன்மாவெதிர்ந்து
தெண்டனிட்டுத்தான்குனிந்து செய்யவாய்பொத்திநின்று
அண்ணலேயென்னை யழைத்ததென்னசொல்கவென்றான்
விண்ணுளகைநாகர்புவி மேலிவைக்குமிக்கான
சீர்செல்வமெல்லாஞ் சிறந்தேநிறைந்திருக்க
ஏர்கொணகர்கோட்டை யிப்போதேசெய்கவென்றான்
மாயனுரைக்க மயனுமனமகிழ்ந்து
ஆயனயனு மறியாச்சிவன்சிரங்கால்
தங்கமலையைத் தானழித்தேயோர்நகரைத்

துங்கமுடனமைத்த சூக்ஷம்போலேயமைத்தான்
சித்திரக்கூடந் திருவொழுகுமாளிகையுஞ்
சத்திரமுஞ்சாவடியுந் தானமணிமண்டபமும்
இந்துகதிர்தவழு மேற்றமணிக்கோபுரமும்
மந்தரமொத்து மறுகெங்குந்தானிலங்க
மாணிக்கநீலம் வைரம்வைடூரியமும்
ஆணித்தரள மரியமரகதத்தால்
பவளங்கோமேதகத்தாற் பண்புபுஷ்பராகமதால்
தவளக்கதிர்பரவத் தான்மனையெல்லாமமைத்தான்
நித்தம்ஜலம்பரவு நீராறுந்தான்வகுத்தான்
சத்தியுள்ளவாவி தடமும்பலவகுத்தான்
சூழப்பலவிகற்பச் சோலைகளுந்தான்வகுத்தான்
வேழப்பலசோலை வெஞ்சாலைகள்வகுத்தான்
ஆனையின்பந்தி யடற்பரியின்சாலைகளுந்
தானவரினுலகைத் தடவுங்கொடித்தேரும்
அரசரிருக்கு மணியாம்பெருந்தெருவுங்
குரவர்மறையோர் குடியாம்பலதெருவும்
பலபாடைமன்னர் பரவும்பலதெருவும்
வலதாங்தொழிற்செய் வசியன்பலதெருவும்
சாதிவிகற்பத் தவர்கள்பலதெருவும்
வேதங்கலைபடையு மேபயிற்றும்வீதிகளுந்
தேடியதுநாடியதுஞ் சிந்தித்தபல்பொருளும்
கூடிநிறைந்திருக்குங் கொள்கைக்கடைத்தெருவும்
ஓர்குறையுமில்லா வுயர்நகரமெல்லோருஞ்
சேரவுறைவதற்குச் சிர்ஷ்டித்தானிப்படியே
முன்னோரதிசயிப்ப மும்மூர்த்திகண்மகிழ
பொன்னூரின்மிக்க புரம்வகுத்தானம்மானாய்
சிந்துபோலொத்த சிறந்தகொலுக்கூடமதில்
இந்துகதிர்க்காந்தி யிலங்குமரியாசனத்தில்
தார்மகுடஞ்சூட்டித் தருமன்றனையேற்றி
சீர்மகுடவேந்தரெல்லாஞ் சேரக்கரங்குவித்தார்
மந்திரிகடந்திரிகண் மன்னர்பலர்தான்சூழ
இந்திரனைப்போலே யிருந்தானுலகாண்டான்
பொன்னகரினுள்ளவெல்லாம் போதவிந்தனாட்டிலுண்டு
இன்னகரிலுள்ளபொரு ளென்னகர்க்குங்கிட்டாதால்
இந்திரப்பிரத்தமென்றே யின்னகற்குப்பேருமிட்டு
சந்தமுடனியாவர்களுந் தான்மகிழ்ந்தாரம்மானாய்

இந்தநகர்ச்சிறப்பை யெண்ணூயிரநாவாற்
சந்ததமுமோரூழி சாற்றுகினுமுற்றாதே
வேதவியாசன் விரித்தவைக்குயோரணுவுஞ்
சோதிக்கிற்காணாது சொன்னேன்முதியோரே
இந்தநகர்க்கு மிடைகுறைந்துபொன்னகரம்
அந்தரத்திற்போன தளகைவடக்கோடியதே
இலங்கைகடற்சுழிக்கு ளேயமிழ்ந்திப்போயதுவே
பலங்கொளுரகர் பதிபதத்துள்ளானதுவே
இப்படியான லெழினகரின்சிங்காரம்
எப்படிச்சொல்வே னியல்பறிவீர்மேலோரே
இந்தப்புவிக்கு விறையாகவைவருமாய்
சந்தப்புவியடங்கத் தாளூண்டாரைவருமே
தாய்சொற்சிரசேற்றித் தம்பியர்கடான்வணங்கி
வாய்பொத்தித்தன்மம் வளரவேவாழ்ந்திருந்தார்
துன்பந்துயரகன்று சோர்விலாமாட்சிபெற்று
இன்பம்பெருக விவராளுநாளையிலே
தேவர்செவியிற் றிகழமுதந்தானூற்றும்
பாவினிசையாழ்ப் பயில்சமர்த்தனாரதனும்
வந்தானிவ்வைவர்களும் வாசவரோயாதலினால்
எந்தாய்நீயிங்குவர வென்னதவஞ்செய்தோமென்று
பாதம்பணிந்தார் பகர்கோடியாசனளித்து
வேதங்கமழ்ராக மேசெவியிற்றான்சொரிந்தான்
வடமீனனையாளு மாமியும்வந்தேமுனிவன்
அடியேதொழுதவன்ற னாசிபெற்றாரம்மானாய்
கீதமுனிராகமொழி கேட்டுளமெலாங்குளிர்ந்த
போதமுடனைவர் புகழ்ந்திருக்குநேரமதில்
அம்முனிவனைவ ரருண்முகத்தைப்பார்த்துரைப்பான்
விம்முமுலையாளை விதிவழிநீர்வேட்டாலும்
ஆண்டொருவராக வவளைப்புணர்வதல்லால்
ஈண்டுமுன்போல வினிச்சொல்வதல்லவென்றான்
மாதுவயற்றாறுஞ்சூன் மற்றின்னதென்றறிய
ஏதுவிதுவென் றியம்பினன்காணம்மானாய்
நன்றெனச்சேரையவர்களு நாடியதற்கிசைந்து
அன்றுமுதலா யவன்சொல்வழிக்கிசைந்தார்
ஒருவன்முறையிலந்த வொண்ணுதலோடொத்திருந்து
மறுவையிற்கண்டோன் மறுவேடந்தான்போட்டு
யோகிசுரர்போல வோராண்டுதோனேகி

பாகீரதிமுதலாம் பண்பாநதிபடிந்து
மீண்டுநகரடைய வென்றுமுனிபகர்ந்து
ஆண்டுதருமன்முறை யாயமர்த்திப்போயினனே
பாருலகமெல்லாம் பரிவாய்த்தழைத்தோங்க
நேருநிலையு நிலைநிற்கவாழ்ந்திருந்தார்
தன்னுயிர்போலச் சகலவுலகுயிரு
மன்னுலகிற்காத்து வருநாளொருநாளில்
ஓர்முனிவன்செங்கை யுயர்த்திச்சிரசேற்றி
சீர்மகிபனேமுறையோ செங்கோன்மன்னாமுறையோ
அய்யாமுறையோவென் றம்முனிவன்றானரற்ற
மெய்யாளன்சொல்வினவி மிக்ககடைக்காப்பார்
பார்த்தனிடந்தனிலே பார்ப்பானார்சொல்லுரைக்க
எற்றமறையோனே யேதிடரகூறுமென்றான்
கோதண்டவீர குருகுலசிரோன்மணியே
மூதண்டமன்னா முனிவோர்நிரைகளெல்லாம்
மேய்த்ததுறையில் வெகுவேடர்தான்கூட்டி
சாய்த்துக்கொடுபோரார் சாயுங்காலத்திலென்றார்
மாமுனியேயஞ்சாதே மாடொன்றுபோகாமற்
றாமிப்போமீட்டுத் தருவோமெனவிரவிற்
சென்றேவிற்றாணி சிலையெடுக்கவேவீட்டில்
அன்றேகினன்மாதோ டண்ணல்விளையாடுவது
கண்டானடுங்கிக் கணைதூணிவில்லெடுத்து
அண்டர்நடுங்க வதிரதத்தின்மீதேறி
வில்வளைத்துநாணேற்றி மேகஞ்சொரிவதுபோற்
பலவிதமாய்வேடர் படைமுறியவேசொரிந்தான்
வேடரெதிர்சொரிந்த வெங்கணையெல்லாமறுத்து
பீடறவேவேடர்குலம் பின்காட்டத்தான்பொருதி
செந்நீரில்வேடர் திரட்பிணங்கடான்மிதக்க
ஒன்னாரையெல்லா மொருவனடியிற்றானறுத்து
சாய்த்தநிரையினங்க டன்னிலொன்றுதப்பாமல்
வாய்த்தபுகழ்விசயன் மாடெல்லாந்தான்றிருப்பி
சஞ்சலப்பட்ட தவமுனிவர்பாலளித்து
அஞ்சல்புரிந்தே யடைந்தார்வினையகற்றி
வருமுனிவனன்றுரைத்த வாய்மைதவறாமல்
தருமன்கமலச் சரணஞ்சிரசேற்றி
ஆடம்பரவேட மன்றகற்றியோகிகள்போல்
வேடம்புனைந்து வியன்றீர்த்தமாடுதற்கு

## அருச்சுனன்றீர்த்தயாத்திரைச் சருக்கம்.

சென்றான்விசயன் றிருத்துணைவர்கண்களெலாம்
அன்றேஜலமொலிப்ப வர்ச்சுனனுந்தானடந்தான்
கண்ணாநதிசம்புநதி காவேரிசங்கநதி
எண்ணுங்கருடநதி யேற்றகம்பமாநதியும்
சரச்சுவதிநதியுஞ் சரையுங்கோதாவரியும்
விரவும்பலநதியு மிக்காகத்தானாடி
விருத்தாசலம்பணிந்து மிக்கமுற்றுநீராடி
நரர்க்கினியகங்கை நதிபடிந்தானம்மானாய்
கங்கைநதியாடிக் கரையேறிநிற்கையிலே
தங்கச்சிலையனைய தையலொருபெண்பெருமாள்
அரம்பையரின்மிக்கா ளழகுவொழுவீழ்கக்
குரும்பைமுலைதாங்கிக் கொடியாயிடைதுவள
ஆயத்திரளோடு மங்குவந்துகங்கையிலே
வீயொத்தமெய்யாள் விளையாடப்பார்த்திருந்து
வாடினானின்று மயங்கினான்வாள்விசயன்
சேடுவிசயன் றிருமேனியின்சிறப்பை
காட்டினான்சற்றே கலங்கினாள்காரிகையும்
மூட்டினான்காமன் முடிகிப்போரம்மானாய்
மானுங்கலையு மயங்கவேவேள்வேடன்
தானுந்தொடுத்தசரந் தைத்துமயங்கியதே
தையன்மயக்கந் தனைத்தேற்றித்தாதியர்கள்
மெய்யைமறந்த விதமேதெனக்கேட்க
அன்னையனையீரவ் வாடவன்மேன்மாலானேன்
என்னையவன்சேர்ந்திலனே லிப்போதிறப்பனென
நாககன்னிசொன்னளவி னாரியர்களெல்லோருந்
தோகையேபுத்தியில்லாச் சொல்லேன்பகர்ந்துவிட்டாய்
உன்றந்தைவீமனையன் றெண்ணுதலைக்கொள்கவென
என்றம்பிபார்த்தனுக்கென் றேத்தான்பிறங்கையினீர்
கொண்டபெண்ணைவிட்டாலுங் கோதாய்குறித்தபெண்ணை
மண்டமராற்பஞ்சவர்கள் மாதேவிடுவர்களோ
வேண்டாமிவ்வாசை வெறுத்திடெனத்தோழியர்கள்
கூண்டொத்தசிந்தை குலைந்தயர்ந்தாளம்மானாள்
மாதுபடுந்துய்ரம் மங்கையர்கடான்பார்த்து
ஏதுவினையாய்வர் தெய்தியதென்றேமாந்து
சந்தமிகுந்ததொரு சன்னாசிமுன்புவந்து

எந்தவூர்பேரோ தியம்பென்றுடாதியர்கள்
பன்னுகுருகுலங்காண் பஞ்சவரினனடுவன்
மன்னுநதிநீராட வந்தேனொருகுறையால்
கங்கைவெள்ளமாடிக் கரையேறிநிற்கையிலே
மங்கையெழில்வெள்ள மகாபெருக்கிலேயமிழ்ந்தி
முங்கிமுங்கிநின்றேன் முசித்தேன்களைத்தேனே
இங்குகந்துகாத்தருளு மேந்திழையீயொன்றுரைத்தான்
தாதியர்கேட்டுத் தயவாய்க்களிகூர்ந்து
நாதனேயெங்களுட னாகருலகடைந்தால்
உனக்கென்றிசைந்திருந்த வொண்ணுதற்குப்பாக்கிலையை
மனக்கவலைதீர வுனக்கேமணமுடிப்போம்
என்றவனைத்தேற்றி யிவடனையுமேதேற்றி
பொன்றயங்குமெய்யானைப் பூமாதையுஞ்சுமந்து
நாகருலகடைந்து நாயகனையோர்பொழிலில்
தோகையர்கள்வைத்துவிட்டுச் சோலைக்கிளிமொழியை
தன்னைமறந்ததொரு தையறனைமாளிகையில்
கன்னியர்கள்வைத்தளவிற் கண்டேநடுநடுங்கி
அன்னையரற்றி யழுதணங்குக்கிம்மயக்கம்
துன்னியவாறுவந்த தோகையரைத்தான்கேட்டு
பின்புமகிழ்ந்து பெருமானைத்தானழைத்து
வன்பினிடைந்த வகையெல்லாந்தானுரைத்து
மன்னவர்சென்று வயவிசயனைக்கொணர்ந்து
கன்னிதன்னையே கடிகமணஞ்செய்யுமென்றாள்
அந்தமொழிகேட் டரசன்பொழிலணுகி
வந்தமருமகனை மார்போடுறத்தழுவி
ஆடம்பரமா யரண்மனையிற்கொண்டுவந்து
தேடும்பொருட்போற் சிறப்பாய்மணமுடித்தான்
பொற்பரசனந்தப் புயங்கன்மகளுடனே
உற்பனமாய்ச்சேர்ந்தே யுடல்குளிர்ந்தாரம்மானாய்
கந்தனும்வள்ளியெனக் காமனிரதியென
இந்துமுரோகிணிபோ லின்பமுற்றாரம்மானாய்
சின்னாளவளோடே சேர்ந்துநலம்பாராட்ட
அன்னாள்வயிற்றி லராவானுதித்தனன்காண்
பன்னரியகீழுலகிற் பன்னதியுந்தானாடி
மன்னுபுவியின் மகாநதியெல்லாமாடி
அரவணைச்செல்வ னணையநிறத்தானும்
பெரியமுனிவோர் பெருங்குழுவோடொத்தொழுகி

எத்திக்கிலுள்ள வெழிலாம்பலநதியும்
முத்திக்கிடமாய் முழுகினன்காணம்மானாய்
தென்னன்றிசையணுகிச் சேர்ந்தானரவமலை
பன்னுநதியும் படிந்துயர்ந்தகச்சிகண்டான்
எழுநதியு மிதமாகத்தானாடி
வாழுமருணா சலமும்வணங்கலுற்றான்
இடையிற்பலநதியு மெத்தலமுங்கைதொழுது
அடைவுற்றபொன்னம் பலங்கண்டானம்மானாய்
தென்னரங்கரீராடிச் ஸ்ரீரங்கனைத்தொழுது
பொன்னிசைந்தகூடற் புரிசேர்ந்தானம்மானாய்
மீனவனைவானவர்கோன் மெய்யனெதிர்கண்டளவில்
போனபலபோகிகளைப் பூபதியுந்தான்பார்த்து
என்னிலத்திலெப்பதிக்கு யேகின்றீரென்றிசைப்ப
கன்னியைக்கண்ணுற்றாட வந்ததேமெனக்ககலச்
சந்திரருஞ்சூரியருந் தான்றோற்றுச்சோலையிலே
இந்தரிஷிமார்க ளிருக்கவிடுதிவிட்டு
போனகத்துக்குற்ற பொருள்கள்பலவுதவி
மீனவனுமன்பாய் விடுதிவிட்டானம்மானாய்
பொதியப்பொருப்பனருள் போனகத்தைத்தானருந்தி
நதிசுற்றியாடிவரு நாதாக்களோடிருந்தான்
சீதளம்பொங்குஞ் செழும்பூம்பொழின்மீதில்
வேதங்கமழ்யோகி வீற்றிருக்கும்வேளையிலே
மின்கூட்டம்போற்றுதி மெல்லியர்கள்சூழ்ந்துவர
பொன்காய்த்தபூங்கொடிபோற் பொன்போலமின்போல
வின்மதனனேவல் விரும்பவிருமேர்தாங்கி
மின்மருங்குதள்ள வியனூபுரமரற்ற
கண்கள்புடைபரந்து காதளவுமோடாட
பண்கொள்மொழிகுழலிற் பந்தரிடவண்டினங்கள்
அரம்பையரஞ்ச வழகின்பொலிவாக
தரஞ்சொலனம்போலத் தானடந்துதோழியருஞ்
சூழநடுவோர் சுடர்போற்கதிர்போல
பாழியுடனே பரிவாய்விளையாடி
தூங்கவவையவம்போற் றேற்றுமலர்கள்கொய்து
அங்கொருசெய்குன்றத் தமர்ந்திருந்தாளம்மானாள்
சித்திரவாகன் செயுந்தவத்திற்பெற்றெடுத்த
சித்ராங்கதையெனுமச் சேயிழையைக்கண்டனனே
கண்டான்மெலிந்தான் கனைத்தானுடற்றளர்ந்தான்

பெண்டாளநின்றேனும் பித்தாகியேதெளிந்தான்
முன்னுருவமாற்றி முகிலூர்திமைந்தனெனுந்
தன்னுருவங்கொண்டான்பூந் தாமனிலுங்காமனிலுங்
கந்தனிலுமிக்கவுருக் காணவொருசெண்பகக்கீழ்
அந்தமுடனின்று ளயர்ந்தாண்மயங்கினளே
மங்கையர்க்கேற்ற மயக்கமொன்றுந்தோராதால்
இங்கிவன்பார்த்த னெனமாதைத்தாதியர்கள்
தூக்கிச்செழியன்மனை சோராதுவைத்ததற்பின்
வாக்கின்வழுதியிட மங்கையர்கள்சொல்லிநின்றார்
அச்சேதிகேட்டே யகங்குளிர்ந்துபாண்டியனும்
மச்சாவதாரனுட மைத்துனனைத்தான்றழுவி
அரசிருப்பான வரியாசனத்தேற்றி
பரிவுறுநற்சொற் பலபலகொண்டேபோற்றி
எந்தனுக்கன்பா யிரங்கியொருவரந்தான்
தந்தருளுமென்னத் தனஞ்சயன்கேட்டேதெனவே
என்குலத்தின்முன்னோ ரிசைந்தமகந்தவத்தில்
நன்கருணையீசன்வந் தூதனேயின்றுமுதல்
ஓரொருபிள்ளையது முன்குலத்திலேபிறக்கும்
பாருலகாளும் படியென்றுரைத்தகன்றான்
அந்தமொழிதப்பா தனேகந்தலைமுறையாய்
மைந்தரொருவரன்றி மற்றிருவரில்லாமற்
பூமியனந்தறந்தான் போகாமலேபுரக்க
வாமமுடனெந்தனக்கு மட்டுமேவந்ததுகாண்
எந்தனுக்குமெச்சமது வேந்திழையாய்வந்ததுகாண்
அந்தமகள்வயிற்றி லானதொருபுத்திரனை
இந்தவுலகாள வெனக்கருளவேணுமென்றான்
சந்ததியொன்றுந்தனுக்குத் தந்தேனெனவுரைத்தான்
ஈசனிடத்தி லினியவரம்பெற்றான்போல்
வாசவன்சேய்க்கு மகளைமணம்புரிந்தான்
பாகசாதன்சசிபோற் பான்மதியும்ரோகிணிபோன்
மேகநிறத்தானு மிக்கமகலக்ஷுமிபோற்
கண்ணிமையாமற் கருதியேதானோக்கி
வண்ணக்கனியிதழ்வாய் மாறாமலேயருந்தி
பன்னாளுமின்பப் பரிவுநலம்பாராட்டி
தென்னாட்டிமங்கையுடன் சேர்ந்துவிறல்விசயன்
ஆசையடங்க வவளைப்புணர்ந்தனனால்
பாசவிசயனுக்குப் பப்புருவாகனென்போன்

பெற்றாள்சுபதினத்திற் பேருலகெல்லாம்புரக்க
பொற்றேன்வலியுடைய புத்திரனைத்தான்பார்த்து
தேடக்கிடையாத் திரவியமேபெற்றாப்போற்
கூடற்பதியான் குளிர்ந்தான்காணம்மானாய்
நின்னான்மரபு நிலைநின்றதென்றுசொல்லி
தன்னாவல்கூரத் தனஞ்சயனைத்தான்புகழ்ந்தான்
மாமன்கரத்தின் மகனையினிதளித்து
வீமற்கிளையோன் விரைந்தானதியாட
பாண்டியநாட்டிற் பலநதியுந்தானாடி
பூண்டதெய்வதானமெலாம் பூபதியுந்தான்வணங்கி
சேதுதரிசனமுஞ் செய்துமுறைவணங்கி
நீதிசெறிசோழநகர் நீடலமெல்லாம்வணங்கி
கோகன்னங்கண்டு குரித்தேவடமதுரை
மேகநிறத்தானை வேண்டிவடதருவின்
வைகியிருந்துநெடு மாலையிவனினைக்க
எய்தியவன்பா லெழிற்பாகன்றன்னுடனே
யோகிதனையிறைஞ்ச வுள்ளிலிவன்வணங்கி
ஆகமுறத்தழுவி யாசுரைத்தோன்றன்னுடனே
அந்தரங்கமாகவந்த வாலோசனைகேட்டு
சுந்தரமாய்க்காலையிலே துதிசெய்சீவாரொன்று
ஏதுவுடனழைத்தே யேதேதியம்பலுற்றான்
முதுவரைபுக்கி முரணாங்குலத்தோனை
சத்தரிஷிக்குந் தகுதியுள்ளவோர்முனிவன்
மைத்தவழங்கோர் வடதருவிலுற்றிருந்தான்
கண்டோர்பவமகலுங் காரெழுதால்மோட்சமுண்டு
பண்டேநாஞ்செய்ததவப் பாக்கியம்போல்யோக்கியமாய்
ஆதித்தனொத்திருந்தா னாயும்பேரறிவை
சோதிக்கமுற்றாது சோதிரிஷியென்றுரைத்தான்
அவ்வுரைகேட்டே யனைவோருமுண்மகிழ்ந்து
குவ்விலலரி குணபாலுதிப்பதன்முன்
தன்னகருள்ள சனமெல்லாந்தான்சூழ
மன்னுபலராமன்முதன் மற்றோருந்தாடொழுதார்
முக்கோல்செபவடமு முன்னூலுஞ்செந்துகிலும்
தக்கானபின்சிகையுஞ் சாக்ஷாரிஷியெனவே
கண்டுஅவரவரே கைதொழுதபின்பாக
உண்டுலகெல்லா முமிழ்ந்தளிக்குமாயோனே
தன்னையிதையந் தனின்வணங்குவோன்றாளில்

சென்னிவணங்கினன்காண் சீர்துளபமாலிகையான்
ஆசியுரைத்தே யகங்கையாற்றூன் றழுவி
யோசனைப்போல வொருப்பட்டிருக்கையிலே
மின்னற்குழுவையொரு மின்னுயமைத்ததுபோல்
பக்கத்திலெண்ணரிய பாங்கியர்கடான்சூழ
மிக்கவிளங்கிரண வெய்யோன்போன்மெய்யிலங்க
கண்கொள்ளாக்காட்சியுடன் காமக்கலைக்கொழுந்தாய்
தண்கமலக்கண்ணனுட தங்கைசுபத்திரையாள்
வாரதைக்கண்டே மருளாதகத்தடக்கி
ஏரரிக்கண்ணு விமையாதுபாத்திருந்தான்
பார்வையுநெஞ்சின் பயிற்பும்படியளக்குஞ்
சேர்வையுமாயனுட சித்தந்தனிலறிந்து
இதையத்திலெண்ணியவைக் கெம்மரபோர்சம்மதியார்
உதையக்கதிர்போன்ற வொண்ணுதன்மட்டொத்திருப்பாள்
ஆதலானீயு மதர்க்கானவேளைகண்டு
கோதைதனைவேட்டுக் கொண்டேகுமென்றுரைத்து
தங்கையைக்கூவித் தவசிக்கிருபோதும்
இங்கிருந்தேவ லியற்றென்றெழுந்தனனே
மாயனுங்கூடவந்த மற்றோரும்போனதற்பின்
ஆயனுடன்பிறந்தா ளாளழகன்றாள்பணிந்தாள்
உள்ளடங்குகாமவன லோடிப்பிறத்தொழுக
மெள்ளவந்துதன்மனையின் மேவினான்வேடநெறிக்
கள்ளநினைவறியாள் கற்புடையபொற்பாவை
எந்தன்றவப்பயனோ விங்குவந்ததென்றெணியே
உந்துதுயில்வானை யொத்தோர்மனைபடுத்தான்
சேடிசுபத்திரையுஞ் சேர்ந்தடுக்கவோர்மனையில்
நாடித்துயில்புரிந்தா னல்லிரவைப்பல்லுகமாய்
எண்ணிக்கலங்கி யெரியின்மெழுகாகி
அண்ணன்மெலிந்தயர்ந்தே யற்பொழுதைத்தான்கழித்தான்
காலைப்பொழுதில்வந்து கைக்கருமங்கன்னிசெய்ய
நீலக்கிரியா னிகரத்ததன்வடிவை
கன்னியிதையங் களிகூரக்காட்டிவிட்டான்
என்னகரவா யிவன்வந்தானென்றறிந்து
பாணவிரற்காய்ப்பாற் பயின்றகரத்தழும்பு
எனமுங்கண்டே யிவன்பார்த்தனென்றறிந்து
ஈாதரிஷியேயுன் னன்னகரேதோதுமென்றாள்
பேதையரேயிந்திரப் பிரத்தமெனவுரைத்தான்

கணவன்றவிரமற்றக் காளையர்கணுல்வனையுந்
துணைவிவினவச் சுவேதவாகன்றனையே
மறந்தாய்பகையோகின் வாய்வினவாதேயொழிந்தாய்
சிறந்தோதெனவே செவிலியர்களேதுரைப்பார்
அன்னனுக்கின்னுளை யாழியான்ருனியைந்தான்
முன்னேனுமற்ருெரு முற்றதுரியோதனற்கு
தானியைந்தார்மாது தனஞ்சயர்க்குத்தானியைந்தாள்
ஆனதான்மாது அவன்பேரறைந்திலள்காண்
அன்னனுந்தீர்த்தமுக மாய்ப்போனுரென்றமொழி
சொன்னுர்களெங்களுக்குத் தோற்ருதுநீரறிந்தால்
விள்ளுமெனக்கேட்க விசயன்மிகுநீராடி
எள்ளலறநின்மனேயி லின்றுளானென்றுரைக்க
சொற்கேட்டுநாணிச் சுபத்திரையாணின்றளவில்
விற்கோவின்மிக்கான் விரைந்தான்கரம்பிடிக்க
எனக்குமுமக்கு மியல்போவீதென்னமதி
உனக்குமுரியானு னேடியெங்கும்போவேனே
இன்னம்க்ஷணிக மிதையப்பொறுக்கவென்று
தன்னண்ணனுக்கொத்த தாதிதனைவிடுத்தாள்
எந்தனிதையத் திருக்குஞ்சுடர்க்கொழுந்தே
நிந்தையெனக்குற்ரு னினக்கதுவந்தேருதோ
பெருக்கமணஞ்செய்யப் பெலனேன்றுனக்கிலேயோ
தரிக்குமறையோனுந் தானுந்தகப்பனுமாய்
வந்திட்சணமே வதுவைநிறைவேற்றிலேயேல்
இந்தக்ஷணமே யிறப்பனெனச்சொல்லிவிட்டாள்
தாதியுரைக்கத் தடங்கண்ணனீருருத்து
ஆதிதகப்ப னடியிணையைத்தான்ரெழுது
பெற்ருேனேநின்பெண் பிழைபோகக்காரியமென்
கற்ருேனேசென்று கலியாணந்தான்முகித்து
வாருமெனச்சொன்னளவின் மாயோனையுங்கூட்டி
பாரில்வசுதேவருடன் பார்ப்பானும்போயுறைந்தார்
அந்தத்தலம்விட் டவர்களையுமோரிடத்திற்
சிந்தைக்குரியானோர் தெய்வத்தலந்தனிலே
வச்சிரனேயுன்ன மகவானுமோடிவந்தான்
அச்சுதனும்வேருே ரறியமதினினைந்தான்
நீங்களிவற்கு நெடியமணஞ்செய்யுமென்று
ஆங்கொருதாதிக் கறியமதிபயிற்றி
பாங்குடனிந்தப் படிபத்திரர்க்குரைப்பாய்

பூங்கொடியேயென்றனுப்பிப் பூவைசுபத்திரையும்
பார்த்தனும்போர படிபோலடிச்சுவடு
தோற்றும்படியாகச் சுற்றியெங்குமாய்கைசெய்து
கன்னிதனையே கலியாணஞ்செய்யிடத்தில்
உன்னியிருப்பதுபோ லொக்கவேதானிருந்து
வதுவைமுகித்து மணித்தேர்தனிலேற்றி
பதிதனையேநாடியுன்றன் பாரியுடன்செல்லுமென்று
மைத்துனனைவாழ்த்திப் வழிவிட்டுத்தானனுப்பி
எய்த்திளைப்பாக விவர்கடனைத்தேடலுற்றான்
அனுப்பியதாதியவ ளன்றுபலபத்திரன்முன்
தனுச்சரம்போலேகித் தாள்பணிந்துதாகூதிசெய்து
சன்னாசிபோலே தனஞ்சயனுன்றங்கைதனை
பின்னாவதெண்ணான் பிடித்தான்சிறைபோனான்
நேமியான்கேட்டு நெடுங்கண்கடான்சிவந்து
பூமியெங்குந்தேடலுற்றான் போய்நீருந்தேடுமென்றாள்
இந்தமொழிகேட் டிருகண்ணெருப்பெரிய
சந்தமுள்ளதம்பி சனங்களுக்குத்தானுரைத்து
தேடினரோடித் திசையெங்குந்தான்பார்த்தார்
வாடினார்தேடுகின்ற மாயனெதிர்ப்பட்டனனே
எதிர்வந்தமாலு மியல்வண்ணனைவணங்கி
மதியினமக்கினம் வந்ததெனப்பகர்ந்தான்
என்னென்றுகேட்டா னிருவிழிகடீய்சொரிய
தாதைவசுதேவர் தானுமகவானுஞ்
சோதிசெறிசங்கத் தொனிதேவதுந்துபிகள்
முழங்கத்தழன்முகத்தின் முற்றுஞ்சடங்கியற்றி
வழங்குகலியாண வண்மையெல்லாமுற்றியபின்
தேரிற்றனஞ்சயனுஞ் சேயிழையைத்தானேற்றி
ஊருக்குப்போரானா முற்றேதுசெய்வமென்றான்
என்றபொழுதே எமன்போலத்தான்பார்த்து
நன்றுதனஞ்சயனை நாழிகையிற்கொல்லுகிறேன்
நீயும்வருகிறையோ நிற்கிறையேசொல்லுகென்றான்
வாயும்வரண்டவன்போல் மாயன்பணிந்தேற்றி
தேவரீர்வில்லுஞ் க்ஷணத்திலவன்றலையைக்
கோவமகலக் கொடுவாரோனென்றுரைத்தான்
நிக்கச்சொலும்பெருமை நீயுரைத்ததேபோதும்
ஒக்கவேவாரோ னுயுத்தமறியவென்றான்
காருங்கடலுங் கலந்துகொதித்ததுபோல்

பாருநடுங்கப் படையெழுந்ததம்மானைய்
மன்னர்புடைசூழ மந்திரிகடற்சூழ
பன்னுபலபத்திரனும் பச்சைமால்சாத்தகியும்
ஓரேழ்கடற்பெருகி யொன்றாயெழுந்ததுபோற்
பேராழிமாயன் பெரும்படைகள்சென்றதுவே
வெள்ளம்பரந்ததுபோல் மிக்கபெருஞ்சேனையுடன்
தெள்ளுந்துணைவர் செருவாய்வருவதையும்
பூங்கொடிகண்டு புலம்பிநடுநடுங்கி
எங்கிவிழினீ ரிறைத்தாள்காணம்மானை
மாதுநடுக்க மனச்சலிப்புத்தானீக்கி
கோதையைத்தேற்றிக் கொழுங்கண்ணீர்தான்மாற்றி
எமனிந்திரனுடனே யெண்பாலகர்வரினும்
குமரன்திருமூர்த்தி கூடியேவந்தாலும்
இமைக்குட்கணையா லெரித்திடுவேன்பார்த்திரென்று
சமர்ச்சிங்கமியானீ சலியாதித்தேரூர்ந்தால்
வெல்லுவேன்பாரு விருதுசொன்னபேரையெல்லாங்
கொல்லுவேனென்று கொடுங்கார்முகம்வளைத்தான்
குணத்தொனிசெய்தான் திண் கோபத்திசைநடுங்க
கணத்திற்பலகோடி கங்கபத்திரஞ்சொரிந்தான்
கடுங்காற்றுடன்வீசுங் கன்மழையுமொப்பாக
கொடுங்கார்முகக்கணைகள் கூசாமலேசொரிந்து
மூடியொருகண் விழிக்குமளவையின்முன்
நீடுகடற்படைக ணின்றதெல்லாமாண்டதுவே
சங்கங்கழுகாடக் காகம்பருந்துமொய்க்க
எங்கெங்கும்பொங்கி யிரத்தங்களாறோட
நாலுவகைச்சேனை நதிக்கரைநீரிற்சுழல
சாலவுருகவந்தர் தானாடிநின்றதுவே
சேனையெல்லாமாயச் செய்ததிறமோர்ந்து
கோளரிபோலார்த்துக் கொள்கலப்பையானெதிர்ந்தான்
சாற்றகியும்வில்வளைத்துத் தானவர்க்குமுன்புவந்தான்
சீற்றமுடனே செயவிசயன்போர்மூண்டான்
அம்புடனேயம்பு மடர்ந்தேயிகல்புரிய
தும்மைமுடிசாத்தகியுஞ் சோராதரைச்சாமம்
வன்மித்துமிக்க மகாயுத்தஞ்செய்வதினால்
வின்மிக்கமைத்துனனு மெச்சியினிப்பதனம்
நில்லென்றுசொல்லி நிமிடித்திற்பல்கோடி
வல்லம்பினாலே மழைமாரிபோற்சொரிந்து

துவசம்பிளந்தச் சுருள்சாரதிமாத்தேர்
கவசம்பிளந்து கடுங்கார்முகம்பிளந்து
அங்கந்தெரியாம லம்பானிறைத்ததற்பின்
துங்கமுடன்பத்திரனுந் தோன்றினன்காணம்மானய்
இடையனிடம்வளர்ந்த வீனமதிக்குணத்தால்
அடலிலெதிர்த்தாயுன் னுண்மையினிப்பார்ப்பனென
நல்லதடாநீகரவாய் நண்ணிசிறைபிடித்து
வில்லுறுங்கையு விசயானலதாளுங்
கடிகைதனிலறுத்து காலிற்றளைபூட்டி
படியிற்சிறையிற் படுத்துவேனென்றுரைத்தான்
வாய்சொன்னப்போலே வயஞ்செய்யாதேபோனல்
பேயனேநீயெனக்குப் பெண்ணய்வருவாயோ
என்றிவன்சொல்ல விருகண்டழல்பறக்க
வென்றியுடனெதிர்த்து வில்வளைத்துநாணேற்றி
மீறுசினத்தோடு வீசினன்புங்கமழை
மாறிக்ஷணத்தின் மதித்தறுத்தான்வில்விசயன்
தேருருளையுங்கொடியுந் தேர்ச்சாரதிமாவும்
ஞாரியும்வில்லுடனே நற்கவசமும்பிளந்தான்
மூரிக்கலப்பை முனைந்தெடுத்தானம்மானய்
இக்கலப்பைதன்னை யெடுத்தனையோசேவகமாய்
குக்கலனையாயுன் கொற்றமதைப்பார்ப்பமென்று
கையாலெடுக்குமுன்னே கையிரண்டுந்தான்சோர
ஐயாறுபாண மம்புயமுமங்கையினும்
வீசினனப்போது மெய்யயர்ந்துகைசோர்ந்து
காசினிமீது கலங்கியேதான்வீழ்ந்தான்
முன்னவன்வீழ முடுகியேசாத்தகியும்
தன்னுடையமார்பணைத்துத் தான்கொண்டுபோயினனனே
மூத்தோன்படுந்துயரை முதலேக்கிபந்தனைமுன்
காத்தோன்சினந்து கரத்திலேவில்லெடுத்தான்
அடற்சராசந்தனுக்கே யன்றுதெரித்தோடி
சுடற்கண்டாயின்றென் கணையிற்படுந்துயரால்
ஆகாயமேகதிய தல்லாதுவேறுமுண்டோ
ஏகாவிபோலாக யின்றெளித்துத்தப்புகண்டாய்
ஈடுசராசந்தற் கெளியனெனநினைந்தோ
பீடுடனேயென்மேற் பெயர்ந்துவந்தாய்வில்லெடுத்து
வல்லதொருசாத்தகியும் வன்கலப்பைராமனுனைக்
கொல்லக்கருதிக் கொடுவந்துவிட்டாரோ

வாலாட்டியாயிருந்த மன்னுவின்றுன்றனையே
கோலாட்டங்கொள்ளக் கொடுவந்துவிட்டாரோ
கொச்சையிடைக்குலத்திற் கோமேய்த்தபுத்தியினால்
அச்சமிலாதுற்று யடலிலிலச்சைகெட
முந்தநீவென்ற முறைமையுள்ளவெற்றியெலாஞ்
சிந்தவோவின்று செருமூண்டாயென்றுரைத்தான்
மைத்துனன்சொன்ன வசையெல்லாந்தான்கேட்டு
பைந்துளவமார்பனெதிற் பற்கடித்துபோர்மூண்டான்
மாயன்சினந்து மழைமாரியொப்பாக
ஆயும்பலகோடி யஸ்திரங்கடான்விடுத்தான்
உசசண்டமாருதமா யூழிக்காற்றொப்பாக
இகல்கண்டவீரன்மிக வெய்தேயறுத்தான்காண்
மண்டலமுமெண்டிசையும் வானுலகுங்கீழுலகும்
வண்டினங்களாக மறைத்துவிட்டதம்மானாய்
உளசினிறுத்த வுயர்வெளிகள்கிட்டாமல்
ஆசுகங்களாய்நிறைத்தா ராகாசந்தோற்றாமல்
இருபேருமொத்து யிகன்மூண்டிருக்கையிலே
கரியோன்மகவானைக் காதலுறநினைந்து
அசரீரிவாக்காக வந்தரத்தினின்வாக்கால்
விசயனொருபோதும் வென்றன்றிமீண்டறியான்
என்றந்தச்சொல்லை யிருவோர்செவிகேட்க
நின்றந்தரச்சொன் னிகழ்ததிவிட்டுயேகுகென்றான்
அந்தவிதமா யவன்சொல்லியேகிவிட்டான்
யேகுமழவி லிவன்சற்றேகைதாழ்க்க
தாகமுடனே சரமாரியாய்ப்பொழிந்தான்
தேருருளைவின்னாணி தேற்சாரதிகொடிமா
ஒருருவுந்தோற்றாம லோர்நொடியிலேபொடித்து
மிக்ககருமுகிலான் மெய்யெல்லாஞ்சோரியினாற்
செக்கர்வான்போலாகத் தேகம்வேறாக்கிவைத்தான்
மாய்கையுடையான் மயங்கியுடறுடிக்க
சாய்கையுடனே தற்போதமில்லாமன்
மூச்சையடக்கி முறைமையாய்த்தான்கிடந்தான்
பேச்சற்றுமண்ணிற் பெருமான்கிடந்தமையால்
வானிலிருந்தொருசொல் வண்மையுடன்கேட்டதுவே
ஈனமிதுவென் றிளையோனுமூத்தோனும்
காலடியில்வீழ்ந்து கதறியாற்றுதலும்
சாலமுன்சொன்னபடி தான்முடித்தானேபாவி

என்றிறைந்தசப்த மிவன்காதிலேகேட்டு
நின்றநிலையி னிலத்தினிடைவீழ்ந்தாள்
பூங்கூந்தறன்னிற் புழுதிபுரளத்தயங்கி
மாங்கோகிலம்போன் மயங்கியண்ணன்காலடியில்
சென்றழுதலோடுந் திருவனையாள்கந்துபற்றி
வென்றிஜயவிசயன் வீரகத்தானிழுத்து
தேர்தனிலேயேற்றியுயர் தேன்மொழியேநீபோனல்
போர்தனிலேவென்று பூவைசிறைமீட்டார்போல்
இம்புதனிலுந்தனைக்கொண் டேகுவாரீசுகெட்டோர்
தும்புதெறித்தேவாலைத் தொட்டலைதலொக்குமினே
கன்றால்விளவெறிந்த கள்ளனிந்தச்சாலமுற்றான்
இன்றவனைக்கொல்ல வெளிதோமடமயிலே
சற்றுநேரத்தினிமா றானேயெழுந்திடுவான்
உற்றுநீயஞ்சாதென் றுயர்தேரினிலேற்றி
ஈனமுடையரிடைய ரிலம்வளர்ந்தோய்
மானமுடன்செல்வீரிம் மங்கையெனக்கென்றுரைத்து
சிங்கநாதமெண் டிசைகள்படவேமுழங்கி
பொங்குகடற்சுவற புட்கரமுந்தான்பிளக்க
மண்ணடுங்கவஷ்டகிரி மாமேருவுங்குலுங்க
திண்ணடுங்காவில்விசயன் றேரேறியேநடந்தான்
தேரோதையின்முழக்கஞ் சிங்கநாதங்கேட்டு
நீரோதைகொண்டார் நெறிதருமன்னால்வர்களும்
மாண்டவுடல மறுத்தும்வந்தவாறேபோல்
பாண்டவரினால்வர்களும் பண்புற்றாரம்மானாய்
நிறைந்தபுளகிதமா நீண்மகிட்சிமேலாகி
சிறந்தெதிர்கொண்டனர்கள் சேனைபுடைசூழ
தன்மன்வரவே தனஞ்செயனுங்கீழிறங்கி
வின்மதன்போன்மூத்தோர்கண் மிக்கபதம்பணிந்து
அன்புபெருகி யறன்மகனும்வீமனுமாய்
தன்பின்னவனைத் தழுவிக்களிகூர்ந்தார்
தன்றாளிலேவீழ்ந்த தம்பியிருவரையும்
அன்பாகக்கட்டி யணைத்துகந்தான்றன்மனுமே
திசைகள்புகழ்விசயன் சிங்கமுடனால்வர்களும்
இசையுநகரிபுகுந் தின்புற்றுவாழ்ந்திருந்தார்
மஞ்சுமும்மாரி மதிதோருமேபொழிய
சஞ்சலங்களற்றுத் தலந்தோருமேசெழிக்க்
மங்கைசிறைமீட்ட வந்தடர்ந்தமாயவனும்

அங்கமுடன்சால மவனுற்றெழுந்திருந்தான்
எழுந்தவுடனேவிசய னெங்கேயெனகேட்ப
விழுந்தமுதகோகைதிரு மெய்நடுங்ககூந்தல்பற்றி
தேரேற்றிநந்துமுயிர் சேணேற்றும்வாறேபோல்
பேரேற்றமாகப் பிரபலங்களாய்ப்பேசி
மதிப்பற்றவேச்சும் வாய்மதங்களாய்க்கூறி
கதிப்புற்றுச்சென்றதுவைக் கண்ணன்றனக்குரைக்க
எண்ணுவனேநமமையினி யேற்றதனஞ்சயனும்
ஒண்ணுதலாலேநம் மூக்கம்வலியற்றோமே
மனவலியுந்தன்வலியு மாற்றான்பெரும்வலியும்
சினேகத்துணைவலியுஞ் சீர்தூக்கிச்செய்திலமே
தனக்குரித்தமின்னை தாயாதிகொள்வதின்முன்
மனக்கவலையாலே மறுவேடந்தான்போட்டு
கன்னிதனைக்கபடாய்க் கற்பழிக்கவெண்ணுமுன்னே
மன்னனைச்சற்றே மதியானிறுத்திவைத்து
இந்தக்ஷணம்வந் தெனைவேட்டல்செய்யீரேல்
நந்தவுயிர்விடுவே ணம்போமென்றெழுதி
ஐவருக்கோலை யணங்கனுப்பமெய்பதறி
துய்யவன்சென்றான் சுராரிதனைக்கிரிடி
உன்னுமுன்வந்தா னுயர்மணமு முற்றியபின்
தன்னகரிகொண்டுசென்முன் சாரமறிந்துரைத்தேன்
அந்தகனுமஞ்ச வதிவேகமாய்ச்சினந்து
எந்தனையுங்கொல்வான்போ லெண்ணுமலேயென்னையும்
சீறிக்கிரீடி சிரமறுப்பேனென்றுவசை
கூறிக்கொதித்தானக் கொண்ணனமைந்தனுட
வல்லாண்மையெல்லாம் மனதோடறிந்திருந்துஞ்
சொல்லாதொழிந்தேனின் றேற்றமுள்ளகோபமதால்
அன்றுதுருபதனை யத்தேரிற்கட்டிவந்தான்
வென்றிவிறல்கெண்ட விசயன்றிறமறிந்து
பெண்பேரானைந்து பெருவேள்விதான்முகித்து
பண்புறுமேனிப் பசுங்கிளியைப்பெற்றானே
ஆசைவெட்கம்பார்த்தே னரசர்பலகோடி
மோசமுடன்பங்கமுற்றார் முனிபோற்சிலைவளைத்து
மாலையும்பெற்று மணஞ்செய்யும்போது
வேலையெனமொய்த்தரசர் வெட்கமறிந்திலமோ
வீரனுக்குவீரன் மிகுவல்லமையறிந்தோம்
ஆரமணிமார்ப னணங்கையவனுக்கிய

உங்கட்குஞ்சொன்னே னுறுசெவியிலேறுமல்
தங்கைக்குமேற்ற தலைவனிவனலவா
செல்வனென்றேயுன்னித் திரியோதனற்கிசைந்தீர்
வல்வில்வலியானு மாமன்மகளென்றுரித்தாய்
கையுளான்வாயுமுளான் கல்விச்சுகுர்த்துமுளான்
மெய்யுளான்சொன்ன விரதப்படிமுடித்தான்
நான்றான்செருவி நயந்துவஞ்சஞ்செய்தாலும்
வான்றான்மொழிந்தசரீ வஞ்சகமோவில்வலியன்
சாத்தகிமுன்செய்த சமரொளிதாபார்த்தோமே
ஒற்றமுறவண்ணாீ செய்தசமரொளிதோ
தனஞ்சயன்சொற்சின்னங் தலைமுறைக்கும்போதாதா
இனஞ்சனமுநாம்படும்பா டீதுபங்கம்பத்தாதா
அண்ணாஞ்செய்த வடல்வன்மையினுலே
எண்ணான்வெள்ளாட்டி யெனச்சொல்வான்றங்கையரும்
பாவிகளோடே பயின்றுபிறந்தமென
ஓவியத்தங்கை யொழுகியகண்ணீரோடத்
திட்டுவாள்கிட்டிநமைத் தீமைசும்மாபோகாது
விட்டுவிடுசீற்றமினி மின்னாரும்வாழ்கவென்றால்
நம்மரபுக்கேற்றதொரு நட்பானசீதனங்கள்
சம்மதிக்கவீய்ந்துஞ் சமரசஞ்செய்வோம்வாரும்
என்றுமால்சொல்ல விளையோனுமூத்தோனும்
நன்றிதேபுத்தியென்று நான்குவகைச்சேனையுடன்
ஆனைரதமாநகரு மணியும்பலதுகிலும்
மானமுள்ளபல்பொருளும் வண்மையுள்ளசீதனமா
மூவருஞ்சென்று முறையாயுபசரித்து
தேவர்க்கரசனுட சேய்தனக்குமேயளித்தார்
சுபத்திரையுந்தாமுஞ் சுகமாகவாழ்கவென்று
அபகைசுயுடன்மூவர்களு மன்றனைத்துவேகினரோ
மாலுந்திருவு மனமுகந்துவாழ்ந்ததுபோல்
பாலுடனீரும் பரிந்துவுறவானாற்போல்
ஒத்தமுதமுண்டு வுயர்கலவிபோகமதில்
நத்தியிருவர்களு நண்புடனேவாழ்ந்திருந்தார்
மாமனார்தன்வலியு மாறருமன்றன்பொறையும்
வீமன்புயவலியும் வில்விசயன்றன்றிறலும்
தர்மநகுல சகாதேவன்றன்வலியும்
எல்லாந்திரண்டோ ரெழிலானபாலனென
வல்லாள்சுபத்திரையாண் மைந்தனைன்றுபெற்றாளே

பெற்றசிறுவருட பேரழகைத்தான்பார்த்து
வெற்றிபெற்றசின்ன விசயனெனமகிழ்ந்தார்
கற்புடையாள்செந்தழலின் கண்வந்தபாஞ்சாலி
பொற்புடையைவருக்கும் புத்திரோரைந்துபெற்றாள்
ஆதிதங்கைபெற்றசுதற் கபிமன்னெனவுரைத்தார்
நீதிதரும நிருபன்மகன்விந்தனென்றும்
வல்வீமனீன்ற மகன்பேருசோமனென்றும்
வில்விசையன்றன்மகன்பேர் வெல்வீரகீர்த்தியென்றும்
நகுலனளித்தசுதன் நற்புண்டலனெனவும்
மிகுசாதேவன்சேய்க்கு வில்வீரசேனனென்றும்
ஐவர்க்குந்தேவி யளித்தபுதல்வருக்கு
இவ்விதநாம மிசைந்தழைத்தாரெல்லோரும்
மைந்தரறுவரிலும் வண்மையெழின்மிக்கான
மைந்திலுயர்ந்தவபி மன்னுயர்வதாகினனே
தருமம்வளர்வதுபோற் றனையர்களும்வளர
கருதுமெழில்வசந்த காலம்வந்ததம்மானாய்
காலக்குறிகள்வந்து காக்ஷியதுமுற்றியதால்
நீலக்கிரியா னெடுமாலும்பார்த்தனுமாய்
மிக்கவிஸ்திரீகளுடன் வேனில்விளாக்கொண்டாட
பக்குவமாய்ச்சென்றார் பரிவானசோலையின்வாய்
நீராடிப்பன்மலரு நேயமுடன்கொய்துகந்து
பேராயமாதருடன் பெம்மானிருவோருங்
கையிற்சிவிறிகொண்டு கார்பொழியும்வாறேபோல்
மையற்பெடையனைய மாதர்களின்மேற்பொழிந்தார்
தையற்கணங்கூடித் தாரரசர்மேற்பொழிய
தொய்வற்றுக்கைகலந்து தொந்தவுயுத்தமுற்றார்
ஆடவர்போரு மரிவையர்கடன்போருஞ்
சாடையறவே சமானித்தகங்களித்து
பன்னீருமான்மதமும் பைங்களபச்சந்தனமும்
நன்னீரின்குங்குமமு நாற்றிசையும்வீசியதால்
வாசச்சேற்றாற்பெருகும் வாவிமுழுஞ்சோலையெலாம்
வீசச்சிவிறியின மென்முகில்போலொத்ததுவே
திசைகொண்டவன்றன் சிவிறிமழைக்கருண்டு
ஐயமருங்கு லலையமுகஞ்சோர
செங்கலங்கற்றண்ணீரிற் சேலினங்கடாவலொப்பாம்
பொன்னனையவோர்மாதின் பூங்குழலில்வீசியதால்
கன்னிகுழலார்ந்த கரியவறலொத்ததுவே

பொற்சிகரமென்றேசிர் பூமுலையில்வீசியநீர்
நற்சலதியிற்சுழலு நாகம்போலொத்ததுவே
வென்கொடுத்தவம்மாது வில்வீரனம்புயத்தில்
நன்றுருக்கநீர்வீச நன்மலைசூழுநதியாம்
செஞ்செந்துரநாரந் தேர்விசயன்றன்முகத்தில்
வஞ்சியொருத்தி வருஷம்போல்வீசியனீர்
சந்திரனைச்சூரியனுந் தண்கரஞ்சார்ந்தோடலொப்பாம்
இந்தவிதமாக விசைந்துவிளையாடி
பச்சைமால்பார்த்தனுடன் பாவையருந்திரும்பி
இச்சையுடன்மாநகர மேகினாரம்மானை
சார்ந்துமதனன் சரதநூலின்படிக்குச்
சேர்ந்துமகிழ்ந்திருந்தார் சேடியருமாடவரும்

## காண்டவதகனச் சருக்கம்.

காயாமலர்மேனிக் கண்ணனுடன்பார்த்தனுமாய்
மீயாருஞ்சிங்கமணி மேடையின்மேல்வீற்றிருந்தார்
பொற்பொருப்பிரண்டிலிரு பூம்புயல்போலேயிருப்ப
விற்பரவுகண்ணியர்கள் வெஞ்சாமரையிரட்ட
காளாஞ்சியேந்தியடைக் காயிலைகடானுதவி
நாளாஞ்சிறந்தபல நாரியர்கள்சூழ்ந்திருந்தார்
உல்லாசமாகி யுறவோரிருக்கையிலே
வல்லாளன்வன்னி மனிதர்முனிவடிவாய்
முப்புரிநூலு முன்பின்சிகையிலங்க
வெப்புகைசுற்றியபோல் வெய்யதுகிலிலங்க
வந்தானவனை மகிபர்பணிந்திறைஞ்சி
சந்தாரமார்பன் றவிசிலேவைத்தனனே
பசியாகவந்தேனீர் பாராட்டனேரமில்லை
மசியும்பசிதீர்க்க வல்லீரோவென்றுரைத்தான்
தீர்ப்பேன்பசியையென்று தேர்விசயன்செப்பியபின்
காப்பானெனவைக்குங் கலங்கானெனமகிழ்ந்து
வீராதிவீரருக்கும் வேந்தமார்த்தண்டனன்றோ
வீரரணசூர வீரமதகேசரியே
வீரசிங்காரரவோ வீராஜயதீரா
தாரொனென்றாய்நாவாறச் சாற்றினாய்பெற்றதொத்தேன்
வீராமனிதனன்று வெற்றியுள்ளவக்கினியான்
கொண்டேனொருநோயான் கொற்றவனேகாண்டவனம்
உண்டாலொழியு முறுநோயென்றார்பெரியோர்

சொன்னார்களென்வாயாற் சோலைதனையுண்ணுமுனம்
மின்னாருமேகமதை விட்டவிப்பானுன்றசப்பன்
கண்ணாயிரமுடையோன் காவலந்தக்காண்டவனம்
மண்ணாளுமன்னாநீ வந்துதுணைசெய்தாக்கால்
கோவர்த்தனகிரியாற் கோபாலன்காத்ததுபோல்
ஆவத்தனுகாம லன்புடனேகாப்பாயேல்
அந்தவனமு மதில்வாழரக்கரையும்
தொந்தவசுரர் தொலையாவிலங்கினமும்
பொருப்புநிகரொத்த புயங்கக்குலங்களையும்
மருக்குங்குமமார்பா வாயாறவுண்பெனென்றான்
இந்தமொழிகேட் டெழில்விசயனிப்போதே
வந்தருந்துங்காண்ட வனத்தையெனப்பகர்ந்தான்
சிந்தைகளிகூர்ந்து தென்கீட்டிசையோனும்
அந்தகனுமஞ்சுகின்ற வாசுகங்கண்மாருத
தூணிப்படையாற் றூணியாத்துரோணமுடன்
நாணியுடையாஇ ரதமெதிலுஞ்சாகாத
விண்ணமுதமுண்டதிறல் வெள்ளைத்துரகதமும்
அன்றிலங்கைசுட்ட வனுமக்கொடிவிருதும்
ஈய்ந்தானனலோ னியற்றேரருணனிலும்
வாய்ந்தானுந்தேர்நடத்த மார்த்தாண்டன்போலாக
விறன்மாளிக்கைக்ஈவச மெய்ப்பாகத்தான்புனைந்து
புறமீதுதூணியுடன் பொற்காண்டிபந்தரித்து
நற்கிரணம்பொங்கு நவரத்தினக்கிரீடம்
விற்கதிருமஞ்ச விறன்முடியிற்றானிலங்க
குண்டலமுமிட்டுக் குழையுங்கதிர்பரவ
மண்டலமும்விண்டலமும் மனமயரத்தேரேறி
திசையுங்கசமுநெடுஞ் சேடனுமேதானடுங்க
அசையமகமே ருமராதிதுக்கமுற
மல்லாருங்கையான் வரிவில்லைநாணேற்றி
செல்லாய்க்குணத்தொனிதான் செய்துசென்றானம்மானாய்
காண்டவனத்தருகாக் காண்டிபன்றேர்நிறுத்தி
மூண்டாரணியமெலா மூட்டென்றானக்கினியை
வாழிவிசயனென வாளிவில்லைத்தான்வாழ்த்தி
ஊழிமுகக்கனல்போ லோரொட்டுந்தான்வளைத்தான்
விசுவசொருபமுடன் மேவினனவ்வனத்தை
இசையுமுயிற்பாங்க னேதுவாவாயுவுந்தான்
மென்மேலுமூண்டு மிகுபசியுங்கோபமுடன்

தன்மேனிபொங்கித் தழலோனுறுத்தெழுந்தான்
வாரிப்பவள மாமலையைச்சூழ்ந்ததென
நேரிலுயர்ந்தா னெருப்பென்றநீளரசன்
அண்டகடாக மகடுமுகடுதொட
மண்டியெழுந்தான் வளர்ந்தகாண்டாவனத்தில்
கரடிபுலியேனங் காரான்கரிமனையும்
பரிசெந்நாயோனுய்முட் பன்றிநரிகுரங்கு
அரவும்பலவிலங்கு மந்தரத்திற்செல்வதென
பரவிப்புகைப்படலம் பக்கமீதோங்கியதே
எரியின்கொழுந்தோ டிசைந்தேறியதூமங்
கரியவன்வில்படர்ந்த காக்ஷிபோல்விண்படர்ந்த
பல்லனந்தகோடி பணியுண்டெனப்பாய்ந்து
வல்விரவியஞ்சு மலையிற்றழல்சூழ்சல்
பொருப்பைச்சிரகரிந்த போதுபொங்குஞ்சோரியொத்த
முருக்குமுதற்சிவந்த மொய்த்தபலமலர்போல்
தருக்கனடுக்கஞருஞ் சார்ந்ததழற்கொழுந்தே
இரவிக்கதிர்கண் டிசைந்தோரிருட்கூட்டம்
பரவியடவிமலை பாய்ந்தெங்கும்பம்மியதே
இருளிசருமேதி இரக்ஷசுமாடன்முனிகள்
சிங்கம்புலியாளி திறலூர்வனம்பறவை
அங்கங்குதீயி லலறிமடிந்ததுவே
மூங்கில்வனத்துளையின் மூசியேதீப்பரவி
ஒங்குமிடிபோல்வெடிப்ப வுள்ளிருந்தசர்ப்பமெலாம்
அங்கியின்மாள வவுணர்தழலெரிய
துங்கமுடனண்டர்செவித் துளைகள்செவிடார்ப்ப
ஆயிரங்கண்ண னறிந்தானிதுசேதி
பாயிரவிசெல்லப் பயப்படுநெங்காவல்வனம்
மும்மூர்த்திகளு முனியாரோநம்வனத்தில்
இம்மாத்திரந்துணிய வெக்கியனுக்கார்துணையோ
என்றெண்ணிநெஞ்ச மெரியைநிகராகிமன
நின்றானன்னேர நீங்காததீயொலியும்
விண்டுமுதலாய வெடிக்குந்தருவொலியும்
மண்டுவிலங்கினங்கள் வாய்விட்டலறுமொலியும்
பக்ஷியினங்கள் பதைபதைத்துக்கதறுமொலியும்
திக்குசந்தவிர்க்ஷ நெரிந்துவிழுமொலியும்
கோவேந்திரபார்த்தன் கூடநின்றூட்டொலியுந்
தேவேந்திரன்செவியுந் திட்டியும்புண்ணானதுவே

பவளமலையையிரு பச்சைமலைசூழ்ந்தாற்போல்
தவளப்பரிநெடுந்தேர் தனையன்மானிற்பதையும்
அனுசனடித்தெழுந்தே யவ்வனத்தையுண்பதையும்
தனதுநண்பானதொரு தக்கனெனுங்கட்செவியுஞ்
சாகுமெனக்கரைந்து சப்த்தமேகங்களை
ஏவியவித்துமிவன் றேவினாற்கொம்புடைய
அயிராவதத்தின்மிசை யாகினனிந்திரனும்
செயிர்வாய்க்கனங்க டிரைநீரெலாம்பருகி
திசையந்தரமுந் தெரியாவிதம்வளைந்து
விசையினல்விற்றெனியை வேலிந்திரன்மூட்ட
மின்னியிடிக்கனலால் வெங்கனலைக்கொல்வமென்று
வன்னிதனைச்சுற்றி வலைபோலவேவளைந்த
பற்குனனிப்பாவகனைப் பாசமாய்க்காத்தாலுங்
கற்குவடுதாங்கிக் கரியமால்காத்தாலும்
அக்கினியைக்கொல்வோ மடர்சோலையைக்காப்ப
முக்கியமாய்ச்சப்த்த முகின்முழங்கித்தானெர்ப்ப
காண்டிபனப்போ கணைத்திற்சரமாரி
கூண்டாய்வளைத்தழற்குக் குடையாநிறுத்தினனே
அக்கினிக்குநீரொன் றணுகாவிதமாக
மிக்ககணையால் விசாலக்குடையளித்தான்
பாணிக்குடைவிசயன் பாகவனுக்கீயுமுனம்
மாணக்கினியவ் வனமுண்டதிதாகம்
கொண்டதவனங் குறையக்குடிக்குமுனம்
மண்டலமன்னன் மணிக்கவிகையான்மறைத்தான்
என்றுநகைத்தான்போ லெழுந்தான்முகடளவாய்
சரக்குடைசுற்றிச் சரங்கள்சொரிவதுதான்
விரித்தமணிச்சரங்கள் வீக்கியபோலொத்ததுவே
அங்கிக்கிப்பார்த்த னளித்தசரமண்டபத்துள்
தங்குபவளத்தூண்க டாணிரைத்தபோற்றழலே
பவளக்கான்மண்டபத்தின் பாங்குசுற்றிநீர்சொரிதல்
தவளக்கால்சுற்றிநிற்குந் தன்மைபோலொத்ததுவே
செவியத்திரைகடவிற் செல்லுண்டுநீர்சொரிந்து
சவிகெட்டுமேமெலிந்தே தான்முகிலுமீண்டதுவே
அன்றுதக்கன்றீய்வருமு னப்புறமோர்யாத்திரையாய்
சென்றதறியாமற் றேவேந்திரனனுப்பும்
வானோர்கள்பாண மணிமண்டபம்பரவ
தானோபாதேயழைத்தார் தக்கனென்றபேர்குறித்து

தக்கன்றன்றேவி தனையன்றனைவிழுங்கி
மிக்கவனவினையு மெண்ணுமலேபறக்க
ஒருகணைவிட்டா னுலகளந்தோன்மைத்துனனும்
மருவுமனைதலையும் மைந்தன்வாலற்றதுவே
சிரசற்றுத்தாய்சாகச் சேயுயிர்பெற்றேயெழுந்து
பரசொத்திருவிழியும் பாவகனைப்போற்சிவந்து
சாவதினித்தீயிலெனத் தான்றவறிவீழுமுன்னூற்
பாவகன்மேலேவருண பாணந்தனையேவி
தக்கன்மதலைதனைச் சாகாமலேகாக்க
திக்கென்றுதான்குதித்துத் தீயுட்புகுந்தெடுத்து
சிலதன்மகன்றனையே தேவேந்திரனளைத்து
நலதாதையெங்கெனவே நந்திலனியாத்திரையாய்
என்றானப்போதேபின் னிந்திரனுமுண்மகிழ்ந்தான்
அன்றேயழலோனு மண்ணனுக்காவிட்டுவிட்டான்
தந்தைதயவாகத் தானேயெடுத்தமையாமல்
மைந்தனும்பாம்பை மனதிரங்கிவிட்டுவிட்டான்
தாயைச்சிரசறுத்தோன் றன்சிரசைக்கொள்வனென்று
ஆயுமிவன்பகைகளு ளொன்றேதான்கேட்டு
வள்ளலெனுங்கன்னன் மலர்ச்சரணம்போயடைந்து
கன்னமான்மைத்துனனைக் காண்டிபமன்னவனை
போர்க்களத்திலென்னைவிடப் போய்ச்சிரசைத்தானறுத்து
மார்க்கமுடனின்பாதம் வைப்பேனென்றோதியதால்
அஞ்சாதேகாப்பனென்றே யவ்வரவைத்தான்றேற்றி
நெஞ்சங்குளிர்ந்தே நிதமும்பதின்கலப்பால்
மற்றுமுணவு வயிறடங்கத்தானுதவி
வெற்றிபெறக்கன்னனர வினைவளர்த்தானம்மானைப்
அங்கதுநிற்க வமராபதித்தலைவன்
பொங்குசினமாய்ப் புகுந்தான்செருமுகத்தில்
தேவர்களஞ்சச் சிலீமுகங்கடானேவி
எவிற்பிகிந்துநிற்கு மின்சுதன்மேற்றான்சினந்து
மேகமிளைத்ததுவும் விண்ணோர்நெளித்ததுவும்
போகிகண்கண்டு புழுங்கியெதிர்த்தளவில்
அங்கிதவிர வரியதிசைபாலகருந்
தங்கடங்களூர்தியின்மேற் றனித்தனியேயேறிவந்தார்
முப்பத்துமுக்கோடி தேவர்களுமூண்டுவந்தார்
துப்புத்தவஷ்ட வசுக்களிலோர் தோன்றலல்லால்
சத்தவசுக்களுமே தான்போரினின்மூண்டார்

சத்தசமுத்திரமுந் தான்சுவறும்வாறாக
பன்னிரண்டாதித்தரிலே பாரின்முறையொன்றொழிய
இன்னல்பதினொன்பேரும் எதிராகிப்போர்மூண்டார்
உருத்திரபாலனொருவ னுருத்துருத்தேபோர்மூண்டார்
கருத்துடனேமற்றோருங் காண்டிபனைச்சூழ்ந்தார்
சாகரம்போற்சூழ்ந்தோர்கள் தாங்காதவரவரோ
மேகமெனப்பல்கோடி வெங்கணைகடான்றொடுத்தார்
சூலமழுத்திகிரி சொட்டையுடனேரிசமும்
வேலும்படையும் விசயன்மேலேவிடுத்தார்
கண்டுசினந்திவனுங் காண்டிபந்தான்வளைத்துக்
கொண்டுமுகிலினம்போற் கொக்கரித்துப்போர்விசயன்
ஓரோருடற்றோரு மோராயிரங்கணைகள்
நேரேறித்தட்டுருவ நின்றநின்றதேவரெலாங்
கைகண்முகங்கள் கழல்களற்றுபட்டுடைந்து
மெய்களெல்லாஞ்செந்நீர் விரியாடைதான்போர்த்து
சல்லடைக்கண்களெனத் தம்முடலெல்லாந்திறப்ப
அல்லன்மிகுந்தே யவதிமிகப்பட்டுலைந்து
வீடுமனையொழிந்த மிக்கவசுவேழ்வர்களும்
சேடுகொடித்தேர் சிலைகவசந்தானறுந்து
சரக்கூடெனவவர்க டன்னுடலெல்லாம்பிளந்து
உருத்தார்நடுநடுங்கி யோட்டம்பிடித்தனரே
சமனேறிவந்த தடம்பகடெல்லாந்துளைத்து
இமனுக்கிமனுவிசய னெய்தான்பலகணைகள்
அங்கந்துளைக்க வவனூர்தியுமிழந்து
பங்கங்களாகிப் பறந்தானேதென்றிசைக்கே
நிருதியிலங்கையிலே நெடியோன்கொடுங்கணையால்
நிருதன்படும்பாடாய் நின்றுடைந்துவோடினனே
குருதிவடியக் கூர்வாளியீறுபட்டு
வருணனடுங்கிமிக வாய்வரண்டுவோடினனே
ஆயுதமுங்கையுய் ஆல்விழுதுபோற்றுவள
வாயுவும்வெட்கிப் மனங்கலங்கியோடலுற்றான்
தனதன்சிலகணையாற் றன்னுடலம்புண்ணாகி
மனதுதடுமாறி மான்போலவோடினனே
ஈசானனன்கணையா லீறுபட்டுவோடினனே
வாசாவிபொற்றேரும் வண்மைப்பசும்பரியும்
ஓசையொற்றையாழி யுயர்கொடிவின்னுணிழந்து
மூசியுடற்குருதி மூழ்கவேதான்பார்த்து

உற்றிரவியு முடைந்தோடிப்போகலுற்றான்
மற்றுமுருத்திரனும் வாள்விசயன்வாளியினாற்
றூங்கள்விடும்பரசுஞ் சையமொடுசூலமெலாம்
ஓங்குபலபடையு மோர்நொடியிலீறுபட்டு
ஏற்றின்கொடியூர்தி யேறுகளுநீறுபட்டு
மாற்றரியவாகை வயங்குலைந்துவார்சடையிற்
சேர்த்தநதியொழுக்காற் றேகமுற்றதூசிதனைச்
சேர்த்துழவர்செய்பழனச் சேறுகுதித்தேகமெலாம்
வாடிமயங்கியவர் வந்தவழியேநாடித்
தேடியேயோடினர்க டேவேந்திரன்மயங்கி
இவன்கைத்திறம்போனு மெற்றிசையுங்கண்டதில
சிவன்முப்புரமெரித்த செய்கைபோலொத்ததென்றே
எல்லோரையுமோ ரிமைக்குமுனஞ்ஜயித்தான்
வில்லாலிவன்மேரு வில்லியல்லாலொப்புமுண்டோ
தாங்கியமர்புரியான் றந்தையெனநெஞ்சில்வையான்
பாங்கனுந்தக்ஷன் பரிவாய்முன்றப்பிவிட்டான்
மாயனுறுதுணையாய் மற்றவனுக்குற்றுநின்றான்
நாயகனைச்செயிக்க நம்மாலுமுற்றாது
என்றுமகவா னிடைந்துதிரும்பிவிட்டான்
அன்றுதழலோ னழன்றெரித்தானம்மானுப்
அவ்வனத்திற்றக்க னரண்மனையின்வேலையிலே
கவ்வையுற்றகம்மியனும் காண்டிபனுக்கபயம்
தனஞ்சயனைக்கிட்டித் தஞ்சமெனக்கெஞ்சுதலும்
மனஞ்செய்கிருபையுடன் மற்றவனையஞ்சலென்று
விற்குதையாற்றூங்கி வெளியிலவனைவிட
பற்குனன்பாதம் பணிந்தான்றயவுடனே
காத்தாயுனக்கிசைந்த கைமாறென்செய்யவலேன்
ஏத்தநினைத்தாலுனது ஏவல்செய்வேனென்றகன்றான்
வந்தபடையு மகவானுஞ்சென்றதற்பின்
நந்தலறச்சிங்க நாதமுழக்கினனே
சேராரைவென்றமன்னன் சிங்கநாதமுழங்க
வாராழியிற்றுயிலு மாயனிவன்வில்வலியை
கண்டிவன்விறலைக் கைவில்லையுமகிழ்ந்து
கொண்டுமனதுகளி கூர்ந்தானேமாயோனும்
வடமதுரைதென்மதுரை யில்வாழுமன்சுதையைக்
கடிமணஞ்செய்பார்த்தனையக் காவுடையான்மெச்சியினும்
என்வாழ்வையெல்லா மெடுத்திரப்போற்கீய்ந்தாலும்

நன்மாமகனேடு நான்பொருதேனென்றுரைத்து
வாசவனுஞ்சென்ருன் மகிழ்நாரதர்முதலாய்ப்
பூசுரருமாமுனிவோர் போற்றிப்புகழ்ந்தனரோ
வன்னிவிசயன் மதிமுகத்தைத்தான்பார்த்து
நின்னையன்றிமற்ரேரு நீக்கறியாரென்றுயராற்
பேராரணியம் பிறங்குஞ்சராசரமுஞ்
சோராதருந்தித் துன்பகன்றேனின்னருளால்
செயற்கரியசெய்வார் பெரியோர்சிறியோர்கள்
செயற்குரியசெய்யா தென்பாரெனவறிந்தேன்
மன்னுவின்னன்றி மறவேனொருபோதும்
என்னப்பலவா விருவரையுந்தான்வாழ்த்தி
அசவாகனத்தேறி யமரருலகடைந்தான்
விசயனமரர்களை வென்கண்டமன்னவர்கள்
அவரவராண்மை யறைந்தமரிலன்றெடுத்த
துவசம்பலவெடுத்து துங்கமணித்தேர்களெங்குஞ்
சோடித்தலங்கரித்துச் சொல்விருதெலாமணிந்து
வேடிக்கைபொற்றேரின் மேவிவிறல்விசயன்
வெற்றியெலாம்வைகும் வியனுனதேர்செலவே
கொற்றவிசயன் குலவுநகர்நெருங்க
நால்வருடனே நகரோர்தமரினமு
மால்விசயமன்னவனை வந்துமெதிர்கண்டார்கள்
வெற்றிமுரசம் வியன்சங்கமுமுழங்கக்
கற்றியபஞ்சக் கருவியினமொலிக்க
ஊர்வலம்வந்தே யுறைந்தார்திருமனையில்
பார்வளரநீதி பயின்றிருந்தாரம்மானைப்.

## ஆதிபருவமுற்றிற்று.—2-வது சபாபருவம்.

### இராசசூயச்சருக்கம்.

பாண்டவர்கள்புரிந்ததவப்பயனுகியவதரித்துப்பகைத்துமேன்மேன்
மூண்டவினைமுழுவதையுமுனைதோறுமுறண்முருக்கிமுகில்புகாமற்
காண்டவமுங்கனல்வயிற்றுக்கன்றணிபருகருவித்துக்காக்குமாறே
பூண்டருளெம்பெருமானைப்போற்றுவாரொழுபிறப்புமாற்றுவாரே

மதிக்கவிகைநீழறனில் வையமெல்லாம்வீற்றிருக்க
பதியெத்திசையும் பரிவாகவாழ்ந்திருக்க;
செல்வம்பெருகிநெறி செங்கோன்முறைவளர

கல்விசெறிபஞ்சவருங் கண்ணனுடன்சேர்ந்திருந்தார்
ஐந்துபஞ்சபூதமுட னாருதாரமெனவே
வஞ்சமிலாப்பஞ்சவரு மாயவனுமொத்திருக்குஞ்
சிங்காதனத்திலொரு சிற்பன்வந்துதாள்பணிந்து
வெங்கானெரித்த விசயனைமென்மேற்புகழ்ந்து
தீராசிகாமணிநீ செய்தநன்றியென்சொலுகேன்
ஊராரியநானன் றுயிர்பிழைத்தேனுன்னாலே
கைமாறுசெய்யும்வகை காணேனற்கம்மியர்கள்
அம்மாவெனவே வதிசயிக்குவாருக
வண்மைசிறந்திருக்கு மன்னர்மெச்சுமண்டபந்தான்
என்னாலியன்றபடி யிப்போதேசெய்வனென்றான்
மேனாளுலகாண்ட விடபருவனோரவுணன்
தானாண்மையாகத் தனியாத்திறைகவர்ந்தான்
நாலுவகைப்பொன்னு நயந்தவிருநிதியும்
கோலநவமணியுங் கோடானுகோடியுண்டு
தனதன்மகவானுஞ் சற்பபுவிமன்னவனுந்
தினமுந்திறையளக்கச் செருவியேயவ்வசுரன்
அப்பொருள்களெல்ல மரியமகமேருவதை
ஒப்பதெனவிந்தமெனு மோர்பொய்கையினிடமாய்
உண்டதனைத்தானெடுக்க வொருவராற்கூடாது
தண்டில்வயவீமன் றன்னாலேயாகுமென்றான்
அதுவென்பணிக்குதவ வனபாயளிப்பீரேல்
மதிகொண்டுகட்டிவைப்பேன் மண்டபமென்றோதலுமே
வீமனிசைந்தான்முன் வேலையடைப்பதற்கு
தாமனனுமன் சயிலமெடுப்பதுபோல்
தச்சர்கோன்வேலை தவராமற்செய்வதற்கு
அச்சமறவெற்புவெற்பா யங்கவனுங்கொண்டுவந்தான்
பசும்பொற்சுவரொழுப்பி பத்தியொன்றுக்கோர்கோடி
வசம்பத்துமிக்க மரகதத்தூண்டானிறுத்தி
விற்பவளவுத்திரங்கள் விற்றாணின்மேனிறுத்தி
நற்பவளராகவயி ரத்தாற்றுலாநிறுத்தி
வைடூரியங்கோ மளந்தரளவான்பலகை
விடனாயதிற்பரப்பி மேன்மையாய்வேலைசெய்தான்
மனத்தான்மயனால் வரம்பாற்புயவலியால்
தனத்தாலினத்தாற் சனத்தாற்பலகோடி
சினத்தாலும்வேறொருத்தர் தீண்டாவுபாயமதாய்
ஈரேழ்தினத்தி லியற்றினனம்மானாய்

மகமேருவைக்குடைந்து மண்டபமுண்டாக்கியபோல்
தகவாயரண்மனையுந் தான்வகுத்தானப்போதே
தன்னினைவின்வண்ணந் தயங்காநிதியளித்த
மன்னன்றனக்கு வலுமையுள்ளதிண்கதையும்
மிச்சமுள்ளமெய்ப்படைக்கு மேற்றேன்மழுங்காத
வச்சிரக்கதையு மணிச்சங்குந்தானீய்ந்தான்
தருமன்சரண சரோருகத்தைத்தான்பணிந்து
வருமக்கசாலையனு வாய்பொத்தித்தான்குனிந்து
உத்தாரங்கேட்க வுதிட்டிரனுந்தான்மகிழ்ந்து
வித்தாரமாக வெகுமதியுந்தானீய்ந்தான்
உத்தவெகுமான முள்ளதெல்லாம்பெற்றகன்றான்
ஐவர்களுந்தேவி யனலிற்பிறந்தாளுந்
தெய்வகம்மியனமைத்த தேசுமனையுட்புகுந்தார்
அந்தமணிமண்டபத்தி லவருபடனேயனுமாய்
சந்தவரியாசனத்திற் றானிருந்தாரம்மானாய்
மன்னர்புடைசூழ மந்திரிகடான்சூழ
ஒன்னலர்கள்வந்துதிறை யுற்றளந்துதான்வணங்க
நாலுவகைச்சேனை நறலைபோற்சூழ்ந்திலங்க
கோலபஞ்சவாச்சியங்கள் குமுறுந்தொனிமுழங்க
இந்திரசபைபோல வென்னளுஞ்செல்வமுடன்
சந்திரகுலமா றருமாதிபனிருந்தான்
இவ்வணஞ்சின்ன ளெழிலுலகந்தான்புரந்து
செவ்விமகவான்போற் சிங்காதனத்திருந்தான்
நன்றிபெறவிருக்கு நாளிலொருநாளில்
மன்றல்பெருநாரதனும் வந்தனன்காணம்மானாய்
அந்தமுனியையெதிர்ந் தைவர்களுந்தான்வணங்கி
எம்மரபோர்செய்த வியற்றவமேவந்ததென்று
ஆதிசிவன்கூத்துக் கமர்ந்திசையுமியாமுடையோய்
வேதியரோமன்னவரின் மிக்கதவஞ்செய்தமையால்
கண்டேனின்பாதங் களிகூர்ந்தேனென்றுரைக்க
தண்டோசையேபயிலுந் தார்முனியுமேமகிழ்ந்து
யாழ்கரத்திலேந்தி யணிநரம்புதான்றிருத்தி
வாழிதங்குராக வழிதுலங்கிவாழ்த்தலுற்றான்
தேவரமிழ்தஞ் செவியிற்சொரிவதுபோல்
பாவான்மிகவாழ்த்திப் பஞ்சவரைத்தான்றுதித்தான்
ஓடுநீர்தங்கி யுயரோசைகேட்டிருக்கும்
ஆடும்பறவையெலா மந்தரத்திற்றங்கிநிற்கும்

பட்டமரங்கள் பல்துந்தளிர்த்திலங்குங்
கட்டைதளிர்க்காணுங் காவனமும்பூவனமாங்
கல்லுமிரும்புங் கனாந்துநீராயிளகுஞ்
சந்தமழைபொழியுஞ் சத்துருவேமித்துருவாய்
இந்தவிதமா யினசத்துருக்களின்றி
சம்புசதாசிவர்க்குஞ் சங்கரிக்குநாரணர்க்கும்
எம்பெருமானீன்ற வினியபிரமனுக்குந்
தான்பிரிதியல்லாது தக்கதோமற்றவர்க்கும்
வான்புகழுமாமுனியுன் மான்மியத்தைச்சொல்லெளிதோ
என்றுதருமனையு மிப்படிக்குமேபுகழ்ந்து
இன்றிதனைக்கண்டதுபோ லெத்திசையுங்கண்டதில்லை
அளகாபுரிதனிலு மண்டருலகத்தினிலும்
வளமாகவிப்படியோர் மண்டபமுங்கண்டறியேன்
ஆனுலிதனி லகிலத்துமன்னவரும்
வானேருநாகருமே வந்திருந்தான்மேன்சிறப்பு
அப்படியேவந்திருக்க வானநாள்கிட்டவென்று
துப்புடையநாரதருஞ் சொல்லலுற்றுரோர்வசனம்
பஞ்சவருமாமுகிலே பண்பாகக்கேட்டருளும்
வஞ்சமில்லாப்பாண்டென் மலரடியைத்தான்வணங்கி
என்செய்திசேய்ற் கிசையுமெனவுரைத்தான்
நன்செயலாந்தேவருக்கு நானேர்ப்படிகீழே
நிற்கிறேனெனுக்க நிறைந்திருக்கவேணுமென்றால்
வற்க்மாஇராசசுய யாகமணமுடித்தால்
தேவர்பதவி திறமாய்க்கிடைக்குமென்று
ஆவலுடன்சொன்ன னதுசெய்வீரொன்றுரைத்து
மாமுனிவன்சென்றதற்பின் மாயன்றனைப்பார்த்து
கோமுதலேயிந்தவிதங் கூடும்வகைசொல்லுமென்றார்
அப்போனெடியோ னருச்சுனனைப்பார்த்துரைப்பான்
இப்போதுபல்கோடி யெண்ணிறந்தராசாக்கள்
போருக்கேயொல்கிப் புறங்கொடுக்கப்போர்புரிந்து
வாரிக்கடல்புகுத மன்னர்களையோட்டிவித்துஞ்
சிறைச்சாலைக்கூடமதிற் சேர்ந்தடையப்பண்ணிவித்து
மறைவாகக்காடுபுக மன்னர்களையோட்டிவித்தும்
சேரச்சிதறிவைத்தான் றீயசராசந்தமன்னன்
ஆரப்புயத்தோ னவனைவீமன்னலது
மற்றவர்களாலே வசைசொல்லப்போகாது
நற்றியவனைமுத ஞஞ்செயிக்கவேணுமென்று

விசயனேநின்னுடனே வெற்றிகொண்டோர்யாருமுண்டோ
இசையிலவன்போரால் யான்கடலில்புக்கதென்று
இங்கிவனைவென்றேமே லெண்டிசையும்வென்றதென்று
அங்கைவருக்கு மறைந்தேபயணமென்று
வீமன்விசயனுடன் மிக்கதொருகண்ணனுமாய்
தாமிஷமில்லாமற் றுநடந்தாரம்மானாய்
அரியுமரியனைய யாண்மையுபையருமாய்த்
தெரியுமுனிவரர்போற் சென்றனன்காணம்மானாய்
சிலநாணடந்து சிலவனமுந்தான்கடந்து
பலகாவல்கொண்ணகரி பார்ப்பானாய்த்தானடைந்து
பொற்சக்ரவாளகிரி போன்றவெயில்வாயிலிலே
விற்சக்கராயுதனும் வேந்தரிருவர்களுஞ்
சென்றூர்தடுத்துத் திறல்வாயுலோரணுகி
அன்றேகிமன்னனிட மந்தணர்கண்மூவருமே
காணவெனவந்தார் கபாடவாயிற்றரித்தார்
மாணரசேயென்றுரைப்ப மற்றவனுவிட்டிடென்றான்
முனிமூவர்செல்ல முதல்வோனுபசரிப்ப
இனியதவிசி லிருந்திவருமாசுனைத்தார்
விற்குரியுங்காய்ப்பு விற்லரசர்லக்ஷணமு
மற்கிரியையன்னனீர் மாமுனிவரல்லவென்று
இவ்வேடங்கொண்டேகி யென்னகர்க்குவந்ததென்ன
வெவ்வாசிமன்னவரோ வியநாளோசொல்லுமென்றான்
யானேயதுகுலத்திலி யாதவன்காணிங்கிருந்தோர்
மானுபரன்றரும மன்னுக்கிளையோர்கள்
வாயுசுதனொருவன் வானவர்கோன்சேயொருவன்
தேயுவனையாயுன் றென்னகரிகாணவந்தோம்
மன்னவர்போல வரக்கூடா வன்மையினாற்
பொன்னகரிகாண்பதற்காப் பூசுரர்போல்வந்ததென்றான்
நன்றானெண்டிசையு நானுங்குகோணமெல்லாம்
வென்றபுயத்தின் மிகுந்தினவுமாறிலைக்காண்
இன்றெனக்குப்போர்க்கே யிசைமினெனவுரைத்தான்
மன்மூவர்வந்தோ மனதுக்கிசைந்தோரை
சொன்மினெனவுரைத்தான் றுவாரைப்பதியானும்
அன்றமருக்காற்று தருள்காதநூற்றதுபான்
சென்றுதிரைபுகுந்தாய் சேனையுடனீயும்
அசுரர்தனக்குடைந்து வன்றேடித்தாளொளித்தாய்
வசமில்லாவிந்திரன்றன் மைந்தன்மிகவிளையோன்

வாயுகுமாரனுடன் மற்போரிலேமூண்டு
காயம்புகவிடுவேன் காணுனீயென்றோதி
சுற்றத்தார்மந்திரிகள் சூழுகின்றமன்னவனைப்
பற்றியுடனழைத்தென் பாலனிந்தப்பாராள
வைப்பீரெனவே மகுடமுடிசூட்டி
இப்பாரையாளென் றியற்றவிசிலேயேற்றி
அந்தரருமியாரு மதிசயிக்கும்வாறாக
மந்தரமும் விந்தமெதிர் மற்பொருதினாற்போல
கரியுங்கரியுமெதிர் கைகலந்தவாறேபோல்
பொருவிற்புலியும் புலியும் போர்மூண்டதென்ன
தரைவிண்ணடுங்கச் சலதியலைசுவற
விரையெண்டிசைமலையு மெய்சேடனுநடுங்க
மூவைந்துநாளாய் முழுதுமிரவுபகல்
கோவங்கண்மிஞ்சிக் குதித்தார்கண்மற்போரில்
உகமையற்றப்போ ரொருவர்க்கொருவர்செய்து
சகமையுடன்செயிக்கற் றள்ளாமற்றள்ளாடி
விட்டுவாங்காமல் விசைகொண்டுமேலோடி
ஒட்டியெழும்பி யுறவீழத்தான்மோதி
ஓர்காலைக்காலா லுறவமுக்கியோர்கரத்தால்
நார்காணெனக்கிழித்து நற்றலத்திற்போட்டுவிட்டு
இரணியனைப்பிளந்த வியமநரசிங்கமென
கிரணமணிக்கிரிபோற் கெம்பீரவீமனின்று
அண்டம்வெடிக்க வதிர்ந்தாரபாரமுடன்
மண்டலமுந்தானடுங்க வாய்விட்டேபார்த்துநின்றான்
எறிந்தபிளப்போரி லிரண்டுமொன்றாய்த்தான்கூடி
செறிந்துதசமடங்காய் சேர்ந்துசெருச்செய்தானே
செத்துப்பிழைத்துவந்தான் செத்தபேயொக்குமென்று
உற்றுச்சினத்தாய ஞேதுகின்றசைகைகண்டு
பின்னுமவனைப் பிளந்துதலைமாற்றிவைத்தான்
மன்னுசராசந்தன் மடிந்தனன்காணம்மானாய்
வானவருந்தானவரு மண்ணுலகிலுள்ளோரு
நானமில்லாவீம னெழினற்புயத்தைதான்றுதித்தார்
செங்கண்ணன்பாதஞ் செயவிசயன்றான்பணிந்து
எங்கள்சகாய னெனுமாலே இவ்வேந்தன்
இந்தவலுப்பெற்றதுவு மிறந்தவுடலொட்டியதுஞ்
சந்தேகமில்லாமற் றானுரைப்பீரென்றளவில்
இறந்தோன்சரிதை யிணங்கக்கெடுத்துரைப்பான்

அறந்தோயும்வானோர்க் கரும்பகையதாமொருவன்
மகதர்குலத்தோன் மரபிற்பிறந்தரசாய்
இகலற்றப்பூவுலக மெல்லாமினிதாண்டான்
மன்னர்குலமெல்லா மடியக்கருவறுத்து
மின்னுபுகழிந்திரனை வெஞ்சிறையிலேபடுத்தி
எண்ணுயிரம்பே ரிராசர்பசுவாக
மண்ணுறுநாளின் மகாயாகஞ்செய்யலுற்றான்
மூவுலகிலுள்ளோர் முனிவோர்களுநடுங்க
பூவுலகமாளமன்னும் புத்திரனொன்றில்லாதால்
கவுசிகமாமுனிவன் காலடியைத்தான்பணிந்து
அவசியமாய்ச்சுதனுண் டாகுவகைகூறுமென்றான்
தேமாங்கனியதொன்று செம்மல்கரத்தளித்து
கோமானேயுந்தன் குலேஸ்திரிக்கித்தானளித்தால்
வீரற்குமிக்கான் வேந்தனைச்சேய்பிறக்கும்
நேருற்றன்னுசை நிறைவேறுமென்றுரைத்தான்
அக்கனியையொண்டா யரசனுறப்பிளந்து
இக்குமொழிமாது ளிருவருக்குந்தானளித்தான்
ஈய்ந்தநாடொட்டே யிருவருக்குஞ்சூல்வளர்ந்து
நேர்ந்தநாளெல்லா நிறைவேறமுற்றியபின்
ஓர்பாதிக்குள்ள வுறுப்பினங்கடப்பாமல்
பேர்பாதிப்பிள்ளைகளாய்ப் பெற்றனர்காணம்மானை
ஆக்கினைசெய்தாற்போ லரியபிள்ளைபெற்றமையால்
ஏக்கமாய்மன்ன னிழிவென்றெடுத்தெறிந்தான்
சிவனுடனிருந்துஞ் செம்மல்பொருந்தாதமையால்
பாவிமயானம் படுத்தினன்காணம்மானாய்
பெருக்கப்பிணங்கடின்னும் பேய்க்காளிதானொருத்தி
சரையென்றபேருடையா டானேமனதிரங்கி
இந்தச்சிசுவருந்தி லேதுபலனென்றிரண்டு
சந்தைப்பொருந்தவைத்துத் தானும்வரங்கொடுத்து
தன்பேருமொட்டிவைத்த தன்மையுந்தான்விளங்க
வன்போர்ச்சராசந்த மன்னனென்றபேருமிட்டு
ஏந்தல்கரத்தளித்தே யேகினாள்பேய்க்கொடியாள்
வேந்தனிடத்தில் விரும்பியவன்வளர்ந்தான்
அன்னானுக்கின்னா ளறுதிமுடிவெனவே
சொன்னான்முனிவன் றுணைவனுமேதான்மகிழ்ந்தான்
வன்பகைமன்னன் மடிந்தமகிட்சியினால்
துன்பச்சிறையறையிற் சோருமரசர்களை

அல்லலறத்தன்னூ ரடையும்படிவிடுத்து
மல்லசராசந்தன் மகனையேபட்டம்வைத்தான்
பாதம்பணிந்தவனும் பாதைவழிவிடவே
ஓதநிறத்தா னுமையர்களும்வெற்றியுடன்
வாய்மைதவருனும் மற்றோருஞ்சேனையுடன்
தூய்மையாச்சென்றழைக்க சொர்ணபுரிபுக்கினரோ
கண்ணுயிரத்தோன்றன் கண்களுக்குங்காட்சிகொளா
எண்ணுயிரங்கண் ணிருந்தாலுங்கண்டடங்கான்
கண்ணனந்தம்பெற்றோர்க்குங் கண்கொள்ளாக்காட்சியுள்ள
விண்ணுடுங்கத்தானெழுந்த மிக்கமணிமண்டபத்தில்
ஆயர்பதியுடனே ஐயவருஞ்சிங்காதனத்தில்
நேயசுரபியுடன் னீடருவுமொத்திருந்தார்
இந்தக்கொலுமுகப்பி லேற்றபடிமன்னரும்பர்
வந்துற்றனன்றி வனமலவென்றேமுனிவன்
சொன்னதுமெய்யென்று துளபத்தான்சொன்முனமே
அன்னதுமெய்யென்றே வர்ச்சுனனுந்தான்மகிழ்ந்து
திக்குவிசயஞ் செயவேமனநினைந்து
தக்கணதிசைக்குத் தன்முனும்வீமனென்றும்
மிக்கவடதிசைக்கு வெல்லுவேனியானெனவும்
வருணன்றிசைக்கு மாவலியதம்பியென்றும்
குருடன்றிசைக்குக் கொற்றசகாதேவனென்றும்
நடுவனுனாத்ததுவே நல்லபுத்தியாகுமென்று
நெடியோன்முடித்தரும னெஞ்சங்களிகூர்ந்து
நாலுதிசைநானன்கு கோணமுமே நால்வர்சென்று
மேலுவிசயமுடன் மீளவிடைகொடுத்தான்
நின்றபலசோலையையும் நிருபர்பலர்களையும்
வென்றியிரண்டிலைய வேந்தருடன்கூட்டிவித்து
குடபால்விசயனையும் வாயுசுதன்கிழக்குஞ்
செல்லெறன்றுப்பிவிட்டுச் செல்லணையமெய்யானும்
மல்லன்றுவானா வளநகரிபுக்கினனே
மாருதியுநாலு மருப்பிபஞ்சேருந்திசையிற்
காருலவுவங்கங் கலிங்கங்கிலிங்கமுதல்
அத்திசையிலுள்ள வனேகமுடிமன்னர்தளம்
முற்றும்பொடிப்படுத்தி மொய்த்தமுடிமன்னவனைப்
பக்கங்கள்சுற்றப் படைத்துணையாய்த்தான்கூட்டி
திக்கங்கங்கிலுள்ள திரையணையசேனையெல்லாம்
அம்பிபுவியா யவையெல்லாந்தான்மிளகாய்

கும்மியதண்டு குழவியாய்த்தானணிக்கும்
வல்லாளனாக வருந்தவரைத்தமையால்
எல்லோரையுங்காவென் றேபதத்திலேவீழ்ந்தார்
அபயமபயமென வன்றடியில்வீழ்ந்தோரை
அபயந்தவிழ்த்து வடைந்தோர்களைக்காத்து
செங்குருதிவெள்ளந் திரைபோற்பெருகிடவே
அங்கம்பிணமலைக ளாகக்குவிந்திடவே
அயிராவதநடுங்க வத்திசையெல்லாங்குழப்பி
வயிராக்கியந்தீர மாற்றான்கருவறுத்துப்
எண்ணிலாப்பூமி னிராசாக்கடான்கோடி
வண்ணக்கடல்போல வருதினிகடான்சூழ
கீழ்த்திசையிலுள்ள கிளரும்பொருள்களெல்லாம்
வேழமுதலத்திரிகள் வெம்பரிமாடஞ்சகடம்
வகைக்குபலகோடி வாகனங்கண்மீதேற்றி
தொகைக்குளடங்காத் தொகுதிபதாதியுடன்
வீரசிங்கநாதம் விறலாகத்தான்முழங்கி
நாரசிங்கம்போலாக நன்னகரிதானடைந்தான்
அடையலர்சிங்க மனையசெயவிசயன்
தடையதறவடக்குத் தானடந்தானம்மானாய்
தன்னகரிவிட்டுத் தனதன்றிசையளவாய்
உன்னுபலமன்ன னுருத்துப்படைகளெல்லாம்
வடவாக்கினிபோல வாளியாற்றானெரித்து
அடைவாயபய யபயமென்றோரைக்காத்தான்
விற்போட்டுபோதமிசை வீராதிவீரரெல்லாம்
மற்போட்டுபோதம் வணங்கினாரம்மானாய்
பல்லனந்தமன்னர் பதாதிகடற்சூழ
வில்லனந்தம்வென்றோன் விறற்றனதனூர்புகுந்தான்
கண்டுகுபேரன் கனலாய்விழிசிவந்து
மண்கெடற்போல் வளரியக்கர்சேனையுடன்
மந்திரிகளுங்கோடி மண்டலிகருஞ்சூழ
தந்திரமாய்த்தன்மகனைத் தான்விட்டானப்போரில்
விசயன்பெரும்படையு மிக்கதனதன்படையும்
அசைவின்றியேபோ ரடர்ந்ததனுகாணம்மானாய்
வச்சிராயுதன்மகனும் வச்சிரவணன்மகனும்
மிச்சமாகப்போர் வினைமூண்டாரம்மானாய்
முனைந்தசமரின் முகிலூர்தியின்புதல்வன்
சினந்துசரமாரி செல்லொத்துவீசிநின்றான்

கடுங்காற்று வீசுங்கனமழையும்போலாக
கொடுங்கார்முகத்திற் கொடுங்கணைகள்வீசியதால்
அங்கமொன்றுக்காயிரத்துக் காயிரபேரம்புபட
வெங்கயம்போலேயியக்கர் வேலைசுவறியவே
கார்க்கடல்போனின்ற கணப்படையெலாங்கணத்திற்
பார்க்குமுனமாண்டதனுற் பலகோடிமன்னவர்கள்
சுற்றிரதக்கோட்டை சூழவேபோட்டதுபோல்
எத்திசையும்வில்லா லிவன்மேலிகல்புரிந்தார்
சரமாரியாகத் தறுகாதிவன்சொரிந்து
பரிசாரதிகொடிதேர் பற்பலவுநீருக்கி
மன்னன்மகன்றேரும் வன்பாகுதான்றுத்து
சின்னமுடன்றேரிற் சிலைநாணிஞற்பிணித்தே
முரண்சிங்காத முழக்கிஞன்றேவரொலாம்
அரசன்சிலதன்முன்போ யடிபோற்றியேதுசொல்வார்
மும்மூர்த்திகளும் முடுகாரவன்போர்முன்
எம்மூர்த்தியேயோ ரிமைப்பளவினம்படைகள்
சேரமுருக்கிவிட்டான் சேய்தனையுமேபிணித்தான்
ஆரொன்றுகேட்டா லர்ச்சுனனென்றேதலுற்றுன்
வில்லாற்சிவனுலும் வெல்லமுடியாதெனவே
பல்லாருஞ்சொல்லப் பதறிப்படபடத்து
அன்றுவனமெரித்தா ஞமென்றுதானெதிரே
சென்றுமகனே செருவேதுவென்மேலே
தோற்றவன்மேலே தொடங்குவதோபோர்பொருதச்
சீற்றமேனென்மேல்யான் செய்தகுறைசொல்கவென
சிற்றப்பாவென்மேற் செருவிழுனேர்தாயே
பெற்றப்பனையுமன்று பின்னிடவேவென்றேனே
ஆதலாலெல்லா மறிந்தென்மேற்போற்கிசைந்தாய்
சேதமேவந்ததுமேற் செய்வதேதென்றுருகி
காளைதனைப்பிணித்த கட்டவிழ்த்துச்சென்றேடி
தாளில்விளுந்தான் றனஞ்சயனையுந்தனதன்
தோளிறுகப்புல்கிச் சுதனிலுமெய்யன்புருகி
எக்காலுவெற்றியுனக் கெய்தக்கடவதென்று
முக்காலும்வாழ்த்தி முதல்வன்குமரனையே
அண்ணன்சரண மணுகிவணங்கெனவே
வண்ணன்சரண வணங்கிஞன்மைந்தனுமே
தேவர்கோன்றன்மகனுஞ் செங்கையாற்சேர்த்தணைத்து
ஆவலாயென்போனீ யாவாயெனப்புகழ்ந்தான்

பின்புகுபேரன் பெருவில்லியைப்பார்த்து
அன்பன்மகனே யணுகியதென்சொல்கவென்
விரவுபொறைதரும மேவிக்குடியிருக்குந்
தருமமகிபன் றருமனவனேவலினால்
நாலுபேர்தம்பியரை நாற்றிசைக்குவிட்டமையாற்
சொல்லரியராஜ சுயாகநிறைவேற
நல்லபொருணிதியு நல்கிவறவேணுமென்றான்
பக்கத்திலுள்ள பலகாரியங்களெலாந்
திக்கெங்கும்பார்த்துத் திரும்பிவரும்போது
வீராவுனதுமனம் விரும்பியேவேணமட்டுந்
தாராளமாகத் தருவேன்படைத்துணையாய்
நிற்குகின்றமன்னரையு நீடுபெரும்படையும்
ஒக்கவழைத்தே யுடன்செல்லுமென்றுரைத்தான்
அந்தத்திசைக்கு மணித்தானதேசமெல்லாஞ்
சொந்தத்துடனுளுந் துங்கமணிமன்னவர்கள்
பேருட்புகழும் பிறங்காட்டவேகுலங்கள்
வேருங்களைந்து வெருவினேரைக்காத்து
இயல்பிஞ்ஞகன்கிரியு மிமையகிரியிலுள்ள
வயமுள்ளகந்தருவர் கின்னரரும்வந்திறைஞ்சி
திறைகள்பலவுதவிச் சேர்ந்துதுணையானதற்பின்
இறைவிந்தமானிடத மேமகூடமெனவே
சொல்லுமலையின் றரைகளெல்லாஞ்சூறைகொண்டு
வல்லமகமேற்கு வடக்குற்றானம்மானைப்
அத்திசையின்மன்னவர்க ளஞ்சார்கண்மேன்மையெல்லாம்
எத்திசைக்கும்வீர னெடுத்தடக்கிச்சூறைகொண்டு
மகமேருசூழவெட்டு மாதிரத்தின்மன்னரெல்லாம்
அகமோடுகடுங்க வஞ்சவென்றுகொள்ளைகொண்டு
சாதருப்பபொன்னோடு தங்குகிளிச்சிறைப்பொன்
ஒதரியவாடகப்பொ னுற்றசரம்பூநதிப்பொன்
நாலுவகைப்பொன்மலைக ளாலாயிரங்கோடி
நூலடங்காப்பொன்னின்மலை நூறாயிரங்கோடி
தண்பணையிற்றேர்க்கூட்டந் தந்தியுறற்கூட்டம்
பண்பரியுமற்புதமா பதாதியனந்தமென்றால்
என்னென்றுசேனைக் கிசைந்துவன்னிபோதமுற்றும்
மன்னென்றகூட்ட மகாதண்பதியாமே
அவ்வரசரெல்லாமுன் னுண்மையேயாண்மைபெறும்
குவ்வுலகிலுந்தன் கொடித்தேரோ தேரதென்றும்

வில்லேயுன துறகை வில்லாகுமற்றொருவிற்
புல்லேயெனவும் புகழ்ந்து துதித்ததற்பின்
தாரும்புயலுந் தமோரவீசுகரன்
சீருடையமேருவெங்குந் திட்டலுற்றானம்மானாய்
எத்திசைக்குவீர னிவனலாதில்லையென்று
நற்றிசைசேரும்பொல்லா னற்பூமழைபொழிந்தவர்
வில்விசயனல்லாது வீரனில்லையென்றெழுதி
பல்விசையம்யாவும் படிப்படியாய்த்தானெழுதி
தேற்கொடியிற்கட்டி திகழ்மேருவிற்கோட்டி
உயக்கமகமேரு வுச்சமதிலேவிசய
கம்பமுநாட்டிக் கதித்தகொடியேற்றி
உம்பர்மலர்மாரி யோயாமலேசொரிய
மன்னுதனதனெதிற் வந்துவணங்கிநின்றான்
பொன்னும்பலநிதியின் பொக்கிஷமெல்லாந்திறந்து
சம்மதித்தமட்டுமேனி தானெடுத்தேயேகுகென்றான்
அம்மவென்னப்பல்கோடி யானைச்சுமையேற்றி
பல்லாயிரங்கொண்டல்ப் பார்மேனடந்ததென்ன
வில்லாழியைச்சூழ்ந்து வெள்ளப்படைவளைய
வீரமுரசதிர வெற்றிசின்னமூதிவர
பூரிசங்கநாதம் புசழாமுழங்கிவர
பாரசையவட்டப் பருப்பதமுந்தானடுங்க
மாருததிதான்சுவற ககனநடுநடுங்க
சேடனமுடியசைய சேர்கமடமுநெளிய
நீடெலந்தான்குழைந்து நீலன்நஞ்சையும்முமிழ
அமரர்பதிபுதல்வ னர்ச்சுனமகாதீரன
தமரப்படையுடனே தானடந்தானம்மானாய்
மேருகிரிக்கப்பாலும் வெற்றிபெரும்வில்விசயன்
ஊரிடங்கொள்ளா துயர்சேனையைநிறுத்தி
அடங்காத்திரவியங்க ளானபலரத்தினங்கள்
உடன்பாரிருநிதிக ளுள்ளவெல்லாந்தான்குவித்தான்
தானமிருந்த தருமமகீபதிதான்
ஆனந்தமாக வடிபணிந்தவர்ச்சுனனை
செங்கையாற்றான்றழுவிச் செம்பொன்மலைத்திரளும்
புங்கமணியின் பொருப்பின்றிரள்களையும்
எண்ணிக்கையில்லா விருநிதியின்குப்பல்களுங்
கண்ணுக்கடங்காத காட்சியாய்க்கண்டுகந்து
நாலுகடற்போ ஞலுவகைச்சேனைகளும்

கோலியேமொய்த்துவந்த கூட்டமெல்லாந்தான்பார்த்து
எட்டுத்திசையு மிவன்செயித்ததென்றறியான்
திட்டித்ததென்ன திகைத்தானதிசயித்தான்
கண்ணேறுவாராமற் காண்டீபன்வாழ்கவென்று
கிண்ணேறினெச்சிற் கழித்தார்காணம்மானை
வடக்கேகுமன்னனிலும் வான்வலியிலெண்மடங்காய்
குடக்கேகுமன்னகுலன் கோலமுள்ளதேயமெல்லாம்
நகுலனகுல னகுலனெனநடுங்கி
இகலிலெதிர்த்தபடை யெல்லாங்கருவறுத்து
காய்ந்தோரைத்தன்கைக் கருவிக்கிரைகொடுத்து
சேர்ந்தவரைக்காத்துச் செருனர்பொருள்கவர்ந்து
மாளவமும்பப்பரமும் மற்றதொருபற்பரமும்
நீளுங்கிராட னிகர்கேகயந்துளுவம்
மற்றும்பலதேய மன்னர்வெருக்கொளவே
வெற்றியமராடி வென்றேதனங்கவர்ந்து
வருணன்கருக்குலைய வாயுவெருக்கொண்டோட
அருணன்படுதிசைமட் டாரபாரித்துவென்று
பொன்னும்பலநிதியும் பொருவிலாரத்தினமும்
மன்னுபலகோடி வாரணத்தின்மீதேற்றி
தன்பதிவந்துற்றான் சகாதேவமன்னவனும்
தென்பதியினூடுவகைச் சேனைபுடைசூழ
வீரமடங்கலென வேகித்தெதிர்த்துவருஞ்
சூரர்புறங்கொடுக்கச் சூழ்படையைநீறாக்கி
மண்டலிகர்பல்கோடி வன்சமருக்காற்றாமல்
அண்டியடைந்தே யருணப்பதம்பணிந்து
ஈய்ந்ததிறைகவர்ந்தே யெண்ணெணச்சேனையுடன்
சாய்ந்தேயமனடுங்கத் தானமரெல்லாமுடித்து
அக்கினியாநீல னருந்திசையிற்புக்கினனே
புக்கியவன்றேசம் போர்மூண்டுறைகொண்டான்
நீலனவைகண்டு நெடுங்கண்மிகச்சிவந்து
கோலமிகுந்த குருகுலத்தான்சேனையெல்லாம்
புகையுமனற்கொழுந்து போலெழுந்துதாக்கினனே
திசையுந்தெரியாமற் செந்நெருப்பாய்ப்பொங்கிவந்து
மோதியவனெதிர்த்தே முரண்கொண்டுவெந்தமையால்
ஆதவன்சேய்மைந்த னதிர்ந்துசினமீண்டு
வருணன்கணையு மகவான்பெருங்கணையும்
அருணன்கணையு மம்புலியின்றன்கணையும்

வீசியனலோன்றன் வெப்பையெல்லாந்தான்றுலைக்க
கூசியவன்பூசுரன்போற் சொற்றவன்முன்வந்துநின்றான்
வேதியனீவெந்தழலாய் வீசியதென்கூறுகென்றான்
பேதமில்லானீலனெனப் பெற்றவரங்கூறியபின்
என்றிசையிலோர்காலு மெவருமெதிர்த்ததில்லை
உன்றிசையும்பேருரு மோதுகெனவுரைத்தான்
பஞ்சவர்களியாங்கள் பாரரசர்சிங்கமெனத்
தஞ்சமுளமன்னன் றருமனவனென்றமையன்
வாயுமுதலளித்த மாருதிக்குமொப்பானேன்
பாயுமிடும்பன் பகன்சராசந்தனையும்
மேனாள்வதைத்தவய வீமனுமேயென்றமையன்
வானோர்முதல்லாக மன்றுதிக்குப்பாலனையும்
ஆதித்தருத்திரர்களி யாரும்புறங்கொடுக்க
பரிக்குநகுலனெனும் பார்த்திபனுமென்றமையன்
தரிக்குமிளையோன்போர் சாதேவனென்றுரைத்தான்
தாராரும்வில்விசயன் றம்பியென்றசொற்கேட்டு
வீராவுனக்கு விரும்புந்தனங்கவர்ந்து
கொள்கென்றுமேன்மேற் கொடுத்தான்காணம்மானாய்
நீலன்கொடுத்த நெடும்பொருளெலாங்கவர்ந்து
காலன்மதிக்குங் கணையான் கடோற்கசனை
உன்னுமுனமே யொருநிமிஷமுன்புவந்து
மன்னன்சரணம் வணங்கியழைத்தவகை
சொல்கவெனத்தென்னிலங்கை சூறைகொண்டுமீள்கவென்றான்
நல்லதென்றுவாயுவைப்போ னடந்தான்காணம்மானாய்
தென்னிலங்கைபுக்கிச் செருமுனைந்தபேரையெல்லாம்
அந்நிலங்கள்செந்நீர்க ளாறோடத்தான்முருக்கி
தீரன்விபீடணன்றன் றேயநிலைகுலைய
வீரன்கிடுகிடென வீசினான்வீமன்மகன்
பிரசண்டமாருதமாய்ப் பேதமறவீசியதால்
விறல்கொண்டவீடணனும் வேந்தேநீயார்கொலென
தங்கள்குலமாய்த் தகப்பன்வழியுரைதது
உங்கள்குலத்திடும்ப னுற்றமருகனென்றான்
தருமன்மகந்தனக்குத் தக்கநிதிபொன்மணிகள்
திருமன்களிகூரச் சீக்கிரந்தாவென்றுரைத்தான்
நான்றபசியங்கே நடந்துவரமாட்டேனெனக்
கோன்றனையேதன்கைகொடு கும்பிட்டேனென்றுசொல்லி
பொற்பனையோரேழும் பொருமலைபோலேதனமும்

கற்பனைக்கேத்த கடோற்கயனுக்கீய்ந்துவிட்டான்
மன்னனடியை வணங்கிகடோற்கயனும்
தன்னிளையதந்தை சரண்புகுந்தானம்மானாய்
அரக்கன்வருமுன் னரியசகாதேவன்
உரத்தவெழுகலிங்க மோரொட்டுஞ்சூறைகொண்டு
உறவாகச்சென்னிகொங்க னூர்செழியன்தேசமெல்லாம்
திறையேதறவாங்கிச் செந்தமிழ்வாழும்பொதிய
மலையைவடக்குவைத்து மண்டலங்கள்சூறைகொண்டு
மீண்டசகாதேவ மெய்யனைப்பார்த்தேமகிழ்ந்த
கூண்டமலைபோலக் கொண்டானிதிமணியும்
எண்ணிறந்தகோடி யிபச்சுமையோடேமுழங்க
வண்ணமிகுந்த வனகரிதான்சேர்ந்தான்
அன்புடனேசென்ற வறன்மகனையும்பணிந்து
பின்புதுணைமூவரையும் பேராளன்றான்பணிந்தான்
முன்னவர்களுல்வர் முறைமுறையாய்த்தான்றழுவி
பொன்னிதியிரத்தினமும் பொற்பனைந்தான்றான்பார்த்து
நின்னைநிகர்வீரர் நீணிலத்திலாரெனவே
வன்னமலைபோல மாடையெல்லாந்தானெடுத்து
சக்கரப்பொருப்புத் தனையொத்தபேரறையில்
மிக்கபொருட்களெல்லா விரவியேசேர்த்ததற்பின்
தேர்க்குலங்களெல்லாஞ் சிறந்தொருபாற்றானிரைத்து
கார்க்குலம்போன்மற்றக் கயக்கடலோர்பானிரைத்து
புட்குலம்போலேமு புணரியெனமாக்குலத்தை
புட்கருமெச்சப் புரிந்தொருபாற்றானிரைத்து
தானைப்பெருங்கடற்குத் தாவளமுந்தான்வகுத்து
சேனைப்பெருக்கமுளான் செங்கோனெறியுடையான்
எல்லாப்புவிக்கு மிவனேயிறைவனென
வல்லாற்குவல்லனென வாசவன்போல்வீற்றிருந்தான்
தம்பியர்களெல்லோருந் தாழ்ந்தோரொருபடிக்கீழ்
நம்பிநரசிங்கமென நாலுபேர்வீற்றிருந்தார்
முடிகண்முடிகளொடு மோதிநெருக்கமுற
படிகண்முழுதாளும் பாரரசர்சூழ்ந்திருக்க
மந்திரிமார்கள் வகைவகையேசூழ்ந்திருக்க
தந்திரிகள்சேனைத் தலைவர்பலர்சூழ்ந்திருக்க
வளமேவியபஞ்ச வாச்சியங்கடான்முழங்க
தளமேழ்கடற்போலத் தானெங்குஞ்சூழ்ந்திருக்க
சிங்காதனத்திருந்த செங்கோலினான்றருமன்

சங்காழிதான் றரித்த தாமன் றனையழைக்க
நாரதனைத்தானனுப்பி நாகலோகத்தினுக்கும்
வீரமகபதிக்கும் விசயன் றனையழைத்து
ஓலையனுப்பென் றுதிட்டிரனுர்சொன்னளவில்
மாலையனையானும் வாசவனுக்கோரோலை
விண்ணப்பம்வைத்து விரைவாயமரர்களு
நின்றநிலைக்கு நெறிசேர்முனிவர்களும்
எந்தன்மகத்துக் கிசைந்துவரவேண்டுமென்று
சிந்தையுடனெழுதிச் சேரமுடங்கல்செய்து
எவிஞன்முத்திரைவைத் திந்திரன்முன்வைக்கவென்று
மாவில்வலியான் வளைத்தேயனுப்பிவிட்டான்
நாகமன்னர்க்கோரோலை நன்பாகத்தானெழுதி
வாகினெருவாளி வாயில்வைத்தேயெய்துவிட்டான்
திக்கரசரெல்லோர்க்குந் தீரமுடன்றாதுவிட்டான்
தக்கபலபூசுரரைத் தானழைக்கலூகன்விட்டான்
வேதவியாதனெனு மெஞ்ஞானமூர்த்திதனை
சாதமொழிசேரத் தருமன்மனநினைந்தான்
வேதமொழியுமர் விந்தந்தனிலுதித்த
நாதனிவனெனவே நாடிவந்தானம்மானை
வந்தமுனிபாதம் வணங்கினுனவர்களும்
அந்தமுனிமகிழ்ந்தே வாசுரைத்தானவருக்கும்
வேதாவையாசனத்தின் மீதேற்றியைவர்களுந்
தாதாவின்ரூதாவைத் தான்போற்றியேயிருந்தார்
இந்திரனெண்பால ரியல்கின்னரர்கருடர்
கந்தருவருத்திரர் கதிராதித்தர்வசுக்கள்
கின்னரர்கள்கிம்புருடர் கிளர்சித்தாதிகளியக்கர்
முப்பத்துமுக்கோடி தேவர்முதலாக
எய்ப்பற்றநாற்பத்தி னெண்ணுயிரம்ரிஷிகள்
சத்தரிஷிகள் சகலபெரியோர்கள்
சத்தசமுத்திரம்போற் றுன்வந்தாரம்மானைப்
பஞ்சவர்கள்சென்று பணிந்தேபரிந்திறைஞ்சி
அஞ்சலிசெய்தே யனைவோரையும்புகழ்ந்து
வாசவனைச்செம்பொன் மணியாசனத்தில்வைத்து
பாசமுடன்மற்றோரைப் பண்பாயிருக்கவைத்தார்
கண்ணுயிரத்தானுங் காட்சிமணிமண்டபத்தை
நண்ணுகபார்த்தமரர் நாதனெடுத்துரைப்பான்
எந்தன்கொலுமுகப்பு யிங்கிதற்கொவ்வாதுவென்றான்

அந்தகன்கண்ணில்லாதா லங்குவராதேயிருந்தான்
வருணனெனது மனைக்குவிசாலமென்றான்
இருநிதியானென்முகப்பு மிங்கிதற்கொவ்வாதுவென்றான்
இத்தரத்தூண்களெல்லா மிந்திரனென்போலவென்றான்
உத்திரங்களென்போல வொக்குமென்றானக்கினியும்
என்போலுமக்கினிபோ லென்றவரந்தனதன்
அன்பானமண்டபத்தை யமர்ந்துதுதித்ததற்பின்
நாகர்திரள்சூழ நாகமன்னனங்குவந்தான்
ஆகமணிமண்டபங்கண் டவனுமதிசயித்தான்
பத்திரனுஞ்சாத்தகியும் பாம்பணையானுந்தளமு
மொய்த்தமுடிமன்னவரு மூதூரைவிட்டுவந்தார்
தானெதிர்கொண்டு தயவாகப்பஞ்சவர்கள்
மானமுடன்றான் வணங்கியேகொண்டுவந்தார்
பாஞ்சாலன்மக்களுடன் பல்படைகள்சூழவந்தார்
தேஞ்சார்மலர்த்தாரான் சேனையுடன்சூழவந்தான்
மச்சர்கோன்பல்படையு மன்னவருஞ்சூழவந்தார்
கங்கைமகன்விதுரன் காந்தாரிபெற்றமக்கள்
அங்கர்பதியானு மாசாரியுஞ்சேயும்
சகுனிமுதலான சல்லியனுமன்னர்களு
மிகுதிபுடைசூழ வெங்கணரவக்கொடியோன்
வந்தார்தருமன்முதன் மற்றோருந்தானெதிர்ந்து
மந்தாகினிசேயை மன்விதுரனைப்பணிந்து
மன்றலரவக்கொடிய மன்னவனையுந்தழுவி
சென்றார்மணிமுகப்பிற் றேசத்துமன்னரெலாம்
பொன்றார்புனைபுவியிற் பூபரெலாம்வந்துறைந்தார்
வானவருமன்னவரு வந்தவந்தபேர்களெல்லாந்
தானிரைந்தமண்டபத்தின் சந்தந்தனைப்புகழ்ந்தார்
தருமனரசுரிய சம்பத்துக்கொப்பாக
அரசையிணைபகர லாணிமுத்துமாமணக்குஞ்
செம்மணியுஞ்செங்கலுமாய்ச் செப்புதலாமென்றுபல்கால்
எம்மன்னவரு மியம்பினராம்மானாய்
இரதநெருக்கு மிபநெருக்குமன்னவர்கள்
பரியினெருக்கும் பதாதிகளின்றன்னெருக்கும்
வீதிமறுகினிலும் வெண்ணகையின்வாயிலினும்
ஓதுகடைத்தெருவு மோயாதசந்தடியாற்
போபோவெனவே புகலும்பலதொனியும்
மாபறவைக்கின்னரங்கள் வாசிக்கும்பேரொலியும்

தேரினுருளொலியுஞ் சேர்ந்தசகடத்தொலியும்
வீரமதகயங்கள் வீரிடும்பேரொலியும்
புரவியனுமனிப்பும் பூபாலரொக்களிப்பும்
முரசுமுதற்பஞ்சக் கருவிமுழக்கொலியும்
பல்லொலியுமிஞ்சும் பரவையொலிமாறுகினும்
நல்லநகரோதை நாளுமறாதொலிக்கும்
அந்தநகரி லமரரிஷிமுதலோர்
மகைந்துசெறிபல்பூமி மன்னர்மறையோர்கள்
சோடித்தலங்கரித்துந் துப்புநகர்சேர்ந்ததற்பின்
க்ஷேமதனூலைச் சிங்காரமாக்கிவைத்து
எண்ணிறைந்தமன்ன ரிமையோருஞ்சூழகடக்
கண்ணிறைந்தகாட்சியுடன் காமசிங்காதனத்தில்
அரசர்க்கரசா யறன்மைந்தன்வீற்றிருந்தான்
வேள்வியிடத்தினிலே வேதியர்மகாரிஷிகள்
தாளிவீசல்வேழூ சமுத்திரம்போல்மொய்த்தனரோ
பாரதத்தைமேரு பதியப்பகர்ந்தமுனி
தாரறன்சேயல்லாது தம்பிமார்நால்வரையும்
கருதியழைத்தவனாக் காதிலொருசேதிசொன்னான்
எரியிற்பிறந்தாளை யின்றளவுமைவர்களுந்
தாரமாவைத்திருந்தீர் சாதகமாயின்றுமுதல்
வீரமுரசுயர்த்த வேந்தனுக்கேதாரமென்று
தாயுந்தகப்பன் றருமன்றிரௌபதியும்
ஆயகுந்திதீயில்வந்தா ளண்ணனையும்பாண்டுவென்று
இன்றுமுதலெக்காலு மிசையுற்றிசைந்திருப்பீர்
தாள்விலாத்தர்மன் றழலிற்பிறந்தாளும் (இது புதியகவிகள்).
வேள்விக்குரித்தாவா மென்றான்வியாதனுமே
தருணமிதுமுகூர்த்த சமயமெனச்சேடியராற்
கருணைமிகுபாஞ்சால கன்னிதிரௌபதிக்குந்
தருமபூபாலன் றனக்குந்தைலமிட்டு
பொருனைகங்காதீர்த்தப் புனிதனீராட்டுவித்து
மகத்திற்குரியபணி வஸ்திரமுந்தான்றரித்து
அகத்துணைமொ லருள்வீடுமென்பதமுஞ்
சுகுர்த்தில்வணங்கியெக்கு தூமத்திடநெருங்கி
பகுத்தியுள்ளவீமனொமுன் பார்த்தேயறன்பாலன்
அரிசூழுலகத் தரசர்குழாமெண்ணடங்கா
வரிசையுறுமற்றுசுற்ற மன்னர்க்குணவடிசில்
தரிதுமுடனமைக்கச் சொல்லியும்விற்பாத்தனோ

புரியுந்தொழும்புகுந்த புஷ்பபலவாசனையும்
அளிக்கநகுலசகா தேவனடைக்காயிலைகள்
ஒளிருமிரவிக் குரியசுதனைப்பார்த்து
செளியத்தனதானஞ் செய்யவிடைகொடுத்துத்
தெளிவாய்ச்சுயோதனனைச் சேர்நிதிகள்பல்பொருளும்
பாதுகாப்பாய்நெறியின் பக்தியுடனென்றுரைத்து
தாதரசர்க்கெல்லாந் தகுந்தலைகயிங்கிரிய
நீதமுடன்றர்மன் னிகழ்த்திமகமேகி
மாதுதிரௌபதியை வலப்பாகமேயமைத்து
அனலுக்குவமையுறு மந்தணனையும்வணங்கித்
தனஞ்சயனைப்போலொளிருந் தர்மபரிபாலன்
கனகரித்தொக்குடையான் கன்னியிடமாறி
தலைதிலிருந்ததுபோற் றர்மனிருந்ததுவே
கலையினுரியிடையிற் கட்டிவேள்விக்குரிய
கலையுமிலக்கணமாங் கன்னியுடனிருத்தல்
கலையாற்கண்மூடிமதி கண்டதொக்குமோமவன்னி
கலையாதெழுதுமங் கன்னிதன்மனைச்சூழ
பானுகிரணமுகிற் பண்பாய்மறைத்தலொப்பாம்
ஆனகரிதொக்குதன்ம னங்கமுறுவேள்விநெறி
ஞானமுறும விலக்கணத்தோடேகுசைகள்
நானமுருவேள்வி நான்குதிசைக்கமைத்து
மூன்றக்கினிமாண் முகங்களைமூட்டி
ஆன்றசுருவையினெய் யள்ளியவிற்களித்து
தோன்றமறையார் றெனியங்கியின்முகமாய்
ஊன்றுகுதிசெய் தெழிலாய்முனிவரர்கள்
வேதன்முதலாய விண்ணோர்களுஞ்சூழ
போதெழுநாப்பொங்கப் புரிந்தேழுநாளோமஞ்
நீதிலாப்பாண்டவஞ் செய்தவுருவேதருமன்
கோதிலாயாகங் குறைகளின்றியேமுடித்தான்
பன்முகமாய்த்தெய்வவவிற் பாகமளித்தெழுந்து
தொன்சுவாகாதேவி துணைவன்றனைவணங்கி
முன்னுளிமையமதின் முளரியோன்செய்மகம்போல்
இன்னாட்டருமன் னியல்பாகச்செய்தனனே
கங்காசலத்தாற் கதிர்குண்டத்தின்னிரைத்து
மங்கையொடுஸ்நானம் வகையாய்முடித்ததற்பின்
துங்கவானோர்கண்மலர் தூவரிஷிகணங்கள்
மங்களவாழி மறைநாரதர்முழங்க (இதுவரையிலும்)

மாயன்பதமும் வருணன்மகன்பதமும்
தூயவிதுரன் றனைத்தாளையும்பணிந்து
முக்குலத்தின்மன்னர்களின் முன்பூசைகொள்வதெவர்
மிக்கவர்கள்சொல்லுமென்று வீடுமனுந்தான்கேட்க
அக்கிரபூசைக்குரிய ராமாலையல்லதென்று
மிக்கவியாதன் விளம்பினன்காணம்மானய்
வேதன்குலத்தோன் விளம்புமொழிகேட்டு
சேதுப்பதியான் சிசுபாலன்கண்சிவந்து
இதையங்கருகி யினியமுகங்கடுத்து
உதையனெனப்பார்த்தா னுறவர்முகங்கூசப்
பூபாலர்பூசை புறங்கானிலேவாழும்
கோபாலனேபெறுவ னென்றேகொதிகொதித்தான்
செவ்வேளும்வேள்போற் றிறலும்புகழுடையோன்
ஒவ்வாப்புகழா னுறவோனைப்பார்த்துரைப்பான்
இந்துகுலத்தோ ரிரவிதருங்குலத்தோர்
செந்தீதருங்குலத்தோர் சேரவிருக்கலுற்றூர்
பேர்பெற்றமன்னரெல்லாம் பேசாமலேயிருக்க
வீரத்தின்மிக்கோர் வியன்செல்வமிக்கோர்தான்
ஆளழகின்மிக்கானே வாயர்குலமோமேன்மை
வாள்வலியின்மிக்கானே வளவன்போனீதியனே
அயன்குலத்தோனுதலின லச்சமிலாதோதிவிட்டாய்
பயனற்றபேய்முலைப்பால் பட்சித்ததல்லாமல்
விந்தன்மனைதோறு மேவியடக்குருட்டி
சந்ததமும்வெண்ணெய் ததிபால்கவர்ந்ததற்கோ
இரவும்பகலு மிடைச்சியரைச்சேர்ந்ததற்கோ
மருவுமகப்பையினு மத்தினடிபட்டதற்கோ
காச்சியபால்வெண்ணெய் களவுசெய்யத்தானுரலில்
ஆச்சிபிணித்தடித்த வப்பெருமைதன்னலோ
பேதைமுதலாகப் பேரிளம்பெண்ணீருக
கோதையரைத்தொக்காடற் கொண்டகுணத்தாலோ
நீராடும்பெண்க ளணடுந்துகிலைத்தானெடுத்துப்
பாரோர்நகைக்கவெகு பங்கங்கள்செய்ததற்கோ
வாய்க்கால்வரம்பு வயற்காபுன்னையடி
பேய்க்காளிகோட்டம் பிராய்புங்குகொன்னையடி
அரசுமிலந்தைபுளி யாலத்தியாத்திசம்பு
புரசுகுந்திசிச்சில் பூவந்திவாகையடி
ஈமவனம்புத்தடியு மீத்தம்புரையடியும்

மாமருந்துயேரிகளா வட்டத்திடலடியுங்
கோயிற்றலங்களிலுங் கோபாலன்பெண்கடனை
மாயிச்சைகொண்டு வரையறவொன்றில்லாமன்
முறைமையில்லாமன் முன்மாமியைப்புணர்ந்தான்
இறைவர்க்கதிக மிவனென்றேசொற்றதுதான்
மாமனைமுன்கொன்றதற்கோ மாமனுடன்மாமனமர்
தோமறவேசெய்யுமுனந் தோற்றோடிப்போனதற்கோ
கடலிலொளித்ததற்கோ காளியன்முன்னின்றதற்கோ
அடலிலருச்சுனனுக் கன்றுபுறமிட்டதற்கோ
முற்பூசைகொள்ளு முறைமையென்றுவாயிரஞ்சொல்
தப்பாதுநிந்தனைசெய் தானேசிசுபாலன்
நிந்தனையாயிரஞ்சொன் னீதிகெடப்பேசுமட்டும்
உந்திபூத்தோனேது மோதிடாதுண்மகிழ்ந்து
பாரானொருவனையும் பார்த்தனையேபார்த்திருந்தான்
ஏரான்வடிவா யிரஞ்சொன்முகிந்தசற்பின்
நெஞ்சங்கருகி நெருப்பாரக்கண்சிவந்து
வெஞ்சமர்செய்ய வெளிக்கேவாவென்றுரைத்தான்
போருக்குச்சாய்ப்பானோ பூபன்சிசுபாலன்
மார்தட்டிப்பேசியுனை வாய்கிழிப்பேனென்றெழுந்தான்
சொன்னதிறம்போலத் தொல்லுலகின்மன்னர்மெய்க்க
மன்னவாவென்னைவென்று வாகையணியென்றுரைத்தான்
ஜயமெனத்தனது தேரிலே மாலேற
மாயனுருத்தெழவே மன்னனுந்தேரேறினனே
நகரப்புறத்தினிலே நாரணனுமன்னவனும்
உகமற்றிறுதியென வுற்றெதிர்த்தானம்மானாய்
இருவர்கடஞ்சேனை யெல்லாமமர்மூண்ட
ஒருவர்க்கொருவர்களா யுற்றெரித்தாரேபோரில்
தேரோடுதேருவயத் தேர்ப்பரியுந்தேர்ப்பரியும்
சாரதியுஞ்சாரதியுஞ் சார்கொடியுஞ்சார்கொடியும்
பசுபாலனொடுசிசு பாலனுமேபோர்மூண்டார்
வசமாயிருதேரு மாறுமலேநடத்தி
சேடன்முடிநடுங்கத் தேரைமுடுகவிட்டார்
வாடைச்சுழலெரிய வாரந்தனைவளைத்தார்
மாகவெளியடைத்தார் வாளிமழைசொரிந்தே
தாகமுடனம்போடம்பு தான்பொருந்திநின்றதல்லால்
ஒருவருடறனிலு மோர்கணையுந்தைத்ததிலை
இருவருவிற்போ ரிழந்துபலவாயுதமும்

கொண்டெடுத்திங்ஙன் றுநின்று கோபமிகத்தானுகி
மண்டுவேற்சூல மழுமுதலாய்த்தானேச்சி
இகற்சிங்கமீண்டு யிளைத்தசருணமதின்
மிகச்சுடராழிதன்னை விட்டான்முகிலோனும்
வான்புவியுமோரொளியாய் மண்டியெரிபரப்பி
நான்கிரண்டுவெற்பிபமு நாகநடுநடுங்க
பருதிநடுநடுங்கப் பரவைகொதித்தெழும்பச்
சுருதிநிகராழி தொல்லுலகோர்கண்மயங்க
ஓரொளியாய்ப்பம்மி வுலகெலாந்தானுகி
தீரமுடன்சென்று சிசுபாலன்றன்சிரசை
கருக்கென்றறுத்து கடற்சென்றுதான்மூழ்கி
அருக்கனனந்தமதொன் றனதுபோலமீண்டு
கண்ணன்சரணக் கமலமணுகியதே
அண்ணல்சிங்கநாத முழக்கினனண்டர்மெச்ச
சிரமண்டமுட்டத் திகிரியறுத்தபின்பு
வரமிஞ்சவனுடலில் வண்ணமுடனோர்சோதி
சுடரைப்பிளந்ததண்டந் தொட்டெத்திசைவிளக்கி
திடமுற்றமாலடியிற் சேர்ந்துறைந்ததம்மானுப்
எல்லவருங்கண்டிந் திரசாலமோவிதென
வல்லவரும் வாக்கு மனமுமதிசயித்தார்
பொருத்தான்வெகுநேரம் புன்மதியான்மென்மேலும்
ஒருக்காமனிந்தை யுரைத்தான்பின்னென்னசெய்வான்
குணமென்னுங்குன்றேறி நின்றார்வெகுளியொரு
கணமேயுங்காத்த லரிதன்றே காவலரோ
என்றுபலமன்னவரு மியற்பஞ்சவருமெதிர்
சென்றுபணிந்து திருச்சபையிற்கொண்டுவந்தார்
மன்னவரெல்லா வழுத்திமுறைமுறையாய்
சென்னிபதம்வைத்தரிய சிங்காதனத்தேற்றி
இறந்தோன்சரிதை யெவர்க்குநனிவிளங்கச்
சிறந்தவியாதனையே செப்பென்றேகேட்கலுற்றார்
கங்கைமகன்முதலாங் காவலர்கடான்கேட்க
துங்கவியாதன் றெருகுத்துரைததானம்மானுய்
ஒன்றாயிருசுடரா யோர்மூன்றாய்நான்மறையாய்
அன்றார்க்கும்பூதமதா யாறுதாரப்பொருளாய்
அணுவுக்கணுவா யகண்டவெளிக்கேவெளியாய்
தினையிற்றினையாய்ச் செலத்திற்செலமயமாய்
உருவுக்குருவா யுயிருக்குயிர்மயமாய்

கருவிற்கருவாய்க் கலந்திருக்குமெய்ப்பொருளே
வைகுண்டவாசன் மலரடியைத்தான்வணங்க
மெய்கொண்டுசென்ருன் விரும்பியொருமுனிவன்
மிக்காம்வைகுந்த மெனுங்கோயில்வாயிலிலே
சிக்கானகாவற் செயுந்துவாரபாலர்
துருவாசமாமுனியைத் தோற்ருதிருவர்களும்
வெருவாதுதான்றடுத்தார் வினவுமொழிகேளாதால்
தடுத்தவிருவரையுந் தன்பதவிதான்குலையக்
கொடுத்தான்கடுஞ்சாபங் குவ்விற்பிறக்கவென்று
மாலைமுனிபணிய மாமுனியைத்தான்பார்த்து
சீலமுடனிச்சாபந் தீரும்வகைகூறுகென்ருன்
மாதவன்கேட்க மலர்ப்பாதந்தான்வணங்கி
நாதனேநண்பானு னண்ணுவாரேழ்பிறப்பு
சத்துருவாய்வந்தாரேற் ருன்பிறவிமூன்றுசென்று
மித்துருவாயுன்பாத வீடடைவரென்றுரைத்தான்
கடைகாவலரைமலர்க் கண்ணன்முகநோக்கி
தடையாளரேயுமக்குச் சம்மதித்தலோதுமென்ருன்
நட்புடனேழ்பிறவி நாங்கடொலைக்கரிது
முப்பிறவியும்பகையாய் முகுந்தாதொலைத்துனடி
சேரவரந்தருவாய் செம்மலெனக்கேட்டிடைய
வீரமுகிலும் விடைகொடுத்தானப்போதே
இரணியனென்று மிரணியாக்கனெனுமே
முரணினுடனுலக மூன்றுநடுக்கமுற
கொடுமையவன்புரியக் கொற்றநரசிங்கமென
அடுமையுடையோரை யப்பிறவிமாற்றிவித்தான்
அசுரப்பிறவிதொலைந் தரக்கர்பிறவியுடன்
இசையுமிலங்கைக் கிராவணனுந்தம்பியுமாய்
வந்தானந்தப்பிறப்பு மாற்றினனிம்மாயன்
இந்தார்குலத்தி லிவன்மாமன்கஞ்சனென்றுஞ்
சிசுபாலன்மைத்துனனுய்ச் செகத்திலேதான்பிறந்தான்
பசுபாலனிப்பிறப்பும் பாசமாய்மாற்றிவித்தான்
மாயன்பதந்தானே வைகுந்தமுங்கதியும்
ஆயதாலன்னு னுயிரடியிற்சேர்ந்ததென்ருன்
இக்கதையைக்கேட்டிறைவ ரெல்லோருமாலடியை
மிக்கதெனப்பணிந்தார் மென்மேலுமேதுதித்தார்
இந்தக்குணஞ்சினத்தோ டெவராயினுமெவனை
நிந்திக்குநாளேயெல்லா நீங்கினைவென்றமுனி

சொல்லவரசரெல்லாந் துக்கித்துடறனுக்கி
வல்லமுனியே வகையேதெனக்கேட்டார்
மான்மாயைபொல்லாத மாய்கைகாண்மன்னவரே
கான்மாயையல்லாக் கனைகாணுமாயைகண்டீர்
சாய்கைபிரியத் தலங்கடனைச்செய்தாலும்
மாய்கைபிரிக்கும் வகையெவர்க்குங்கிட்டாது
எங்களையுமீசனய னேற்றமுள்ளமாரனையும்
இங்கெவற்குவிட்டகன்ற தில்லைக்காண்மான்மாயை
ஒங்களையெவ்வா ரெருழியுமுறவோரே
அங்கதுவில்லாதிருந்தா லரியவுலகுயிரும்
எவ்வண்ணமாக விசைந்துபயிராகும்
அவ்வண்ணத்தாலே யழகாச்சுதென்றுசொன்னான்
அப்போதுமாய னருங்கோபந்தானீங்கி
இப்போதுநான்மறையோற் கின்சிறப்புச்செய்கவென்று
செப்பற்றருமன் றிகழ்பூசனைமுறையாய்
துப்புடனேசெய்து துதித்தேயவராசி
பெற்றுமகிழ்ந்து பிராமணனைத்தானனுப்பி
உற்றகிளைஞ ருறன்முறையுந்தானனுப்பி
காவலர்க்குயாசகற்குங் கனமானபூசுரற்கும்
பாவலர்க்குமங்கைய்பூ பாலனுதவுதல்போல்
பொன்மாரியாகப் பொருவிலாதேழ்நாளு
நன்மாதவக்கன்ன னற்கரங்கடாஞ்சலிக்க
இரவும்பகலாக யேழ்நாளுமோயாமல்
இருகையால்வாரி யிரப்போர்க்குவீசிநின்றான்
ஏற்றோர்களெல்லா மிராசபதவிபெற்றார்
காற்றேயிரந்தோர்கள் காவலர்களுமேலானார்
தேவரிருடிகளுஞ் செம்பொன்னகர்சேர்ந்தார்
காவலருந்தங்கணகர் காணகடந்தனரே
துளபமணிமார்பன் றுவாரைப்பதிசேர்ந்தான்
வளவனொடுசேரன் மால்பாண்டியனுமெய்தான்
சூரன்விராடன் றுருபதனுமூர்சேர்ந்தான்
அரவ கொடியோனை யரன்மகனுந்தான்விரும்பி
மரபிற்குரியோயென் மாளிகையெல்லாம்பார்த்து
இன்னஞ்சிலநா ளிருந்துபோவென்றுசொன்னான்
கன்னனுடன்மன்னன் கருதிமகிழ்ந்திருந்தான்
பல்பகலாயன்னம் பருகியிருக்குமன்னாள்
வில்பரவுமாளிகையை வேந்தனுலவிப்பார்த்தான்

சுற்றியேபார்த்துவருந் தூரியனிருகண்ணெதிரே
பற்றிநெருப்புப் பரவியெரிவதுபோல்
கண்டான்பயந்து கலங்கிச்சுடுமெனவே
வண்டாடுமார்பன் மருதிசையிலேநடந்தான்
அற்றிசையிற்றண்ணீ ரழகானவட்டமென
வெற்றியுள்ளவீரன் விழியிலேதான்றோற்ற
துயில்பலவுநீத்தோர் துகில்புனைந்துநீராட
அயில்செறியுங்கையா னமர்ந்தமர்ந்துகாறாக்கி
வைத்தானிவைகளெல்லா வன்னிதனிற்பிறந்தாள்
கைத்தாயர்தங்களொடு கண்டுசிரிகலுற்றாள்
வீமனைகைத்த விதமேதெனவினவி
தாமனதுங்பொகியவன் றானுஞ்சிரிக்கலுற்றான்
இந்தவிதங்கண் டிராசாதிராசன்மன
நொந்துமுகங்கருகி நோக்கியவளைப்பார்த்து
மானபங்கமாய்ச்சபையில் வாங்குவேனுன்றுகிலைத்
தானிதுசெய்வேனெனவே தன்னிற்சபதமிட்டு
வெட்கிமனமிடைந்தே விள்ளாதுவுள்ளொடுங்கி
நட்பினுடன்சிலநா ணல்விருந்துதானருந்தி
வீடுமனும்வல்ல விதுரன்முடிமன்னவனும்
ஆடம்பரமா யவர்நகருக்கேகினரே
மன்னவர்களெல்லோரு மற்றோர்பெருந்தளமுந்
தன்னகரிலன்புவைத்து தானடந்தாரம்மானாய்
திக்கரசற்கெல்லாந் திறத்தவரசனெனத்
தக்கமுடிமன்னரெல்லாந் தாழ்ந்துதிறையளக்க
தெரிமன்னரெல்லாந் தினமுமடிவணங்க
தருமன்றருமனெனத் தாரணியெல்லாந்துதிக்கப்
பொங்கினசெல்வம் புகழ்வளரப்பூவளர
எங்கும்விளங்க வினிதாகவாழ்ந்திருந்தார்
எள்ளளவுஞ்சிந்தை யிரக்கமில்லாமாபாவி
உள்ளஞ்சுடச்சுடப்போ யூர்புகுந்தானம்மானாய்
அன்னமிழந்தா னருந்துயிலுந்தானிழந்தான்
தன்னைமறந்தான் சலித்தான்பரதவித்தான்
எண்ணாதுயெண்ணி யிடைந்துருகியேமனது
புண்ணாகிநொந்து புலம்பிமனம்புழுங்கி
ஊமையன்கண்ட வுறுசொற்பனம்போலே
தீமையுடையவன்றன் சிந்தையிலேவைத்திருந்தான்
மகிட்சியுடனிருந்தார் வண்மையுள்ளபஞ்சவர்கள்
இகட்சியுடனிருந்தா னேதமில்லாமாபாவி

## சூதுபோர்ச் சருக்கம்

ஞானமாகியபரம்பரவமுதமாய் நவிறருமயக்காகி
வானமாயுடன்வாயுவாய்த்தேயுவாய் வனமுமாய்மண்ணுகித்
தானமாமறைமுறைமையிற் பற்பலசராசரங்களுமாகி
ஏனபாயிவையனைத்தையு மருப்பினுலேந்தினுனெனையாண்டோன்

——ஃ——

அடங்காச்சிறப்பா யரசர்முறைவணங்கத்
துடங்காவிராச சுயாகமுடிந்ததற்பின்
சீராந்தருமனுட செல்வந்தனைநினைந்து
தீராப்பொருமை துரியனதுதேகமெல்லாந்
தன்னிதையத்துள்ள சலிப்பெவர்க்குஞ்சொல்லாமன்
மன்னவர்கண்மன்னன் வணங்காமுடிவேந்தன்
கங்கைமகனங்கர்பதி காரினையவில்விதுரன்
துங்கமிகுஞ்சகுனி துணைவரையுந்தான்பார்த்து
என்னுடயவெண்ண மிதையமறியவல்லீர்
மன்னவரோயோர்ந்து வழுத்துமெனக்கேட்டான்
உரகத்துவச னுரைத்தகுறிப்பறிந்து
இரவிபுதல்வ னியம்பலுற்றுனென்னவெனில்
துரும்புதூணுச்சுதென்றுந் தூண்துரும்பாய்ப்போச்சுதென்று
விரும்பிநீயெண்ணுகின்ருய் வேந்தேவினவுதல்கேள்
என்செனனந்தோன்றி யிறக்குநாளுள்ளவு
மன்செய்மகமுகத்தில் வண்மையுடனேழ்நாளில்
ஈந்தகொடையதனுக் கிலக்குத்திலொன்றெடுத்துப்
போந்துமுறைவைப்பதற்குப் போதாதேமன்னவனே
இத்தனைநாளீய்ந்த வெனதுகுடையுள்ளதெல்லாம்
சத்தியமாய்க்கோடி தனக்கொன்றுகாளுது
என்னகொடுத்தாலு மென்கைசலியாது
தன்னிலமையாய்க்கை சலித்துதந்தவேழ்நாளும்
சீர்பெற்றபஞ்சவர்கள் செய்தபலாபலன்போல்
ஆர்பெற்றூர்பூவி லரசாண்டோரொன்றுரைத்தான்
உட்சுவரைவிட்டுப் புறச்சுவரைக்காக்கவலான்
விட்சுரபியொற்ற விதரணவான்சொன்னதற்பின்
உற்றதுசொன்னுயென் றுரகக்கொடிவேந்தன்
மற்றவரையெல்லா மலர்முகம்பார்த்தேதுரைப்பான்
நாம்வாழ்ந்தவாழ்வு நமதுதிரவியமுந்
தேம்வாழ்ந்தபஞ்சவர்கள் சீர்தனமுஞ்சீர்தூக்கில்
பாற்குடமும்பார்க்கடலும் பான்மைபோலொத்ததென்றுன்

காக்கின்றவங்கமுமோர் கார்க்கடலுமொத்ததென்றன்
பல்கோடிபேரிலொரு பஞ்சையாய்க்கண்டதல்லால்
நல்காரணமகத்தி னுமதிசம்பெற்றதுண்டோ
அற்புதமாமன்ன ரதிலொருத்தனுயிருந்தோந்
தற்பிதமேயல்லவதிற் சங்கைபெற்றகாரியமென்
பூவுலகிலுள்ளோரும் பொன்னுலகிலுள்ளோரு
மூவுலகிலுள்ளோரு மொய்த்தபெருஞ்சபையில்
என்போலுமன்ன ரிருப்போர்க்குகீழ்மையல்லால்
மன்பானமேன்மை வலுநடந்ததுண்டோசான்
எண்ணிறந்தமன்னரவ னேவல்செய்வோர்தன்னிலொன்றாய்
நண்ணியுள்ளதம்பியரு நானுமேயானதன்றோ
இந்திரனொண்பால ரிமையோர்மகிதலத்தோர்
வந்தவன்சொற்கேட்டு வணங்கித்துதிபரவ
எல்லார்க்குமேன்மை யிவனென்றேயாவர்களுஞ்
சொல்லாற்புகழச் சுகம்பெற்றானேதருமன்
தம்பிமாரெல்லோருந் தானேவலியனென்றே
உம்பர்களுமெச்ச வுயர்ச்சிவிறல்பெற்றாரோ
ஆயனொருவனையு மந்தச்சபைமதிக்கக்
காயங்குளிரக் கனசிறப்புச்செய்துவந்தார்
நெறியரசர்க்குள்ள நிலைமைமுதற்பூசை
தொறுவர்வறவதல்ல வென்றதுணைமன்னரெல்லாஞ்
சொல்லப்பயந்தாரோ தோன்றலவன்றற்செயலை
எல்லையறக்கண்ட வியல்பையெடுத்துரைத்தான்
ஞாயவசன னவிலுகின்றமன்னவனை
மாயமுடனே மடிவித்துகொன்றுவிட்டான்
ஊர்க்காலேகிறியது வாய்க்காலாயாறுச்சே
ஆர்க்காகிலுந்தா னவன்போலுமேன்மையுண்டோ
இன்னஞ்சிலநாளி லென்னரசுங்கைக்கொளுவான்
பின்னுன்னமையடைந்த பேர்க்கெல்லாம்பங்கம்வரும்
முளையிலேகிள்ளாமன் முழுவயிரமுண்டானால்
வளையுங்கருவியெல்லாம் வாயொடிக்குங்கண்டீரோ
இன்பமுள்ளசெல்வமெல்லா யான்கவராதேபோனால்
வன்புடனேயார்முடிக்க வல்லாரெனவுரைத்தான்
போரின்வலியாலும் புன்வஞ்சகத்தாலும்
சீருளதையெல்லாஞ் சினத்திற்பறிப்பனென்றான்
மாமனசகுனி மருமகனைத்தான்பார்த்து
பூமகனேசிங்கம் புறம்போகாதேயொளித்தால்
விரவுமதமா விடுமோதுரத்தாமல்

கரியெதிர்த்தாற்சிங்கமென்று நாங்கேட்டதுமிலையோ
துன்னியவாய்நஞ்சொழுகுந் துச்சாதனக்கொடியோன்
முன்னவன்மெச்ச மொழியலுற்றனம்மானுய்
இருளறுக்கவல்லதொரு விந்துதிறமானாலும்
பருதிதனக்கெதிரோ பஞ்சவரோநம்முன்னெதிர்
என்றிளையோன்சொல்ல விராஜாதிராஜனெனும்
துன்றுவிடமன்ன துரோகியெடுத்துரைப்பான்
வாயுசுதனெருப்பில் வந்தவளுமேனகைத்த
ஞாயமறிந்தீரோ நான்பங்கமானதினால்
அன்னுடனேயே யவையிலேமானபங்கங்
கொன்னுதுசெய்தாலென் கோபந்தணியுமென்றான்
தன்வலியுந்தம்பியர்க டக்கபெருவலியும்
முன்வெண்ணெயுண்ட முராரிபெருவலியும்
கொண்டெனதுதேயமெலாங் கொள்ளமனநாடி
மண்டலத்திலுள்ளபல மன்னரையெல்லாமடக்கி
தன்கைவசப்படுத்தித் தானேர்மகமெனப்பேர்
வன்கைகொடுசெய்தான் மதித்தறியுமென்றுரைத்தான்
பின்னுமரவுயர்த்தோன் பேரவையையழைக்க
உன்னுமுபாய முளதொன்றதுகேளீர்
சல்லியனுஞ்சாலுவனுந் தான்போதுமாயவனைக்
கொல்லுதற்குவெல்லுதற்குங் கொற்றவரோமற்றவர்கள்
ஐவர்மேற்சென்றே யவர்கள்சிரமறுத்துக்
கைவலியால்வஞ்சகத்தாற் காசினியைக்கொள்வமென்றான்
வஞ்சனையின்மிக்கான மாயவனைக்கொல்லத்தேவர்
எஞ்சொலுரைகேளென் றிரவிமகன்சொல்லுவான்
வஞ்சனையாய்ப்பஞ்சவரை மாய்ப்பதறமுமல்ல
கஞ்சனைவென்றோனவர்க்குக் கைக்குதவியாகுமுன்னே
இப்போதேபஞ்சவர்க ளெல்லாரையுஞ்செயித்து
தப்பாதவர்தேயந் தானுனக்கேயாக்கிவைப்பேன்
இகற்குற்றனஞ்சயனை யெய்தோர்கணையாலே
தகப்பன்பதஞ்சேரத் தானேயனுப்பிவைப்பேன்
மற்றவர்களாரொன் வரிவிற்றனக்கெதிரோ
நிற்றல்குறியார் நிருபனேயென்றுரைத்து
ஈதலால்வஞ்சனையா லிப்புவியைப்பெற்றாலு
மாதலத்துமன்னர் மதிக்கரிதுகீர்த்தியல்ல
ஓர்த்தியுடனிப்போதே சேனைமன்னருந்திரண்டு
மூர்த்திவருமுன்போர் முடிக்கவெழுகவென்றான்
தருவன்றான்சொல்லச் சகுனிகொடும்பாவி

நிருபனேகன்னனன்றி நிற்பதார்பார்த்தனெதிர்
பானுவெனக்கீர்த்திகொண்ட பார்த்தனுடனாடி
வானுலகின்மன்னுலகின் மற்றவனுக்கொத்தவரார்
அரக்கர்படையு மசுரப்பெரும்படையும்
உரக்குமனுப்படையு மும்பர்பெரும்படையும்
எல்லாந்திரண்டெ யிகலரசருந்திரண்டு
வில்லாளியைச்சூழ்ந்தான் மின்னல்வெட்டிமாறுமன்னோ
முப்புரத்தைநீறுக்கு முன்னவனைப்போலெரிப்பான்
ஒப்புடனேபார்த்தனெதி ரோர்நிமிஷனிற்பதேவர்
இடும்பன்மகனை யிகற்சராசந்தனையுங்
கடும்பகைதான்செயித்த காளையெதிர்நிற்பதெவர்
சொல்லுதலியாற்கு மெளியதரியதவர்
சொல்லியவண்ணஞ் செயலன்றேதொல்வேந்தே
ஒர்வில்லுக்காற்று துறவரெல்லாம்பங்கமுற
வார்வில்லைப்பார்த்தன் வளைத்தபோதச்சபையில்
இங்கிருந்தவீரருட னியாருமிருந்திலமோ
அங்கவர்சாட வலக்கழிந்தேமீண்டிலமோ
அப்பதியையான்றருவ தல்லாற்றருவதெவர்
தப்பறச்சூதாற் சதித்தறகுதியென்றான்
மாமனுரைத்ததுவே வண்மையுள்ளபுத்தியென்று
ஆமென்றான்றச்சா தனனென்னும்வன்கொடியோன்
வாதுற்றபோர்க்கு மயங்கார்களைவர்களும்
சூதுக்குத்தோற்பரென்று துச்சாதனன்சொலவே
நாவரசுந்திர்ந்து நயனமுகங்குளிர்ந்து
ஆவன்மகிட்சியுட னம்மானைத்தானழைத்து
வேந்தர்தனைச்சூதில் வெல்லும்வகைசொல்லுகென்றான்
காந்தியுடன்பஞ்சவர்கள் கட்டுகொலுச்சாவடிபோற்
பண்பாயமைத்ததனைப் பார்க்கவழைப்பதுபோல்
நண்பாயழைத்தூவைத்து நல்விருந்துசெய்யுமுனம்
போதுகழிக்கும் பொருட்டாய்மயக்குவித்து
சூதுபயிலளவுஞ் சொல்லிமயக்கிவைத்தால்
சத்தியமாகச் சதித்தவன்றனாட்டையெல்லாம்
புத்தியுடன்றருவேன் பூபனேயென்றுரைத்தான்
உறுதியாய்மாம னுரைத்ததேதந்ததுபோல்
பொறையொத்ததிண்புயமும் பூரித்தறிவழிந்தோன்
மன்னுவிதுரனுக்கு மாமனுரைத்ததெல்லாஞ்
சொன்னபடிகேட்டவனுஞ் சொற்கெதிரிசொல்லலுற்றான்
அவ்வரசுவாழ்வு மவன்றேசம்வேணுமென்றால்

சூவ்விடராஞ்சூது கொடுகவரவேண்டாங்காண்
ஐயாநின்றந்தை யளியென்றோரோலைவிட்டால்
பொய்யாதுதேசம் புரக்கவுனக்களித்து
மெய்யாயெரிவனத்தை வேந்தேயவர்கொளுவார்
எய்தாதுலகமெல்லா மேகமாய்நீயாள்வாய்
பாவம்பழியும் பயிலுங்கொடுஞ்சூதும்
பூவுலகிலாகாத புன்செய்கைகண்டாயே
தீதுவருத்துவிக்குந் தீதானவஞ்சமுறுஞ்
சூதுகொடுவெல்வதுவே தோற்றம்புகழுமல்ல
ஈசற்குமால்க்கு மிறைக்குமேயோர்க்காது
தேசத்தரசர் செவிபொத்தித்தூஷணிப்பார்
கன்னனுக்குயிந்தமட்டுங் காணாதேயைவருக்கு
மன்னவனேநீயளித்த மாநாடுதேசமெல்லாம்
மெய்வருத்தப்பட்டொரு வேள்விதனைமுடித்தால்
ஐவருக்குமிக்காக வன்பாய்நீயோர்வேள்வி
செய்யத்திறமிலையா தேசமன்னராஞ்சாரோ
ஐயமறவே யஸ்வமகஞ்செய்வதற்கு
பன்னிப்பரிபிறகே பஞ்சவரைத்தானனுப்பி
முன்னிபயாக முடித்தார்புகழலவோ
இருதிரத்தோரொன்று யிருந்தீரோயாமாகில்
குருகுலத்தோயுங்களுக்கு கொற்றவர்களார்நிகர்காண்
அன்னியர்கடேசமெல்லா மாளுதனன்றோவுனக்கு
உன்னுதிரத்தோராண்டா லொவ்வாதோமன்னவனே
அயலாருறவினிலு மன்பினத்துளோர்பகைதான்
இயலாகுமன்னவனே யீதுலகஞ்சொல்லலையோ
கண்கொளாச்செல்வங் கனமாயுனக்கிருக்க
மண்கொள்ளாப்பங்க மனவைத்தாயுன்வாழ்வில்
தடாகநிறைந்து ததும்பச்சலமிருக்க
அடாதவர்வாய்ச்சலத்தி லன்புற்றுநீர்வரினும்
இருந்தபுனலையுங்கொண் டெங்கணுமேபாவி
அருந்தநீர்கிட்டா ததுபோலாகாதபடி
ஆய்ந்தோய்ந்துபாராதான் முன்சாவானென்றமொழி
தோய்ந்தோர்ந்தோயாமாகிற் றூற்புத்திகண்டாயே
இன்னஞ்சிலகால மிந்திரன்போனீவாழ்க
என்னெஞ்சுங்கண்குளிர வெண்ணியுனக்குரைத்தேன்
புத்தியாயெண்ணுகினும் பூபாலாவுன்மனது
சித்தங்கலங்கியெனைச் சிறுகினுநல்லதென்றான்
நிகரில்லாநீதி நெறிவிதுரன்சொற்கேட்டு

பகரொண்ணுக்கோபமொடு பற்றுமழனெஞ்சனுமாய்
தந்தைக்கொருபுடையே தான்வாரமுண்டாமோ
எந்தையவரிடத்தி லேற்பதிகழலவோ
அந்தவரைக்கொண் டஸ்வமகமுடித்தால்
பங்கம்வசையலவோ பாருலகிற்கீர்த்தியுண்டோ
என்னைரக்ஷித்தே யெடுத்துரிறுத்துதல்போல்
சொன்னவுபாயமனச் சூட்சமுமேநன்றுநன்று
உனக்குமிதுதொழிலே யுள்ளன்புமங்குவைத்தாய்
எனக்குயிராந்தந்தை யெனவேயுனேமகிழ்ந்தேன்
உனக்குங்கிளைதனக்கு முண்டியும்வாழ்வுமிங்கே
மனக்கருத்தங்கேயுன் வாரமேநல்லதென்றான்
மைந்தன்கடுஞ்சொன் மனத்தையுறப்பிளக்க
வெந்திறல்வில்லான் விதுரனெடுத்துரைப்பான்
புந்தியில்லாதாய் புதல்வற்கொருசார்பாய்த்
தந்தையிழந்ததனாற் றனவர்க்குத்தந்தையன்றோ
நீங்களொருமையுட னேயுலகையாண்டிருப்போர்
பாங்கிலரசரெல்லாம் பாதநிதம்வணங்கி
நின்வாயில்காப்பரென்று நீதிமுறையானுரைத்தால்
புன்பொய்மையீதெனவே புத்தியில்லாதேயுரைத்தாய்
இனிமேலுனக்கே தெடுத்துரைக்கப்போறேனியான்
மனமேகொதிக்கும் வகையாய்வசையுரைத்தாய்
உன்செல்வமுங்கெடுத்தே யொக்கவேதான்கெடுவோர்
தன்சொல்லைக்கேட்டுச் சரிபோகச்செய்துகொள்வாய்
உந்தனுடவன்னைக் குரித்தாகச்சீதனமாய்
வந்தபெருவாழ்வலவோ மன்னுவெனக்களித்தாய்
சேராவிடந்தனிலே சேர்ந்திருந்ததன்மையினல்
ஊராரைப்போலோரா தோதினுப்னீதிகெட்டோய்
எனக்குக்கொடுக்கு மியல்பானசெல்வமெல்லாம்
உனக்குச்சரியான வுற்றோர்க்குதவுகண்டாய்
என்றுனிருகண் ணெரியொழுகத்தானெழுந்து
சென்றுனடியைச் சியோதனனுந்தான்பணிந்து
புத்தியெனக்குரைத்தாய்ப் புத்தியில்லாப்புன்மதியால்
உத்தமனேயோர்சொல் லோதினேனின்னுடனே
எதிர்த்துரைக்கனீதியுண்டோ வெந்தையேயுன்னுடனே
கொதித்தாற்சமுத்திரந்தான் கொண்டாற்றநீருமுண்டோ
நீயேமுனிந்தா னிறுத்துதற்குவல்லாரியார்
பேயனென்னாவிற் பிதற்றியதையெண்ணுதே
ஒன்னார்துணுக்க வுடற்றுஞ்சுடர்ப்படையோய்

என்றுனைசிந்தையிலே யெள்ளளவுவையாதே
பெற்றசுதன்தீமை பிதாவேபொறுத்திலையேல்
மற்றவர்களியாரு மதிப்பரோவென்றுகெஞ்சச்
சித்தமிரங்கிச் சிரித்தவனைப்பார்த்துரைப்பான்
சத்தியுடன்வேம்பிற் சனித்தேயதையருந்தும்
பூச்சிதனைப்பிடித்து பூங்கருப்பஞ்சோலைவிட்டால்
வாச்சுதெனவருந்த மாட்டாதுபுன்மதியால்
நஞ்சானசொற்பயில்வோர் நஞ்சமுதாய்கொண்டிடுவோர்
அஞ்சானனற்கேற்கு மமுதமொழிகடுவாம்
செறிபல்பிணிக்கவிஷ்தந் தின்றாலுடன்றீரும்
பிறவிக்குணப்பிணியைப் பேதிக்கவல்லவரியார்
அரசுண்டமைச்சுண் டனேகர்சினேகமுண்டு
விரகின்படிவேண்டி வினைசெய்கெனவகன்றான்
துரியோதனன்கொடிய சூதுக்கிசையாமல்
வரிபாலைமார்பன் மனைபுகுந்தானம்மானாய்
வில்விதுரனிற்புகுத விரகன்கொடும்பாவி
வல்விரகமாமனுடன் வள்ளலிளையோனு
நால்வருமாய்ச்சற்று நலியாதசையாமல்
மேல்வருமக்கேடு வினைகளையுமோராமற்
சிற்பர்களுக்கேற்ற திரவியங்கடான்கொடுத்து
விற்பரவுமண்டபத்தை மேன்மையாய்க்கட்டுமென்றான்
பஞ்சவர்கள்கட்டியதோர் பண்புடையமண்டபத்தை
வஞ்சமறவிங்கெடுத்து வைத்ததுபோலொத்ததுவே
கட்டுமணிமண்டபத்தைக் காவலனுநால்வருமாய்த்
திட்டமுடன்பார்த்துகந்து சிந்தைகளிகூர்ந்தார்
நினைத்தகரும நிறைவேறுமென்றுசொல்லி
தனைப்பெற்றவன்றா டழுவியேதான்போற்றி
பணிப்பட்டமண்டபத்தைப் பஞ்சவர்கடான்பார்க்கத்
துணுக்குற்றவோலையுமோர் தூதுமனுப்புகென்றான்
மைந்தனுரைக்க மனமகிழ்ந்தேயந்தகனும்
இந்தவிதஞ்செய்தீ ரிதுவேயுபாயமல்லால்
விற்போர்க்குமற்போற்கு வெம்போற்குமஞ்சார்கள்
நற்பூமியைப்பறிக்க நாடியதேநல்லபுத்தி
பஞ்சவர்கடேயம் பறித்தேயுனக்களிக்க
வஞ்சமிகுஞ்சகுனி மாமன்போலியார்வலியார்
என்றுமகிழ்ந்தே யிருகண்ணுமில்லாதான்
அன்றுவிதுரனையே யன்பாயருகழைத்து
இன்றனதுமக்க ளிராச்சியமெல்லாம்புரக்கச்

சென்றைவரையுஞ் சிறந்தழைத்துவாருமென்றான்
தூகோமதிகெடுவா யுன்மனதுமிப்படியோ
ஆகாதமக்கள்சொல்லுக் கன்பாயிருந்தனையோ
பாதகாநீயீன்ற பாலரொருநூற்றுவரும்
ஏதமாய்முற்பழிக ளீயக்கடனுளதோ
கோதுடனேநீபழியுங் கொள்ளத்தொடங்கினையோ
சாதமினிமேற்றெரியுஞ் சாடையாய்ப்போகாது
நாளைக்குனக்கேற்க நான்றெரியச்செய்வனெனத்
தானைத்தொழுது தருமோலையைவாங்கி
சேனைப்படைச்சூழத் தேரேறியேநடந்து
கானுமலையுங்கடந்து காவலர்கோவிரண்டில்
இந்திரப்பிரத்த மெனுநகரிதான்சேர்ந்து
அந்நகரி லணிசிறப்புத்தான்பார்த்து
மனதுகருகி மலர்க்கண்ணுநீருகுத்துக்
கனதிககருடைய காசினியேகுன்றுமென
எண்ணியேசெல்ல விருகாதந்தானெதிர்ந்து
அண்ணறனைப்பஞ்சவர்க ளாசாரமாய்ப்பணிந்து
எந்தையேயுன்பாத மென்னாளுமேவணங்கச்
சிந்தைமகிழ்விரதஞ் செய்துபிறந்திலமே
பெற்றோனேமுன்னே பிரிந்திழந்தபாவியற்கு
உற்றோனேயுன்னை யுயர்குருவைவீடுமனைத்
தாதைக்குமூத்தோனேச் சந்ததமுமேபணியப்
போதுற்றநற்றவங்கள் பூசாபலன்கள்செய்து
முன்னோரிருந்த முறையானமாநகரில்
என்னாளும்வைக வெழிற்றவங்கள்செய்திலமே
என்றைவருமே யிதமாய்த்துதித்ததற்பின்
மன்றலணிமன்னவனை மாநகரிகொண்டுசென்றார்
சென்றேயொளிபரவு சிங்காதனத்தேற்றி
என்றவமேயிங்குவந்த தேதென்றுகேட்கலுற்றார்
செய்யவளையினுந் தேவேந்திரன்மதிக்குந்
துய்யவெழினகரா டோன்றலேகேட்டருண்மோ
மூவுலகமெச்சு முறையானவேள்விகண்டு
பூவுலகையாள்கொடிய பூபனகர்சேர்ந்ததற்பின்
உன்னைச்சதித்தே யுனதுபதிதானுள
உன்னிப்பலவாய யோசிக்கநால்வர்களும்
எந்தவிதத்தினிலு மீடுடையபஞ்சவரைச்
சந்தமுடனே சதிக்கமுடியாதெனவே
மாறாப்பழிதனக்கு மார்பேந்தியேசகுனி

வீராப்புவிதனைநான் வென்றுதருவனென
அந்தகனுமக்களுமா யாசையுடன்மகிழ்ந்து
இந்தமணிமண்டபம்போ லேயொன்றுதான்வகுத்துப்
பார்க்கவளைக்கவிட்டு பாவியந்தச்சூதாலே
மார்க்கமாயுன்புவியை வாங்கமனதுவைத்தான்
அப்பிள்ளைசொற்படிக்கே யந்தகனுமொத்திருந்தான்
தப்பில்லாமாயமதோ சாதனையோவஞ்சகமோ
என்னையுமோலையையு மெண்ணியங்குவந்தீரேல்
சின்னப்படுவீர்கள் சேயரேயென்றுரைத்தான்
உற்றதுணைவ ருயர்முகம்பார்த்தேதருமன்
மற்றிதற்கேற்ற வழிசொல்வீரென்றுரைக்க
நஞ்சிட்டானெடு நதியிற்கழுநிறைத்தான்
வஞ்சத்தாற்மூன்றுதர மாநதியிற்கட்டிவிட்டான்
அரக்கான்மனையெடுத்தா னக்கினியைமூட்டிவிட்டான்
இரக்கமில்லாதா னிரண்டுதரம்போர்மூண்டான்
பற்றலர்க்கும்பொல்லாதான் பாணிலத்தைக்காட்டிவிட்டான்
முற்றுமிவன்வஞ்சனைக்கு மூரியாய்ச்செய்யலுற்றான்
மண்ணோடேமண்ணாய் மடிந்துமவன்போமளவும்
அண்ணாவேகேளா யவன்வஞ்சனையொழியான்
சதமக்கள்சொற்களுக்கே தந்தையுமேயொத்திருந்தான்
நதிபெற்றான்சொற்களையு ணட்டமிலான்சேய்கேளான்
வலியமதகரியோர் வன்கிடங்கில்வீழ்ந்தாற்போல்
மெலியவலிய விழுவதுவுஞ்சேவகமோ
மைந்தனெனுமன்பு மனதிலனுவையானைத்
தந்தையென்றேயெண்ணுவது தக்கதோவண்ணாவே
சென்மப்பழிகாரத் தீயகொடும்பாதகனை
வன்மமடங்குவகை வன்மனுஞ்செய்யவென்றும்
விதடங்கண்மூட்டி விதமறியார்போலிருக்குஞ்
சகசண்டிகளுறவு தான்சதமோவண்ணாவே
கண்டீரவற்றைக் கவடாய்நரிமடித்தல்
உண்டேயதுபோல வொக்குமிவன்வஞ்சனைதான்
ஓரக்குழிக்கினையா யூனரியேகிடப்பான்
சீருற்றவோலைதன்னைச் சிந்திக்கவொண்ணாதே
செய்தேமஞ்சாராச் சிறியவர்கள்புன்கேண்மை
எய்தலினெய்தாமை எவ்வளவுநன்றியது
வாக்கொன்றாய்ச்சொல்லி மனதொன்றாய்த்தானிருக்கு
மூர்க்கருடனிணங்கன் மோசமன்றோவண்ணாவே
அச்சமுள்ளபாதைக் கடிதூக்கிவைப்பதல்ல

நிச்சயமிதென்றே நிருபன்பதம்பிடித்து
நால்வருங்கெஞ்சி நடுங்கியேமன்றாடி
மேல்வரந்தந்தருள வேண்டுமென்றேதானிரந்தார்
உற்றதம்பிமார்க ளுரைத்தவையெல்லாங்கேட்டு
நற்றருமபூபால னம்பிகளைப்பார்த்துரைப்பான்
எண்ணிறந்தகோடி யிறந்தார்பிறந்தோர்கள்
திண்ணமதுகீர்த்தி தெளிகீர்த்திநிச்சயங்காண்
தோன்றிற்புகழொடு தோன்றலஃதில்லார்
தோன்றலிற் றோன்றாமைநன்றன்றோதம்பியரே
குடம்பைதனித்தொழியப் புட்பறந்தற்றேநம்
உடம்போடுயிர்சேர்ந் துறநட்பேதம்பியரே
நீர்மேற்குமிழி நிலையில்லாக்காயமிதைப்
பார்மீதுநம்பிநெறி பாட்டையகல்வதகல்
மூத்ததகப்பன் முறையோலைவந்திருக்க
சீற்றமிலாத சிறுதகப்பன்வந்தழைக்க
செத்தாலுஞ்சீர்த்தியப கீர்த்திரெண்டுஞ்சாகாதே
நற்றாரணியில்வசை நாளூழிமாறாதே
மூலைப்பார்தனைப்புதைப்பார் மூவுலகிலியாவருளர்
இலைப்பார்தனைநிறுத்த விவ்வுலகிலியாவருளர்
எந்தச்சமத்தாக விங்கிருந்தோமானாலும்
வந்துற்றநம்விதியை மாற்றுவிக்கப்போகாதே
உள்ளவிதியேதா னுற்றுவருமல்லாது
எள்ளளவுந்தானதிலே யேறாதுதாளாது
மாநிலத்திற்சீர்த்தி மறுமைக்குநற்பதவி
தானளிக்குமவ்வழிக்குத் தானடப்போமென்றுரைத்தான்
பொறைக்கடலன்னான் புகன்றமொழிகேட்டு
மறுத்தொன்றுசொல்லாமல் வைகிமயங்கினரோ
இந்தவிதங்கண் டெழில்விதுரன்றான்பார்த்து
மைந்தன்றனைத்தழுவி மார்புவழிநீர்சொரிய
தருமாவுனதிருந் தம்பிமார்சொற்படியே
இருநீபவற்கேற்க வேதுவாய்ச்சொல்லிவைப்பேன்
அல்லதுமிஞ்சி யவன்சமருக்கேமுனிந்தால்
வெல்வதும்பாரமல்ல வீமன்விசயனுக்கு
வழிதப்பியின்னல் வழியில்வழுக்கிச்சருக்கி
விழுவதுவும்பங்கமிது வேண்டாமெனவுரைத்தான்
தாய்க்காகாப்பிள்ளையெந்த வூர்க்காகப்போகுமினி
வாய்க்காதினியிருக்க மாட்டேனீவந்தமையால்
இவ்வாழ்வைநம்பி யிருந்தகப்பன்சொன்மாறி

ஒவ்வாவபகீர்த்திக் குள்ளாயிருப்பேனோ
சலதிகுருகுலத்திற் றந்தையர்கள்சொல்லதனை
விலகியிருந்தனென மேலும்வசையாமே
ஆதலினாலிவ்வாழ் வடங்கலுமேபோனாலும்
நீதுடனேயைவருட ஜீவனங்குசென்றாலும்
தந்தைசொன்மாறித் தழனரகிலேவீழ
எந்தன்மனதுக் கிசையாதெனவுரைத்தான்
புத்தியுரைத்தந்தப் புத்திரர்கள்கேட்டதில்லை
சத்தியமில்லானெறியுந் தாழ்வுனக்குமேற்றதில்லை
அந்தகற்குமக்களுக்கு மனுகூலகாலமென்றால்
எந்தனுரையை யிசைந்தவனுங்கேளானோ
ஈந்தபுவிபோதுமென்ற வெண்ணமவற்குண்டானால்
சாந்தகமாயென்மொழிக்குச் சம்மதித்துநில்லானோ
செந்தகத்தைதீயிலிட்டால் கேடுகெட்டநாற்றமுண்டு
கந்தமிகுசந்தனந்தீக் கண்டாற்கமழுமன்றோ
வேப்பெண்ணெய்சாராய விறவிற்குடித்தோர்க்கு
எப்பமிடுமவ் வியல்பதுவேபோலாகும்
ஒன்றினுக்குமஞ்சாதே யுஞ்சனுக்கேவெற்றியென்று
என்றைக்குஞ்சிந்தை யினையாதேயென்றுரைத்து
வீமன்விசயனுடன் மிக்கவிருவரையுந்
தாமன்விதுரன் றழுவிமனந்தேற்றி
நாடுவிட்டுக்காடுறைந்து நைந்துதுயருற்றாலும்
பாடுபட்டபேரலவோ பட்டம்பொருந்திருப்பார்
மூத்தவன்சொல்லு மொழியேயமுதமென்று
பார்த்தன்முதலவர்களும் பண்பாயெழும்புமென்றார்
தனஞ்சயன்மீண்டுசிறு தந்தைதனைப்பார்த்து
மனஞ்செய்வரோசூதில் வைப்பாரோமிக்கோர்கள்
போதமறிவுநெறி பொன்றினபேரல்லாமற்
சூதுவிரும்புவரோ சொற்பாதகமலவோ
நின்போலனந்தமந்த நீதிகெட்டோனுக்குரைத்தேன்
அன்பாகுமுங்களுக்கு மாகுவழியுரைத்தேன்
என்பேச்சுத்தன்னை யிருவோருங்கேட்கவில்லை
வன்பேச்சுவேண்டா வருவீரெனவுரைத்தான்
எண்ணித்துணிதற் கருமந்துணிந்ததற்பின்
எண்ணுதலெல்லா மிழுக்கன்றோமன்னவனே
என்றபொழுதே யியற்றருமனேதுசொல்வான்
நன்றியில்லாச்சூதாட நாமனதுவொட்டோமேற்
பெருமையுரைத்திடேல் பேயிற்கடையதனுல்

இருமையுமைக்கே னியல்விதிராமனெப்படியோ
வந்தவிதிவந்தானு னொந்திடவுவேண்டாமோ
எந்தைமனத்தாங்கல்வரா தேகுவோமென்றுரைத்து
உத்தாரஞ்செய்த வுதிட்டிரனுற்சொற்படியே
வித்தாரமாககர மெங்குமுரசறைந்து
கொற்றவருங்கடற்போற் கூடும்படையுடனே
மற்றுநாளெல்லா வழிநடந்தாரம்மானை
சதுரங்கசேனைச் சலதிபுடைசூழ
விதுரன்றன்னேடும் வியனுனபஞ்சவர்கள்
ஐந்துபஞ்சபூதமென வைந்துதேர்மீதேறி
சிந்துவெனப்பரவுஞ் சேனைநடுச்செலவே
கனைத்துகையையொக்குங் கனமாஞ்சதிர்வகைத்தேர்
மனற்றுகையையொத்த வளபதாதிக்கூட்டம்
அரவக்கொடியோ னணிநகரிதான்றொடுத்து
முரசக்கொடியோன் முதுநகரிதானெருங்க
கோலிவளைந்துவரக் கொற்றவர்களேவரையும்
சாலவிருகாதமட்டுந் தானேயெதிர்கொளவே
மிக்கசிலமன்னர்களை விட்டழைத்துவாருமென்று
அக்கமிலான்சொல்ல வரசர்சிலரெதிர்ந்து
பஞ்சவரைத்தாள்பணிந்து பண்பானநன்மொழியால்
அஞ்சலிசெய்தாதரவா யன்பாகக்கூட்டிவந்தார்
வேலையெனுமைவர் மிகுபடைக்குத்தானடுவே
கோலிக்கடனடுவே கொண்டவிலங்காபுரிபோல்
ஒத்திருந்தந்த வுரவனகர்க்கோட்டையுளே
வெற்றிமிகும்பஞ்சவர்கள் வெஞ்சிங்கம்போனடந்து
அன்புகண்ணில்லா வறமில்லாவந்தகனைத்
துன்பமிலாதைவர் தொழுதாரிருசரணைப்
பாதந்தனில்வீழ்ந்த பஞ்சவரைத்தானளைத்துக்
காதலுளபேர்போற் கசிந்துகண்ணீருகுத்து
என்னுயிரையன்ன விளையசகோதரன்றன்
மன்னவரேயுங்களுட வாள்வலியும்வாழ்வுகளைக்
கண்ணாலேபார்த்துக் களிகூர்ந்துடல்குளிர்ந்து
மண்ணுளக்காண மகிழ்ந்தவிஷ்டம்பெற்றிலனே
பெற்றவன்றானுங்கள் பிரபலங்கள்காணுதற்கு
நற்றவங்கள்செய்திலனே நான்செய்தபாக்கியமோ
நோற்றமறைக்குங் குரவோர்கள்சொன்மொழிக்குஞ்
சற்றும்வழுவாத தருமாதிபனீயே
மென்மேலுஞ்செல்வமுடன் மேதினியெல்லாம்புரந்து

பொன்மாரியுன்கரத்தாற் போதவேதான்வீசி
வாழ்வாய்வளர்ந்திருப்பாய் வையகமெல்லாம்புரப்பாய்
தாழ்வானவெங்களையுந் தாளுள்வாயென்றுரைத்தான்
செவிகைப்பச்சொற்பொறுக்குந் திண்புயச்சீர்வேந்தே
கவிகைக்கீட்டடங்குமிந்தக் காசினியுங்கண்டாயே
நல்லாங்குசெய்து நடுவாகவேநடந்தாற்
பொல்லாங்குபோமிடத்திற் போங்கண்டாய்புண்ணியனே
காட்சியாய்மூவுலகோர் கைக்கருமந்தான்செயவே
மீட்சியாய்வேள்விசெய்த மிக்கெல்லாம்யான்மகிழ்ந்து
பார்க்கவேகண்ணைப் படைத்திலனேயான்பாவி
தீர்க்கமுடன்பார்த்தவர்கள் செப்பச்செவிகுளிர்ந்தேன்
மங்குங்குருகுலத்தை மங்காமன்மேன்மைசெய்தாய்
எங்கும்புகழ்படைத்தா யெற்றிசையுங்கீர்த்திபெற்றாய்
நின்கீர்த்தியெல்லா நிகழ்த்தநெடுநாட்செலுமே
மன்கீர்த்தியுள்ளோரே மாதர்பாலேகுமென்றான்
நன்றென்றுகாந்தாரி நற்பாதந்தான்பணிந்தார்
வென்றெங்குங்கீர்த்திபெற்ற வீராதிவீரர்களாய்த்
தாளில்விழுந்தோரைத் தாங்கியெடுத்தணைத்து
ஆளிலழகான வைவரையும்பெற்றகுந்தி
பாகார்மொழியாளே பாக்கியங்கள்பெற்றாளே
ஆகாதபிள்ளைகளை யான்பெற்றேகெட்டேனே
ஒன்றோடேயென்று யுறவாகியெக்காலு
நன்றாயிருங்களென்று நாடியேவாழ்த்திவிட்டாள்
கங்கைமகன்பாதங் காவலர்கடான்பணிந்தார்
செங்கையால்வாரித் திருக்கண்ணிலேபொதிந்து
தாய்போலக்கண்ணீர் தவழவிட்டுமுத்திகொண்டு
நாய்போன்றோனேலதனை நம்பியேவந்தீரோ
விதுரன்கொடும்பாவி மிக்கபுத்திசொல்லிலையோ
பதவிகுலைவதற்கோ பஞ்சவரோயிங்குவந்தீர்
கோதாட்டுக்கொண்டலவோ கோட்டிகொளக்கொண்டுவந்தான்
சூதாட்டுக்கோவிசைந்து சோராமலிங்குவந்தீர்
என்செய்வேன்மக்கா ளெழுதும்விதிப்படியே
புன்செய்கைக்குள்ளே பொருந்தினீர்போதமுடன்
படுந்துபன்மெல்லாம் பயில்வீரெனவுரைத்துத்
துடர்ந்துபலகாலுந் தோத்திரமாய்வாழ்த்திவிட்டான்
ஆசாரிக்குஞ்சேய்க்கு மன்பாகத்தான்பணிந்தார்
பூசாபலத்தோரும் பொற்பாகவாழ்த்திவிட்டார்
கிருபனெனுங்குருவை கிட்டியேதான்பணிந்தார்

பொருமையுடனவனும் போதமாய்வாழ்த்திவிட்டான்
தாதைக்கிளையோன் சரணந்தனைப்பணிந்தார்
நீதக்கண்ணீர்சொரிய நீதியுடன்வாழ்த்திவிட்டான்
அன்றுனகத்தி லடைந்ததேயனமருந்தி
மன்றுனபஞ்சவரு வைகினர்காணம்மானாய்
அன்றுகுடக்கி லலரியடைந்ததற்பின்
என்றும்போலன்ன மிரவுமருந்தினரோ
மற்றநாட்பானு மதித்தருணபாலெழுந்தான்
சுற்றமிகுமன்னவருந் தோன்றல்கொலுமுகப்பிற்
சாகரமுமொப்பாகத் தானிருந்தார்கங்கைசுதன்
நாகர்புகழ்துரோண நந்தன்கிருபருடன்
கன்னன்சகுனியுடன் காளைதொண்ணூற்றென்பதின்மர்
பின்னும்பலரும் பெருகுங்கொலுமுகப்பில்
அணங்காரவுயர்த்தா னாகாதசிந்தையினான்
வணங்காமுடியோனு வந்துற்றனம்மானாய்
மன்னன்றனையிறைஞ்ச மன்னர்முறைமுறையாய்
நன்னெறியாக நமஸ்கரித்தார்பஞ்சவரும்
காலில்விழுந்தோர்க்கு கண்ணாலிடங்காட்டி
மேலுமரியணையின் மீதுற்றனப்பாவி
மாமனையுங்கன்னனையு மற்றிளையதம்பியையும்
பூமன்முகநோக்கிப்புன்முறுவல்கொண்டடக்கி
மண்டபத்தைக்காண்பதற்கு மன்னவர்களைவரையுங்
கொண்டிமைப்பில்வம்மினெனக் கோமானுரைத்திடவே
வண்டுசுற்றுமாலைமணி மார்பன்றருமனையே
தெண்டனிட்டுவாய்புதைத்துச் சேதிசொல்வார்தூதுவர்கள்
மன்னவர்கோனுங்கடனே மண்டபத்தின்சீர்காண
அன்னதருவன்று யழைத்துவரச்சொன்னான்காண்
வாருமெனச்சொன்னளவின் வண்மையுடனைவர்களும்
காருலவும்பூங்குழலைக் காந்தாரிபக்கல்வைத்து
சிங்கமனைய திருத்துணையோடேதருமன்
துங்கமுடனடந்தான் சூதுடையோன்மண்டபத்தில்
வந்தெதிர்ந்துதாளில் வணங்குகின்றமன்னவர்க்குச்
சிந்தையுபசாரஞ் செய்துமிகவாழ்த்தி
நதிமைந்தனன்குருசேய் நற்றாதையைப்பணிந்து
மதிமந்திரிக்கணித்தாய் வைத்தமணிபாசனத்தில்
இருந்துபலசொல்லி வியல்பாய்வினவியபின்
பரிந்தந்தமண்டபத்தைப் பஞ்சவர்கடான்பார்த்து
இந்தமணிமண்டபத்தை யென்னென்றுயாஞ்சொலுவோம்

எந்தவெழின்மண்டபமு மிங்கிதற்கொவ்வாதேயென்றார்
என்றுவியந்தே யியல்பாய்த்துதித்ததற்பின்
அன்றுமகிழ்ந்தே யரவுயர்த்தோன்வீற்றிருந்தான்
தேவர்சபைநடுவே தேவேந்திரன்போல
பாவிநடுவிருந்தான் பார்மன்னர்தான்சூழ
கட்டைசகைகண்டு கனற்சகுனிமாபாவி
கட்செவிபோல்வந்துதர்ம காரியமாயேதுசொல்வான்
ஐயன்மனையி லனமருந்தப்போவதன்முன்
துய்யவனேயென்னுடனே சூதாடவேணுமென்றான்
நஞ்சனையான்சொல்லழலின் னாராசம்போலாகத்
தஞ்செவியையைவர்களுந் தான்மூடியேனடுங்கிப்
பாதகத்திலொன்றிதென்பார் பண்பானமிக்கோர்கள்
தோதகமாம்பொல்லாத் துரோகத்தொழிலிதன்றோ
புல்லருக்கன்பாய்ப் பொருந்துந்தொழிலிதனை
நல்லவர்களெல்லா நடுங்குந்தொழிலலவோ
என்னுயிரைக்கேட்டாலு மென்றம்பிமார்களுட
தன்னுயிரைக்கேட்டாலுந் தருவோமிதற்கிசையோம்
மாமனிவைகேட்டு மறலியைப்போற்றான்சினந்து
சோமனைப்போனீயுரைத்த சொல்லுக்காருநகைப்பார்
நாடார்போற்றர்மமதை நானறியச்சொல்லவந்தாய்
மேடியரசரெல்லா மெச்சிவிளையாடுகின்ற
மகிழ்ச்சியாய்த்தானும் வண்மைத்தொழிலிதனை
இகழ்ச்சியாய்த்தான்சொலுவ திராஜர்க்கடவலவே
நாளெல்லாநாங்க ளயர்ந்துவிளையாடலையோ
ஏனமாக விகலுற்றெதிர்ந்ததுண்டோ
மனதுக்கிசைந்தபொருள் வண்மையுடனொட்டம்வைத்து
வினவிவிளையாடி வென்றோர்கள்கைக்கொளுவோம்
பொருளுக்குலோபியர்போற் பூபாலர்சொல்லுவதோ
மருளுற்றேயஞ்சாமன் மன்னுசூதாடுமென்றான்
இருவர்க்குமொக்க விசைந்துவிழுந்தாயங்
கருவுற்றேயாடுகின்ற கைவிசேஷமதிகம்
ஈதலதுவேறிலையே யெய்தாதேயென்றுசொலி
மாதுலனும்வன்கவறை மன்னன்கரத்தில்வைத்தான்
ஏங்கினற்போலே யெறிந்தேவிழிசிவந்து
தீங்கின்முயற்சிகொடு தேற்றிக்கழுத்தறுக்க
வந்தெதிராய்க்கூறுவது மாமாவுனக்கழகோ
இந்தவகைசெய்தே யெனதுநகர்கொள்ளாதே
பந்தயமுவேண்டாமிப் பாழாட்டமுவேண்டாம்

எந்தனகர்முழுது மிப்போதேதந்துவிட்டேன்
விரைந்தெடுத்துக்கொண்டுமெமை விட்டுவிடுமென்றுரைத்து
நரந்தமெனுங்கள்ளருந்த னன்றேமன்னர்க்கழகோ
ஒன்றெய்திநூறிழக்கு முட்சூதுமுண்டாங்கொல்
நன்றெய்திவாழ்ந்தோ ரியாவர்நவில்வாயே
சிறுமைபலர்செய்து சீரிழக்குமிச்சூதின்
வறுமைதருவதொன்றின் மாமாநீகண்டாயே
பழகியசெல்வமுடன் பண்புங்கெடுத்திடுமே
கழகத்துக்காமுயன்றீர் கைகண்டதீவினையே
மூப்பாயிருந்து முறைமாமனுயிருந்து
நாப்பாங்காய்ச்சொல்லுவது ஞாயமோசட்டுவது
கோபமுடனீயெறியக் குறைபாவிருத்தமுடன்
பூபதியேவீழ்ந்த புதுமைக்கவரசைப்பார்
உன்கையாற்போட்டாக்கா லோயாவிருத்தமுடன்
என்கைக்குத்தான்கவரு மீதல்கடிதாயிருக்கும்
என்றுசகுனி யியம்பக்கொதித்தெழுந்து
கன்றிநெருப்பாகக் கண்சிவந்துகன்னனுமே
சகுனிதனைப்பார்த்துத் தான்கோவிப்பான்போலே
விகடநினைவாலே வேடர்களைக்கொண்டுவந்து
இந்திரன்சபைபோ லிலங்குமிந்தமாளிகையிற்
சந்தமுடனடுவே தானிருத்துகின்றமையால்
கண்ணியிற்பட்டுக் கலங்குகின்றபட்சியைப்போல்
எண்ணியெண்ணிப்பார்த்தே யிடைவான்றனைத்துடர்ந்தால்
பின்னுமனம்பயந்து பேய்போல்விழியாதே
என்றவன்சொன்னளவி லிச்சபைக்குப்பாத்திரவான்
கன்னன்குலவான்காண் கான்வேடரிங்கிருந்தால்
சின்னமெனவே தெய்வமன்னன்றுனெழுந்தே
சென்றுனிளையோர் சினங்களையுந்தானடக்கி
அன்றேடிமாம னறன்மகனைத்தான்றழுவி
சூதாடவேண்டாநீர் சும்மாயிருந்தெழும்புஞ்
கோதானேன்சொன்னமொழி குற்றமெனவெண்ணாதே
என்றுசகுனி யிதமாய்க்கொணர்ந்திருத்த
ஒன்றும்பேசாம லுதிட்டிரனுந்தானிருந்தான்
சூதாடமாட்டமென்று சும்மாவிருந்தமையால்
வாதாடிக்கன்னன் வலியச்சருவலுற்றான்
உரசொன்றுமில்லாத னூதாரிப்பேய்ப்பல்காள்
உரவியசூதாட வுலோபியாய்ப்போனீரேல்
விற்போர்தனிலே விளையாடவென்னுடனே

விற்போர்களியாளொனிறு நீதியுடன்வாங்களடா
இங்கிதற்குமாட்டாம லெஞ்சினீராமாகிற்
பங்கமுடனிங்கிதற்குப் பாத்திரவானீங்களல்ல
ஆதலாற்றப்பியுங்க ளாவிபிழைத்தமென்று
பாதகரோநீர்திரும்பிப் பாராமலோடுமென்றான்
ஓடுமுந்தன்போலனந்த மூலோபியர்க்குமார்பாணி
சோடுசெய்யுந்தச்சத் தொழும்பனுக்குத்தக்கமொழி
அல்லாமன்மிஞ்சி யதர்மமாய்ச்சொல்லுகின்ற
கல்லானேயுன்வாய் களைகிழித்துமண்போட்டுக்
குத்துவாருண்டானாற் கூறுவையோயிப்படினீ
செத்தவனேயஞ்சாமற் ஜீவனுடன்பேசினையோ
அரங்கமணிமண்டபத்தி லன்றுலகெலாஞ்சிரிக்க
மரங்கள்போனின்றதிந்த மன்சபையோர்காணாரோ
வில்வளைத்துமானபங்க மெய்தியதும்பற்றாமற்
கல்வில்லைநான்வளைத்த கல்யாணக்கூட்டமதிற்
போர்செய்யவந்தே புறங்கொடுத்துவோடியதை
வீரர்களுமிச்சபையின் வேந்தர்களுங்காணாரோ
பின்புமுனைந்துவந்த பெருயுத்தந்தன்னிலன்று
துன்பமுடன்கெட்டுடைந்து தோற்றோடிவந்ததையும்
இருக்குஞ்சபையிலுள்ளோ ரெல்லோருமேயறிவார்
குரைக்கின்றநாய்கடிக்குங் கொள்கையறியாது
அன்றில்லாவீரமுனக் கார்கொடுத்தார்சொல்லுசற்றே
பஞ்சைப்பயலேயொரு பாம்புகொண்டுவெல்வதற்கு
வஞ்சமனம்வைத்தே வளர்க்கின்றாயங்கதற்கு
எம்பெருமானந்த வினியகெருடனென்று
சம்பிரமதாயென்னிடத்திற் றானேவளருதடா
சற்பக்கணைகரத்திற் றானெடுக்குமுன்னாக
அற்பப்பயலேயுன் னங்கமெல்லாநீறாக்கி
கறுத்துச்சிரசறுத்துக் கன்மண்ணுன்வாயிலிட்டு
விறற்கொள்ளுகின்ற விசயனென்றுகேட்டிருந்தும்
ஓடென்றுசொன்னா யுனக்கேயிதுசகசம்
கேடுவருமுன்புமதி கெட்டுவந்துசொன்னாயே
போருக்குப்போரு புறங்கொடுத்தபேயனுன்னைத்
தாருற்றமன்னர் சபையறியுமென்றுரைத்தான்
அறிந்ததேயிப்போ யரைநாழிகைக்குமுன்னே
மறந்திரோவைவர்களு வானமடக்கியோடியதை
என்றதுக்குவாய்துளைப்பே னென்றுவரிவில்லெடுத்தான்
கன்றியவனுங் கடுத்துவரிவில்லெடுத்தான்

துச்சாதனன்முதலோர் தொண்ணூற்றியொன்பதின்மர்
நச்சாடரவணையான் நாணுதுவில்லெடுத்தான்
வீமன்கதாயுதமு மிக்கோர்தன்னாயுதமும்
ஏமமுடனே விசைந்துதிரண்டெதிர்த்தார்
விதுரனுவீமெனும் வேடிக்கைநேத்தியென்றார்
பதரிவந்தந்தகனும் பண்பார்தருமனையே
எதுக்குப்போராட்ட மென்றேவினைவிலக்கிச்
சூதுக்கொருதரநீ தோய்ந்துவிளையாடுசென்று
முட்டாப்பயல்கண் மூரனைச்சொன்னாக்கால்த்
தட்டாமலேயொழுங்கித் தானேயொருதரநீ
ஆடென்றறன்மகனுக் கந்தகனுரோதியதால்
கேடென்றுதட்டாமற் கேவலமாய்த்தானிசைந்தான்
வாதுற்றிருவர்களும் வைத்தார்மணிப்பதக்கம்
சூதுக்குத்தான்சகுனி தோன்றினன்காணம்மானாய்
தருமனுடனே சகுனியுமேதானுட
அருணமணிப்பதக்க மறன்மைந்தன்றான்றோத்தான்
அத்தோடேபோவென் றறன்மைந்தன்றான்விலக
மத்தாசலப்புயனே வாகையுனக்கினிமேல்
என்றரசுமூட்டி யிரண்டாவதுமாடி
துன்றுமணிக்கிரீடந் தோற்றான் றருமனுமே
தேருமுதற்றோற்றான் சிந்துரங்கள்பின்றோற்றான்
பாரப்பதியும் பதாதிகளுந்தான்றோற்றான்
விட்டுவாங்காதவண்ண மேலுஞ்சினமெழுப்பி
ஒட்டியொட்டிப்பேசி யுரையாடவொட்டாமல்
சாடுனகரிகளு நச்சணையான்வென்றுகொண்டான்
ஈடின்றருமனினி யென்னவுண்டுபோமெனென்றான்
ஐயவருநூற்றவரு மடிமைக்கிசைந்துகொண்டு
மெய்வண்ணமாக விளையாடுமென்றசொன்னான்
அந்தப்படியாடி யைய்வருமேதொண்டானார்
சிந்தித்தவாடித் திகைத்திருந்தபஞ்சவரை
அற்பன்மனதிரங்கா னகாதமாபாவி
பற்பவிடமனையான் பாவிகளின்மாபாவி
சதியன்கொடியன் றருதுன்பன்வன்சகுனி
இதமுள்ளதேவிக் கிசைந்தாட்டமாடுசென்றான்
சதியின்சனியைவிடத் தானுனக்குமோமொழுத்து
அதிகமிருந்ததற்கோ வாகாதசிந்தைசெய்தாய்
இன்னமகர்நைசெய்யி லீசனுக்கேயேற்காது
உன்னெஞ்சமர்தொட் டேறையென்றனைத்திடவே

துச்சாதனனெனுமத் தோசிசினர்தெழுந்து
உச்சாகமென்ன வுரசென்னரோசமென்ன
இன்னமுனக்கு வெதிர்த்துரைக்கநாவுமுண்டோ
சொன்னபடியில்லாளைச் சுட்டிச்சூதாடுகென்றான்
நல்லதவன்சொன்னதர்க்கு நாமுள்ளாவோமெனவே
அல்லலுடனுடி யடங்கலுமேதோற்றுவிட்டான்
தாலிகட்டுமெங்கையுடன் றானடங்கதோற்றதற்பின்
சாலமனத்தீய்மூளத் தானுயங்கியேயிருந்தார்
தெய்வத்தைநொந்து சிரசெழுத்தைத்தானினைந்து
ஐவர்க்குஞ்சிந்தை யழலெரிந்ததப்போது
சலத்தையுஞ்செய்யார் சபைகளையுந்தான்பாரார்
நிலத்தையேபார்த்தவராய் நெட்டுயிர்ப்புற்றேயிருந்தார்
எழுதியசித்திரம்போ லெத்திறமுந்தான்குலைந்து
பழுதுதனைநினைந்து பங்கமுற்றார்பஞ்சவர்கள்
இருதலைக்கொள்ளிக் கிடையுட்டுளையெறும்பாய்க்
கருகிவதனங் கலங்கியேபஞ்சவர்கள்
அந்தச்சபையை யணுவுமதியாமல்
விந்தப்புயன்பெரிய வில்விதுரனிந்தனையாய்ச்
சொல்லிக்கண்ணில்லாத துரோகிதனையணுகிச்
சல்லைப்படுத்தியபின் சம்மதியாச்சோவுனக்குப்
பாதகனைப்பெற்றதற்பின் பாதகமாய்வித்தையெல்லாஞ்
சாதகமாயுந்தனுக்குந் தான்கைவசமாச்சோ
ஆகையான்மக்கள்சதிக் கன்பாகவொத்திருந்து
வாகதாயோலை வரைந்தெனையுங்கூட்டவிட்டாய்
கின்னேலைகண்டவுட னீதியுள்ளோனுகையினுல்
மன்னுநின்பாதமதில் வந்தார்களைவர்களும்
இன்றுசதிச்சூதாட வெம்மாலாகாதெனவும்
பொன்றுமளவுமிது போகாவசையாக
பன்னூலினுள்ள பயனெல்லாந்தான்விரித்துச்
சொன்னுரோபல்கோடி சொன்னதையுமெண்ணுமல்
வாய்க்குவாராத வசையெல்லாந்தானுரைக்கத்
தாய்க்கினிமையான தருமனதெல்லாம்பொறுத்து
போனவனைத்தான்சகுனி பொல்லாதான்றான்பிடித்து
மானமிலாச்சூதன் மகன்வலியவேசருவி
சொல்லால்வினைகளெல்லாஞ் சொல்லிவினைமூட்டி
எல்லோரும்வன்போ ரெதிர்க்குமந்தவேளையிலே
விலகினுய்வந்து விலக்கிவிட்டுப்போகாமற்
கலகமாஞ்சூது கருதிவிளையாடுகென்றாய்

நீயில்விழச்சொன்னாலுஞ் செப்புமொழிதட்டாதோர்
மீயுனைக்கத்தட்டாம னின்றுவிளையாடினர்கள்
ஒருதரந்தோற்று னுரத்துவிடாமையினாற்
இருதரந்தோற்று னிதற்குவிடாமையினால்
உள்ளதெல்லாந்தோற்று னுடலுயிருந்தான்றோற்றான்
எள்ளிரக்கமில்லாம லில்லாளையுந்தோற்றான்
நின்னுடையசேயைவிட லெக்ஷம்பதின்மடங்காய்
உன்னுடையசொல்லுக் கொழுகிநடந்தமையால்ப்
பேதகமாய்நினினைந்து பெற்றசுதன்சத்துருவே
ஓதுசலுக்கொத்தாப்போ லொத்திருந்தாய்நன்றாக
என்னுலகும்வாழ்வுகளு மெங்களுடலுயிரும்
உன்னுடையதாயத்தா ரொத்தசூதாடுமென்றார்
கேட்கோமெனவவனைக் கீழ்மையாய்த்தான்கெடுக்க
வெட்கையேகொண்டு வினைவிளைத்திருங்கள்குல
நாசமாய்ப்போவதற்கு நாள்வந்ததம்முடிவை
நேசமுடனங்குவந்து நீயுமேபார்த்திருவா
இப்பாதகந்துலக்க வெண்ணிலாப்பல்கோடி
துப்பாம்பிறவிகொடு சூழ்தவங்கள்செய்தாலும்
யுன்னைவிட்டுப்போகாதே யூழூழிகாலமட்டும்
பின்னவன்றன்சேய்களெல்லாம் பீடழிந்துதான்கலங்க
உன்னுடையமைந்தருட னொத்திருப்பதும்முறையோ
பன்னும்விலங்குகளை பக்ஷிகளைத்தான்வதைக்கும்
வேடர்களைப்போலிரக்க மில்லாதிருப்பர்களோ
ஓடிப்பிளையாம லுன்னிடத்திலியாங்களுற்றோம்
புத்திகேடோவலது பொல்லாவிதிதானோ
முத்திசெறிகங்கைமகன் மூற்சையாய்க்கல்லானான்
ஆயுஞ்சபையோ ரகங்கண்ணெருப்பெரிய
நீயுஞ்சுதனுடனே னெஞ்சுகுளிர்ந்திருந்தாய்
என்றிவன்சொல்ல வெழுந்தேவிருகண்ணில்லான்
அன்றேசபையி லடைந்திருந்தான்கற்போல
இருந்தநாட்போதுமென வெண்ணினான்பாவியென்று
வருந்திவிதுரன் மயங்கியேதானிருந்தான்
சகுனிதுளையெலும்பைத் தான்கவராகத்திருத்தி
இகலிற்றருமனையே யிப்பாபெண்ணவென்று
சொல்லியெறிந்தபடி சோராமலேவிழுந்த
வல்லதருமனுக்கு வாயில்லாதேவிழுந்த
என்றுகண்ணில்லார்க் கிளையோன்பகர்ந்ததெல்லாம்
ஒன்றும்பகராம லோவியம்போலேயிருந்தான்

மங்கிநிறங்குலைந்தே வாடுகின்றபஞ்சவர்க்கு
அங்கனுந்தேறுதலு மாறுதலுஞ்சொல்லாமற்
தங்கள்புதல்வனையுக் தான்சினந்துகொள்ளாமல்த்
துங்கமுடன்கொடிய தோசியிருந்தமையால்
நாலுகொடியோரு நாட்டமில்லானுந்தவிர
கோவியிருந்தோர் குலைகுலைந்துவாடினரே
கொடியன்கொடியனென்றே கொற்றவனைத்தானிகழ்வார்
படியிற்சகுனிசொடும் பாவிகொடும்பாவியென்பார்
மருகனுயிர்தனக்கு மாமன்மறலியென்பார்
சருவிச்சருவிச் சதிசெய்தான்பாவியென்பார்
இப்பாவியோலைதனக் கேன்வந்தார்பஞ்சவர்கள்
துப்பாய்விதுரனுண்மை சொல்லிலன்காணென்பாரும்
மூட்டியதெல்லாங்கொடிய மூதேவிக்கன்னனென்பார்
வாட்டிறலின்மன்னிளையோன் மாபாவிபாவியென்பார்
விலகவருங்கொடிய வேந்தனுடசொல்லாலே
தலைமைசேனைவருக்குந் தாழ்வுவந்ததாகுமென்பார்
தருமன்றருமமெல்லாந் தான்பொய்த்ததென்பாரும்
உருமென்றேவீம னுருத்தெழுமோவென்பாரும்
மீசைதுடிப்பதுபார் வீமனுக்கேயென்பாரும்
பூசற்கடித்தலங்காண் பொய்ச்சூதிதென்பாரும்
தம்பியாயேன்பிறந்தார் தருமனோடென்பாரும்
இம்பால்வசையொழியா தெக்காலுமென்பாரும்
மின்னழலினுற்பவித்தாள் விண்ணெழுந்தசொற்போல
மன்னர்கருவறுக்க வந்ததுநாளென்பாரும்
இன்னபடிமன்ன ரிருந்தவிடங்கடொறும்
மன்னுமவரவர்கள் வாயில்வந்ததோதிநிற்கத்
தோசிநால்வோருந் தொகுத்தோர்மொழிமுடித்து
வாசமிகுங்கங்கை மகனைமுகம்பார்த்துக்
காயமாம்புண்ணிற் கடுங்காரம்போடுதல்போல்
தாயமுடன்முள்ளைமுள்ளாற் றூன்கிளையுவாறேபோல்
எல்லோருடலு மிரதம்போலே துடிப்ப
சொல்லாற்றுரியோ தனனேதுசொல்லலுற்றான்
தோற்றபொருள்களெல்லாந் தொல்பதிவந்தேசேர
ஏற்றமனிதர்களை யேவுவோமென்றுரைத்தான்
என்போலனீயு மிவனிலிருக்கவென்றால்
வன்பேச்சைவிட்டுவிடு மன்னுவிதுவேண்டாம்
இந்தக்குலந்தனிலே யிந்துதலைதொடுத்து
வந்துற்றோருன்போல் வசையேற்றோராருமில்லை

தாதைமுதாதைசிறு தாதைமுதுதாதைமொழி
பேதகமாய்மாறுகின்ற பேர்களொருவரில்லை
முன்னொருவர்மக்கண் முறைதப்பிமாறியதால்
மன்னுநிலைகெட்டதுவு மன்னனீகேட்டிலையோ
இம்மையிற்கேடு மறுமைக் கெரிநரகும்
மும்மையுந்தாழ்வார் முதியோர்மொழிமறுத்தோர்
இன்னகர்கருமிக்குலத்துக் கோராதபுன்மொழினீ
வன்மமுடன்செய்தது மன்னவர்க்குமோராது
நீர்மேற்குமிழியுந்தன் நீதிகெட்டபாவிநம்பிப்
பார்மேலபகீர்த்தி பாதகத்தையோராதே
என்றுரைத்தவெல்லா மிருசெவியிலேறாமல்
கன்றியுருமிடிபோற் காந்தாரிதன்குமரன்
உருகிமெலிந்திருக்கு மூற்றசிறுதந்தையுடன்
கருகியசொல்லானுங் கண்சிவந்தேயேதுசொல்வான்
இரதங்கரிபுரவி யிருக்குமிடஞ்சென்றதனைத்
துரிதமுடன்கொணரச் சொன்மின்னக்கர்நாடும்
அந்தந்நாட்டி லழகுள்ளபெண்களெல்லாம்
இந்தத்தலத்தி லெடுத்துவரச்சொலுமின்
பண்டாசைகொண்டிருந்த பஞ்சவர்களைவரையும்
தொண்டேழியங்கள்செய்யச் சொன்மின்றிரௌபதியை
இந்தச்சபையி லியனணந்தான்குலையக்
கொநதுற்றகூந்தல்பற்றிக் கொண்டுவாவென்றுசொன்னான்
அன்பறனில்லா னரைந்தமொழிகேட்டு
துன்பமொழியிதெல்லாந் தோற்றுமனீயுரைத்தாய்
அறனல்லநீதியல்ல வன்பல்லவாழ்விதல்ல
திறனல்லனங்குலத்திற் சேர்ந்தமுறைமையல்ல
வலியச்சருவி மடங்கறனைநரிதான்
மெலியச்சதித்ததுபோன் மேற்சதித்துவிட்டாயே
செப்புமொழியெல்லாநீ செய்துவித்துக்கொண்டாலும்
ஒப்பில்லாகற்புடைய வொண்ணுதலையிச்சபையிற்
கொண்டுவந்தாலுந்தன் குலத்துக்கிதுனசம்
மன்றுசினத்தானீ மடியாதேசொல்வதைக்கேள்
என்றுருகிச்சிந்தை யிருகண்ணுநீர்ததும்ப
நன்றுதராத்திமை நயப்பாக்கொண்டழியும்
அசுரனொப்பிறந்தோ ரியாவர்களுமொன்றாக
இசையக்குருகுலத்தி லேனிபிறந்ததென்று
பார்மான்பொறமற் பதைத்தேநடுநடுங்கி
சீர்மாமலர்முனியைச் சென்றிறைஞ்சியென்சுமையை

நீக்கென்றேசொல்ல நிகரில்லாநான்முகனுந்
தாக்குடயவிந்திரனுந் தாமன்சரண்டோய்ந்தார்
பூமான்மதிமுகத்தைப் புண்ணியனுந்தான்பார்த்துக்
கோமான்குலத்துதித்துங் கோதாஞ்சுமைதீர்ப்போம்
என்றுநெடியோ னிவற்குரியவாய்மையதாய்
அன்றுபுவியிற்பிறந்தே யம்மானுடன்பலனாக்
கொன்றுசுமைசற்றுக் குறைத்தான்குறைச்சுமையை
என்றுகளைவோமென் றேபார்த்துக்கொண்டிருந்தான்
பாவிநீசெய்தவெல்லாம் பாதையவனுக்கலவோ
தாவியிருதிரத்தோர் தானும்பகைத்திரேல்
பூவுலகிலுள்ள புரவலர்களெல்லோரு
மேவியவர்களுக்கு மேலுதவியாவார்கள்
எல்லாருமாய்வீர்க ளேற்றமுள்ளபஞ்சவர்கள்
வல்லாண்மையாயுலக மானமாயாள்வரென்றான்
எட்பகீரன்னச் சிறுமைத்தேயாயினுனக்
குட்பகையுள்ள துனக்கேபெருங்கேடு
விடியுமளவு விரைந்துமழைபெய்தாலுங்
கடிதிற்கிளிஞ்சின்முனை கரையாதுபோலாக
கொடியற்குபுத்திபல கூறுகினும்வாராது
மடையற்குநற்றமிழின் வண்மைதெரியாது
சத்துருவைப்போலாகத் தானீயுந்தம்பியரு
மித்துருவாயுன்மனது மெச்சவிருந்தோருஞ்
சாவதுநிச்சயங்காண் டாழ்ந்தேயனற்குழியில்
வேவதுநிச்சயநீ மெய்மெய்யெனவுரைத்தான்
அன்னமொழியை யழிவான்சுயோதனனும்
பன்னும்பெரியோர் பகர்ந்தமொழிமதியான்
தன்னைமதித்துத் தலைகெட்டமாபாவி
பின்னுமவளைப் பிடித்துவாவென்றழன்றான்
செத்தபிணம்போற் றிருச்சபையிலவர்களும்
வெற்றிகுறைந்திருக்க மின்னைக்கொணருமென்றான்
என்றவன்சொல்லி யிசையாமனதோடுங்
கன்றியவன்பிரிதி காமியனுந்தானோடி
வடமீனனையவளும் வைகுமிடங்கிட்டாமல்
இடையிலேவந்துநின்று யேதுசொல்வானச்சபையில்
என்னைத்தோற்றைவ ரினியவுடற்றோற்றாரோ
தன்னைத்தோற்றேயதன்பின் றானென்னைத்தோற்றாரோ
என்றதற்பினுன்னை யிழந்தார்கடையிலென்றேன்
நன்றுடலைத்தோற்றதற்பின் னன்முயற்சிவேறுளதோ

அந்தச்சபையி லரிதாமிக்கோரிருந்து
இந்தச்சொல்லங்கே விசையாதிருந்தாரோ
ஆகையானுன்தோற்ற தல்லவெனச்சொல்லுகென்றாள்
தோகைநினைவிதெனச் சொன்னளவின்மன்னவனுந்
தேர்ப்பாகன்சொல்லத் திகைத்துருத்துக்கண்சிவந்து
ஆர்ப்பாகவைவர்க் கமைந்தபரத்தைதனைக்
கொண்டுவாவென்றே குறித்திளையோனுக்குரைத்தான்
மண்டுசினத்துடனே வல்லரக்கன்போலெழுந்து
காந்தாரியில்லிடத்திற் கற்புடையகாரிகைமுன்
னேர்ந்தானடக்கமிலா னீதிகெட்டதோசியவன்
சூதனுரைத்ததுபோற் றுச்சாதனன்றனக்கு
மாதுமுரைக்க மதியான்கொடும்பாவி
எல்லோவாயுநகைக்கு மென்முன்றனைநகைத்த
பொல்லாயுன்வாயாற் புலம்பியழுதரற்ற
உன்கொழுனரைவரையு மூரிலுள்ளோர்தானகைக்க
மன்சபையிற்கண்டான் மதியாய்தரியாயே
பூவுக்கிசையாத புன்மையுள்ளோரைவரையு
மேவிச்சுகம்பெருத்து விம்மிமதத்தவளே
நல்லதிகம்பெற்றனையே நாடியின்றுநூற்றுவர்க்கும்
வல்லவியுமாக வரம்பெற்றுயென்றுசொல்லி
ஓடியேபாய்ந்தே யுரங்கொண்டிருகரத்தால்
வாடிநீயென்றே மலரோதியைப்பிடித்தான்
அங்கிதனிற்போட்டபுழு வாகத்துடிதுடித்து
மங்கியிராகுற்ற மதிபோனிறங்குலைந்து
பாலவெயினர்வலைப் பட்டமான்போனடுங்கி
கோலிவந்துமாமி கொடிமருங்கைக்கைப்பிடித்துத்
தஞ்சமுனையடைந்தேன் றர்மமெனைக்காப்பாய்
அஞ்சினேனுன்கிருபை யாலின்றெனைக்காப்பாய்
பஞ்சைபோற்பூனையின்வாய்ப் பட்டகிளிபோற்குளறிக்
கெஞ்சினுள்மாமியெனுங் கெட்டகொடுங்காந்தாரி
ஆறுதல்சொல்லா ளமர்த்தாளரவனையாள்
தேறுதற்குக்கண்ணீரைச் செங்கையினாற்றுன்றுடையாள்
மார்வாங்கிப்பேசி மதியாரியல்லவென்காள்
பார்வாங்கிக்கொண்டதுவும் பத்தாமற்பத்தினியை
நிட்டூரிகாந்தாரி நீதிகெட்டவன்கொடியாள்
பட்டாடைதான்பிடித்த பங்கயச்செங்கைபறித்தே
நாடுகலக்கி நடுங்கியரற்றுவதேன்
போடியவன்பிறகே போவென்றேதள்ளிவிட்டாள்

பல்பாதகனைப் பயந்தகொடும்பாவிபன்றி
விலகாதேயச்சபையை மேவிச்சேனொன்றுரைத்தாள்
தாயிவைசொல்லத் தடையற்றதுற்கொடியன்
ஆயுளைப்பற்றியபோ லஞ்சினிலும்வன்கொடியோன்
மானங்குலைய மனங்குலையமெய்குலைய
ஞானங்குலையமின்னுர் நாணங்களுங்குலையப்
பூந்தார்குலையப் புழுதியுடற்றவழச்
சாந்தணிந்தமெய்யுந் தயங்கத்தழலொழுகப்
பற்றிக்குழல்பிடித்துப் பாரிலேதானீர்த்து
சற்றிரக்கமில்லாத் தருசண்ணனேகையிலே
உற்பாதகமுடையோ னூர்களிலேயுத்தமிகள்
கற்பானபேரிருக்கக் காரியமேதென்றுசொல்வார்
கோனீதியில்லாக் கொடியோனகரைவிட்டுத்
தானேவனங்களிலே சார்ந்தாலுநல்லதென்பார்
பூந்தாரளகமல்லோ பூவிற்குலைந்ததென்பார்
காந்தாரிமக்கள் கருக்குலைந்ததின்றேடே
நீண்டநகர்க்கு நெருப்பிட்டானிப்பாவி
பாண்டுகுமாரர் பதைப்பரேகாணிலென்பார்
நெருப்பொத்தகற்புடையா ணீழ்குழலைக்கையாலே
விருப்புற்றுத்தீண்டினவன் வெந்துபற்பமாகானு
இன்னமுயிர்கொண் டிருப்பதென்னகாணுமென்பார்
மன்னவர்களெல்லா மடிவதற்காவென்றுசொல்வார்
மண்ணுள்ளகாலம் வசையருதென்றுசொல்வார்
கண்ணைப்புதைப்பார்கள் கண்ணீர்சொரிந்திடுவார்
தழலிற்பிறந்தா டரையெல்லாந்தான்மதிக்க
அழலிற்புழுவு மணுகுமோவென்றுசொல்வார்
வல்விசயன்கையால் வகிர்ந்துமலர்சூட்டுஞ்
செல்விரவுகூந்தலிலே செந்தூளளைந்ததென்பார்
சீறியேமானபங்கஞ் செய்வாருடன்பிறந்தோர்
மாறினுற்சூதை வருமோவித்தாழ்விதென்பார்
வீமன்பொறுத்தாலும் வில்விசயனேபொறுப்பான்
மாமன்சகுனியிந்த வர்மமேன்செய்ததென்பார்
குடியிற்பிறந்தாற்குங் குடிகேடனெங்குதித்தான்
படியிலிப்பங்கம் படுவளோபாவியென்பார்
பாஞ்சாலன்காணிலிந்தப் பாழ்நகரைத்தீய்மூட்டி
தேஞ்சார்மொழிக்காகச் செம்மலெலாங்கொல்வனென்பார்
ஐவர்முகமழுக்க மாறிவாரென்றுசொல்வார்
தெய்வமிவர்பங்கதனிற் சேர்ந்திலையோவென்றுசொல்வார்

அன்னகரியெங்கு மபயப்பெருங்குரலாற்
றன்னைமறந்தே தயங்கியுருகிடுவார்
சனங்களனைத்துநொந்து தானைந்துடல்சோர
அனங்கள்பயினடையா ளவர்திருத்தேவி
கண்கணீர்சோரக் கலைசோரமெய்சோர
மண்கொள்ளாப்பங்கமுடன் வார்குழலுமேசோர
தழலுற்பவித்தா டழல்போலவச்சபையில்
அழலொத்தகண்ணோ டழுதேயரற்றலுற்றாள்
நாணோடுமுக்குணமுங் கற்புநயந்தமெய்யிற்
பூணேயுடையாள் பொருமியழுதரற்ற
காணோமெனவிருந்தாற் காசினிபார்த்தேயவையோர்
கோணாதேநேரிருந்தான் குருட்டுக்கோடும்பாவி
செக்கர்வானம்போலச் சேர்ந்தெழுந்தோர்செம்மேகந்
தொக்கசபைமுகப்பிற் சோரிமழைபெய்ததுவே
பட்டப்பகலே பதறிப்பலகணங்கள்
சுட்டகொள்ளிக்கட்டைகள்போற் சூழச்சொரிந்ததுவே
அல்லலுற்றனல்வர்களு மல்லாதுமற்றவர்கள்
தொல்லையுற்றுநெஞ்சழிந்து சோபித்தயரலுற்றார்
காந்தியேவீமன் கதைமேற்கரத்தைவைத்தான்
சேந்துவிழிவைத்தான் செயவிசயனவின்மேலே
மற்றிருவோரும்படையில் வன்மமுடன்கையைவைத்தார்
உற்றுருத்துச்சீறு யுருமுமிளையோரைப்
பார்த்துத்தருமன் பலபலென்றேநீரசொரியச்
சீற்றமுடனின்னேரஞ் செய்தவைக்கெல்லாம்பொறுத்தீர்
இன்னம்பொறும்பொறுமென் றேயிளைஞர்கோபமெல்லாம்
உன்னும்பொறைக்கடலை யொற்றுனுமாற்றியபின்
வார்ந்தொழுகுகண்ணீர் வரைத்தடமெலாம்பரவ
கூந்தனிலங்களெல்லாங் கொண்டலைப்போலேதவழச்
சோர்ந்துவிழுந்தழுது தோகைகோகோவெனவே
சேர்ந்தசபைதனிலே செல்விமுறையிட்டரற்ற
புண்மேற்கடுங்காரம் போட்டவிதம்போலாக
மண்மேற்கொடும்பாவி மன்னிளையோனேதுசொல்வான்
மன்கூடியசபையின் மாமனிருவோரிருக்க
நின்காதலரிருக்க நீதிநதிசேயிருக்க
என்வந்ததுன்றலையி லேயடியாவீழுதிப்போ
முன்வந்தமுதரற்ற மூண்டகேடேதுனக்கு
தேடும்பொதுமகட்குத் தேடரிதோகண்ணீர்தான்
ஆடம்பரங்க ளடங்கியுமேன்வாயுனக்கு

என்றேவசையா யிவனுரைக்கவைவர்களும்
ஒன்றுஞ்சொல்லர்திருந்தா ருற்றருகித்தங்களிலே
அச்சபையைப்பார்த்தா ளழுதாடொழுதிடைந்தாள்
வச்சிரனேர்மாமாவே மந்தாகினிமகவே
இச்செயலோவீர மிதுவோபெருங்கீர்த்தி
மெச்சுவரோமன்னரெல்லா மேலோர்துதிப்பர்களோ
எனமைக்குழலா ளிசைத்தமொழிகேட்டுக்
கனமொத்திரங்கியிரு கண்ணீர்களாரோட
மின்னினுடன்பிறந்தே மின்னுரையிந்தவசை
மன்னர்சபையின் மதியாமற்பேசுவது
அழகோவறிவோ வறிவிற்கொழுந்தோதான்
கழைமொழிசொற்கெதிர்ப்பான் கன்னியர்க்குங்கீழ்மையன்றோ
என்றுகங்கைமைந்த னியல்விதுரனைப்பார்த்து
உன்றமையனுன வுரவோன்றனக்கோது
நீதியில்லாய்ச்சொல்லே னிகழ்த்தனிலந்தனக்குங்
வேதன்மாலீசனுக்கு மேலோர்க்குமேற்காது
என்றேகுருகுலத்துக் கின்பமணியுரைக்க
கன்றிவிழிவழியே கனிந்துநீராரோட
கண்ணவிந்ததல்லாது காதுங்கெடவிலையே
மண்ணினடுவில்லாத மன்னனுக்கென்சொல்வதென்று
வடமீனனையகற்பின் மங்கையோபங்கமுற்றாள்
கொடியனைப்பெற்றாயுங் கூடப்பிறந்தாளும்
படியிற்கொடியவர்கள் பாரியர்களெல்லோரும்
வடிவுற்றவிச்சபையில் வந்துபங்கமுற்றதென்றாள்
எதெனுடல்தோற்றதற்பின் னெந்தனையேதோற்றனரோ
போதவெனைத்தோற்றதற்பின் பூபருடற்றோற்றனரோ
நாக்குச்சாயற்றவரோ நன்றுநடுவாய்ச்சொலுங்கள்
வாக்குடையீரிப்போ வழுத்தாதெப்போதுமைப்பீர்
என்றழுதுவீழ்ந்தே யிடைந்தரற்றவெல்லோரு
மன்றிலரசுக்கோதின் மாதுசபித்திடுவள்
அன்றிலவளுக்கோதி லண்ணன்முனிவனென
ஒன்றும்பேசாம லுரவோரிருந்தமையால்
ஊமைகள்போல வுரவோரிருந்திடவே
தீமையுடையோரே திட்டியாற்கண்டதனைச்
சொல்லாதொழிந்தீர் துரோகமதிபாவமன்றோ
நல்லாளைப்பின்றோற்க ஞாயமோஞாயமல்ல
ஆதலான்மாதை யவையேற்றல்குற்றமென்று
போதமுடையதொரு பூபரோசொல்வீரோ

என்றுநடுச்சொன்ன னியலந்தகன்சேயில்
மன்றில்விகன்னனெனு மானுபிராமனன்றான்
அடியார்க்குத்தன்முயற்சி யாதுண்டதனாலே
படிமீதணங்கையிவன் பற்றியதேகுற்றமென்று
சொன்னான்முனிவனென்றே சொல்லாதொழிந்தீர்கள்
என்றான்விகர்ண னிசைந்தசபையிடையே
கன்னனெனுங்கொடிய காலீனன்கோபமுற்று
மன்னவனேயுன்போல வளரறிவின்மிக்கோர்யார்
செப்பமுடனிவ்வழக்கைத் தீரொன்றுரைப்பவர்யார்
ஒப்புடனேயுன்னறிவிற் குற்றவறிவாளரிங்கே
காணாதுநீயே கதித்தாயோபுத்தியிலே
தோணாததுன்போலச் சொல்லவல்லாரியாவருளர்
தேருங்கரியுந் திறன்மாவுந்தான்றோற்று
ஊநந்தனமனைத்து முள்ளவெல்லாந்தான்றோற்றுத்
தன்னையுந்தோற்றதற்பின் றுனிவளைத்தோற்றாரோ
அன்னவர்கடேடியதே யல்லாதிவளாரு
ஆகாயமாயிருந்தே யம்புவியில்வீழ்ந்தாளோ
வாகாய்வழக்கறிந்த மன்னுவெனக்கெதிரி
சொல்லென்றானப்போ துரியோதனன்சினந்து
கல்லென்றவன்றனையே கைதூக்கிவிட்டிடென்றான்
காளிபோனின்றே கனவழக்குச்சொல்வானைத்
தோளில்வலியாய் துகிலுரியென்றேயுரைத்தான்
தீயன்கொடுஞ்சொற் செவியில்விழப்பதறி
ஆயன்றனைநினைந்தே வைவரையுந்தான்பார்த்தாள்
வீமன்கதையெடுத்தான் வில்லெடுத்தான்வல்விசயன்
கோமன்முரசுயர்த்தான் கொற்றவனைத்தானமர்த்தி
தம்பியரோயின்னமனஞ் சற்றேபொறுத்திருங்கள்
சம்புமாலீசனுக்குந் தானவையிலுள்ளோர்க்குந்
தான்பொருத்தமானாலுந் தான்பொறுத்தல்வேண்டாமோ
மான்பொருத்தகண்ணாட்குந் வந்தவிதிவந்ததென்றான்
மன்னற்கிளையோனு மாதின்மருங்கின்றுகிலை
என்னவேமுந்திபற்றி யீரமில்லான்றானுரியச்
சம்மதித்தானஞ்சாமற் றான்சிரசிற்கையேற்றி
எம்மனத்துள்ளேயிருக்கு மீசனேயுன்னுதவி
அல்லாமல்வேறே ரனதாபமியான்காணேன்
எல்லாமுனதுபர மென்மானநீகாப்பாய்
ஆதியேயென்று யிரநாமமுந்துதித்து
கோதைநடுநடுங்கிக் கோவிந்தாவென்றரற்றித்

தூணிலுதித்தனையே தும்பிதனைக்காத்தனையே
நாணம்போகாதபடி நாடியெனைக்காவெனவே
சிந்தைதனிலெண்ணுமுன்னே செந்திருவிணயகனும்
வந்துமனதுறைந்தே மாருக்கலையீய்ந்தான்
நினைத்தோர்கருத்தாய் நிறைந்துலகாய்ப்பல்லுயிராய்
அனைத்துநிறைந்தளிக்கு மாதிமூலக்கடவுள்
ஈய்ந்தவரமு மிதையத்திலேதோற்றி
சார்ந்ததியானமுடன் சபையினின்றாளம்மாளுள்
வண்ணமிகுந்த வகைக்கனந்தமான துகில்
திண்ணமுடன்மேன்மேற் றிறமாய்வளர்ந்ததுவே
நாரில்லாநெஞ்சா னடுங்கான்கொடும்பாவி
வீரியமாயோயாமன் மேன்மேலுமேயுரிந்து
கைசோர்ந்துமெய்சோர்ந்து காலையுரிந்ததுகில்
ஐசேர்ந்தகூட மடங்கலுமேதானிறைந்து
வைக்கவிடமில்லாமல் வாரியேதான்சிலர்கள்
மிக்கசுமையெடுத்தே வேசத்துமெய்மறந்தார்
பாவிகரஞ்சோர்ந்து பரிவின்செயலுமற்று
ஆவிதமொறி யவன்றிகைத்தேயேதுசொல்வான்
உள்ளிடைக்குட்சேணியர்க ளுண்டோவொருக்காலே
கள்ளியுனக்கிந்தவித்தை கைகண்டவித்தையென்று
பரத்தைதுகிலுரிந்தேன் பாணியசந்ததென்றுங்
கரத்தைவலிக்குதென்தன் காயமும்புண்ணாச்சுதென்றும்
என்னான்முடியா தெனவிளைத்துக்கீழ்வீழ்ந்தான்
மன்னனகங்கை மகன்முதன்மற்றுள்ளோருங்
கற்பிற்கும்பொற்பினுக்குங் கன்னியர்கடெய்வமென்றே
சற்புத்திரர்களெல்லாந் தன்கைகுவித்தனரோ
அழலுக்கழலெனவு மக்கினிக்குமிக்கெனவும்
பொழுதைச்சபித்துவந்த பொற்கொடியையொக்குமென்று
மன்னர்துதிக்க மனமறுகித்தள்ளாடி
என்னவிதியெந்தனுக்கென் றெண்ணிநடுநடுங்கிப்
பாகொத்தசொல்லாள் பதறிப்பதைபதைத்துச்
சோகித்துநொந்தே சுழல்வண்டுபோல்வீழ்ந்தாள்
வீழ்ந்தவளைக்கண்டே விதுரனும்வீமனுந்
தாழ்ந்துவிழிவழியே தாரையாயாறோடப்
பொறுமைக்குங்கற்பினுக்கும் பொற்புமரபினுக்குந்
திறமுற்றதெய்வமிவ டெய்வமென்றேகைகுவிததார்
ஆழியெனமொய்த்த வரசரெல்லாங்கைகுவித்தார்
வாழிசொல்லிப்பூமாரி வானோர்கடான்சொரிந்தார்

அந்தரதுந்துபியு மானசங்குந்தான்முழக்கி
சிந்தையுடன்மென்மேலுந் தேவர்களெல்லாந்துதித்தார்
அழுதழுதுமான்புலிவா யகப்பட்டதுபோல
எழுதரியபொற்பாவை யேக்கிநிலத்தில்வீழப்
பொழுதுமனமும் புகைமூழப்புங்கிவிழ
அழன்மூளப்போர்மூள வங்கிமனம்பொங்கியெழ
என்னிவனுக்கிந்த விறுமாப்பெனவெகுண்டு
துன்னியேபற்கடித்துத் தூணிலெழுஞ்சிங்கமெனப்
பழுதிலாவீரம் படைத்தபவனன்மகன்
விழுமமுடன்கதையை வீமன்பிடித்தெழுந்தே
தருமன்பலகாற் றடுத்திருத்தத்தட்டாமல்
இருளிற்பருதி யிசைந்தேமறைந்ததுபோல்
ஒருமையுடனிருந்தோ முமக்குப்பயந்ததுபோன்
மருளான்மயக்கி மதத்ததொருநூற்றுவரும்
ஒருவனுடனெதிர்த்தே யுயிர்கொண்டுபோங்களென்றான்
கூப்பிட்டாற்றுகின்றான் கூறைவளவொடுப்புஞ்
சாய்ப்பற்றவீமன் றடவலியுந்தானுடுங்கக்
கோதைதனையென்மடியிற் கொண்டிருத்தென்றோதினனே
வாதிடியேறுண்டதொரு வாளரவைப்போனடுங்கிப்
பொறுக்கப்பொறுக்கவிவன் புத்திகெட்டோனென்றறிந்து
வெறுத்துச்சபித்துவிட வேணுமெனச்சினந்தே
மயிடன்முடியினட மாமேகமாயியைப்போல்
பயிரவிபோல்வடிவு பற்றியாங்காரமுடன்
அண்டனடுங்க வகிலங்கடானடுங்க
எண்டிசையுமெண்கிரியு மேகமாய்த்தானடுங்க
பாவிதன்னெஞ்சு பதைக்கவேபற்கடித்துத்
தாவிக்குதித்த தலமாந்துடைவழியே
காகங்கழுகுங் கலந்தலைந்துமேபிடுங்கச்
சோகமுடன்வாயாலே சோரிகொட்டிப்பூச்சொரிய
படுகளந்தன்னிற் பதைத்தாவிநீசோரக்
கடவதெனச்சபித்தாள் கண்டோர்நடுநடுங்க
என்னளகந்தொட்டே யெழிற்றுகிலுந்தானுரிந்தோன்
தன்னுடலும்வன்கரமுந் தான்பருக்கைபோற்றுணிந்து
முரசுகுமுறி முழங்கும்பெருங்களத்திற்
குருதிப்பெருக்கை குழனிறையத்தானூட்டி
ஒருமொத்திடக்காலா லோங்கிவாய்மேலுதைத்துத்
தெரியுமவனெலும்பைச் சிப்பாக்கியேகோதி
மருமத்தின்மீதேறி மாதென்வலக்காலைவைத்தே

இருளிற்குழன்முடிப்பே ணில்லான்முடியனென்றாள்
அன்றைக்குப்பார்ப்போ மவளைப்பிடியெனவே
மின்றியுரைத்தளவின் வெங்கோபம்பொங்கியதால்
இனிமேற்பொறுப்பதில்லை யிந்தமட்டுமியான்பார்த்தேனை
தனியாநிமகனே சாக்ஷியென்மேற்குற்றமில்லை
இங்கிவளையிப்போ தெரிக்கிறேன்பார்க்கவென்றே
அங்கிவிழிக்கண்ணாலே யந்தரத்தைத்தான்பார்த்துப்
பற்கடித்துத்தானுருத்தாள் பக்கமெங்கும்வெள்ளிடியா
யக்கினிமேகமொன்று வந்தரத்திலேயெழும்பி
பக்கமெங்குந்தீய்க்காற்றாய்ப் பாரதனில்வீசியதே
ஒக்கவுரவோரு முட்கியேயுண்ணடுங்கித்
தீப்க்காற்றுவீசச் செறிந்தசபைகுலைந்து
வாய்க்காதெனநடுங்கி மன்னுல்வரும்பயந்தான்
மங்கிநிறங்குலைந்தே மன்னர்திடுக்கமுற
சிங்கக்கொடியான் செய்வஞ்சினமுரைப்பான்
பத்தினியைச்சின்னம் பழுதுபகர்ந்தவனைக்
குத்திநிணம்பறியக் கொன்றேகுலைக்களத்தில்
மற்றத்துணைவரையும் வன்படையாற்கொன்றாக்கி
வண்டுமொய்த்தகூந்தல் மதியாமலேபிடித்துக்
கொண்டுவந்தேயிச்சபையிற் கூசாமலேற்றிவைத்துப்
பைந்துகிலுமஞ்சாமற் பற்றியேதானுரிந்த
இந்தப்பதக னிருகரமுந்தானொருக்கி
பிந்தக்கழுத்தைப் பிளந்தொழுகுஞ்செந்நீரைச்
சிந்தவிருகையாற் றெகிட்டவேவாரியுண்பேன்
அன்றளவுமிக்கரத்தா லள்ளிநீருண்பதில்லை
என்றிக்கதாயுதத்தா லெற்றியேதானுயர்ந்து
அந்தரத்திலேயெழுந்த வன்னீலாவர்யாலே
சந்ததமுமுன்பனென்றே சபதமுரைத்தான்வீமன்
வச்சிரன்மைந்தன் மகாகோபமாயெழுந்தே
தச்சப்பயலல்லவோ தானிதெல்லாஞ்செய்துவைத்தான்
இங்கிவனைத்துங்கமுர சேழுவங்கும்போர்க்களத்தில்
அங்கமெங்கும்வெங்கணையா லம்புக்கூடாக்கிவைத்து
வாய்நிறையமண்பரவ வல்லசிரந்தானறுத்து
நேயபுகழா னிலத்திடுவேனென்றுரைத்தான்
நகுலன்சவுபலனை நாயகனைக்கொல்வனென்றான்
சகுனிதனையே சகாதேவன்கொல்வனென்றான்
எளிதோபகையிதென்றே யிராஜரெலாமேக்கமுற்றார்
வளிவீசிச்செந்நெருப்பு மாரிபொழியுமுன்னே

விதுரமகிபதியும் வீடுமனுர்தான்சீறி
மதிகெட்டுப்போச்சோவுன் வாயிலேமண்வீழ்கக்
காலமணித்தாச்சோ காவலர்கள்சொன்னதெல்லாஞ்
சாலத்திருச்செவிக்குத் தானேநுழைந்திலையோ
அற்பப்பயலே யசட்டுமடையாபாவி
சற்பக்கொடியோனே தானுங்களிங்கிருக்க
அணுப்பிரமாண மகந்தனிலேயெண்ணமற்
கணிப்பற்றகோட்டிகொண்டாய் கன்னிதனையுன்மதத்தாற்
தட்டரவுண்டு தனித்தவிசிலேயிருக்க
ஒட்டுமோவொட்டாதோ யுன்மதத்தாற்கெட்டாயே
என்றிவ்விருவர்களு மெண்ணிறந்தமன்னர்களுங்
கன்றிச்சினக்காதே கற்புடையமாதாவே
காத்தருள்செயிந்தக் கனன்மழைதான்பெய்யாமற்
தீர்த்தருளாயாமாகிற் சேரமடிந்திடுமே
என்றுபலர்கெஞ்ச வெரிபோற்சினமூண்டு
நின்றுவடவை நிகராய்க்கொதித்துநிற்க
அக்கினியின்காற்றாலே யங்கமெங்குந்தான்கருகத்
திக்கெங்குந்தான்கலங்கச் சேணிவிடிமுழங்க
நடுங்கிப்பயந்தயர்ந்து நாவுலர்ந்தேயோடிவந்து
பயந்தேன்பயந்தேன்மெய்ப் பத்தினியேயுன்பாத
நயந்தேநயந்தே னடுங்காதினிக்காப்பாய்
முட்டுண்டுபின்குனியு மூதேவித்தோசிமக்கள்
மட்டிப்பயல்களையான் மக்களெனப்பெற்றேனே
கண்ணிலானெற்காகக் கற்புடையாய்நீயிரங்கிப்
பெண்ணரசேபிள்ளைகளைப் பிச்சையாய்த்தானளிப்பாய்
பூங்கொடியேயென்சிறுவர் புத்தியறியாமன்
மாங்குயிலேயுன்னை மரியாதைத்தாழ்வுசெய்தான்
சந்திரன்முன்னாய்குலத்தாற் ருகூழியுண்டோமாதாவே
எந்தனுக்காய்ச்செய்தபிழை யெல்லாம்பொறுத்தருள்வாய்
பித்தானநாய்கள் பிதற்றியதைநீநினைந்து
சத்தாகினுங்குறையாய்த் தான்மனதிற்காணாதே
என்றொருகோடி யிதமாயுபசாரம்
அன்றந்தகன்பிதற்றி யம்மாபொறுக்கவென்று
பஞ்சைபோற்கெஞ்சிப் பரதவித்தவாறுகண்டு
அஞ்சுகந்தேன்பான்மொழியா ளாறினுடன்கோபம்
பலசொல்லினுனயந்து பாவைதனைத்தேற்ற
வலிகொண்டவைவரையும் வந்தந்தகன்றழுவி
உங்கண்மனக்கோப முள்ளதெல்லாந்தான்மாற்றித்

திங்கட்குலக்கொழுந்தே நீதாடியேதோற்ற
நாடுநகர்கரிமா நற்பொருளுமெய்ப்பொருளு
நீடுகொடியோனகரி னில்லாதுன்றேவியுடன்
இந்தக்ஷணமே யெழுந்துநடந்திடுங்கள்
கந்தக்கொடியபயல் கண்கலக்கஞ்செய்துவிட்டான்
என்கண்ணனைய விளையோன்றவக்கொழுந்தே
புலன்களடக்கிப் பொறுத்தீர்மிகப்பொறுத்தீர்
என்பிள்ளையென்று மிளையோன்சேய்நீங்களென்றும்
வன்பிரண்டெண்ண மனதினினைத்தறியேன்
இவ்வாறதாய்வருமென் றெள்ளளவுமியானறியேன்
ஒவ்வாய்ச்சொன்முன்னறிந்தா லோலையுமக்கனுப்பேன்
வாதுசூதாடுதற்கு மக்களையுமுங்களையும்
ஏதுவாயாடுதற்கு மிப்போதுஞ்சொல்லறியேன்
இப்பாதகமா யிவர்நினைத்தகொள்கைதனைத்
தப்பாதெனக்கொருவர் தானுமுரைத்திலர்காண்
என்மைமைந்தர்நீங்க ளிளையோன்மகனவர்கள்
சென்மமுள்ளமட்டுமெனச் சிந்தைதனினினைந்து
கந்தனினுமிக்கான காஷியுடன்வளர்த்தேன்
சந்ததமுமுங்களையே தான்வளர்த்தார்வேறுமுண்டோ
ஓர்தொழுவத்துள்ளே யுறைந்தபசுவினங்கள்
தார்தலத்திலொன்றேடொன்று தானிகலிக்கொண்டிலையோ
நீரடித்துநீர்விலக வீணிலத்திலுண்டோதான்
கோரமுற்றவெஞ்சமனக் கோபமெலாந்தானகற்றி
விரகுக்குத்தியன்ன வேந்தன்விறலவைரையுந்
திருந்தாருக்கேகுமெனச் செப்பிவிடைகொடுத்தான்
நயனமிலியோது நல்வார்த்தைதான்கேட்டுப்
பயனில்லாச்சொல்லைப் பகர்ந்தானெனச்சகுனி
மனதுகருகி மருகன்முகம்பார்த்துக்
கனநிகர்கன்னனையுங் கைசோர்ந்தகாளையையும்
பார்த்துவிழிசிவந்து பாதகமாயேதுசொல்வான்
சாத்துவதேதிப்போ தலைசொரிந்தீர்கொள்ளியினல்
ஏதுமொருகரும மெண்ணிச்செயல்வேண்டுஞ்
சாதலுறத்துணிந்து தான்செய்தேயெண்ணுவதோ
செய்யாதுசெய்தீர் செகுத்துச்சதிமூட்டி
கையாவுலகங் கலங்கவினைவிளைத்துத்
தீயினாற்சுட்டவடு தீருமதிற்கொடிய
வாயினாற்சுட்டவடு மாறுவசையுறாத்து
மண்ணிரங்கமண்ணிலுள்ள மன்றுயிரெல்லாமிரங்க

விண்ணிரங்கத்தேவரெல்லா மேன்மேலுமேயிரங்கக்
கொடிதிற்கொடிய கொடுமைதனைமுடித்து
அடியிற்றெருழுதிரங்கி யன்புவைத்துத்தோற்றபொருள்
எல்லாமவர்க்களித்தே யிங்குளபேரியாவரையுங்
கொல்லாமற்கொல்லவென்றே சொற்றவனுங்கூறிவிட்டான்
பிணைத்திருவதல்லாற் பெரும்பாரந்தாங்கியகல்
தணர்ந்துவிலைவதுண்டோ தானுணர்வதேபுலியைக்
கூட்டிலடைத்துக் கொடுமைபலபாராட்டி
வீட்டிற்றடையறவே விட்டுவிட்டால்விட்டிடுமோ
அடைப்பட்டிருக்கையிலு மஞ்சாவயவேங்கை
தடைவிட்டாலுங்கடனைத் தப்பவிடமாட்டாது
தீசெய்தவன்மமவர் செஞ்சுதனின்மாறுமற்
றீய்செய்திருப்புதல்லாற் சிந்தைமறப்பர்களோ
என்னச்சகுனி யியம்பவந்தனுல்வர்களும்
உன்னிமுகமுகமா யோசனைசெய்தேமுடித்துப்
பழிக்குமுகஞ்சாயாப் பாவிதுரியோதனன்றன்
வழக்குத்தருமன்முன்னே வந்தேதுசொல்லுற்றான்
உண்மையாய்ச்சூதாடி யும்பொருளெல்லாமிழந்தாய்
வண்மையாயிச்சபையில் வைதாற்றருவோமோ
மெய்யாட்டஞ்செய்யவில்லை வீணனபேர்களைப்போற்
பொய்யாட்டமென்று புகன்றனதுவாயாலே
சொல்லிவிட்டேயிச்சபைக்குட் டோற்றபொருள்கைக்கொளுநீ
அல்லவென்றாலெயர்சொற்கா யாளுநிலமும்விட்டுவிடோ
காடுவிட்டுக்காடுபுக்கி கன்னகரிஞேக்காமற்
தேடுஞ்சருகருந்தச் சென்மினெழுந்திரென்றான்
மைந்தன்வழக்குரைக்க மன்னனவைகேட்டு
எந்தையேதம்பியரோ யிருக்கின்றமன்னவரோ
தோற்றவைக்கும்வென்றவைக்குந் தொல்லுலகத்தாரறிய
ஏற்றபன்னிராண்டு மெரியார்வனத்திரிந்து
மீண்டுமோராண்டு வெளியாடாதேநாட்டில்
பூண்டுமறைந்திருந்து பூவுலகையாளுமென்று
சொன்னான்கொடியோன் றுரியோதனன்மகிழ்க
அன்றுல்வருக்கு மகங்குளிர்ந்ததம்மாறாய்
சார்ந்தந்தகனுரைக்கத் தானழிவிலேபிறந்தாள்
வேந்தனேநின்சொல் விழலொப்பென்றேயறியோஞ்
சூதாடச்சம்மதிபாத் துய்யோரைச்சாதகமாய்க்
கோதாடச்சொல்லியிந்தக் கோட்டிகொண்டாயிப்போது
நின்சொல்லடங்கலையு நின்மக்கட்டியபின்

வன்சொல்லாய்வஞ்சகமாய் வந்தேதுசொல்லலுற்றாய்
தோற்றதற்பினுங்க டொர்ந்துவழக்கோதுவது
மாற்றமல்லநானுமந்த மாயச்சூதாடுகிறேன்
என்றுளதற்கு மிசைந்தொட்டமியாதெனவே
வென்றவனுங்கேட்க மெய்த்தருமபுண்ணியனும்
ஐவருந்தேவியரு மாயுதமுமைந்தர்களும்
தொய்வற்றவொட்டமெனச் சொல்லியேசம்மதித்துப்
பவளநிசிதப் பசியமணிக்காய்பரப்பி
தவளக்கயறெடுத்துத் தானெறிந்தாரம்மாறாய
மாயச்சகுனியென்போன் மந்திரமும்வன்புரட்டுஞ்
தாயக்கயிற்றின் சதியிங்கதிர்முகத்தில்
பனியொத்தொளிந்தோடப் பைங்கிளியாள்வெற்றிபெற்றாள்
சனியொத்தவன்சகுனி தாழ்ந்தேதலைகுனிந்தான்
பண்டுபோற்பின்னும் பரப்பிபந்தக்காய்சடன்னை
தொண்டுதிருப்பியதுர் தொல்லுலகுமொட்டமென்று
ஒத்துச்சகுனியுட னெண்ணுதலுமாடுமுன்னே
பித்துக்குவித்தான்போற் பேயன்சுயோதனனும்
மாமனைப்பார்த்தே வனிதையுடன்சூதாடற்
கோமன்னருக்கழகோ கூசாதெழுந்திரென்றான்
அந்தமொழிக்கவனு மாமென்றெழுந்துவிட்டான்
தொந்தமுள்ளகன்னனுந்துச் சாதனனுமொக்குமென்றான்
அவலச்சமத்தா வனிதமகாபாவிச்
சவலைப்பயலேநீ தாடவாவென்றுரைத்தாள்
மைதயலேயுன்னுடனே தானாடேன்பஞ்சவரை
வையமதிலாட வரச்சொல்வாயென்றுரைத்தாள்
மந்தாகினிமகனே மாமாவேயுங்களுக்குஞ்
சந்தோஷமோவீண் சலிகையோவிக்கினிமேல்
பெற்றேன்மொழியும் பிதாமகனார்தன்மொழியு
மற்றோர்மொழிக்கு மனுநீதிதான்முறைக்கும்
ஒத்திராதேமுரண்டி யூடாடுவானாகின்
மற்றதற்கேற்ற மசாமுரண்டுமென்னிடத்தில்
உண்டென்றுசொல்லி யுருத்தவுடன்காங்கையனும்
கண்டத்தகன்மகனைக் கண்ணாலேதான்பார்த்துச்
சூதாடமாமனுடன் சொல்லிதெல்லாநியாயமல்ல
வாதாடிக்கொள்வதெல்லா மார்க்கமல்லவென்றுசொன்னான்
அரிவையுடனரச ராடுவதுமார்க்கமெனத்
தெரியுமறையுளதோ செப்புமெனக்கென்றுரைத்தான்
கேட்டவுடனே கிளிமொழியாளேதுசொல்வாள்

நாட்டமிலான்சேயுரைக்க நல்லவையுள்ளோரறியக்
கன்னனுடனன்றுனது காதலியுஞ்சூதாடி
னென்னறுகில்கொடுத்தே நிர்வாணத்தோடுநின்ற
தெந்தமறையி லிருந்ததைநீசொல்கவென்றுள்
அந்தமொழிகேட் டரசன்மிகச்சினந்து
நிந்தனைக்குமஞ்சாம னீலிபோலாடுகிருய்
பரத்தைநீயாகையினுற் பங்கமுனக்கில்லையென்ருன்
கரத்திற்படைகளொடுங் காந்திஞர்பஞ்சவர்கள்
விருத்தன்றிடுக்கிடவு மெல்லிசினந்தெழுந்தாள்
அந்தகனுங்காங்கையனு மண்ணல்விதுரனுமாய்ச்
சந்தமிகும்பஞ்சவரைத் தையலையுந்தானமர்த்தி
நீதியில்லாதான் நெறிகேடன்பொல்லாதான்
சாதனைக்கள்வன் றருமந்தனைக்கடந்தான்
சத்தியமில்லான் றறுகணன்மாபாவி
புத்தியவன்கேட்கறியான் போரானவன்றுரோகி
ஈராறுஆண்டு யினிதாய்வனமாண்டு
ஓராண்டுநாடுறைந்தே யுங்களுலகமெல்லாங்
கைக்கொளுங்களிதற்குக் காய்ந்துகொடாஞமாகிற்
றக்கபடியே சமரில்வனைத்தொலைத்து
உங்கண்மனவிரத முள்ளதெல்லாந்தான்முடித்துப்
பொங்குமுலகெல்லாம் புரந்சாளுமென்றசொன்ஞர்
நன்றுநன்றுநீங்க ணடுவுரைத்தீர்சம்மதித்தோம்
என்றுவிடைபெற் றெழின்மாதும்பஞ்சவருங்
குரவோர்பதம்வணங்கிக் கோனகரிவிட்டகன்று
விரவும்வனநோக்கி வேந்தர்நடந்தனரோ
மன்னவர்கள்சிங்கம் வனநோக்கியேநடக்க
அன்னகரிலுள்ளபல வாண்பெண்டங்களுமாய்
நால்வரொழிய நரபாலருமழுதார்
மேல்விண்ணவரு மெலிந்தயர்ந்தேவெய்துயிர்த்தார்
கசிந்தனர்சாண்மாக்கள் கண்கலங்கியேதவித்தார்
பசுந்தண்மொழிக்குதலைப் பாலனும்பாலுண்டதில்லை
துக்கித்தேமெய்மறந்து சோகம்பெரிதாகிப்
புக்கனலுற்றுர்போற் பொற்புமுகம்வாடலுற்ருர்
விண்ணிரங்கமண்ணிரங்க வெற்பிரங்கமிக்கோர்கள்
கண்ணிரங்கப்பல்லுயிருங் காரிரங்கமேரிரங்க
மல்லலுறும்பஞ்சவர்கண் மாநகரிவிட்டிழந்து
கல்லகமுங்கானகமுங் கானடந்தனரே
பொன்னுரிதியும் பொருப்பாய்க்கவர்ந்ததுவும்

மின்னுமணியினங்கண் மேவுகின்றமாளிகையும்
பொருள்கள்பலவும் பொருந்துகின்றபொக்கிஷமும்
இருள்களணுகாத வேமமணிமண்டபமு
மகமேருவனையவெழின் வண்ணமதிற்கோபுரமுஞ்
சிகரச்கிரணச் சிவாலயமாலாலயமும்
பொங்குந்தனதனுக்கும் பொற்பானவாழ்வுடைய
துங்கநகருந் தொலையாய்ச்சம்பத்துகளுஞ்
சீர்வளருநாடுகளுஞ் செல்வச்சிறப்புகளும்
பார்விளங்குபாக்கியமும் பற்பல்வரிசைகளுந்
தேர்க்குலமுங்கார்க்குலநேர் சிந்துரமும்வெம்பரியுங்
கார்க்கடலின்மிக்க சனசேனையுமிழந்து
சீரிழந்துபேரிழந்து செங்கோலுந்தானிழந்து
உளரிழந்தேயைவர்களு முற்றபலதேவியரும்
புத்திரர்களோடும் புகைவீசுங்கானகத்திற்
சத்தியஞ்சேர்பஞ்சவர்க டானடந்தாரம்மானுய
எரிக்குஞ்சினத்தா னிராசரிஷிக்கெவ்வுலகும்
அரிச்சந்திரன்றேற் றதுபோலவேதோற்று
வண்ணமுக்கண் மழுங்கிமனம்புழுங்கி
கண்ணும்புலன்கள் சுழலக்கலக்கமுற்று
காந்தாரிமக்கள்செய்த கண்கலக்கந்தானினைந்து
பூந்தாரனெஞ்சினழல் பொங்கிமாறுதெரிய
தருமனுழியவருந் தம்பிமார்னல்வருடன்
வருகின்றமாதர்களு மக்களுமேவெம்பிவர
அறனும்பொறையு மடங்குமகக்கடலான்
மறமிலானல்வாயு மற்றோரையும்பார்த்துக்
கற்பிளவோடொப்பர் கயவர்கடுஞ்சினத்துப்
பொற்பிளவோடொப்பாரும் போன்றதேதம்பியரோ
விதியால்வருவதல்லால் மிக்கோர்களாலு
மதியாலும்வாழும் வகையுண்டோதம்பியரோ
ஈசன்கபாலத் திரந்துண்டலைந்திலரோ
பாசமுடனடிமைப் பட்டிலரோபாவையற்காய்ப்
பிட்டுக்குமண்சுமந்து பேதமறக்கொட்டிலரோ
தட்டும்பிரம்பினடி தான்பட்டேநொந்திலரோ
விரிசடைமீதில் விறகுஞ்சுமந்திலரோ
எரியும்வனவேட னெச்சிலருந்திலரோ
மங்கையுடன்காடுறைந்தே மாயன்வருத்தமுடன்
செங்கனிகாய்மூலமிலை தின்றுபசிதீர்ந்திலரோ
தாரம்பறிகொடுத்துத் தானவதிப்பட்டிலரோ

வாரியடைத்தரக்கர் மாளப்பொருதிலரோ
திருவென்னுஞ்சீதை சிறைமீட்டுவந்திலரோ
பிரமன்சிவன்சாபம் பெற்றுவருந்திலரோ
இந்திரன்பாம்பா யிடைந்தேவருந்தியினும்
அந்தங்கெடயோனி யாயிரமேபெற்றிலனோ
சந்திரன்சாபத்தாலே தான்கலைகடேய்ந்திலனோ
வெந்தடலையாய்ச்சகரான் மெத்தவருந்திலரோ
சிவசோதனையாகச் செய்தபலர்தீரப்
புவிமேலவரிலுநாம் பொறுத்தாற்புகழலவோ
இன்பம்வருங்காலந் துன்பமாயெண்ணியதால்
துன்பநமைப்பின் றொடர்ந்ததுகாண்தம்பியரே
துன்பத்தையின்பமெனச் சோராதனுபவித்தால்
இன்பமுடன்வாழ்ந் திருக்கலாமிப்புவிமேல்
இன்பம்விளையா னிடும்பையியல்பதென்பான்
துன்பமுறுதலிலன் றெல்புவியிற்றம்பியரோ
இடுக்கண்வருங்கால நகுகவதங்கடனை
அடுத்தாலதொப்ப திலனன்றேதம்பியரே
ஈரம்பொறையறிவு மென்னுங்கலையறனுஞ்
சேரநிறைந்திருக்குஞ் சிந்தைக்கடலனையான்
சிந்தைத்தெளியத் திருத்துணைவற்கேபகர்ந்து
சந்தமிகுந்தவனக் காடுதங்களுடதென்று
எண்ணிமகிழ்ந்தே யிதங்கொண்டுதானடந்து
பண்ணிசைதேன்ராகம் பயிலும்வனங்கடந்து
வளர்காமியவனமு மன்னரைவருஞ்சேர்ந்து
அளகாபுரியதென வவ்வனத்தையுட்சூழ்தி
ஆரமுதலா வளவத்தபல்தருவுஞ்
சேரநிறைந்தே திகழ்வனமுங்கானாறுங்
கடந்துமுனிவர்களைக் கண்டுகேந்தேதெண்டனிட்டு
நடந்துவனத்தி நலங்கண்டேசென்றனரே
செல்லுமளவிற் றிகழ்துருபதேயனுடன்
மல்லல்செறிமக்களுடன் மச்சனுடாதிபனுங்
குந்திபோசன்றுவரைக் கோபாலமாயவனும்
மைந்தைவருக்குரிய மற்றுமுள்ளமன்னவரும்
ஐவரையந்த வடதனிற்கண்டணித்து
மெய்நடுங்கிக்கண்ணீர் விரவியேயாறோட
ஆவென்றரற்றி யழுதேபாதவித்து
மேவியதுன்பம் விளைந்தவினைவினவி
பதைத்தாயிரமாவைப் பாயுஞ்சேயக்குலத்தைச்

சதித்தாரிக்கூட்டந் தானுத்தபாவியேனும்
அந்தகன்மக்க ளடங்கலையுந்தானழைத்து
தந்திரச்சூதாடு சகுனியையுநீருக்கிச்
சூதன்வளர்த்திடுந்தூர்த் தோசிசிரமறுத்துன்
பாதத்தின்மன்னர் பலருந்தொழுதிறைஞ்சிக்
குவ்வெல்லாமுந்தன் குடையிற்குடியிருக்கச்
செவ்வியனேயிக்கன்மே செய்வோமெனவெகுண்டார்
ஒருவர்க்கொருவ ருயர்ந்தசௌரியங்கள்
தூமுற்றுமென்மேலுஞ் சொல்லியெழுகவென்றூர்
உருகிப்பதைத்தே யுரைத்தோர்முகம்பார்த்துத்
தருமக்கடவுளெதிர் தானுரைப்பானம்மானுய்
உடுக்கையிழந்த வுடனேதிருக்கரம்போல்
இடுக்கங்களைவதுநட் பென்னுந்திறம்போல
அன்பானவெந்த னவயவத்துமிக்கான
இன்பானநண்பர்களே யின்னோர்மொழியுரைப்பேன்
கோபமில்லாமற் குறிப்பாகவேகேட்டுப்
பூபர்களேயென்போற் பொறுத்தல்கடனென்றுரைத்து
செய்யாதுசெய்யவிறல் லைவயங்கலங்காதோ
கையாலேசூதாடிக் காசினியைத்தோற்றுவிட்டேன்
குரவோர்பெரியோர்கள் கூடிநெறியோடே
பரிவாகவேவனத்தைப் பன்னிரண்டாண்டிருந்து
ஓராண்டுஞட்டி லுருமாறியேயிருந்து
பாராண்டேபஞ்சவரோ பங்குளதேயாகுமென்றும்
அப்போதுனுட்டை யரசியாளுமாகிற்
றுப்பாவடல்புரிந்து தொல்லுலகைக்கொள்ளுமென்றுஞ்
சார்த்தகமாய்த்தீர்த்தார்க டானிசைந்தேவந்துவிட்டேன்
தீர்ந்தவழக்கைத் திரும்பவெடுப்பதல
குறிக்கின்றநாளிலவன் கூவருளானுமாகிற்
றறிக்கும்படியே சமர்செய்தேயெம்புவியை
வாங்கித்தரல்வேண்டு மன்னுள்வருமளவுந்
தாங்கிச்செயல்வேண்டுஞ் சத்தியமாயென்றுரைத்தான்
தாடாண்மையன்றிச் சதிசெய்தோரியாரெனினும்
ஆடாகிலுங்கிடந்தா லவனின்மயிர்கிடக்கும்
மயிருங்கிடவாமல் மங்குண்டேவஞ்சதியோர்
உயிருங்கதிலைடையா தூழிநரகுறுவார்
என்றுவந்தமன்னவர்க ளெல்லார்க்குந்தானிசைய
அன்றுபலகோடி யறிவுவமைதான்காட்டி
உருத்தாகவந்தோர்க ளூற்றசினந்தீர்த்தான்

கருத்தாயிவன்சொற் கடந்துரைக்கமாட்டாமல்
விம்முசினத்தை விழுங்கியகத்தடக்கிச்
சம்மதித்தேசொக்கிருந்தார் தாரரசரெல்லோரும்
அரவணைச்செல்வனந்த வைவரையுமேபார்த்துக்
குரவர்மொழியாற் குறித்தநாட்போமளவுஞ்
சார்பாமிடந்தனிலே சந்ததியையில்லாளைக்
கார்பாணிபீரோவிட்டு கானினடவுமென்று
அன்னையைக்ரிகாந்தா யருகிலிசைந்தனுப்பும்
வன்னிபபந்தாண் மகனைந்துபேர்களையுந்
திரமுறையாக சேனன்சரத்தளித்தே
ஈரமுடனே யிசைந்திந்தவண்ணமதாய்
ஆனையுந்தியூர்க்கு மபிமன்சுபத்திரையைத்
தானமுடனிருக்கத் தானேயனுப்பிவிட்டு
மற்றமுள்ளபேரை மனதிசைந்தோர்பாலில்விட்டுப்
பத்தினியோ டைவர்களும்பாரவனஞ்சேருமென்றன்
மாலுரைத்தசொற்படியே வந்திருந்தமன்னவர்கள்
பாலிலொப்பிவைத்ததற்பின் பாங்காகவேகுமென்று
துளவமணிவோன் றுவரைப்பதிசேர்ந்தான்
அளவிலரச ரவரவரூர்க்கேகினரோ
உற்றோர்கடங்க ளுயர்பதியேசேர்ந்ததற்பின்
கற்றோர்களவர்களுங் கானிலிலைகிழங்கு
காய்கனிகடின்று கனபசியைத்தான்மாற்றி
வாய்சமழத்தேன்பருகி மற்றுநீருண்டிருந்தார்
எரியும்புகையும் யிமைப்பளவுமோயாமல்
விரியும்பெருங்கான மேவரியபாலையெல்லாஞ்
சீதபதமாகத் தீர்க்கமுடனேசொரிய
வாரையுறுப்பாலை வனத்தெரியெலாமவிந்து
முல்லையிலுமிக்கா முரண்செல்வமுண்டாகி
எல்லையறக்காக்ஷி யிசைந்திருந்தானம்மானைய
காட்டாவின்பாலுங் கருணையறந்தேனுந்
தேட்டாலுயரருமைத் தீம்பாலுமவங்கனியும்
வண்மைக்கிழங்கினமும் வாகாகத்தானருந்தி
விண்ணுலவுமூங்கில்வள மேவுமரிசிகளுந்
தானரைத்தாக்கியுண்டே தங்கள்பசிதவிர்ந்து
கானவரையொத்தே கருதியேவாழ்ந்திருந்தார்
நாடாண்டேவாழ்ந்த நலஞ்சனிலுமிக்காகக்
காடாண்டுவாழ்ந்து களித்திருந்தார்பஞ்சவரும்
அவடத்துறைகா னவருமுனிவோரும்

இவர்கள்மரச்சுபக்ஷ மிவ்வனமேயாச்சுதென்று
களித்தேமனமகிழ்ந்து காவலர்க்குக்கைமாறு
உளத்தயவாக வுபசாரஞ்செய்திருந்தார்
இசைவாலியர்க ளினிதிருக்குநாளையிலே
திசையாளுங்காந்தாரி சேயன்விசாரமுற்று
பஞ்சவர்கள்காடுவிட்டுப் பாராளவாராமற்
றுஞ்சிவிக்கவேணுமென்று துற்புத்திதானினைந்து
விரகுமிருந்ததொரு வீமனைமுன்கொன்றுவிட்டாற்
பரவியனுல்வரையும் பாரமல்லக்கொல்வதுதான்
என்னவேயுன்னி யிசைந்தத்தனல்வர்களுந்
துன்னியொருகூட்சி சோராமலேமுடித்தார்
குந்தியிடத்திற் கொடியதுரியோதனன்றான்
வந்தேயுபசரித்தென் மாதாவேயோர்வரந்தான்
தந்தருள்செய்யென்றனென் றன்னுமென்னுமென்றான்
அந்தமொழிகேட் டரவுயர்த்தோனேதுசொல்வான்
என்றங்கைக்கோர்மருந்த திவ்வுலகிற்கிட்டாது
உன்சந்ததிவீம னோர்கொடிக்குளேதருவான்
என்றவளுக்கன்ன மிதமாகத்தானளித்துத்
துன்றுதினைபோராட் சுமைவருத்துத்தான்கொடுத்து
ஆளுமவள்பிறகே யன்பாகக்கூட்டிவிட்டான்
வேளையபஞ்சவர்க்கு மெய்ப்பாகத்தான்கொடுத்தாற்
காட்டிற்பயிர்விளைத்துக் காலங்கழித்திடுவோர்
வேட்டமுடன்புருஷா மிருகத்தின்பால்வீமன்
வாங்கும்படியனுப்பி வாங்கிவந்தாயாமாகிற்
றீங்கில்லைத்தங்கையற்குத் தீருநோயென்றுரைத்தான்
காந்தாரிதான்வருத்துக் கட்டிக்கொடுத்ததினை
வேந்தாட்டலையில்வைத்து மிக்கவள்பின்கூட்டிவிட்டான்
சுமையாளுங்குந்தியுமாய்த் தூங்கமுள்ளபஞ்சவர்கள்
இமையோரைப்போல விருக்குமிடமணுக
மாதாதிருப்பாத மைந்தர்பணிந்திறைஞ்சி
ஏதேதுவந்ததுநீ யிங்கென்றேகேழ்க்கரசன்
தினையிட்டுவேளாண்மை செய்துகாலங்கழிக்க
மனமொத்தேயன்பாக மன்னனுமக்களித்தான்
கருகவருத்தளித்தாள் காந்தாரிமாபாவி
வினாவிற்புருஷா மிருகத்தின்பால்வாங்கி
வாயுகுமாரான் வரல்வேண்டுமென்றுசொன்னான்
ஆயின்மொழிகேட்டே யஞ்சாதநெஞ்சுடையோன்
தந்தையின்மிக்கான் றைரியமாய்த்தானேகி

அந்தவனந்தாண்டி யைம்பதின்காதங்கடந்து
பாலைவனக்கிழந்தி பாம்பணியும்பூஷணத்தான்
மாலுக்கிளையாண் மகிடன்றனைப்பிளந்தாள்
விமலைகலையூர்தி விறலக்தரிகுமரி
சமரிகௌரியையன் சக்கிராயுதியிருக்கும் .
ஆலயத்திற்சென்றே யவள்பாதந்தெண்டனிட்டான்
மேலுங்களப்பெலிதான் மென்மேலுமூட்டவல்லான்
என்றகத்திலுன்னியிங்கு யேன்வந்தாயென்றுசொன்னாள்
வென்றிபுருஷா மிருகத்தின்பால்வாங்க
வந்தேனெனக்கு வரமுதவாயென்றுசொன்னான்
அந்தோமகனே யரிதரிதென்றேயுரைத்து
எழுபருக்கை யிசைந்தேகரத்தளித்து
ஊழிக்காற்றைப்போ லுனைத்துடர்ந்துபற்றுமுன்னே
ஒன்றெறிந்தான்மிக்க வுயர்ந்தசிவாலயமா
நின்றுசிலநேரம் நியமநிஷ்டைதான்முகிக்கும்
இந்தப்படிபருக்கை யேழையுமேதான்போட்டு
உந்தனுயிர்பிழைத்தே யோடுவாயென்றுரைத்தாள்
மீண்டுமெந்தவீமனுடன் மெல்லியாளேதுரைப்பாள்
ஆயிரமியானைப் பலங்கொண்டதோரியாளி
ஆயிரமியாளிப் பலங்கொண்டதோர்சியம்
ஆயிரஞ்சீயப் பலங்கொண்டதம்மிருகம்
ஆயிரங்கால மரனடியைத்தானினைந்து
மிக்கதவஞ்செய்தரிய மேன்மைவரம்பெற்றதுகாண்
தக்கவனேயுன்பகைஞன் றனந்தப்பால்குடித்தால்
உன்னைசெருப்பா . னுயிர்பிழைத்துப்போனாலும்
அன்னபால்பாதி யருந்திக்கொடுத்தனுப்பு
ஒருவரதுக்கிலையோ வுன்றமையன்றானிலையோ
வெருவாதிளகிவந்தாய் விண்டுதவியுண்டுனக்குத்
தனித்துளிப்பாலதற்குத் தந்திபத்துக்குள்ளபலம்
உனக்குகிடைக்கு முகந்தேகென்றேயுரைத்தாள்
ஒளவைசொற்கேட்டே யவள்வரமுந்தான்வாங்கிச்
சௌவையறவன்பதுபின் காதங்கடந்தனுகி
மிடலின்புருஷா மிருகத்தின்குட்டிகட்கு
அடல்வீமன்கண்டே யதற்குநிழல்செய்துவைத்துத்
தண்ணீர்குடிப்பாட்டி தாகந்தணிந்ததற்பின்
அண்ணாநீயெங்கே யணுகினாயென்றவைகள்
கேட்கும்பொழுது கிளர்ந்துண்மைதானுரைத்தான்
வாட்கையுள்ளவன்னை வதைக்குமிரங்காதான்

கல்லானநெஞ்சுடையாள் கண்டால்விடுவதுண்டோ
வல்லானேயிங்கே மறைந்தேயொளித்திருந்து
ஒப்பாரிதப்பா துனையழைத்தோமாமாயில்
அப்போதேவாவென் றனுப்பவொளித்திருந்தான்
வீரப்புருஷா மிருகமிளைகொணர்ந்து
பாரின்மனுஷனிங்கே பண்பாகவந்ததுபோற்
காணுதவனெங்கே கணத்திலேசொல்லுகென
ஆணழகன்வந்தேற்கு மன்பாயுபகாரஞ்
செய்தானுனதுடைய தீய்மைக்குணமறிந்தே
வெய்தாகவோடெனவே வேந்தன்வெருண்டோடினனே
இருந்தாலுமிப்படியோ வேலைக்குறும்புசெய்வாய்
பொருந்தோமுன்பாலிளையும் பூமியிலேயென்றுரைக்க
அங்கவன்றானிங்கோ ரலுவலிலாதேயணுகான்
புங்கமுள்ளகாரியத்தைப் பெற்றுழிந்தேபோகறியான்
அன்னனேக்காட்டி லவனிசைந்தகாரியத்தை
இந்நேரமுங்களுக்கா யீய்ந்திடுவேனென்றிசைப்பக்
குட்டிகள்பல்சத்தியமுங் கொண்டுதெங்கடன்றலையைத்
தொட்டுண்மைசொன்னதற்பின் சோராதன்னவெனவே
வல்வீமனையழைப்ப வந்துபதம்பணிந்தான்
பல்வீரகேசரியை பார்த்தேமிகநகைத்து
நெஞ்சின்றணிவாலோ நீண்டதிலத்தாலோ
மிஞ்சும்பகையையெல்லாம் வென்றதிறத்தாலோ
வந்தாய்நலதுன் மனக்குறிப்பையோதுகெனச்
சந்தேகமில்லாமற் றான்வந்தவையுரைத்தான்
கொல்லவினைந்தே கொடியோனெனதிடத்திற்
செல்லென்றனுப்பிவிட்டான் தீரனேயெந்தனுக்குத்
தப்பியேநீயுன் றலஞ்சேர்ந்துபாலீய்ந்தால்
ஒப்பில்லாப்பால்குடித்தே யுன்னைவெல்லவெண்ணிவிட்டான்
ஆதலாற்குட்டிகளுக் காணையிட்டேயான்கொடுத்தேன்
சாதகமாய்ப்பாலளிப்பேன் றானுனதுளிப்பாலை
பக்ஷித்தான்மானுடர்க்குப் பத்தானைச்சத்துவமாங்
கக்ஷிப்பகையாளி கையிலெந்தன்பாலீய்ந்தால்
பலங்கண்முகித்திடுவான் பன்னுனையுங்கொன்றிடுவான்
சலங்கள்வருவதன்முன் றப்பிப்போவென்றுசொல்ல
தாயேயுனது சடமுமுரும்போலும்
வாயோதலிந்துகதிர் மாறுகினுமாறுகிலோம்
தாயென்சாற்கொப்பிவந்தா டானவள்சொற்கொப்பிவந்தேன்
நீயெனக்குப்பாலளித் திரக்ஷிக்கவேணுமென்றான்

அன்றுரகர்னாட்டி லருந்துமமுதினுக்கும்
வென்றியுள்ளவென்பால் விசேஷமுலகறியும்
ஆதலாலென்முலையி லன்பத்தொருகுடம்பால்
போதமுடனோர்சரப்பிற் பொங்கியேயூறிநிற்கும்
அந்தப்பாலெல்லாநீ யன்னையென்றேசொற்றதற்காய்
உந்தனுடல்குளிர வுற்றருந்தென்றோதிடவும்
வாய்ப்பாகவிப்படியாய் வந்தால்வயவீமன்
சாய்ப்பானேவாய்முலையிற் றன்வைத்தருந்திவிட்டான்
பன்புமிருகம் பலவானைத்தானோக்கி
உன்பின்முன்னோர்க்கு முதவியாய்ச்செல்லெனவே
வந்தகருமமெந்தன் மாதர்நிறைவேற்றி
யொந்தன்விடையளித்தா லோமவேனென்றுரைத்தான்
பிடித்தபிடியே பிசகாதேசொல்லலுற்றாய்
வடித்தேபொருகலசம் வன்பாலுனக்களித்து
நாற்காதம்போமளவு நான்சும்மாபார்த்திருப்பேன்
தீர்க்காயுசுள்ளவனே திரும்பவுனைத்துடர்வேன்
மத்திமந்துர்க்கை வசிக்குமவள்கோயில்
கோயிலுக்குட்புக்கிவிட்டாற் கொல்லாமல்விட்டிடுவேன்
வாயிலுக்கிப்பாற்பிடித்தால் வல்வியுனைக்கொன்றிடுவேன்
இதற்குநீசம்மதித்தா லிப்போதேபாலீய்வேன்
அதற்குன்னாலாகாதே லஞ்சாமற்சும்மாபோ
யென்றதுசொல்ல விவனுமனதிசைந்து
நன்றெனவேபால்வாங்கி னாற்காதம்போனதற்பின்
சூரன்முயலைத் துடரும்படியாக
வீரனைத்தாவி மிருகம்விரட்டியதே
கைக்காற்றுங்காற்காற்றுங் கண்டமூச்சின்காற்று
மெய்க்காற்றும்பட்டிருபான் மேவுமரங்களெல்லாம்
ஊழிவருமாறென் றேங்கும்வனங்களெல்லாம்
பாழியுடையான்விசையிற் பட்டழிந்ததேவனங்கள்
தாவுமிருகமதன் றன்காற்றுமாதரவாய்
மேவரியபல்விசையாய் வீமனுமேதானோட
துரத்தியேகையாற் றளாவிப்பிடிக்குமுன்னே
வினைத்திவிலோர்பருக்கை விட்டெறிந்தேயோடினனே
தேவாதுதிக்குஞ் சிவாலயமங்கானதுவே
ஆவலுடனே யறன்மூழ்கித்தெண்டனிட்டுப்
பின்னுமவனைப் பிறகேவிரட்டியதே
இன்னபடியேபருக்கை யேழும்வழியிற்றேற்றான்
அடர்ந்துதுடர்ந்தே யரியவிசையாகப்

படர்ந்துபெருமூச்சுப் பம்மவேதானேடி
வலக்காலக்கோயிலினும் மற்றக்காலேபிறம்பாய்
இலக்காமளவதனி லெய்திப்பிடித்ததுவே
பிடித்தேயிருவருக்கும் பேதமுறவழக்காய்
வெடித்தேதுற்கையின்முன்னே விவகாரஞ்சொல்லலுற்றார்
பெண்ணுக்குப்பெண்சார்பாய்ப் பேதித்தாளென்றுலகின்
மண்ணிற்பிறக்கு மவன்றமையனேதருமன்
தாய்க்கோரஞ்சொன்னூலு மூர்கசோரஞ்சொல்லறியான்
வாய்ப்பாகநியாய மவன்சொல்வானென்றுரைக்க
இருவோர்மனமு மிதையமுறப்பொருந்தித்
தருமாதிபனிடத்திற் றானேவழக்குரைத்தார்
சுற்றமுளதருமன் சோராதளவெடுத்து
எற்றுனூற்போட்டே யிரண்டாகத்தான்பிளந்து
மாட்டாதபாதி மகாமிருகங்கைக்கொளெனக்
கோட்டாணமன்னன் குறிப்பாகத்தீர்த்துவிட்டான்
எட்பகிருமுட்பகிரு மேருமற்றுளாமல்
நுட்பமுடன்ஞாய நுவன்றதுசேட்டுண்மகிழ்ந்து
மன்னுநின்றம்பியுடல் வெளவிப்பகிர்ந்ததெனில்
உன்னுனைத்தம்பிக் குயிர்பாதிகள்ளுறுமோ
என்னுசைதீர வியைந்துனுண்பதற்கே
இன்னூன்றன்பாதியையு மெந்தனுக்கீயென்றதுவே
அதுனுஞ்சொலுவதல வங்கவன்பாற்பெற்றருந்து
இதுஞாயமென்றே யியம்பினன்காணடர்மனுமே
வீமனிடஞ்சென்றே மிருகமுந்தன்மெய்பாதி
தாமதியாமற் றருவியோவென்றளவில்
பாழிற்போகாமற் பசுவுக்கிரையாக
வாழியுடனுண்டுன் வயிறுகுளிரொன்றுரைத்தான்
ஓரமற்றஞாய முதிட்டினுஞ்சொற்றதுவுங்
காரணியானியாயமதிற் கட்டுப்பட்டொத்ததுவும்
இன்னுடலிற்பாதியையு மீயெனுமுனீய்ந்தமையால்
என்னுடையபாலை யிவனுங்குடித்தமையால்
இங்கிவனைக்கொல்ல வெனக்குப்பொருந்ாது
துங்கமுடனிபாயஞ் சொன்னதற்சாய்விட்டுவிட்டேன்
உத்ததுநீசொற்றமையா லத்ததுவுமேபொருந்தும்
அத்தகைமயாயுனக்கே யானளித்தேனென்றுசொல்லிப்
புருஷாமிருகம் பொருந்திவனமபோயதுவே
அரிதானவீமனையே யனறவனும்பெற்றுப்போல்
கட்டிவிழிநீராற் காயங்குளுப்பாட்டி

இட்டமுடன்மெத்த விரக்கியேகுந்திநல்லாள்
பாவிக்கிசைந்ததொரு பால்கரத்திலேவாங்கி
தாவிநடந்துசென்று தன்னகரிபுக்கியந்தப்
பொல்லான்றன்கையிற் பொருந்தவேபால்கொடுத்து
வல்லாண்மையாய்க்கொணர்ந்த வாறுமெடுத்துரைத்தாள்
நீசெய்தநன்றி நிலத்திலெவர்செய்யவல்லார்
தாய்செய்தநன்றி தனக்கொப்போமற்றதென்று
அன்பாயுபசரித்து யன்னையற்குமன்னமிட்டு
நன்பாலொருவர்கண்ணு நாடாமலுண்டுவிட்டான்
பொய்சொல்லிப்பால்வாங்கிப் புத்தியில்லானுண்டுவிட்டு
மெய்சொல்லான்றம்பியையு மிக்கவிருவரையும்
ஓரிடத்தில்வைத்திருந்தே யுற்றதெல்லாந்தானுரைத்துத்
தாரணிக்குள்ளிங்கிதற்குந் தப்பிவிட்டான்கண்டீரோ
என்னவுபாய மினிச்செய்வோமென்றிவர்கள்
தன்னில்விசாரமுடன் றானிருந்தானேபாவி
சதியாய்த்தவிழ்த்திருக்கத் தான்வலியவல்வீமன்
விதியுந்திகைத்திடவே மேவும்பெருவனத்தைத்
தண்டாலுங்கையாலுந் தானிரண்டுகாதவழி
மிண்டாய்க்களைகளைந்து மேவுபுன்செய்கானிலமாய்ச்
சமைந்ததொருபகலிற் றருமனதைப்பார்த்து
அமைந்தவினைகளெல்லா மங்கையாற்றானளைந்து
தன்னுயிர்போன்மன்னுயிர்க்குந் தானிரங்குசிந்தையுள்ள
மன்னுதருமன் மகன்றருமன்யானுனுற்
கறுத்தசினமுடையோர் காயுமனங்கொண்டனுப்பும்
வறுத்தவினைமூளைக்கும் மண்மதிக்கவிண்மதிக்க
என்றவிடங்கிட்டி யிசைவாகமூன்றுதா
நின்றுவினையள்ளி நிருபர்கோன்வீசிவிட்டு
எல்லாநிலமு மெறிந்துவிட்டுவாருமென்றே
வல்லாண்மைத்தம்பியர்க்கு மன்னுரைக்கவீமனுந்தான்
ஊற்றவரென்கையா னொருங்குவதுமெய்யானுற்
சாற்றுந்தினையடங்கத் தான்விளையவென்றெறிந்தான்
கன்னனெனது கடுங்கணையான்மாய்வனென்றால்
இன்னதினைவிளைவ தென்றெறிந்தான்வில்விசயன்
சவுபலனையானறுத்தல் தப்பாதேயாமானுற்
கவரந்தினைகளிது காணவிளையவென்றான்
சகுனியையான்கொலுதல் சத்தியமேயாமானு
இசலித்தினைக ளிசைந்தேவிளையவென்றான்
அந்நிலங்களெல்லா மடைவாகத்தான்விதைத்தார்

பன்னுமுளைப்பருவப் பக்குவங்கடப்பாமன்
முளைத்துக்கிளைத்ததுகா ண மூங்கில்வனமொப்பாக
விளைத்தநிலங்களெல்லா மீறிவிளைந்ததுவே
பயிராய்க்கதிராகிப் பக்குவமாய்முற்றியபின்
வியனுய்க்கதிரரிந்தே வெற்புவெற்பாய்ப்போர்நிறைத்து
அடித்துப்பொலிதூற்றி யவ்வனத்துவேடருக்குப்
பிடித்தகலிபறக்கப் பேருடையோர்தான்கொடுத்துத்
தாங்களுமுண்டே தடவனத்தினுட்கழித்துத்
தீங்கற்றவர்க டிறலாயிருக்கையிலே
அந்தரத்திலோர்சொல் லபயமபயமெனச்
சந்தமிகும்பஞ்சவரோ தஞ்சமெனக்கேட்டளவில்
துற்குணத்தான்பகைஞன் றஞ்சாமற்காத்திடென்று
பற்குனற்குத்தன்மன் பகரக்கோலொன்றெடுத்து
அங்கவனைக்கொல்லாம லப்புள்ளுவாய்கிழித்து
இங்குசடுதிக் கிசைந்தவனும்வீழாமல்
ஆற்றலாய்த்தாங்கி யவனியிலேபோடெனவே
சாற்றித்தனுவளைத்துத் தான்விடுத்தானம்மானுய்
விட்டகணைசென்றே விறற்புள்ளுடல்கிழித்துத்
திட்டெனவேவீழாமற் றெப்பம்போலேதாங்கி
அம்புவியிற்போட்டதற்பி னண்ணனுடற்புள்வாயின்
வெம்பியந்தப்பூட்டும் விடாமற்றுடிதுடித்து
சிறகடிக்கொண்டதனுற் றேகமெல்லாம்புண்ணுகி
மறுகிச்செந்நீரொழுக மற்றோனரற்றியதால்
காலினுற்புள்ளின் கழுத்தைமிதித்தளவிற்
சாலவாய்விண்டுவிட்ட தக்கபுள்ளங்கோர்முனியாய்
உபசாரஞ்சொன்னளவி லோதுநீயாரெனவே
இப்போதுபுள்ளான தெந்தவிதஞ்சொல்கவென்முன்
ஞானவிசாகனென்போன் நன்பேர்மகாபோதன்
ஆனகலைக ளடவாய்ப்பயிற்றுமன்னுள்
கல்வியிற்சிங்கை கவியாதவமதியாய்
வல்வில்லெடுத்து வனங்களிலேதானேகிக்
காட்டானைவேட்டையுடன் கண்டவிளையாட்டுகளின்
மோட்டாண்மையானேன் முனிவாகியென்றகப்பன்
வாரணத்தைவீணுய் வதைத்தாயதுதொழிலாய்
ஆரணியமிதி லலைந்தாய்நீயின்றுமுதல்
உம்பலதுநித்த முணவாகப்புள்வடிவாய்
அம்புவியிற்காட்டி லலையக்கடவதென்றான்
என்றுளிச்சாப மெனக்கொழியுமென்றிறைஞ்சி

அன்னானிடத்தி லயர்ந்தேனான்கேட்கலுற்றேன்
ஆசானுக்கேற்கடைந் தன்பாய்ப்பலகலையுந்
தேசுறக்கற்றுணருந் தீரன்செயவிசயன்
கானகத்திலேயிருக்குங் காலையவன்பகைபைத்
தானெடுத்துக்கொண்டடவி தன்னில்வரும்போது
பாவியரற்றிப் பகருமொழிககிரங்கி
எவில்வலியானு மெய்துன்னைக்கீழ்ப்படுத்தி
கல்விகரைகண்டோனுங் காலாலுன்னைமதிக்கச்
செல்வனேயிச்சாபந் தீருமெனவுரைத்தான்
யானைக்குருகாக வந்நாளிந்நாள்வரைக்குங்
கானகத்திலுள்ள கரியினங்களுண்டிருந்தேன்
இன்னாளிவன்மூழ்கி யிடையிற்றுகிலணிந்தான்
அன்னேரம்பாய்ந்தந் தரத்திலெழும்போது
கணைகொண்டெனைவீழ்த்திக் காலாற்றுவைத்தமையால்
மணியொத்தமேனியனே வன்சாபந்தீர்ந்ததென்று
நாட்சிகள்செய்தே தனஞ்செயனைத்தான்வாழ்த்தி
மீட்சியின்றுபெற்றனென்றே வேதியனுமகன்றான்
பாப்பானகன்றதற்பின் பாவிதனையழைத்து
மூப்பாந்தமையன் முரசுயர்த்தோன்முன்புவிட்டான்
மன்னவர்மன்னு வணங்காமுடித்துரியா
உன்னுடையதேழானவ னொப்பில்லாவீரனன்றோ
இன்னலுனக்குறவே யேனுனைக்காவாமல்விட்டான்
தன்னமையோவுன்னைவிடத் தந்தகுருகதற்கு
என்னவதற்கொன்று மியம்பானிலம்பார்த்துப்
பின்னொன்றுஞ்சொல்லான் பெருமூச்சுவிட்டுநின்றான்
நம்பியிந்தமன்னவனை நன்னகரிசேர்த்துவிட்டுத்
தும்பைமுடியோய் சுறுக்கில்வாவென்றுரைத்தான்
சினமில்லான்சொற்காகச் சென்றவனைவிட்டுவர
வனமெல்லாந்தானகல மன்னவனைவிட்டுநின்று
அண்ணாநகரி லினைகிமாயோவென்றுரைத்தான்
புண்ணாகவேது புகல்கின்றான்மாபாவி
காமிதித்தலைந்த கால்கொண்டேகூசாமல்
நாமிதிப்பதுதான் ஞாயமல்லதேருகென்றான்
முக்கனிச்சேற்றின் முதுபானெய்தேன்சொரிந்து
சர்க்கரையிட்டேவேம்பு தன்னைப்பயிராக்கில்
ஒக்கச்சமூலமுட னேயாக்கசப்பதுபோல்
இக்குமதுர மெவர்க்குங்கொடுப்பதுண்டோ
எரியில்விழுந்தே னெடுத்தோன்கரந்தனிலே

விரையவேகொட்டும் விதம்போன்மதம்பகர்ந்தாய்
நன்றுநன்றென்றே நகைந்தானவன்பார்த்தே
அன்றுநகைத்தாரோ யையவரையுமன்னரெல்லாம்
இன்றளவுஞ்ஜீவ னுடனேயிருநதீரேல்
வன்றிலவமானபங்க மானவரோயென்றுரைத்தான்
செய்தாய்கொடுவினையைத் தீவினைதானுன்னைவந்து
எய்தாதெனவோ யிருக்கின்றாய்பின்பறிநீ
ஒறுத்தாற்கொருனாளை யின்பமுணர்வுகெட்டோய்
பொறுத்தாற்குப்பொன்றுந் தனையும்புகழலவோ
அகழ்வாரைத்தாங்கு நிலம்போற்றமைமிகவே
இகழ்வாரைப்போற்றல் பொறையென்றிருந்தோமே
செய்நன்றிகுன்றுகின்ற தீயகொடியாவழிநாப்
பொய்நின்றவாழ்வுடையாய் போடாவெனமீண்டு
மிக்கதருமனர விந்தப்பதம்பணிந்து
குக்கல்வாலொத்தான் குறித்ததெல்லாங்கூறிநின்றான்
குற்றமிகச்செய்தாரைக் கொல்லாமற்கொல்லவொரு
சிற்றருவாளன்றோ சினக்காதிருப்பதென்று
தருமனுரைக்கத் தனஞ்சயனுமொத்திருந்தான்
அரவக்கொடியோ னனுசனம்மான்கன்னனுமாய்
விரகுத்தகைக வினைநினைந்தேயைவரையும்
வரையறக்கொல்லும் வகைநினைந்தார்பாவியர்கள்
ஒன்றிருக்கு முயரடவிச்சார்பதனிற்
பொன்னுரளகா புரியானிரையினங்கள்
பாற்கடற்போலே பரவியேமேய்வதுண்டு
ஊற்றமுடனுஞ்சாய்த் தொழித்துவிட்டோமாமானால்
சோரரென்றைவரையுஞ் சொற்றக்ஷணந்தனிலே
போராடிக்கொன்றுவிட்டுப் போவாரியக்கரென்று
கோக்குலங்களைமறைத்தான் கோபாலர்கூக்குரலாய்த்
தாக்குடையமன்னன் றனதனுக்குத்தானுரைத்தார்
வைச்சிரவண்ணன் மகாகோபந்தான்மூண்டு
வச்சிராயுதன்றன் மகன்சித்ரசேனனையும்
அக்கினியைத்தன்மகனு மானருத்ரசேனனையு
மிக்கசேனாபதியா மெய்ச்சங்கோடன்றனையும்
இபக்கரரக்கரிவ ரொண்ணிலாச்சேனையையு
மயக்கமுறைப்பஞ்சவர்கள் வாழ்வெல்லாந்தான்பறித்த
தீயன்றனைப்பிடித்துத் தேர்க்காலிலேபிணித்து
நேயபெருஞ்சேனை நிருபரையுந்தானறுத்து
இந்தக்ஷணத்தினிலே வாவென்றிசைந்துவிட்டான்

சிந்தொத்தசேனை செருமூண்டெழுந்ததுவே
வெள்ளந்ததும்பியிந்த மேதினியிற்பொங்கியபோல்
கள்ளந்துணிந்த கனகசுரானுேக்கினரோ
அண்டபகிரண்ட மவனிதிசைகடுங்கக்
கொண்டலிடிபோன்றபல கோடிமுரசங்குமுற
இன்றேயுலகிலுள்ளோ ரெவ்வுயிருந்தானிறக்கும்
என்றேயிமையோ ரிசைக்கவினாவாக
குருநாட்டிலுள்ளநிரை கொள்ளைகொண்டேதான்சாய்த்து
நிருபர்முதற்சாய்த்த நிரையெல்லாந்தான்மீட்டார்
தன்னினிரையுந் தலத்திலுள்ளபன்னிரையும்
வன்னிமுதலாக வந்துருத்தேமீட்டமையால்
ஆப்பைப்பிடுங்குகுரங் கன்றபீசங்கொடுத்தே
வீய்ப்புற்றுநின்றதுபோல் வேந்தன்பெருந்தளமும்
இயக்கன்றளமு மிகன்மூண்டதம்மானைப்
மயக்கமுடன்றுரியன் மாசேனைமாண்டதுவே
குரங்கின்கரத்திலுறுங் கோலமலர்மாலையைப்போல்
நரங்குமனிதரெல்லா நாசமுறப்பொருதார்
கடலொத்தேநின்ற கணப்படையையோர்கணத்தில்
மிடலுற்றரக்கர் மிகப்பொருதிமாய்த்தமையாற்
கங்கைமகன்விதுரன் காந்தாரிபெற்றமக்கள்
அங்கர்பதிகுருவு மாசாரிமைந்தனுமாய்
சல்லியன்சூதிற் சதியன்முதலெல்லோரும்
வல்லியம்போல மகத்தாகியவுயித்தஞ்
செய்தாரெதிர்ந்தே திறலாமரக்கர்களைக்
கொய்தேயறுத்துநின்றார் கோபமுடனக்கினியுங்
காண்டாவனமெரித்த காசுபோலொத்துருத்து
மூண்டான்காணண்ட முகடுதொடவம்மானைப்
தேறுங்கரிபரியுந் தேரினமுஞ்சேனைகளு
நீறுநீறாக நெருக்கினன்காணக்கினியுந்
தரிப்பற்றேவீரர் சதுரங்கசேனைகளு
நெருப்புக்குள்வெந்தழிந்தே நீறுனபேர்தவிர
மற்றுள்ளோரெல்லா மருண்டேபுறங்கொடுத்தார்
வெற்றிசெறிவீடுமனும் வெந்தழலின்வெந்தழலாய்
இணையற்றவீர னிருவிழியாற்றீய்ச்சொரிந்தே
கணையுத்தமேகமென்னக் கார்முகத்தால்வீசிநின்றான்
வல்லாளன்றான்விடுத்த வாளியெல்லாநீறுக்கி
வில்லாளன்றன்னையனல் வேந்தன்முடுகினனே
நாதைபேர்கொண்ட சாமரைக்தந்தானெடுத்து

வாத்முடன்மூண்டடர்ந்த வன்னியின்மேல்விடுத்தான்
பெண்ணைமரத்தை பிறங்கநிறைத்ததுபோன்
மண்ணும்விண்ணுந்தோற்றாமல் வண்மமையாய்த்தான்சொரிய
ஊரவியநெய்போல வுணடேயுரத்தெழுந்தோன்
பெருந்தீய்தனக்கீரம் பேருலகிவில்லையெனச்
சினந்தேநெருங்கிடவுந தேவர்பலவாளியெல்லாங்
கனந்தான்சொரிவதெனக் கைசலிக்கவேசொரிந்தான்
தீய்சுட்டநெஞ்சந் திடுக்கிட்டேமெய்மறந்து
பேச்சொன்றுஞ்சொல்லான் பிறங்கொண்டான்வில்வீரன்
எப்போர்க்குந்தோரா னெரிக்குப்புறங்கொடுக்க
மெய்ப்பாவிதுரன் வெகுளவெகுண்டவனல்
வீடுமன்போல விறலாஞ்சதமடங்கு
நீடுபோர்ச்செய்தே நிலைகெட்டேயோடினனே
ஆசாரியைமகனை யந்தமுள்ளநால்வரையுங்
கூசாதெரிவிரட்டிக் கொண்டதுநாணம்மாறைய
சற்பக்கொடியோன் றனைப்பிடிக்கும்வாறாக
முற்பட்டயோசனைகண் முற்றியதுசப்பாமன்
மன்னியந்தநால்வரையும் வாரிவாயத்தொடவே
உன்னித்துரத்தி யுதவிவராதேதடுத்தான்
கன்னனுடனுருத்துக் காரணையதேர்செலுத்தி
மன்னும்வடவையென மந்திரிதன்றந்திரியும்
ஓயாதமாரியென வொண்கணைகடான்சொரிய
சாயாவதிமகனுஞ் சாயாமலோர்சாம
நிகரற்றவீரர் நெடும்போர்புரிந்தனரே
இகலிற்சினமூண் டியக்கர்சேனாபதியுந்
தேர்ப்பருதிசேயுடைய தேரறுத்துவில்லறுத்து
ஊர்க்கமுடன்மார்புருவ வொன்பதம்புதான்விடுத்தான்
மீண்டுமறுதேரின் மேற்கொளுமுனத்தேரும்
பூண்டபரிதேர்கொடியும் புங்கமதனாற்பிளந்தான்
காய்ந்துமறுதேரிற் கன்னனுமேதானேற
மாய்ந்தேயிமைக்குமுன்னே மாற்றினான்றேர்சிலையும்
அருக்கன்பயந்த வருமைக்குமாரனையே
உருக்கடெரியா துடற்றினான்பல்கணையால்
மாய்ந்தானைப்போல மறுகியனந்தள்ளாடி
சாய்ந்தான்பருதி தனையன்மனம்வெருவி
சகுனிதனைநிமிடந் தன்னிலேதேருடைத்து
இகழ்சல்லடைக்கன் னைவேயடறலைத்து
ஆங்கநெருப்பிலிட்ட தானபுனைப்போற்றுடிக்க

பங்கப்படுத்திப் பறந்தோடத்தான்விரட்டிச்
சிறிவருஞ்சல்லியனைத் தேரறுத்துவில்லறுத்து
மாறிவெருக்கொண்டோட மார்புகளெல்லாந்துளைத்துச்
சின்னப்படப்பொருதான் சேனுபதியொருபால்
மின்னுந்தனதன் விறற்குமரன்றனுருத்து
பகதத்தன்றேர்க்கொடியும் பாகுகளுந்தானறுத்து
மிகையுற்றவில்லறுத்தே மெய்களெல்லாந்தான்றுளைத்து
சாலுவனைமற்றத் தலைவரையெல்லாஞ்சினந்து
கோலும்பலதேருங் கொய்யுளையுந்தானறுத்துப்
புரத்தையெரித்த புராரியெனவெகுண்டு
உருத்திரசேன னுடன்றுடர்ந்தானம்மானுய்
சங்கரன்முன்றானளித்த தயவாம்பலவரமும்
புங்கமும்பெற்ற பொருவிலாவில்வீரன்
உருத்திரசேன் னுருத்தேபவமன்னரையுந்
துரத்திதுரத்தி துடர்ந்தேயமர்புரியச்
சித்திரசேனன் சியோதனர்கணூற்றுவரை
அத்திரத்தாலே யவர்தேரும்வில்லறுத்து
அங்கங்களெல்லா மறவேமிகத்துளைத்துப்
பங்கங்கள்பட்டுப் பதைபதைக்கப்பல்வாளி
எவினனுற்ற திடைந்தேமுறிந்தோடித்
தாவியிமைப்பதன்முன் றன்றேர்விட்டேமறைத்து
அரவக்கொடியோனை யஞ்சவேதான்பிடித்து
இரதத்திறேடே யிருக்கியேகட்டிவிட்டான்
தம்பிமார்வெம்பி தரிக்காதிகன்மூண்டார்
அம்பவர்களங்க மகம்புறமுந்தோற்றுமன்
மீறியவர்கண் மெய்ச்சுமையாயம்புகளைத்
தூறினன்றச்சா தனன்சுரனைகெட்டவனைப்
பார்த்துநகைத்துமுகம் பங்கப்படவசையாய்ச்
சாத்துவானல்லவடா சமர்செய்யவந்தாயோ
சூதாற்புரட்டுருட்டாற் றப்புடையோர்சீர்மைகொண்டு
வாதாடியேயவையின் மங்கைதுகிலுரிந்தாய்ப்
போலேயெளிதெனவோ போருக்கேயோடிவந்தாய்
வேலேபிடித்தறியாய் மின்னார்கடொக்குனக்கு
புத்தியில்லாமன்னர் பொறுத்தேவனஞ்சேர்ந்தார்
சத்தியமாய்மற்றோருந் தான்பொறுக்கவல்லாரோ
உணர்வற்றசைவுகெட வுள்ளாவியாய்க்கிடத்தி
இணையற்றவீர னிரதந்தனைநடத்தி
செல்வாகனன்புதல்வன் சிங்கநாதமுழக்கி

வெல்வாகையோடு விரைந்துதேர்விட்டனனே
கையாதசிந்தையுள்ளாய் காக்கடனுனக்கே
என்றாற்றித்திய னியற்றருமனகாதில்விழ
நன்றியுற்றமாறருமன் நடுவன்றனையழைத்துச்
சென்றந்தப்பாவி சிறைமீட்டுவாவெனவே
நன்றென்றுபார்த்த னடந்தேதுடர்ந்தோடிச்
சித்திரசேனு திரும்பியெனைப்பார்த்து
உத்தரஞ்சொல்லிவிட் டேர்க்கேகுமென்றுரைத்து
நற்குணத்தினேடுகொடு நஞ்சரசைவிட்டுவிட்டு
மற்குலவுதிண்புயனே வாகையுடனேகுகென்றான்
நாடுவிட்டுக்காடுறைய நஞ்சனையான்செய்துவெகு
பாடுபடுத்துகின்ற பாவிதனையான்பிடித்தே
கொண்டுவிலங்கிட்டுக் கொடுஞ்சிறையில்வைக்குகிறேன்
பண்டுபோலெண்மடங்கு பாராண்டிருப்பீரோல்
சிந்தைமதிகெட்டா சிறைமீட்கவோடிவந்தாய்
எந்தையின்றன்னுத்தார மில்லைவிடவென்றுசொன்னான்
நன்றுநீசொன்னமொழி ஞாயமோயெந்தனுக்கு
வென்றியரசிருக்கை மேதினியிலீவதென்று
சீறியேயிட்சணந்தான் சிறைவிடாயாமாகின்
மீறியேயுன்னையுந்தேர் மீதிலேசட்டுவனியான்
என்றானவனு மிருகண்மிகச்சிவந்து
நின்றேயிவன்மேலு நேர்ந்தைந்துவாளிவிட்டான்
ஐந்துகணையு மறுத்தைம்பதுவாளி
சிந்தினனங்கவனுஞ் செந்தூட்படவறுத்தே
உந்தியொடுநூறுகணை யுற்கையெனவேவிடுத்தான்
அந்தமுளவற்சுனனு மங்கவன்மேற்றான்சினந்தே
பூசன்முகத்திற் பொருவிலிடிக்கணையை
வாசவன்மைந்தன் வயவிசயன்மீதுவிட்டான்
படியந்தாமுகடும் பாதாளமுநடுங்கக்
கடகடெனக்குமுறி கடிகிமுடுகியதே
விகடக்கொடிமுடியாய் விம்மியிடிமேல்வரவே
சகடொத்திடிவிரட்டித் தாவுங்கொடியறுத்து
விட்டுச்சரக்கணையை மின்னல்வெட்டிமாறுமுன்னே
சட்டமுடன்பலகணையுந் தான்விட்டுறவளைத்து
வீசியசால மிடைபட்டமான்போலே
வாசவன்சேயை மறுகமயக்குவித்து
தத்தியவச்சிராங்க தனையொத்தவன்றேரில்
சித்தசனைப்போற்பாய்ந்து சித்திரசேனன்றனையே

நாகத்துவச னடங்கவவனுக்கெதிராய்
வாகையுறமெள்ள வரைந்தனன்காணம்மானை
இடியைவிரட்டி யிவன்விட்டவெங்கணைதான்
முடுகிக்கடிகிடியை முங்கவிடியலறி
அபயமபய மற்சுனைகாக்கவென்றே
சபைகண்மதிக்கவிடி தான்பயந்துகெஞ்சியதே
என்பெயர்சொன்னே ரிடத்தின்முடுகெனன
அன்பாஞ்சிவனறிய வாணையிடென்றேயுரைத்தான்
சொன்னபடிமடங்கல் சோராதேயாணையிட
அன்னபடியதனை யர்ச்சுனனுமீண்டுவிட்டு
கட்டினகட்டோடே காளையருவனையும்
திட்டெனத்தேரைச் செலுத்தித்தருமன்முன்னே
தேரைவிட்டுத்தானிறங்கிச் சேவடியைத்தான்பணிந்தான்
தாரைவிட்டநீரோடத் தம்பிதனைச்சினந்து
புத்தியிலாதோய் புரவலனைக்கட்டோடே
சத்தியமில்லாத்துரியன் றன்முகத்தைப்பாராமற
பதறிக்கொடியதொரு பாவியையுங்கட்டவிழ்த்து
மதியுற்றவாசவன்றன் மைந்தனையுங்கட்டவிழ்த்து
விட்டுவிட்டுக்கட்டும் விதனமெல்லாந்தானற
நட்டமறத்தன்ம னயந்துபலசேதிசொல்லி
தேரோற்றிவாசவன்றன் சேயைபனுப்பிவைத்து
மாரேற்றுப்போர்பொருத வந்தொருபார்த்தனையும்
அன்பாகக்கட்டி யணைத்துமுகம்பார்த்து
வன்பாமிவனை வனங்கடக்கவிட்டுவிட்டு
வாவென்றேயீசுகெட்ட மன்னவனைத்தான்பார்த்து
போவென்றேசொன்னான் பொறைக்கோர்கடலனையான்
அறன்மைந்தன்சொல்ல வரவக்கொடிவேந்தன்
மறங்கொண்டனெஞ்சான் மறுகிநிலம்பார்த்தே
ஒருவகையுஞ்சொல்லா றுறவிதியைத்தானினைந்தே
சிருயிரைவிட்டவன்போற் றிசைநோக்கியேநடந்தான்
அன்றைக்கென்னோடுன் னவைவிலேவில்லெடுத்தோன்
இன்றைக்குனையிழந்தே யெங்கொழித்தான்பங்கமுடன்
என்றிவன்சொல்ல வெரியிட்டமாலையைப்போல்
ஒன்றுமுரையாம லோவியம்போலேநடந்தான்
வில்விசயனின்று வினவிநாடாள்வதற்குச்
செல்கிறைபாவென்றே செலவெனக்குத்தாருமென்றான்
சருகையருந்திவனந் தானலைந்தகாலாலே
விரவியநாட்டை மிதியாததலுகென்றான்

என்னடாசொன்ன யீசுகெட்டபேய்ப்பயலே
உன்னைநான்மீட்டே னுதிட்டிரனர்சொல்லாலே
நீர்மேலெழுத்தாச்சே நின்றனக்குச்செய்தநன்றி
சீர்மேவுங்கற்றோர்க்குச் செய்தானிதமுநெஞ்சிற்
கன்மேலெழுத்தெனவே கண்டிருப்பார்நன்றிகுன்றார்
என்மேலேகுற்ற மிடருனக்குத்தீர்த்ததென்றான்
ஆரறிந்தாலென்னை யடவிதனிற்கட்டியதை
ஊரறியவுங்களைப்போ லுற்றரசுகெட்டேனோ
ஐவருமெய்வருந்தி யன்றேமடியாமல்
எய்வலிகொண்டரசு யெவ்வளவுமில்லாமல்
இன்னமுடலுயிர்கொண் டெங்குந்திரியலுற்றீர்
மன்னவையிலன்றுமுக மாறித்தலைகுனிந்தீர்
நாணமும்லச்சையில்லா நாயனையாயேகுகென்றான்
வீணனுடனேதும் விளம்பேனெனமீண்டே
வந்தூதருமன் மலர்த்தாளைத்தானிறைஞ்சி
சிந்தையுறச்சென்னதைக்கண் ணீரோழுகச்சொல்லிநின்றான்
ஆலம்போற்சொன்னவு மாற்றலேதக்கபுழ்
காலம்போம்வார்த்தைநிற்குங் காசினிதராசலவோ
நம்மைநகையாது நானிலமெலாமவர்கள்
தம்மைநகைக்குமொரு தாகுநிமக்கில்லையென்றான்
பொறுத்தல்புகழெனவே புத்திசொல்லவொத்திருந்தான்
கறுத்தவுயுத்தமதிற் காண்டீபன்கட்டியதை
தனதன்மகன்பார்த்துத் தான்காணுன்போலிருந்தான்
கனதியினமுன்னொருக்காற் கட்டுப்படுந்துயராற்
சேனுபதியுந் திகைத்திருந்தான்முன்பொருதி
மானுபரனுடைய வல்வில்லறிந்தமையால்
ஆதித்தருத்திரரை யஷ்டவசுப்பாலகனை
வாதித்துத்தான்றுரத்தும் வல்வில்லின்வாதைதனை
முன்னேயறிந்தமையான் மூசிநமைமாய்ப்பனென்று
பின்னேமயங்கிநின்றான் பேரானவக்கினியுஞ்
சித்திரசேனன் க்ஷணத்திலேமீண்டமையாற்
சத்தியுடனியாவருமாய்த் தானடந்தாரம்மானுய்
சிந்தைமெலிந்துசெலுஞ் சித்திரசேனன்றனையே
முந்தருத்திரசேனன் முகம்பார்த்தேயேதுசொல்வான்
அண்ணுமனத்துயனா யங்ஙனேவிட்டுவிடு
எண்ணுதவனோ டிடருவதேனங்கவன்கை
வில்லுக்குமுப்புரத்தை வென்றோனேயல்லாமன்
மல்லுற்றமுப்புவிக்குண் மற்றெதிரிவேறுமுண்டோ

இயக்கரிராக்ஷதரை வெண்ணிறந்தமன்னவரை
மயக்கமுறக்ஷணத்தின் மாய்த்தேயெனைப்பிணித்தான்
தாதையுபசரித்து தாக்ஷிமிகச்சொற்றமையால்
மோதுசினந்தீர்ந்தே முடுகியெந்தைதாள்பணிந்தான்
எந்தையிறையுதவ வெண்டிசையுந்தானடங்க
முந்தவிகலாக மூண்டவரைத்தானறுத்து
எங்குந்திறைவாங்கி யேற்றமகமேருவிலே
செங்கையினாற்சீர்த்திவிறற் றீட்டிவிசயனென்று
செயகம்பமொன்று சிகரத்திற்றானிறுத்தி
வயங்கொண்டுவெந்ததிறல் வல்லானெனவுரைத்தான்
உருத்திரசேனனிவை யோதியபின்றீக்கடவுள்
சித்திரசேனன் றிருமுகத்தைப்பார்த்துரைப்பான்
வாரமுடன்காண்டா வனமூண்டநாளையிலே
ஆரவாரித்தருத்தி அஷ்டவசுக்களும்பர்
தேவேந்திரனுந் தெரிகெட்டுத்தானோடே
ஏவேந்திரன்றாரத்தி யென்னையன்றுகாத்தான்காண்
அங்கிவனோடெட்டிர்ப்பா னரனன்றிவேறுமுண்டோ
இங்கிவனைவெல்லுதற்கு யென்னாலுமுற்றாதால்
மங்கிமெலிந்திருந்தேன் வரவில்லருச்சுனர்க்கு
அங்கிபகர்ந்தளவி லன்றவனுமேதுசொல்வான்
மன்னன்சௌரியமு மற்றொன்றுமெண்ணமற்
சின்னமடைந்தேன் சிலைவீரன்முன்னிலையால்
ஆர்தானெதிர்க்கவல்லா ரங்கவன்கைவிற்றொழிற்கு
கார்மேனியானுங்கர் காணுதெனவுரைத்தான்
சாத்திமுகிலூர்தி தன்னிடத்திற்சாரதியும்
பார்த்தனுடவின்மைப் பலிப்புகளுந்தான்பகர்ந்தான்
நடந்தவரலாற்றை நாதனுக்குத்தானுரைத்தே
மடங்கலெனப்பிணித்த மனவலியுந்தானுரைத்தான்
தம்பிக்குபுத்தி தமையனுரைத்ததென்று
உம்பர்க்குச்சொல்லாதே யுற்றிருப்பாயென்றுரைத்தான்
இப்பால்வனத்தி லியல்பானபஞ்சவர்கள்.
மெய்ப்பாயிருக்குமன்னாள் வேட்டைமுகமாவிசயன்
கானகத்திலேதரித்த காலைகுருக்கேத்திரந்தான்
மானமுற்றபார்த்தன் மலர்த்தாளைப்பூண்டுகொண்டே
அஞ்சாதெனைக்காப்பா யர்ச்சுனாதஞ்சமென்றான்
மஞ்சாருங்கையானும் வந்தவகைகூறுகென்றான்
சத்தியமாய்க்காப்பனென்றே தான்வாக்குநீயளித்தால்
பத்தியுன்பாதம் பணிந்தேபகர்வனென்றான்

உன்னுயிரைக்காப்பே னுரையென்றேதானியம்ப
மன்னவனேயுன்னுலே வாழ்ந்தேனுயிர்பிழைத்தேன்
ஆகாயமீதி லடியேன்விமானமிசை
வாகாய்வரும்போது மால்பத்தன்காலவனைக்
காணேன்கெடுமதியாற் காசினியைப்பாராமல்
வீணேவாய்த்தம்பலங்கை வீராயுமிழ்ந்துவிட்டேன்
மாயன்பதந்தனிலே வைகியதைப்பின்புகண்டேன்
கடயம்பதறிக் கலங்கியமன்முதலாய்
எண்பாலகர்க்கு மிபமுகற்கும்வேலவர்க்கும்
பண்பாம்பிரமனுக்கும் பார்ப்பதியாள்பங்கனுக்குந்
தாள்பணிந்துகாக்கவென்றேன் றான்காக்கவேபயந்தார்
வாள்வலியமாயன் வன்பகையாரேற்பதென்றார்
ஈசனிருதாளே யின்புற்றேபூண்டுகொண்டு
நீசிவனேகாத்திலையே னீணிலத்தில்யார்காப்பார்
உன்பாதமல்லா லுறுகெதிவேறில்லையென்றே
அன்பாகக்கெஞ்சி யவன்றுடனைத்துதித்தேன்
மல்லல்குருகேத்திரனே மாலுடனேயாமுயுத்தம்
அல்லலுறச்செய்தா லரியவுலகுயிர்கள்
எல்லாமிறந்துவிடு மெத்திசையுஞ்சோகிவிடும்
பொல்லாங்கிதன்றே புவிகணிலைகெட்டுவிடும்
வனஞ்சேர்ந்தேபார்த்தன் மலர்த்தாடனைப்பணிந்தால்
இனஞ்சேர்ந்துன்ஜீவ னிறக்காதேகாப்பனெனச்
சங்கரன்சொல்லத் தானடைந்தேனுன்பாதம்
இங்கெனைக்காத்தே யெழிற்கீர்த்திபெற்றிடென்றான்
சொன்னவுடனே சுரனையொன்றுந்தோற்றாமல்
தன்னைமறந்தே தலையின்விதியிதென.
வேறொன்றுஞ்சொல்லான் விசாரமெல்லாமுள்ளடக்கி
நாறும்பெருவனத்தி னைந்துலைந்துநொந்தலைந்தோம்
வனத்திலுயிரோடு வாழுவதுமல்லவென்றே
கனத்தேயெனைச்சிவனார் கைகாட்டிமூட்டிவிட்டார்
மாயன்கரத்தாலே மாளநாள்வந்ததென்று
தேயுவனையான் றிகழுந்தருமனடி
வீழ்ந்தானெழுந்தான் விசயனெனும்பேரு
தாழ்ந்தின்றொழிந்ததெனைத் தானீங்களின்றிழந்தீர்
மாயன்கரத்தான் மடியயான்போரனென்றான்
சேயன்றான்சொன்னளவிற் சேர்ந்தவிதந்தான்கேட்டு
ஐந்துதலைநாகத் தரியநடுத்தலையைச்
சிந்தக்கிழித்ததற்பின் ஜீவித்திருப்பதுண்டோ

வாராததுன்பமெல்லாம் வந்தேநமைப்பிடித்தால்
ஆராய்ந்துபாராம லலமலக்கக்காரியமோ
உன்னைப்பிரிந்து முலகிலிருப்போமோ
துன்னித்துணிந்தவர்க்கோர் துக்கமில்லைக்கண்டாயே
மாதவன்கையாற் மடிந்தாற்கதியுமுண்டு
சாதமெனவிசயன் றன்னையேதேற்றிவைத்தான்
மண்புவியிற்ஜீவன் மடிவதற்கஞ்சேன்மாயன்
நண்புமடியுமென்று நானடுங்கலுற்றதென்றான்
மனந்தமொருத மாண்புடையோர்க்கோர்காலும்
அனந்தவினுநண் பழியாதெனவுரைத்தான்
அச்சுதன்கண்க ளழலாகத்தான்சினந்து
மச்சினன்மாரேற்ற வண்மைதெரியாமல்
எங்கடைந்தானம்பகைவ னென்றேகருடனைத்தான்
அங்கவனுவிட்டா னதுபார்த்தேயுன்னுடைய
நண்பனிடமென்றே நயந்தேபணிந்துரைக்க
கண்கடழல்சொரிய காலாக்கினிக்கோபந்
திண்டிறலின்வண்மைதனைச் சீர்தூக்கிப்பார்ப்போமென்று
ஆரபாரித்தே யனுப்புகின்றதூதனையும்
பாரமாச்சீறிப் படையெழுந்தான்மாயோனும்
தேவர்நடுங்கத் திசைமுகனுந்தானடுங்க
மூவர்முதல்வன் முனைந்தான்போரம்மானுய்
அக்குரோணிபன்மூன் றலைகடற்போற்றற்சூழச்
சக்கிராயுதன்சாற் றகிராமனுநடந்தான்
பஞ்சவர்கண்மேற்பொருத பாரளந்தான்றானடக்க
நஞ்சரவகேதனனு நந்தகோபன்மகனைப்
பாண்டவரோடொத்துப் படைபொருதிக்கொன்றுவிட்டால்
மீண்டந்தப்பஞ்சவரை வெல்வதெளிதென்றுரைத்தான்
சங்கைமகன்கேட்டிதென்ன காலக்கேடுந்தனுக்குச்
செங்கமலக்கண்ணற்குத் தீயோய்நீயோவெதிரி
தன்னாலேயிப்போ தலைகெட்டுப்போவதற்கோ
சொன்னேனிதுவேண்டாந் துற்குணத்தைவிட்டிடென்றான்
எந்தன்படையு மிராஜாக்கள்வீரரையும்
நந்தன்மகனே நமைச்செயிக்கவல்லனென
தன்படையுவீரரையுந் தக்கோரையுந்திரட்டி
அன்புடையபஞ்சவர்மே லாதரவுளான்போலே
வாக்கொன்றாய்ச்சொல்லி மனதொன்றாய்த்தானினைப்போன்
மூர்க்கமுடன்பஞ்சவர்பான் மொய்த்தாதரவானன்
சாகத்துணிந்தவற்குத் தானுதவிநீசெயினும்

ஆருங்கருமமுண்டோ வைவரின்றேமாண்டிடுவோ
நீயுந்துணைவர்களு நீடூழிவாழுமென்ருன்
ஆயுமொழிகேட் டரவுயர்த்தோனேதுசொல்வான்
நல்லோரேநீங்கள்செய்த நன்றிமறப்பேனே
வல்லாண்மைநந்தனையான் மாய்ப்பேனெனவுரைத்தான்
துரியோதனனுதவிச் சூட்சியறிவமென்றே
கரியோனெடிக்குட் கடலானசேனையெல்லாஞ்
சின்னப்படவே செணத்திலேதானறுத்துக்
கன்னன்சகுனி கனமானசல்லியனைப்
பின்னுமரசாம் பிரதாபவேந்தர்களை
மன்னவர்கணூற்றுவரை மாநதியாள்புத்திரனைப்
பகதத்தனைக்குருவை பண்பசுவத்தாமாவை
மிகவுற்றவில்வலிசேர் வீரர்திவீரர்களை
தேரறுத்துவில்லறுத்து தேற்சாரதியறுத்துக்
காரொத்தபல்கணையாற் காயமெல்லாநீருக்கி
ஓட்டினன்கெட்டே யுடைந்தோர்நிமிஷமதில்
பாட்டனூற்சொற்கேளார் பாடுபட்டேயோடிவிட்டார்
தேரிழந்துதங்கள் செயலிழந்துமாவிழந்து
போரிழந்துதானப் புகரிபமுந்தானிழந்து
கால்சிவந்தேவேர்வைசிந்தக் கண்சிவந்தவீரரெல்லாம்
மால்சரங்களான்மயங்கி வாடியஞ்சியோடினரே
நூற்றுவர்சேனை நொடிக்குள்ளேயோடியபின
கூற்றுவன்போலக் குறுகினன்பஞ்சவர்மேல்
வயிரக்கதைகரத்தில் வாங்கியேமால்வீமன்
தயிருக்குடம்போற் றலைகள்பலசிதற
எத்தினன்பற்பலரா யிசைந்தகழுத்தறவே
மொத்தினன்பற்பலரை மூசித்தலைகுவிய
தேரினங்கள்கோடிபரி சித்திரம்பல்கோடிதளம்
ஓர்நொடிக்குண்மாய வுருத்தடித்தான்போர்வீமன்
வீமனிவ்வாறு வெகுண்டேயமர்புரிய
தாமனகுலன் சகாதேவன்றன்மருமாய்
வீரமுடன்மாய விறற்சேனையைப்பொருதார்
சூரமுடன்சேனைத் தொகையின்கடன்மயங்க
அடவாமடப்பாண்ட மடக்குங்குசக்கடையிற்
றடிக்காரனைப்போலத் தாக்கினன்போர்வீமன்
வெண்சிங்கமொத்தே விறல்வீமன்றான்பொருத
கண்சிவந்துதீயோடு காயாம்புமேனியனும்
என்னிவனுக்கிந்த மிடலொன்றுபல்கோடி

கொன்முனைதூன்வெங்கணைகள் கொண்டல்போலேசொரிந்து
வீமனகுலன் விறற்சகாதேவனையுந்
தாமன்பொருதழித்தான் றன்னுணர்வுதானறவே
மானமுடையதரு மன்மேற்சரந்தொடுத்துத்
தானுமுணர்வறவே தாரணியில்வீழ்த்திவிட்டான்
உன்னாலேநால்வ ருயிரிழந்தாரென்றுருத்து
இன்னேரமென்பகையை யென்னிடத்தீயாதிருந்தாய்
செணத்திலுனதுடைய ஜீவனழிப்பெனென்று
கனப்படையோடுங் கலப்பையான்சாற்றகிமால்
எல்லாருங்கூண்டடர்ந்தா ரிகலுக்கேயஞ்சாத
வல்லாளனப்போது மதியாமலேதுசொல்வான்
இடைப்புத்தியினாலே யென்றனையுமெண்ணுமன்
மடைப்புத்தியாக வமுத்தினாய்மானமுள்ளோர்
தன்ஜீவன்போனாலுந் தன்னையடைந்தோர்க
ணன்ஜீவன்கொல்லுகென்று நல்குவரோவுன்னிடத்தில்
உன்புத்திபோலென் றுறவர்மனமோராமல்
புன்புத்திகொண்டு புகன்றனையேபுத்திகெட்டோய்
உன்னையுமுன்னோ டெற்பிறந்தோர்சேனையையுஞ்
சின்னப்படுத்துந் திறம்பார்க்ஷணத்திலென்றே
பிரியாதனால்வர் பிரிந்தசினத்தாலும்
வெரிந்தானவீரர்களை வென்றவிறல்களெல்லாம்
ஒன்றாகவந்தே யுருக்கொண்டுருத்திரன்போல்
நின்றான்விழிக ணெருப்புத்தழல்சொரிய
தன்ஜீவனைவெறுத்த தன்மையால்மாயனுமோர்
புன்சார்துரும்பிற் பொடியாய்மனநினைத்து
வில்வளைத்துநாணேற்றி வெஞ்சாயகவிசையாய்க்
கல்வளைத்தோன்போல்வளைத்துக் கார்க்கடலினீரையெலலாம்
உண்டொழிந்தோர்மேக மொழியாதேவீசுதல்போன்
மண்டுகணைமாரி மாயாமலேசொரிந்து
தன்னையேசூழ்ந்த தளத்திலொன்றுந்தப்பாமன்
மின்னையேயொத்த விறற்கணையாலோர்க்ஷணத்தில்
அறுத்துமலைமலைபோ லப்பிணங்கடான்குவிய
இறத்தகுருதி யிரைகடலிற்போய்வீழ
சாற்றகியுமபுத்திரனுந் தானசைவற்றேசவம்போல்
மாற்றரியவேவால் மயங்கிச்சுரணையற்றார்
நாஞ்செய்தாற்போல நமதுதுணைவனாயுந்
தாஞ்செய்வானோவினைத் தானறுக்கவேணுமென்று
நீலனிறத்தா னெடுங்கண்சிவந்தெதிர்த்தான்

ஆலகாலம்போ லருச்சுனனுந்தானெதிர்ந்தான்
என்னுயிரின்மிக்க வினியதுணையிழந்து
இன்னமுயிர்கொண் டிருப்பதோவென்றுருத்து
வன்னிக்கணையை வடவாமுகாக்கினிபோற்
பின்னைக்குறியான் பெருங்கணையெல்லாமறுத்து
தகனனிருநத தடந்தேரினைப்பொடித்து
மிகையுற்றவின்னும் வீரனறுத்துருத்தான்
வைத்துப்பாராமன் மகாவுயுத்தஞ்செய்தமையால்
மெய்த்தசாரங்க மெனும்பெரியவில்வளைத்து
மாயன்வடிக்கணைகண் மாரியெனப்பொழிந்தான்
தேயுவொடுமூவுலகுஞ் சேரநடுங்கியதே
பித்தனெடுத்த பினாகமெடுத்தாலும்
அத்திரத்தானல்வ ரரியபழிதனக்காய்
கொல்லுவேனுன்னைக் குறைப்பேன்பொடியாக
வெல்லுகிரோனல்லாலென் வின்மையென்னவின்மையென்று
தாங்காதகோபந் தடம்புரண்டுதான்மூண்டு
ஆங்காரங்கொண்டே யரிவிடுத்தபாணமெல்லாந்
தன்னிடத்திற்கிட்டாமற் றானேதுகட்படுத்தி
மின்னற்குழுமாரி வீசுவதுபோலாகப்
பார்த்தன்கணைதொடுக்கப் பாரளாந்தானுந்தொடுக்க
எத்ததிரிபுவன மெங்குமனற்பரவ
அம்புடனம்பு மடன்மூண்டதல்லாமல்
தம்பம்பதித்தோர்க்குந் தாமனுக்கும்பட்டதில்லை
திக்கயம்பாலர் திகிரியரவுகளு
மிக்கபலவும்பர்களு மெய்மறந்தேவுண்ணடுங்கி
அபயமபய மபயமெனவலறி
உபையர்விடுஞ்சரத்தா லுததிகளுஞ்சுவற
படிகள்பதற பருப்பதங்கடான்சிதற
இடிகள்வெருவ விகன்மூண்டாரம்மானும்
பகலுமிரவுமிரு பார்வையிமையால்
இகலுற்றுரத்துநின்று ரெண்ணிரண்டுநாளாக
அந்தரமுமிந்திரனு மானசதுர்முகனும்
சந்திரனுஞ்சூரியனுந் தானேநடுநடுங்கி
உய்விக்குமாலே யுருத்திரனைப்போலுருத்தால்
செய்விக்கவல்லவரியார் சேரமடியாமல்
காக்கக்கடனுனக்கே காகுத்தாமான்குமுந்தா
ஆற்குமுனது வருளிலாதுய்வாரோ
இந்தச்சினமுண்டோ வெப்புவியுமெவ்வுயிரும்

அந்தத்தின்மூளு மவதியுறுமையாவே
என்றுதுதித்தே யிமையோர்கள்போனதற்பின்
அன்றுதிருமா. லரியதிகிரியல்லால்
மற்றந்தநான்கு வயப்படையெல்லாமேவ
சற்றுந்தவங்கான் றகனன்போனின்றுருத்து
மாயன்படைகண் மறுகிப்புறங்கொடுக்கத்
தூயகொடுங்கணைகள் சோனையெனச்சொரிந்து
வில்லாலேவல்ல விசயனெனப்பேரெடுத்தோன்
பல்லாசுகங்கள்விட்டுப் பாரளந்தான்மெச்சநின்றான்
கண்ணனிவன்றன் கரவலியின்வின்மைகண்டு
அண்ணலிவன்போ லார்வலியனென்றகத்தில்
எணணியெண்ணிவல்லா னிவன்போலாரென்றுருத்து
புண்ணணையகோபப் புகச்சல்களும்போயொழிய
விண்ணிலமரர் விசாரங்களுமகல
கண்ணிலருணீர் கலுழமனமகிட்சிப்
பொங்கிக்கிருபை பொழியவேயோடிவந்து
தங்கச்சிக்கேற்ற தலைவனேசேவகனே
மைச்சினுவுன்றன் வலியெல்லாமின்றறிந்து
மெச்சினேன்கோப விடுஎன்மறேதானணைத்தான்
கள்ளமோசூதோ கபடமோசொன்னதெல்லாம்
உள்ளதோவெந்தனுக் கொன்றுந்தெரியாது
சிங்கத்தையொத்த திறலார்மடிவிடத்துன்
தங்கச்சிதாலியொன்று தானறுத்தாலாகாதோ
ஆவிக்குமிக்கான வண்ணனையுந்தம்பியையும்
பூவினுக்குள்யானிழக்கப் புல்லனோவுன்போலத்
தாளேனென்கோபந் தணியேனுயிர்தரியேன்
வாளேனுனையறுத்து மாய்வேனெனவுரைத்தான்
மைத்துனன்சொன்னமொழி மாயவனுந்தான்கேட்டு
உய்த்திடுவரோதுணைவ ருயுத்தந்தனின்மடிந்தோர்
உந்தன்றுணைவராயா னுற்றறுத்தேனென்றுனையச்
சிந்தைகலங்கச் செகுத்தாய்பதிலாக
போனத்தைநினைந்து புண்ணாகவேண்டாங்காண்
மானத்தானுஞ்சினந்து மாய்வதுநன்றோவுனக்குக்
கோபமோபாபமெனக் கொண்டொழுங்காவம்பாலே
பாபம்பழியாய்ப் படர்ந்ததேபார்த்திபனே
என்றிவன்சொன்ன திருசெவியுஞ்சென்றதில்லை
அன்றுவிழிசிவப்பு மற்பளவுமாறவில்லை
கைகாறுடிதுடிப்புங் காயம்பதைபதைப்பும்

மைதாவுமெய்யன் மனநெருப்புமாறவில்லை
சிறியேசொற்பழுது செப்புவேனிப்பொழுது
மாறிடாப்போர்பொருத வாவலதுவுன்னைவிடேன்
சத்தியமாகச் சதாசிவனார்தாமறிய
மெய்த்துணையா நால்வரையும்விட்டிருக்கேன்மெய்யாக
உன்னையுங்கொன்றூலு முற்றயிருமாய்வனென்றான்
என்னையினிப்போருக் கினிதழைக்கநீதியுண்டோ
மாட்டாதவனை வலியச்சருகுவதென்
கேட்டாலும்வீரர் கிரீடிநகைப்பர்களே
செயலத்தேயுன்னிடத்திற் சேர்ந்துநல்லவார்த்தைசொன்னேன்
கயலொத்தகட்பார்வைக் கன்னியர்கள்காதலனே
ஈரொட்டுநாளாச் யிறந்தவர்மெய்யுறிவிட்டு
நேரிட்டகோபமதா னீயெழுப்பவல்லாயோ
இனிமேலுன்னோடு விகல்செய்யவெந்தனுக்குத்
தனதுபெலனுமில்லைத் தாழமுயற்சியில்லை
உன்முன்படையெடுத்தே யூடாடநான்மாட்டேன்
வன்மமுனக்கிருந்தால் மாய்த்துவிட்டுயேகுகென்றான்
ஆயுதமில்லாநி ராயுதனோடேயுயித்தஞ்
சேயனையாய்ஞாயமென்றாற் செய்யென்றான்மாலவனும்
தாமனுரைக்கத் ததும்பியகண்ணீரோடு
கோமகனுந்தன்மன் கொழுங்காலினில்வீழ்ந்து
உன்னையிழந்தே யுயிர்தரிக்கோமென்றுரைத்த
மன்னவாவென்முன் மடியக்கணக்கோதான்
என்னாலேவந்த விடறுக்குயிர்கொடுக்க
மன்னுவுயிரொடுநான் வாழ்வேனோவென்றழுங்கிப்
புலம்பித்தவித்துப் புழுங்கியநன்பொறையும்
பெலங்கொண்டவீமன் பிரபலமுந்தான்பகர்ந்து
தம்பிமார்க்குள்ள் சௌரியமுந்தானியம்பி
உம்பகர்கோன்மைந்த னுறுகோடிசொல்லுரைத்து
என்சிவனுங்களைவிட் டின்னேரவைத்திருந்தேன்
வன்சீவனோகொடியேன் வாணளைமாயப்பனென்று
கூறியேபொல்லாக் கொடும்படையிற்கையைவைத்தான்
சீறியன்சிந்தை தெரிந்தோடிக்கைபிடித்துக்
கஞ்சமலர்க்கண்ணனுந்தன் கண்ணீர்களாறோட
அஞ்சலெனக்கையிலுறு மாயுதமுந்தான்பறித்து
உள்ளாவிகொண்ட வுதிட்டிரன்முதன்மூவரையும்
தள்ளாதமூற்சையுள்ள தன்றமையன்றம்பியையும்
மாயாவினோதன் மயக்கமிதிலொன்றிதென

காயாமலர்மேனிக் கண்ணனெழுப்பிவிட்டான்
பஞ்சவர்களெல்லாம் பரந்தாமன்றாளிணையைத்
தஞ்சமெனமாயன் சரணந்தனைப்பணிந்தார்
பாதம்பணிந்தொரு பஞ்சவரைத்தான்வாழ்த்தி
ஆதரவுசொல்லி யபயாஸ்தந்தான்கொடுத்து
குருக்கேத்திரனைக் கொடுவாருமென்றுரைக்க
திருக்கேள்வன்சொன்ன க்ஷணத்தில்பதத்தில்விட்டார்
அங்கவனுமஞ்சியரி யாயிரநாமம்பகர்ந்து
புங்கவனேயான்செய் பிழைபொறுப்பாயென்றுரைத்தான்
அஞ்சாதேபஞ்சவர்க்கா யாவியுனக்களித்தோம்
மிஞ்சாதேயுன்கருவம் விட்டுப்பிழைத்திடென்றான்
மாயன்பதம்பணிந்து வல்லகுருக்கேத்திரனு
நேயமுள்ளவைந்து நிருபரையுந்தாள்பணிந்து
தன்பதியையநோக்கித் தரியாமலேநடந்தான்
துன்பமகன்றதென்று துரௌபதியுமாயவனைத்
தாடொழுதேயுந்தன் சரணங்கதியலது
நாடொருமேயெங்களுக்கு நாரணனேயாதரவார்
எதிர்த்தார்கள்பஞ்வரொன் றெண்ணுமற்சிந்தையிலே
மதித்தேநீகாத்தருள்செய் மாலேயெனப்பணிந்தாள்
அந்தப்படியை யவர்க்கிடருவாராமற்
கந்தமுடனைவரையும் காப்பனெனப்பகர்ந்தான்
மங்கையபூபன் மனமிசைந்தநண்பருக்குச்
செங்கைகொடுத்தாதரவு செய்வதுபோற்செய்ததற்பின்
பாரளந்தமாயவனும் பஞ்சவரைத்தானிருத்தி
நாரிசைந்தநாரணனு நம்பியுடன்மூத்தோனு
மூவருமாக முரணகர்போய்ச்சேர்ந்தார்கள்
தேவர்மதிக்குந் திறலுடயபார்த்தனுடன்
அந்தவனத்திருந்தே யைவருமேதான்வருந்தி
இந்தவிதந்துன்ப மிடைவிடாப்போராட்டங்
காட்டினிலுவந்து கவர்ந்ததேயாமாகின்
மேட்டிமையாயெந்த விதனுந்தலையெடுப்போம்
ஓயாக்கவலை யொழியாதசஞ்சலத்தின்
மாயாப்பிறவியிலே வந்தோமுன்செய்தவத்தாற்
செய்வதென்னென்றே தியங்கியிருக்கையிலே
மெய்தவஞான வியாதனுரங்குவந்தார்
வந்தமுனியின் மலர்த்தாளைப்பஞ்சவர்கள்
சிந்தையுறவணங்கித் தெய்வமசாமுனியே
காயும்பயிரதுதான் கார்மேகங்கண்டாற்போல்

ஆயினுமிக்க வருண்முனியேயுன்பாதம்
கண்டோந்தொழுதோங் களைதீர்ந்துடல்புளகங்
கொண்டோமுற்செய்த குறைத்தவத்தாற்பட்டவெல்லாம்
ஆரிடத்திற்சொல்வோமுன் னன்படியிற்சொல்லாமற்
பாரிடத்திற்சூதிடத்திற் பட்டவவதிகளும்
வனத்திலேவந்திடத்தும் வம்பனிட்டதீவினையும்
உனக்கேதெரிந்திருந்து மோதினேமெந்துயரால்
ஆனையெடுக்கு மரியபெருஞ்சுமையைப்
பூனையெடுக்கப் பொறுக்குமோபுண்ணியனே
நின்போற்பெரியோர் நெறியாற்பொறையுடையோர்
என்போலுந்தம்பியர்க ளின்னல்பொறுப்பாரோ
அரசாளுமன்னரிலே யாரலைந்தாரென்போல
தெரியாதமுற்பிறப்பிற் செய்தவினையுண்டதென்றார்
ஐயனேநீயோ வரிதானபாடுபட்டாய்
மெய்யனேநின்போல வேந்தர்களும்பட்டிலரோ
அரிச்சந்திரனொருபொய் யன்றுரையமாட்டாமன்
மருப்பூவுலகின் மகாவவதிபட்டதற்பின்
இரவிகுலச்சக்ரவர்த்திக் கீசன்முதற்றேவதைகள்
தெரிசனையாகச் சிவன்முதன்மற்றுள்ளோருங்
காக்ஷிகொடுத்துக் கருதும்வரங்கொடுக்க
ஆக்ஷியுடனேயர சாண்டுமகிழ்ந்திலனோ
இந்துகுலச்சக்கிர வர்த்தியென்னுநன்னுமன்
உந்துகொடுஞ்சூதி லுற்றவையெல்லாமிழந்து
வனஞ்சலதியுற்று வாடித்தலஞ்சேர்ந்து
கனஞ்சார்ந்தகையானிக் காசினியையாண்டதையும்
எல்லாவிரித்தே யிவர்சிந்தைதான்றேற்றி
நல்லோர்மனமகிழ நாடியேதானுரைத்து
முன்னைவினைமுடிவால் முற்றுவதையெண்ணாமல்
துன்னலாரின்னற் றுரைதொகையாச்செய்தாலும்
உள்ளதுறுமல்லா தொருநாளும்வாராது
தள்ளரிதோமிக்கவினை தக்கோர்களாறுறும்
மன்றல்விருந்துநம்மின் வந்தப்பாற்போகாதே
இன்றுபொறுத்த வினிமேனலனெனவே
கன்றியதுன்பக் கலக்கந்தனைத்தவிர்த்தான்
குன்றினுயற்சியந்தக் குன்றேயநிந்தமையால்
புன்செயலார்செய்தீமை போதுமவர்க்கென்றுசொல்லி
இன்சொல்லாலவ ரிடரெல்லாந்தான்றீர்த்து
பார்த்தன்றவசிருந்து பாசுபதம்வாங்கிவரில்

தீர்த்திவென்வன்பகையைத் திண்ணமாயென்றசொன்னான்
முனிவனுரைத்த மொழியைச்சிரசேற்றி
கனியுற்றவைவர்களு நாடிப்பதம்பணிந்தார்
தனுவுக்கரசன் றனையேமுகநோக்கி
பனியுற்றவெள்ளிப் பருப்பதத்தினியேகி
மனமொத்துநீதவசு மன்னியரனடியிற்
பெற்றவாவென்னப் பெரியோன்விடைவாங்கி
மற்றுமுனியை வணங்கியொருமந்திரமுங்
கற்றுமனமுற்றுக் கருதியதோர்நன்முகூர்த்தம்
முற்றாந்தினத்தின் முரண்விசயன்செல்லலுற்றான்
சூதுமுகத்திற் றுரோகிசெய்ததீவினைக்கு
மாதவரேயுங்களைப்போன் மற்றோர்பொறுக்கரியார்
என்றுவியாத னிவர்கண்மனந்தேற்றி
நன்றிருமென்று நடந்தான்வியாதனுமே

அர்ச்சுனன்றவநிலைச்சருக்கம்.

அரையின்மரவுரியு மணிகொண்டசெஞ்சடையும்
எரியன்றளித்ததனு வேவுசரத்தூணியுடன்
தவமேமனதாய்த் தசரதன்சேயொப்பாக
இவன்போலும்வீர ரிணையிலான்றானடந்தான்
ஊர்நுழையா வுயர்கானமுங்கடந்து
தேசினிபங்கள் செருச்செய்வனங்கடந்து
கரையில்லாப்பேய்பூதக் கணங்கள்திரிகாடுவிட்டு
வரைகளெனத்தவழு மாசுணத்தின்காடுவிட்டு
இயக்கரவுண ரிராக்ஷதர்கள்காடுவிட்டு
வியக்கும்பலவனமும் வெற்பனந்தந்தானீங்கி
வடக்குமுடிவுகண்டு மத்திமையவெற்படைந்து
இடத்திலுமையாளை யீன்றகுவடென்றிறைஞ்சி
அந்தமலைச்சூழ வரியதவஞ்செய்வோர்கள்
சந்தமுனிவர் சரணஞ்சிரசேற்றி
ஆரணஞ்சொல்லு மடவேவனங்கடோறும்
மாலயனைச்சக்கிரியை வனமுற்றரியதவஞ்
சாலவுஞ்செய்வோர் தமைக்கண்டகங்கூர்ந்து
அரியின்முழக்குமுய ராளியினமுழக்கும்
கரியின்முழக்குங் கனமாம்புலிமுழக்கும்
மைத்தமிருக வகையினங்கடன்முழக்கும்
உத்தவிரத ரொலிமுழக்குந்தான்கேட்டு
தவஞ்செய்யரிமுழக்கந் தானுளதெலாங்கேட்டு

சிவந்தங்கும்புண்யந் திகழும்பொருப்படைந்தான்
கைமலையின்றேற்போர்வைக் கட்செவியின்பூணரம்
அம்மலையிற்செய்யு மருந்தவத்தேரனைப்பார்த்து
விம்மலைவிட்டு விரும்பினன்மெய்விரத
நாளுநவக்கோளு ஞளுவலஞ்சூழ்ந்து
ஆளுமிமையோரு மன்பாகத்தான்பார்த்துக்
கைலைப்பெருமைதனைக் கட்டுரைக்கவல்லவரியரர்
எயிலொருமூன்று மெரித்தோன்மலைச்சூழல்
உருகியவெள்ளியென வொத்தருவிசுற்றிவிழும்
விரவுசிவன்மகுட வேணிநதியைப்பொருவும்
அடங்காச்சிறப்புடைய வம்மலையின்றென்பாலில்
மடங்காதவீரன் மறையாகமப்படிக்கு
ஐந்தெழுத்துங்கூறி யடலையுடனிமிற
மைந்துடலம்பூசியந்த வங்கமலைபோனன்
புங்கச்சடையைப் புரத்திலேதான்சேர்த்தான்
அங்கிவளர்த்து யதிலேநவோக
செப்புக்குடங்கவிழ்த்துச் செப்பூசிமேனிறுத்தி
துப்புற்றெருகாலின் சோதிப்பெருவிரலை
ஊசிக்குமேனிருத்தி யுற்றதொருகான்மடித்து
தேசுற்றிருக்குந் திருத்துடையின்மேலேற்றி
ஒன்றுங்கருதாம லுட்சுவாசமுமடக்கி
வென்றிக்கதிர்ச்சுடரை மிக்காய்க்கவருதல்போல்
ஆகாயநோக்கி யருட்கரத்தைத்தானீட்டி
மாகாதிபன்குமரன் வன்கண்மலர்பரப்பி
இமைப்பற்றெருப்பட் டிருதாரையைநிறுத்தி
சமத்துற்றுமெய்த்தபசு தானின்றனம்மானுய்
ஐயரசுர ரரக்கர்மனிதரிலே
செய்யத்தவசிவன்போற் செய்யவல்லாரானவே
அரியதவசுநிலைக் கண்ணனிலமைபெற்றன்
எரிக்குமுதலே இவன்செய்சகாயமதால்
நெருப்புநீராடுமென்ற நேயமதுபோல
அர்ச்சுனன்மெய்யை யன்னீர்குளிர்ச்சிசெய்தான்
தனஞ்சயனுக்குத் தனஞ்சயன்சார்பான திறல்
மனஞ்செய்துகாற்றரசன் வந்துமொக்கநண்பாகி
வேந்தனுடற்பார மேயூசிசாராமல்
ஏந்திறைப்போல விவணைச்சுமந்திருந்தான்
சார்பிலார்க்கில்லை நிலையென்றதன்மையினல்
சார்புகொண்டுமிக்கநிலை தான்பெற்றனர்ச்சுனனும்

பவளம்வலப்பாகம் பச்சைமரகதமான்
நவமுத்திடப்பாக நண்ணியிருப்பதுமாய்
இந்துநதிகொன்றை யிலங்குந்திருச்சடையாய்
முந்தமதிகதிரு மூவெரியேமுக்கணுமாய்
அரவாபரண மழகானமார்பனுமாய்
பரசுமழுச்சூலம் பல்படைசேர்கையனுமாய்
புலித்தோலுடையனுமாய்ப் போதகத்தின்போர்வையுமாய்
வலுத்தேமாகாளியுடன் வாதாடும்பாதனுமாய்
சிந்தைதனின்மாறு திருப்போனைத்தானுடி
சந்ததமுமேகருதித் தான்வேறுநாடாமல்
புந்தியாற்கண்டு பொறிபுலனுந்தானடக்கி
அந்திநிறத்தானை யகலாதகக்கணினுல்
மாறுதுகண்டு மகிகூழிக்கடன்மூழ்கி
தேறுதசிந்தை தெளிந்துபூரித்தனனே
கருங்கல்லெனப்பிடியுங் கன்றுங்களிறுருஞ்சும்
பொருந்துகறையானும் புற்றுன்மறைத்திடவுந்
திருந்தியுபுற்றெனவே சேர்ந்தராவூர்ந்திடவும்
வருந்தேமரங்களென்றே வன்கொடிகள்சுற்றிடவும்
மாரியுடன்கோடையென்று வன்பனியுந்தோற்றுமல்
எரின்பகலு மிரவுகளுந்தோற்றுமல்
ஒருப்பட்டசிந்தையது வோரிடமுந்தோற்றுமல்
விருப்புற்றருந்தவசு மேவிநின்றுனம்மானுய்
அங்கியாலங்கி யறவெதுப்பிவெம்மையினைப்
பொங்கியவாயுவினுற் போக்கியந்தமேற்சிரசிற்
தங்குமமுதாலே தண்ணுற்றிடும்படியே
இங்கிதத்தோடு மிதயமொடுக்கிநின்றுன்
சிந்தையொருப்பட்டு சிவனைவரவேண்டி
மைந்தனிருக்க மகிழ்ந்துமகவானும்
சோதிக்கவெண்ணித் தொடுத்தபரதமெல்லாஞ்
சாதிக்கவல்லதொரு தக்கவுருப்பசியை
மிக்கதிலோர்த்தமையை மேவுபலகன்னிகையை
ஒக்கவனுப்பிவைத்தா னுற்றதொருசித்தசனை
கன்னற்சிலையிற் களிவண்டுநாணேற்றி
வன்னமாமைந்து மலர்க்கணைகணைகொண்டு
தாழையுடைவாட் டனதுமருங்கணிந்து
ஆழிமுரசமதிரவே தான்முழக்கி
பூவையொடுகிள்ளைகளிற் பூங்கல்லணைவிசித்து
தாவுதென்றற்றேரேறி தன்மகரடாலேற்றி

பூக்கவரியெழிற் பூவையர்கள்வீசிவர
தாகமுள்ளவெண்மதியின் றன்குடையுந்தானிழற்ற
சண்பகப்பூக்காளாஞ்சி தார்குழலாரேந்திவரப்
பண்புலவுமேரு பருவப்படைசூழ
வெற்றிவிருதான மிக்ககுயிலன்முழங்க
அற்றிமிரவேழம்வர வன்றிலெக்காளம்முழங்கத்
தோகைப்பெருஞ்சேனை சுற்றிப்பரவிவர
வாகைப்போர்வில்லிதனை வன்மித்துத்தான்வளைந்து
புருவச்சிலைவளைத்துப் பூவையர்களெல்லோரும்
அரிமைத்துனன்மேற்க ணம்புமழைபொழிந்தார்
விரதக்கவசமதின் மீதுற்றுக்கூர்மழுங்கி
பரதத்தெரிவையர்கண் பாணம்வலிகெடவே
மாரன்கரும்பை வளைத்துவரிநாணேற்றி
காரதெனப்பூமாரி காமனுமேவீசிநின்றான்
வீசுங்கொடுங்கணைகள் வில்லிவிரதக்கவசத்
தேசின்மழுங்கிச் செயலற்றதம்மானாய்
தந்தைகொடும்போதாத் தானணுவுமெண்ணுதான்
மைந்தன்சமனா மதிப்பனோவாள்விசயன்
அரம்பயரெல்லா மருச்சுனனைத்தான்சூழ்ந்து
குரும்பைமுலைதிறந்து கூச்சமறப்பேசிநிற்பார்
மலர்ப்பந்துகொண்டெறிவார் மாலைபலவீசிநிற்பார்
பிலத்துங்கலவிநலப் பேச்சாகப்பேசிநிற்பார்
அளகங்குலைத்தே யடைவாயுணர்த்திநிற்பார்
களபக்கலவைகளைக் கையாலேவீசிநிற்பார்
பன்னீரைவாரிப் பயம்போற்சொரிந்திடுவார்
நன்னீர்முழுகிவந்தே நல்லுடலந்தோன்றநிற்பார்
அல்குலவயவங்க ளானவெல்லாந்தான்றோற்ற
பல்கலையுந்தானுரிந்து பாவித்துடுத்திநிற்பார்
கோதையர்களிப்படியே கோடிதொழில்புரிந்து
சாதனைகெட்டுத் தயங்கிமதிமறந்தார்
அன்றிற்குயில்க ளபயமிட்டுத்தொண்டைகட்டி
வென்றிபரிக்கிளையும் வேசற்றதம்மானாய்
தென்றலின்றேருஞ் செயலளிந்ததப்போதே
மன்றன்மதனு மயங்கெட்டானர்ச்சுனன்முன்
சிந்தையுங்கண்ணுஞ் செயலுமொருப்பட்டமையால்
இந்தவிதஞ்செய்தவைக ளெள்ளளவுந்தானறியான்
நாணிமுகமாறி நாரியருமன்மதனும்
தோணவேசக்கிரிக்கிச் சொன்னாரிவனினைவை

இந்திரசால மெனவிசைந்தசெய்கையெல்லாம்
அந்தரம்போச்சு யவன்றவசேமிக்காச்சு
வீரன்றவசருமை வேந்தேசிவனையல்லாற்
பாரமுடன்றவசை பார்ப்பதெவரென்றுசொன்னார்
மெய்யன்றவசுநிலை மேலோர்க்கரசனெனும்
ஐயனும்பார்க்க வணுகினான்காணம்மானாய்
சேயன்றனைப்பார்த்துச் சிற்சிலசொற்றேவர்கடன்
நாயகனுங்கேட்க நயந்தோன்றுஞ்சொல்லாதால்
அன்னேனெதிர்க வரியமலைப்பாரிசத்தின்
முன்னேயெழுதிவைத்தான் மூர்த்தியெனைநீகேட்கில்
அப்போதுசொல்வே னலதுனையேன்யார்க்குமெனத்
தப்பாதெழுதியதைத் தான்வாசித்தேயறிந்து
எண்ணப்படியே யிசைந்துவரங்கொடுக்கத்
திண்ணமுடன்வருவான் சிந்தையறிந்தென்றுரைத்துப்
போனானதன்பின் பொருவிலரமாதர்
மானாரிபாதம் வருடியிவன்றபசின்
திண்மைகளெல்லாஞ் சிலதியர்கடானுரைக்க
அண்மையுமையு வரனடியைத்தான்றொழுது
பாங்கியர்கள்சொன்னபடி பார்பதியுந்தானுரைக்க
ஆங்குமையைப்பார்த்தே யரனேதுசொல்லலுற்றார்
பஞ்சவர்கடங்கள் பரிவுந்தலைமுறையு
நஞ்சனையார்செய்த நலிவாங்கொடுவினையுஞ்
சூதாலிவரைச் சுடுசுரத்திலோட்டியதும்
வாதாப்பகையை வதைக்கவடிக்கணைக்காய்ப்
பார்த்தனடைப்பிறந்தோன் பாசுபதம்வாங்குதற்கே
சாற்றரியமிக்க தவசினிலைமைபெற்றான்
மிக்கவெகுநாளாய் விரைந்தானுறக்கமற்றுத்
தக்கதபசதனிற் றானொருமையாகிநின்றான்
முன்னமேயெல்லா முதல்வியேயாமறிவோம்
அன்னமேயின்னமொரு வாலோசனையதுகேள்
சற்ப்க்கொடியோன்றான் சாற்றுகின்றவேவலினால்
வெற்பொத்தபன்றியென வேமூகதானவன்றான்
காண்டீபனைச்செகுக்கக் காய்ந்தேகரவாகி
மீண்டானவனும் விதியின்முடிவாலே
இன்றிந்தவெற்பி னிசைந்தேயினிதுரைத்தான்
வென்றெங்குங்கீர்த்திபெற்ற வீராதிவீரியனை
மாலுக்குயிராக வண்மையுறுந்தோழனையே
நாலுமருப்பிபத்து ணாயகன்றன்புத்திரனை

எந்தனைநாளு மிதயத்தின்மாறுதான்
உந்துந்தவசை யுலைக்கவரும்பன்றிதனைக்
கொன்றுவிடவேணுங் கோதையேகேட்டவரம்
வென்றிபெறக்கொடுக்க வேணுமெனவெழுந்தான்
நந்தியைப்பார்த்தே நமதுகணநாதவெல்லா
விந்தமுறுவேடனைப்போ னீயும்வாவென்றுரைத்துக்
கிராதர்குலத்துக் கிழவோன்கிழவியுமாய்
புராரியுமையும் புனைந்தார்களவ்வேடம்
வேடர்கோனின்றதொரு வேடிக்கையைப்பகரக்
கோடிநாவுண்டெனினுங் கூறிமுடியாதே
பச்சைமரகதம்போற் பார்ப்பதியின்சீர்சிறப்பும்
உச்சிதமுஞ்சொல்ல வொருவருக்குமுற்றாதே
கூடியவேடர் குழுவின்பெருமைதனை
நாடிவிரித்தே நவிலமுடியாதே
மிக்கனந்தவேதமெல்லா மேவுமிறைசொற்படியே
குக்கலெனவந்த குறிப்புரைக்கப்போகாதே
அப்புச்சடையிதழி யானவிளம்பிறையும்
துப்புற்றுக்குஞ்சியெனத் தோன்றல்புரத்திலங்க
துன்றுமயிற்பீலிநெற்றி சுத்திநெடுங்கண்ணிசுற்றி
வென்றிப்பலகரைப்பூண் மெய்கழுத்திலேநிறைத்து
காதிற்குழைபோற் கனமாலைகணிறைத்து
மோதுபுலித்தோன் முறையாயரைக்கணிந்து
காலிற்செருப்பணிந்து கார்போலுடலாகிக்
கோலமிகுமாயக் குறவனெனமெய்யிலங்க
இடக்கையில்வில்லுடனே யேவுவலக்கரத்தில்
அடக்குங்கணைத்தூணி யானபுலித்தோலாற்
செய்தேபுரத்திலங்கத் திடுக்கிடக்கண்டோர்கள்
வெய்துடன்சென்றார்காண் மிக்கோர்வேறாப்பிலென
மலைமானுஞ்செம்பொன் மலைமீதுக்குன்றிமணி
இலகுவடஞ்சூட்டி யின்பவலையணிந்து
புலிப்பல்லதினகமும் பூண்மங்கலம்பூண்டு
நலத்தவிரித்ததழை நற்றுகிலாய்த்தான்பூண்டு
தன்னைநிரைநிரையாய்த் தானெயிற்றிமார்சூழ
வன்னவுமைசென்ற வடிவுக்குவமையுண்டோ
ஓரேனந்தோட வெளித்ததிருப்பாதன்
போரேனந்தேடிப் பொருவிலாக்கூட்டமுடன்
சீரனந்தவேதந் திறல்கொண்டஞாளிகளாய்
ஓரனந்தங்கோடி யுறவேடர்தற்சூழ

காடுகலைத்துக் கருமாவடிச்சுவட்டின்
சோடுதெரிந்தே தொடர்ந்துவனங்களெல்லாந்
தேடியலைந்தே திசையெங்கும்வேடுவர்கோன்
கூடிவிரட்டிக் கொடுங்கார்மிகவளைத்து
எய்தானெருகோ லிடிபோலதிர்ந்தெழும்பி
வெய்தாகக்காயமுடன் வீரிட்டவன்றபசை
நோக்கியூழிக்காற்றை நொய்தாக்கிமேலாடித்
தாக்கினன்பார்த்தன் றவசைநெருக்குமுனம்
ஆக்கியளித்தே யழிக்கும்பாராபரனு
நோக்கும்பொறிபுலனு நொய்திற்பேதிப்பாக்கி
ஒருப்பட்டசிந்தை யுலைந்தேகிடந்துழலக்
கருத்தினித்தன்சொருபங் காண்பதையுமாற்றிவித்தான்
தவசுகுலைந்த தபசிதனைநோக்கி
அவசம்பிறக்கவெழுந் தந்தரமாய்ப்பாயுமுனம்
சீக்கிரமாகச் சிலைவிசயனோர்வாளி
ஆக்கிரமாய்வந்த வரியின்மேலேவிடுத்தான்
பார்த்தன்கணையாற் பதைத்தரியுமாய்ந்ததுவே
கூற்றையுதைத்தோனைக் கோலிநின்றவேடரெலாஞ்
சீற்றமிகுந்தே செருச்செய்வார்போலாக
மாற்றமிகுந்துரைத்தே வாதாடியேதுசொல்வான்
முன்னொருவரொய்திருக்க மூண்டெகினம்பற்றிவரப்
பின்னுடனேவேடப் பெரும்படைகள்சூழ்ந்துவர
மடியுநினைவாகிவந்த வல்லுளியைக்கொன்றமென்ற
கெடிநிற்பதற்கோநீ கீர்த்திபெறக்கொன்றுவிட்டாய்
ஆமடாநிந்த னகந்தையோசேவகமோ
மாமுனியேயுன்னை வதைப்போமெனமலைந்தார்
வேடர்களெல்லாம் வினைப்போர்க்கடிக்கொளவே
ஆடரவைப்பூணு மழகாம்பெருவேடன்
வீரமுனிமுன் மிகுகோபங்கொண்டுவந்து
ஈரமிலார்போ லியான்கேழலெய்திருக்க
மைம்மாவாவைநீதான் மறுத்தெய்வதுமுறையோ
தட்டுருவியென்மார்பைத் தான்பிளந்தகாயமும்பார்
முட்டியுத்தஞ்செய்த முறையோசெடமூரண்டோ
தீயபசிதான்மாறத் தின்றுபிழைப்பதற்கோ
நீயுமிச்சைவைத்தனையோ நிந்தனுக்குவேண்டியதோ
என்றுகிராத னிசைக்கவெனக்கதுவேன்
ஒன்றுமருந்தா தொளிந்தேன்றவசதனல்
உனக்குன்படைக்குநல்ல வுண்டியிதுகொண்டுசெல்லு

மனக்குறுபாயுன்படைகள் வண்மைவழக்கில்வந்தால்
சினத்துக்கணைதொடுப்பேன் றிசையிற்சிரஞ்சிதற
நினைந்துபார்த்தெந்தனுட னீங்கள்போர்நேருமென்றான்
என்றமொழிகேட் டெயினர்க்கிறைநோக்கி
பன்றியுனைக்கொல்லும் படியாய்ப்பயந்தாயோ
நின்றுதவஞ்செய்வோர் நினைப்பாரோவேறையொன்றை
பொன்றெனுநீபுலித்தோற் போர்த்தபசுவொத்தவம்
அந்தணனோமன்னவனோ யார்வசியன்சூத்திரனோ
கந்திருவனோசுரனோ ககனனோவிராக்கதனோ
தீயிற்பிறைபோலத் தேய்ந்தாயுடல்களெல்லா
நீயிங்கேவந்து நெடுநாளோசொல்லுகின்றான்
தன்வரவும்பேருருஞ் சாற்றினனன்றான்கேட்டு
மன்னவர்களைவரினு வாகைவில்லின்மிக்கானே
தானத்துருபதனைத் தான்பிணித்தோனீதானே
மானக்குருவிழுங்கும் வன்மீனைக்கொன்றவனே
என்குலத்தானுன்போ லிசைந்தானெனக்காய்ந்து
வன்கரத்தினோர்விரலை மாற்றிவித்தோனீதானே
எண்ணிறந்தவேடர்களை யேதுணித்தோனீதானே
கண்ணனுடன்கூடி காண்டாவனமெரித்துப்
பற்பலசீவன் பழிகொண்டானீதானே
வெற்பிலேகம்பமிட்ட வில்விசயனீதானே
மல்லுக்குவாள்வலிக்கும் வண்மையுள்ளானீதானே
வில்லுக்குமிக்க விசயனென்போனீதானே
என்மனதுநாடியபோ லிப்போதுவாய்த்தாயே
விண்முகத்துமன்முகத்தும் வெம்போர்பிரிதியல்லால்
உன்னைவிடேனுன்சமர்த்தை யோர்க்ஷணத்திற்காண்பனென்றான்
என்னையறித லெயினனோவேகுகென்றான்
ஈசனெயினனுட வெச்சிலுக்குக்கையேந்தி
வாசமுடனுண்டதனால் மற்றரனின்மிக்கலவா
வேடர்களைமுன்னாள் விரட்டிநிமாமீட்டமென்றே
சாடையசங்கிதங்க டான்பண்ணினீயிழந்தாய்
அஞ்சாதேவேட ரனந்தம்பேரொன்றுசொல்லி
மிஞ்சாதுதோற்றாலு வென்றாலுநாமிருவர்
அல்லாதுவன்மே லவர்களைப்போர்செய்யவொட்டேன்
வில்லாளனேவல்விசையை மெல்லாநீகாட்டுமென்றான்
ஈசற்பிடித்தே யிளையருந்தும்வேடுவனீ
பூசற்புரிவனென்றாய் போர்த்தொழினீயொன்றறியாய்
காட்டிற்றிரியுங் கனவிலங்கோடொத்தவனீ

மேட்டிமையாயுன் றன்னையே வென்றாலுங்கீர்த்தியுண்டோ
பத்தாதவனீயோ பார்த்தனுடன்போர்புரிவாய்
செத்தான்மறந்துவிட்டுச் சீவனுனக்குண்டோமோ
புலிவாய்த்தசையானுய் போபோபிழைத்தமென்றே
மெலிவாய்மடியாதே வேடுவனேயேகுசென்றான்
வாய்ச்சமர்த்துச்சொல்வோர்க்கு கைச்சமர்த்துவாராது
பேச்சறிந்தோமென்றுமிகப் பேசிமாருட்டுகினும்
விற்போர்செயாதொழியேன் மேலாஞ்சிவனறிய
நிற்பாயோயென்றான் னிலைப்பெற்றப்போரிலென்முன்
புளினனுரைக்கப் புழுங்கிமனங்கொதித்துத்
தெளிவில்வளைத்தோர் சிறியகணைதொடுத்தான்
கானவனுமந்தக் கணையைக்கணையாலே
தானறுத்திரண்டு சரம்பார்த்தன்மேல்விடுத்தான்
விட்டகணையறுத்த வில்விசயன்நாலுகணை
தொட்டவன்வில்லைத் துணித்தொன்பதுவாளி
மறவன்விடுக்கவதை மாற்றியேநூறுகணை
விறவில்விசயனிவன் வினையனெனச்சினந்து
நூறுகணையு நொடியிற்பொடியாக்கி
மாறியிரண்டுகணை மார்புருவத்தான்விடுத்தான்
தீயனடுகின்றேன் சென்றதேதிரிகணைகள்
நேயமயிற்பீலி நெஞ்சுபயமிலக்காய்
விட்டான்றிரிகணையே வேடனறுத்துவிட்டான்
கட்டாகமூன்று கணைமீண்டுபார்த்தன்விட
மூனறுகணையை முடுகாமுனமறுத்து
என்றகணையை யெயினன்விடுத்தனனே
அந்தக்கணையை யருசனனுந்தானறுத்து
சிந்தைகனன்றே சினத்தைந்துவாளிவிட்டுப்
பின்னன்முடியிலணிப் பீலிசிதறிவிழ
இன்னகதிசிந்த விளம்பிறையுமேநடுங்க
மானும்பரசு மயங்கநிலைகுலைய
கானவன்மேலேவிக் கடுத்துருத்தானேவிசயன்
கருங்கடலொத்தபல கானவர்கள்கண்கலங்கி
சிரங்கொள்வதற்கிவனே தீமைபோர்செய்வனென
வெய்யதழனிறம்போன் மேலேசெருமுதலும்
கையமர்த்தியேநிறுத்திக் காண்டிபனைப்பார்த்து
மீறிநீயெய்த விறற்போர்வலியறிந்தேன்
சிறியேவிற்பிடிக்குஞ் செய்கையொன்றுங்கற்றறியோம்
வேதமுறையின் விதமறியோம்வேடுவர்யாம்

சாதகமாயுன்னிடத்திற் றான்பழகநாடுகிறோம்
என்றோர்பகழி யெயினன்முனிந்தேவ
அன்றேயவனறுத்தே யம்புமழைமாரியென
வீசினான்றிக்கும விசும்பொன்றுந்தோற்றாமற்
பாசமழையாகப் பாத்தன்சொரியலுற்றான்
கைவிரசும்விட்ட கணைவிறலுந்தான்பார்த்து
மெய்விரகும்பார்த்து மிகவேமனமகிழ்ந்து
வேலிக்குசாற்றுகின்ற வெய்யமாறொப்பாகச்
சாலகக்கணத்திற் சரமெலாந்தான்பிளந்து
கோலியறுத்துக் குவித்தான்சிலைவேடன்
பாலையான்போர்பார்த்துப் பாத்தனதிசயித்தான்
என்கணையாவு மிவனோபழுதுசெய்தான்
வன்கணையாலிங்கிவனை மாயப்போமெனவெகுண்டு
வின்னாணிலோர்கணையும் வின்னடுவிலோர்கணையும்
மன்னான்மையானிரண்டு வாளிவிட்டுதானறுத்தான்
மறுவில்வளைத்து வடிக்கணைகடான்விடுத்து
துறவுற்றவன்மேலே சோராமலேசொரிந்தான்
கைநடுங்கியேதுடையுங் காலுமிகநடுங்கி
மெய்நடுங்கியேதசிவன் வெந்தழலைவிட்டிழகி
நடுவிலொருதருவி னற்சார்பினிலணுகி
வெடுவெடெனவேநடுங்கி வேடானானந்தவசு
பொமோவெனவே புகைந்தங்கம்புண்ணாகி
நாமேதுசெய்வதென நாணிமெலிந்துநின்றான்
கண்கலங்கிநிற்குகின்ற காளைமுகம்பார்த்திரங்கி
பண்கனிந்தசொல்லுமையாள் பார்த்தரனைகண்ணாலே
எண்டிசையும்வென்ற வெரியளித்தவின்னாணைத்
தொண்டுகொள்ளநாடித் துணித்தானொருசபத்தால்
அழலுற்றுகந்தளித்த வன்றுமுதல்வென்றிகொண்ட
பழுதற்றவில்விட்ட பண்பானநாணறுமோ
என்றுவெகுண்டே யெரிபோலழன்றோடி
அன்றுவரிவிற்கழையா லாரவாரித்தோங்கித்
தாக்கினான்சென்னிமிசை தான்சவுக்குமூடியபோல்
வாக்குடையமின்னல்வெட்டு மாயம்போலொத்ததுவே
உள்ளங்காலங்குவிக ளொத்தபுறங்கால்பாடு
துள்ளுகணைக்கான்முழந்தா டொடையுங்கடிதடமும்
இடையுதரமார்பு விருதோள்கரங்களமுஞ்
சுடரோங்குசென்னிநெற்றி சூழவடித்திடவே
கண்ணிபடுபீலி கருகிச்சிதறியது

தண்ணீரொழுகமதி தான்கூர்மழுங்கியதே
கங்கைநதிசிந்திக் கலங்கியுயர்ந்தெழும்பி
அங்காடுநடுங்கி யந்தரத்திலானதுவே
சாடையிலாத தனுவின்றிறலடியால்
வேடம்புனைந்தசிவ வேடனவசமுற்றான்
விண்ணவரில்யாரொழிந்தார் விரிஞ்சன்முதற்கடவுள்
மண்ணவரில்யாரொழிந்தார் மனுப்பல்லுயிர்தருமே
நண்ணுகின்றகீழுலகி னுகர்களில்யாரொழிந்தார்
எண்ணரியபல்லுயிரில் யாரடிபடாதொழிந்தார்
வேதாகமம்பூதம் விந்திந்திரவிகரு
வேதலைவன்மெய்யில் விழுந்தவில்லியோனடியே
வல்லடிதாங்காமன் மகவான்மகனடிக்க
பல்லுயிரெல்லாம்பிறங்கும் பரமன்முனிந்தவன்போல்
மல்லிலேமூண்டார்பின் மாவேடன்வில்லியுமா
தொல்லுலகும்வானுஞ் சுழலமகமேர்சுழல
கணங்களுதிரக் கதிர்மதியுமேவெருவப்
பணங்களோராயிரத்தின் பாந்தண்முடிசாய்ப்ப
திரையேழ்கடலுந் திக்கடங்கலுங்கயமும்
வரையுஞ்சிதறயிரு வன்போர்புரிமுகத்தில்
பாதாரவிந்தமதாற் பார்த்தன்றனைவாரி
வீசினனாகாய வீதிதனிலோர்சோதி
தேசிரான்சென்றதொல்லைத் தேவர்களுங்கண்டறியார்
கணிப்பதுருத்தோற்றங் காணுதாகாயமதிற்
குணிப்புற்றவில்லிசெல்லக் கோதைபங்கன்றானறிவான்
அங்கவனைச்சூழ்ந்தவரு மந்தரருங்காணரே
சங்கரனைப்பார்த்துமையுந் தாரைவிழிநீர்சொரிந்து
இங்கிவன்வீரமெலா மென்சுதன்வேளொப்பதென்றாள்
பங்கெனக்குத்தந்தோயிப் பாலனெனக்கிவனே
நெடோட்டவமிருந்தே நித்திரையுமூணுமற்றான்
சடமேமெலிந்திருந்துந் தன்வீரம்விட்டதிலை
விற்போரிலுமுனது மெய்நாமமேமனதின்
மற்போராகாயமதின் மாறுனுன்னுமமுமே
காக்கக்கடனுனக்கே கங்காளாவென்றுமைசொன்
மார்க்கமறிந்துன் மகிழ்ச்சிமனதுள்ளோனும்
அன்புபெருகி யருச்சுனன்மேலேதயவாய்த்
துன்பமகலச் சுனையொன்றதானமைத்து
தன்கிருபைதங்கத் தடத்திலேதான்விழ்ந்தான்
முன்கிரியைத்தாங்கியிங்கி முந்நீரில்விட்டதுபோல்

வீழ்ந்தானெழுந்தான் வெம்போர் துடங்கவந்தான்
தாழ்ந்தார்ந்தவேடந் தனைநீத்துச்சங்கரனும்
பவளமலையிடத்திற் பச்சைமலையுற்றாற்போல்
தவளப்பொடியணிவோன் றையலொருபங்கனுமாய்
நந்திமேலுற்று னயனமணிபொழிய
தந்தியுரித்தோன் றயங்குதிரிநேத்திரத்தான்
மானுமழுசூல மாசுணமாத்திகடுக்கை
தானுமராவேணியிலுந் தயங்குபிறைக்கங்கையுடன்
அனந்தகணநாத ரண்ணறனைச்சூழ்ந்துநிற்க
அனந்தசிறப்புடனே யர்ச்சுனனுங்கண்டானே
இந்தவிதஞ்செய்தோ னிவனோவெனவெருவிச்
சிந்தைமகிழ்ந்து திக்கமுஞ்சற்றுண்டாகி
நாவினாலேயனந்த நாமந்தனையேத்தி
ஏகினனீச னிருதாளிணையிறைஞ்சி
கமலப்பதந்தனைத்தன் கண்ணீரினாற்கழுகி
விமலனுனைக்காணவின்று வேறுகுறையேதெனக்கு
மாயமோதூயாநீ வனவேடன்போலெதிர்த்தாய்
நாயிற்கடையாகு மியானோவுனக்கெதிரி
அயன்மாலறியா தழற்சோதியேபரனே
உயர்வாமுனதுடலோ டொத்தெனதுடற்பரிவித்
தீண்டற்றகுமோபுன் றீயனெனதுடலை
வேண்டேனினிமேல் விரைந்தேயரிந்தரிந்து
உண்கநரிநாய்க ளுறுங்கழுகுமேயுரித்தா
நண்புடனேயீய்வனென நன்கரத்தில்வாளெடுத்தான்
மாதவத்தின்மிக்கான் மனக்குறிப்பையோர்ந்துமரன்
ஆதரத்தினோடே யவனையெடுத்தணைத்து
தன்கிருபைக்கண்ணீராற் றனவனைமூழ்காட்டி
என்கிருபைபெற்றவுனக் கியாதுபயமஞ்சாதே
என்மீதிலிச்சை யிடைவிடாச்சிந்தையுற்ற
வுன்மீதெனன்பு மொழியாக்கருணையுண்டே
அபேக்ஷைக்கதிபாவுன் றுண்மைத்திறமறிய
சுபேக்ஷமுடன்போர் துடங்கினோமுன்மீதே
நின்விரகுங்கைவிரசு நீள்விற்சாரத்தின்லக்கும்
உன்வில்லடியு முகந்தேற்றோமேற்புரிந்தோம்
பிள்ளைப்பிரியம் பெருக்கமாய்க்கொண்டதல்லால்
எள்ளத்தனையு மிடராய்நினைத்ததில்லை
வேடப்பலிப்பான மெய்மையறியாதமையாற்
சேடொத்துநீயுயித்தஞ் செய்தாய்பதக்தோய

தாய்போலுலகனைத்துந் தாங்கியுயிர்புரக்கும்
வேய்பாலனிப்பால விசயன்மனந்தேற்றியபின்
ஆதியேயண்டபகி ரண்டமெலாந்தானிறைந்த
சோதியேஞானச் சுடரோகிர்பாநிதியே
நீதியேவேத நிலைநுதிக்கெட்டாதவுமா
பாதியேநாயேனின் பதந்துதிக்கவல்லவனோ
தருமனுக்குத்தம்பியுமாய்த் தாமனுக்குநண்பனுமாய்
அருளுனக்குத்தொண்டனுமா யானேன்றவப்பேற்றால்
உன்பதமும்பெற்றேனிவ வூனுடலைத்தஞ்சமென
நம்பேனின்பாதம்விட்டு நானிங்கேனென்றுரைத்தான்
சந்தித்தாயிப்போது தான்கொண்டகோலமதாற்
சிந்தித்தாலப்போதுன் சிந்தையிலேதோன்றிநிற்பேன்
எண்ணுங்கருத்துக் கிசைந்தவரங்கள்பெற்று
அண்ணலேசெல்கென் றரனுரைக்கவர்ச்சுனனும்
புல்லனினைவைப் புனிதனறியாததுண்டோ
அல்லன்மிகப்பட்டே னலைக்தேனிகமலைய
மாட்டேனின்பாதமதில் வாழ்வதிகமேசிவனே
கேட்டேனின்றேற்றங் கிடைத்ததேபோதுமென்றுற்
சூதினுற்பட்ட துயர்மிகுதியானியும்
வாதினுற்கன்னனையும் மாய்ப்பெனெனச்சொல்லியநின்
கோதைதுயரகலக் கூந்தறனைமுடிக்கச்
சாதப்படைவாங்கத் தான்றுணைக்குச்சொல்லிவந்தாய்
உன்வாக்குனுற்சபத முரைக்கப்பழுதுறுமோ
மன்வாகுவீராவென் வாளிபெற்றேயேகுகென்றான்
தெய்வவிரகினுட சிக்கறக்கவல்லரெவர்
தோய்வதாவந்ததுநஞ் சொல்லென்றுதானுணர்ந்து
உன்னுரையையல்லா துரைக்கவெனக்குந்தகுமோ
தன்னிதயமோர்ந்தெனக்குத் தந்ததேபோதுமென்றான்
கொடியோன்மொழிகேட்டுக் கோட்டுமாவாயமுகன்
இடராகவந்தோனை யெய்தோமெனவுரைந்து
சத்திக்குரைத்துத் தனஞ்செயற்குப்பாசுபத
அத்திரமும்வில்லும் அதற்குரியதாய்மறையும்
நற்றவனுக்கீய்ந்துகடை நாளிலேமோக்ஷமுமாம்
வெற்றியுறத்தந்தோ மெலிவகன்றேயேகுகெனச்
சஞ்சலநீக்கித் தனஞ்செயனைத்தானிறுத்தி
மிஞ்சவெகுபெலனும் வில்லிக்குத்தானீய்ந்து
அங்கிதரும்வில்லுக் கழியாவரங்கொடுத்துச்
சங்கரனுமம்பிகையுந் தான்சேணடைந்தனரோ

அந்திநிறத்தானகல் வாயிரங்கண்ணுன்றேவ
துந்துபிகடான்முழக்கித் தோன்றல்சுதனைத்தழுவி
நல்லதவஞ்செய்தாய்நீ நாதனுடன்போராடி
வல்லசரந்தூணிவில்லு மந்திரமும்பெற்றனையே
என்றபிதாவை யிறைஞ்சவிருகையாலே
அன்றவனுந்தான்வாரி யம்பொன்முடித்தேரேற்றி
ஒன்றொப்பிலாத வுளங்கூர்ந்தவ்னுடனே
சென்றனன்பொன்னுலகிற் றிகழ்வச்சிரதேவன்
ஆயிரம்பொன்மேரோ ரழகானவண்மையென
நேயசிறப்பு நிறைந்திலங்குமானகரை
சாரத்தியவேகந் தானகத்தன்னகரஞ்
சேருற்றவிந்திரனுஞ் சேயனும்வந்தெய்தினனே
வெயிலுநிலவுமிழு மென்மணியும்பன்மணியும்
உயராயிரத்தெட் டுயர்மாற்றின்பொன்னாலே
செய்தமணிமண்டபத்தின் சிங்காசனந்தனிலே
வெய்தின்மகபதியும் வில்வியுமேதானிருந்தான்
ஆதிக்குயிர்த்தோழ னனதொருமைத்துனனைச்
சாதித்தவாளபிமன் றன்னைப்பயந்தோனை
உவசையருட்கிருபை யோடன்னைகாணவந்தாள்
தவசிலுயர்பார்த்தன் றாய்பாதமேபணிந்தான்
அன்னையெனவந்த வயிராணியர்ச்சுனனை
தன்னிருகையால்வாரித் தான்றழுவியேவாழ்த்தி
பேரானவெற்றி பெறக்கடவாயெந்நாளும்
நீராழிசூழுலக நீயாளவேகடவாய்
தக்கவமரர்திருத் தம்பிரானுன்றகப்பன்
மிக்கபெருஞ்செல்வமெல்லாம் மேனீபெறக்கடவாய்
என்றன்புடனு யிரந்தரமுந்தான்வாழ்த்தி
நன்றாயிருப்பையென்று நன்மாளிகைபுகுந்தாள்
வகைக்கோரனந்தபஞ்ச வாக்கியங்கடான்முழங்க
நகைத்தமணியாசனத்தி னானிருக்குநேரமதில்
இன்பமணியி னினம்பொன்னிசைந்தருள
அன்புசெறிகற் பகமோரணிமாலை
திக்குவிசையஞ் செயும்விசயன்சென்னிதனின்
மிக்குடனேவைத்தார் வெறிகமழுமாலைதனை
அமுதமெனுநா ரதனியாழிசைசொரிய
சமுகமதில்வசுக்கள் சத்தரிஷிமற்றுமுளோர்
நிரைபோல்வளைந்திருக்கச் சிங்காசனத்திருந்தான்
அரமாதர்காளாஞ்சி யன்பாகவேந்திநிற்க

வெண்சாமரையிருபால் மென்மேலிரட்டிநிற்க
திண்சார்ந்திருவோருந் திட்டிகளிகூர்ந்திருந்தார்
மின்னார்க்குழுவனைய மின்னார்கடானடனம்
அன்னக்குலம்போ லரிவைகணடித்தனரோ
அங்கவரின்மிக்கா யரியூருவிற்பிறந்தாள்
துங்கநடனத் தொழிலரியதாய்நடித்தாள்.
நடனத்தின்மிக்கான நாரியுருப்பசியை
வடிவுற்றதேர்விசயன் மதித்துரைப்பானின்னடனம்
தந்தையேனின்றன் சதிர்க்கிதுவேதக்கதல்லால்
விந்தைநடனமிதை மெச்சவல்லார்யாவரென்றான்
அப்போமகவா னவையாடணங்குகட்கே
ஒப்பாமனைக்கணுக வுத்தாரமேகொடுத்தான்
மைந்தனுடன்றானு மந்தாகினியாடி
அந்தமிகுந்த வரண்மனையிற்றானேகி
எழில்சேரமாத ரீயாதமுதருந்தி
அழகானமைந்த னகமேகுளிர்ந்ததற்பின்
சயனந்தனக்கிசையத் தானோர்மனையளித்து
அயனன்புகொண்டோ னவனோர்மனைசேர்ந்தான்
பரதத்தொழிற்குரிய பாவையுருப்பசியாள்
விரகத்தினொந்தாள் விசயனுக்குமாலாகி
காமபாணத்தாற் கலங்கிவிகாரமுற்று
சாமத்தில்வந்தா டனஞ்செயன்றன்மாளிகைக்குள்
ஓராயிரமா மணியோங்கியதவிசில்
தாராயிரமணிந்தே தனஞ்செயனார்தன்னிடத்திற்
பேராயிரமுடையான் பெற்றமகளூற்றுநின்றாள்
காரார்சிலையனைய காண்டிபன்காதலின்றி
எந்தைமரபி லெழிலாயுவைப்பயந்தோய்
தந்தைமகிழ்ந்தவையிற் றானடனஞ்செய்யவல்லோய்
என்வந்ததென்றே யிருதாளையும்பணிந்தான்
நான்வந்ததின நரனுனக்கேமாலாகி
எம்மெழிலைப்பார்த்தே யிகழ்ந்துரைப்பதென்னனவே
கொம்மைமுலையாள் கொடுஞ்சினங்கண்மேலாகி
நானுனைகொண்டே னரனென்றுமெண்ணமல்
மானுபானே மருவாதிகழ்ந்தாயேல்
உன்னையுமுன்றவசி லுற்றபலவெற்றியையுஞ்
சின்னப்படவே க்ஷணத்திற்சபிப்பனென்றாள்
எனக்குமுனக்கு மிதமாமுறைபகர்ந்தேன்
சினக்குமுறையுண்டாகிற் றீரச்சபித்திடென்றான்

பொதுமாதருக்குமுறை புத்தியில்லாயுண்டோபோ
அதிபாநீபேடிவடி வாகென்றுரைத்தகன்றாள்
இட்டசாபத்தா லிவன்பேடிதானாகி
நட்டவடிவிதனை நாமோபெறுவதென்று
வாடிக்கலங்கி மயங்கியுணர்வழிந்து
ஆடிக்காற்றிற்றுரும்பா யண்ணல்சலித்திருந்தான்
விடிந்தேகுணதிசையில் வெய்யோனுதித்ததற்பின்
திடங்கொண்டமரர்குல சேகான்சிங்காசனத்தில்
வந்திருந்தான்றேவர்களு மற்றோர்களுஞ்சூழ
இந்துகுலத்தோ னெனதுதிருமகனைக்
கொண்டுவாவென்றான் குறிப்பால்விசயனையுங்
கண்டவசன்சொற்றதையுங் காதினாற்றான்கேட்டு
வந்தோனமர மகவான்றனக்குரைத்தான்
அந்தோவெனத்தனது வாவியிழந்தான்போல
சந்ததிகிட்டத் தருக்காதிள்கிவந்து
சிந்தைதெளிவாகத் தேவர்பதிதேற்றிவித்து
கணிகையையீங்குக் கடுகக்கொணருமென
மணிவண்ணன்சொல்லிடுமுன் மங்கையரைக்கொண்டுவந்தாள்
ஏகிமகவா னிணைத்தாடனைத்தொழுதாள்
போகியுஞ்சிந்தை புகைந்துபேசாதிருந்தான்
மன்னன்சினத்தாலு மாதுசபிப்பளென்று
வின்னமுடனண்டலொலா மெல்லிபதம்பணிந்து
அன்னைநீயானாலு மாசைப்படிபொருந்த
மன்னர்க்கழகு மதித்தான்மதியிலியாய்க்
குற்றமவன்செய்ததவை கோதாய்பொறுத்திடென
அற்றிடுமிச்சாபமொரு வாண்டிலெனவுரைத்தாள்
ஆண்டொன்றின்மாறுகினு மாரணங்கேயங்கவன்றான்
வேண்டும்பொழுதில்வர மெல்லியரோமாற்றிடென்றாள்
அந்தப்படியீய்ந்தே யப்போதேபேடியுரு
நிந்தித்தவன்றனக்கு நீக்கினாளம்மாளள்
பண்டிருந்தமெய்யெழிற்குப் பன்மடங்குதான்வடிவங்
கொண்டுமாரன்வெருவக் கோலமுறறானேவிசயன்

நிவாதகவசர் காலகேயர் வதைச்சருக்கம்.

கோதண்டவீர குமாரன்றனைத்தழுவி
மூதண்டவேதன் முனிவரும்பர்தற்சூழத்
தேவர்பெருமானுஞ் சேர்ந்தருகிலேயிருந்து
மேவுகடற்போலிருந்த மேலோரைத்தானோக்கி

சேயின்விறலுந் திறலுமிதுவனைக்கும்
மாயனால்வந்த வலுவுமெடுத்துரைத்து
மூண்டசமரின் முறியநமைவிரட்டி
காண்டாவனமெரித்தோன் காணுமிவனென்றுரைத்தான்
அவ்வுரைகேட்டே யமரர்மகிழ்ந்தன்பாகி
திவ்யவேதத்திலுயர் தேக்கணைமிக்காயுதவி
செவ்வியதாதை செழுநறைத்தூய்நீராட்டி
இவ்வுலகுங்கொள்ளு மெழிற்கலையுந்தானளித்து
பொற்கலத்திலேயமுதம் போதவருந்தவென
பற்குனனுமிந்திரனும் பரிந்தருந்துநேரமதில்
இந்திராணிகண்டே யெரிபோல்விழிசிவந்து
இந்திரனரனோ டிதமுற்றேவுண்பதென்று
இவ்வார்த்தைகூற வியல்போவெனவெகுண்டான்
அவ்வார்த்தைகேட்டே யயிராணியும்பயந்தாள்
உண்டுகளிகூர்ந் துயர்களபந்தான்றிமிர்ந்து
மண்டுவினைசந்தபரி மளங்கமழவேபூசி
சிவன்முன்னருள்வச் சிரக்கவசமும்புனைந்து
பவனன்மயங்குமணிப் பட்டைமருங்கணிந்து
ஒன்னாருயிருண் டுறங்குடைவாளுஞ்சேர்த்து
மின்னாபரணம் வெயிலுமிழத்தான்பூட்டி
வீரகண்டாமணியும் வீரனபதத்தணிந்து
சீரின்மணிக்கடகஞ் செங்கைதனிலணிந்து
அனந்தங்கதிர்மதியோன் றனைவழகெரிப்ப
மனங்கொண்டநான்முகத்தோன் வண்மையுடனீய்ந்த
வனங்கொள்கிரண மகுடஞ்சிரசில்வைத்து
கன்மபெறுமைந்தனைச்சிங் காதனந்தன்னோடிருத்தி
வாசவனுமிருக்க வந்தும்பரும்வணங்கித்
தேசுடையநின்பெருமை சேரநரற்களித்தாய்
மனிதர்க்குமதுபதம் வண்மையுடனளித்தீர்
புனிதாவெனக்குப் பொறுக்குமோவென்றிசைத்தார்
என்றிவனுஞ்சொல்ல விடிப்படையோன்றனைத்து
நன்றெனக்கோமைந்தனரி நாரணர்க்குமைத்துனனாச்
சினத்துத்திசையடங்குந் திசைகம்பநாட்டிவித்தான்
அனந்திரவிருத்திரனை யஷ்டதிக்குப்பாலகரை
முனையிற்பொருதியவர் முன்விருதெல்லாம்பறித்தான்
வனமின்னார்க்காய்ப்பலரா மன்னோடமர்புரிந்தான்
தவசின்மதனையுமே தான்வென்றரிதுணித்துஞ்
சிவனுடன்விற்போருஞ் செய்துவில்லினாலடித்துந்

கவனமறச்சிவனைக் காக்ஷியுடன்கண்டுகந்து
அவனருளும்பெற்று னதின்மறையும்வாளிபெற்றான்
புன்கணுற்பார்த்திருந்தேன் புகழேயெவரறிவார்
நின்றேதினன்றேவர் நெஞ்சங்குளிர்ந்திடவே
வாழலிதுவொனது மைந்தனுக்குமேற்குமென்று
ஏழைமதியாங்க ளிசைத்ததெனப்போற்றிநின்றார்
நறைக்கஞ்சமாமுனிவ னண்பாயுனக்கீய்ந்த
பொறைக்கேமொழின்மகுடம் பொருந்தவெனக்குத்தகுமா
எந்தையேயென்று விறைஞ்சிவிசயனுரைப்ப
சந்தமகுடந் தகுந்தகுமென்றிந்திரனும்
வீரத்தின்மிக்கான மெய்யனேயென்பதங்கள்
சேரத்தகுமுனக்குச் சிந்திக்கவேண்டாநீ
ஈசன்படைமா வெழினான்முகன்படையும்
பாசமுடன்சூழநின்றோர் பல்படையும்பெற்றாயே
அழியாதவில்லுமா னன்புமிகும்பகழி
ஒழியாததூணியுமுன் னுன்போலபெற்றவரியார்
உன்னிலுமிக்கல்லவிய னும்பர்களுமியான்றானும்
பன்னுமறைமுறையே பார்க்கிலுனக்கொப்பிலையே
கற்றோர்கலைகள் கசடறக்கற்பித்தோர்கள்
உற்றேகியெங்கு முறைந்தாலுமங்கவர்க்கு
பெற்றிடுஞ்செல்வப் பெருமையானென்றனக்கு
மகன்றந்தைகாற்று முதவிவன்றந்தையையென்
புகலுமதுபோற் புகழானதேசுதனே
உனக்கேதகப்பனுமியா னெண்குருவுமேயாகும்
எனக்கோர்வரநீ யிசைந்தருளவேணுமென்றான்
பொன்னுலகையாளும் புரந்தரனேநின்றனக்குச்
சின்னமனிதன்யான் செயுமுதவியாதுமுண்டோ
ஆனாலுமென்னாலே யாகுமதுகருமந்
தானியிசைத்ததுவைத் தட்டுவனோதந்தையென்றான்
தன்னுயிரன்னான் றனையனுரைகேட்டு
இன்னறவிர்ந்தேயா னிந்திரபதமின்றுபெற்றேன்
அல்வடிவமாலொத் தவனேயுபசாரஞ்
சொல்வதேனின்றனுட சொற்றவறோனென்றுரைத்தான்
ஆழிதனிலாழ்ந்த வகலநெடுமையுள
வாழிசெறிதோய மாபுரத்திலேவசிப்போன்
ஆழியரிக்கு மரனுக்குமஞ்சாதோர்
எழிரண்டுலோகத் தெவ்வாமுதுகுகண்டோர்
கோழியாக்குந்தோராக் கோவசுரர்முக்கோடி

பதினான்குலகுமிரு பார்வையிமைப்பளவில்
சதமாகநீறுபடத் தானேபொருங்கொடியர்
பல்லாயுதமும் பயிலுங்கொடியோர்கள்
வல்லோர்கள் வில்லாலுமற்போரிலுங்கொடியர்
திவாவும்பொருத்த தினவுற்றதிண்புயத்தோர்
நிவாதகவசர் நெடுநாளாயென்பகைஞர்
சூரனைவென்றாறுமுகன் சூன்ஞணிறுத்தியபோல்
வீரனுடதக்கனுயர் வேள்வியழித்ததுபோல்
சற்றிரக்கமில்லாத தானவர்களுமமறக்
கொற்றவனேவென்றிக் கோபொன்னகர்காப்பாய்
என்றிந்திரனுரைப்ப விகல்விசனுங்கேட்டு
நன்றென்றுளங்களித்தா னுற்றிசையுங்கீர்த்திபெற்றோன்
பூசலென்றபோதே புளகித்திருமாந்து
ஆசைமிகுந்தே யவன்புயம்பூரித்தோங்கி
இன்றேவிடைதா வெனவிசயன்றானெழுந்தான்
அன்றேசெயமென் றாழ்கண்டலனுமகிழ்ந்தான்
காற்றிற்கதிக் கனலிற்மிகக்கொடிய
மேற்றிசையுநாற்றிசையு மேகணம்போய்மீளவல்ல
கூற்றமுகிலுட் குமுறுங்கடையனற்போற்
சீற்றந்திறலுமிக்கத் திக்கெல்லாந்தான்றாய்த்தா
ஆயிரப்பத்து வடர்பரிபூணுந்தேரும்
மாயிரதசாரதியாய் மாதலியுந்தானளித்து
காயுங்கிரணக் கவசமுமேதானளித்து
வீயிலங்குதோளான் விடைகொடுத்தான்பார்த்தனுக்கே
விடைகொண்டிறைஞ்சியுயர் வில்விஜேதக்குமரன்
சுடுசரந்தூணிதிருத் தோளிலேதான்பூண்டு
படைபற்பலமுனையும் பற்றிமுருக்கவலன்
மிடல்வச்சிரக்கவச மெய்யிலேதானணிந்து
இருட்கோலமெய்யா னிணையில்லர்வில்வீரன்
செருககோலமாகச் சிறப்பித்தானக்கணமே
மோதுபோர்க்கேற்ற முரட்படையுந்தான்வாங்கி
ஆதவனின்மிக்காக வத்தேரின்மீதேறி
மாதலிதேருருமுனம் வஞ்சர்திசையெங்கேயென்றான்
சூதன்றிசைதனையுஞ் தோயநகரத்திருக்கும்
வல்லசுரர்தங்கள் வலுவுமெடுத்துரைத்து
செல்லும்வெருவமணித் தேரூர்ந்தான்மாதலியுஞ்
சித்திரசேனனங்கு செல்லும்வழிகாட்ட
புத்திரனின்மிக்கானப் போர்விசயன்றானிருந்தான்

மொய்த்திறலாமுப்பத்து முக்கோடிதேவரமர்
தைத்துத்தொலைக்காத தயித்தியர்வெஞ்சேனைதனை
எய்துதொலைப்ப திவனேவெனநகைத்தார்
மைத்தவழுஞ்செய்ய வரிக்கண்ணரமாதர்
பூவையர்கள்சொற்கேட்டுப் புன்முறுவல்கொண்டுகந்து
மாவிசையிற்போற்புரிசை வாயில்கடந்தனனே
அங்குபலபே ரமர்வந்துதானேக்கி
ஐயந்தெளிந்துவரி யல்லவிவனெனவெ
மெய்யிலங்கப்போர்க்கோல மேலிவிதஞ்செய்ததுவே
எதென்றுமாதலியை யின்பமுடன்கேட்க
மாதுங்கவீரன் வலியெல்லாந்தானுரைத்தான்
காண்டாவனமெரித்த காளையிவனென்றுரைத்து
மாண்டாரசுரரிவன் வாளியினலென்றுரைத்தான்
சூதனிவையுரைக்கச் சூழ்ந்தந்தத்தேவரெலாம்
போதமறையாசி புகன்றுசிறப்பியற்றி
வெற்றிமுகமாக மீளக்கடவதென்று
கொற்றவனையும்பர் கூர்ந்துமிகவாழ்த்திவிட்டார்
உம்பர்கோன் சம்புவனை யுற்றசம்புமாலியெனும்
வம்பசுரர்மேலுயித்த மன்னும்பேர்தாந்தவித்தோங்
குன்றெடுத்ததோளானைக் கொல்லுதற்குச்சீராமன்
அன்றுபோர்செய்துவெற்றி யானதிந்தத்தேரூர்ந்து
கற்றேய்கவசங் கதிர்மாமணிமகுடம்
பெற்றுயித்தேரும் பெருவிசையம்பெற்றிடுவாய்
எங்கள்கலக்க மிடருங்குறைதீரத்
துங்கமுளவெற்றிச் சுவாமியாய்வந்ததென
புலவரியல்பாய்ப் புகழ்ந்துரைக்கவேமகிழ்ந்து
அலரியுறப்பொற்றே ரருணனிலு [illegible]ககாக
சூதனெனுமாதலிதேர் தூண்டக்க[illegible] [illegible]ண்ட
ஆதவனுன்மிக்கான வர்ச்சுனன்றே[illegible] [illegible]ய
வீதியிலேதான்மேவி மெச்சுகணப்போதில்
மோதசுரர்தானிருக்கு முந்நீர்க்கரைசேர்ந்தான்
இப்புறத்திலவாழு மியலசுரர்செய்கையெல்லாஞ்
செப்பெனக்குத்தோற்றவெனத் தேர்ச்சாரதியுரைப்பான்
சிதறியசொல்லுடையோர் சீற்றமுறிற்செந்தழலே
பதறிச்சொரிவிழியோர் பாறமுகிலிற்கரியோர்
வாழிப்புவிமால் வராகமாய்த்தான்பிளந்த
ஆழத்தின்மிக்காச வாழ்ந்தகடைவாயுடையோர்
மண்ணீரனன்மருத்து வானுமுருக்கிடுவார்

கண்ணுடிருட்பிழம்பைக் கண்டித்தபேருடலோர்
மற்புயத்தார்சேடன் மகாசுமையைமாற்றவல்லோர்
கற்பமதையற்பமென்போர் கற்பம்பலகோடி
அற்பமதாய்ச்தான்கழித்தோ ராடகப்பொன்மேருவினிற்
உற்பனமாய்த்தான்றலைகீ ழூழிபலகோடிநின்று
மிக்கதவவிரத மேன்மையாய்ச்செய்துநின்று
நக்கனரியயன்பா னல்வரங்கள்பெற்றவல்லர்
சூலமழுப்பிண்டி சுரிகைபெறிசக்கரமும்
பாலந்தடிவயிரம் பத்திரிவிற்றோமரமும்
ஏவுபலவாயுதமு மேந்துந்தடக்கரத்தார்
பாவுதிரையாழம் பரட்டிலடக்கவல்லார்
ஓதநீர்முற்று மொருவன்வாய்க்குள்ளடங்கும்
சாதுவாநல்வசனந் தானொருவர்பேசிநின்றால்
எந்நாளுமுள்ள விடிகளெல்லாமொன்றாகி
தொன்றுண்முழங்குந் தொனிவெருவுஞ்சொல்லுடையார்
எப்போதுந்தேவர்களை ஏர்புறங்கண்டாலொழிய
துப்பாய்முன்வைத்தபதஞ் சோராதுபின்வாங்கார்
முக்கோடிவாளசுரர் முன்னிலைப்போரானோர்கள்
மிக்கானசேனையுட வெள்ளமெல்லைகண்டவரார்
எவ்வுலகுங்கீண்டு வெடுக்குமெயிற்றுடையோர்
தெவ்வரதுமுப்புரத்தைச் சிவன்பொடித்தநாடனிலே
தப்பிவெற்றிநான்முகனைத் தான்வென்றுமேலாடி
இப்புரத்தைக்கைக்கொண் டிகலால்வலிபடைத்து
வற்புறுத்தித்தேவர்களை வாதிக்கவேதுணிந்தார்
கற்புயத்தார்தன்வலியைக் கண்டபடியானுரைக்க
பொற்புசதுர்யுகமும் போதாதெனவுரைத்தான்
தேர்மாதலியுமாக்கச் சித்திரசேனன்றனையே
நிரசுரனூர்சார்ந்தன் னீண்டவசுரர்களை
போர்செய்யவென்னிடத்தே பொங்கிவரச்சொல்லெனவே
வீரர்க்குவீரன் விரும்பியேதூதுவிட்டான்
விண்ணிலுலாவுகின்ற மிக்கபெருந்தேனை
மண்ணிலேதானடத்த மாதலிக்குத்தானுரைத்தான்
ஓசையிடியொன்றா யொருமித்தபேரிடிபோல்
தேசின்சிலையைச் சிறக்கவேநாணேற்றி
பணைத்தொனிசெய்துநின்றான் கூற்றுவனுமுட்கிடவே
குணத்தாலுயர்சேடன் பம்மிப்பயப்படவே
காரினொலியுங் கடலொலியுஞ்சேர்ந்ததுபோல்
நிரவசுரர் செவியுட்புகுந்திடவே

வாசவன்போர்க்கு வலியவேவந்ததென
வீசிநெருப்பை விழியாற்சொரிந்துசினம்
விம்மியிருந்தோன்முன் வெய்யதூதனுரைப்ப
கொம்மென்றெழுந்தே குதித்தானசுரர்பதி
உங்கள்ஜனன மொழிப்பேனிப்போரிலென்று
சிங்கம்போற்சிறிச் செருக்கோலங்கொண்டெழுந்தான்
மண்டயுத்தஞ்செய்வதற்கு வல்லீரோல்வாருமென
விண்டுபலவசுர வீரர்க்குரைத்திடவே
கைகொட்டியேநகைத்துக் கண்ணூற்றழல்சொரிய
ஐகொத்தசூலம்விடு மைந்தானனத்தனல
பூசைதானென்று புலிக்கூட்டத்திற்பொருத
ஆசையாய்வந்து வழைத்ததுபோலாச்சுதென்றே
வாசவர்க்குமங்கணுள்ள வானவர்க்கும்பொன்னகர்க்கு
நாசம்வந்ததோவெனவோ நம்மேனரனைவிட்டான்
அஞ்சுவார்நம்போர்க் கயன்மாலுமைமுகனும்
பஞ்சைநரன்றானோ பாரினமைப்பொருவான்
கூர்கொண்டபல்படையுங் கொண்டேயமர்க்கழைப்போன்
ஆனொன்றேதங்களிலே யாலோசனைகள்செய்தே
நாகக்கொடியோன்சீர் நாடுகளெல்லாம்பறித்து
வேகுற்றகாட்டில் விரட்டவேயோடிவந்தோன்
என்றசுரர்பேசி யிளைத்தசிறுபாம்பெனினுங்
கொன்றுவிடவேபெரிய கோல்வேணுமென்றுசொல்லித்
தூதனைப்பார்த்துத் துரிதச்சினமாக
நாதனைப்போர்க்கு நடந்துவரச்சொல்லெனவே
அனுப்பிமழைக்கா லமாவாசையினிருட்போல்
தனுக்கொள்ளசுரர் சமர்க்கோலமாயெழுந்தார்
அந்தரமுந்திக்கு மடுக்குநிலைதோற்றுமற்
கந்தரத்தாற்பேரிருளுங் காலாந்தரம்போல
ஆனைபரிதேர்மா வாளோடுநாலுவகைத்
தானையொடுமெழுந்தார் தானசுரரோமயமாய்
வானெண்டிசைதிரையும் வார்காடுமாமலையும்
ஏனையுலகினிட மெங்குமிருண்மூடியவே
அங்கண்முரசுசங்கு வார்பேரிதாரைசின்னம்
பொங்குந்திரையிடியின் புன்மையொலிமங்கியவே
சூலமெழுமரமுந் தோமரமுநேமிகளுங்
கோலும்வரிச்சிலையுங் குந்தங்கொடுங்கணையு
நாலுவகைச்சேனையுட னெடும்படையுடனே
சோலிநரனைக் குறுகினரேவல்லசுரர்

வேலின்விசயனசுர வீரர்தாட்கண்டதல்லால்
விண்ணேயெர்சிரசை மிககவனுங்கண்டிலனே
அண்ணுந்துபார்த்தா னவன்முயற்சிதான்மறந்தான்
பார்த்துத்திகைத்தான் பரமன்றனைநினைந்தான்
கோர்த்துச்சிலைவாளி கோமான்விடுக்குமுன
நீலகிரியை நெருக்கியனந்தமுகில்க்
கோலவிருட்படலங் கொண்டுவளைந்ததொப்பாய்
கூண்டாய்வளைந்தசுரர் கொடுங்கார்முகக்கணைகண்
மூண்டாரமரின் முகில்போற்சொரிந்தனரோ
அக்கார்முகக்கணைக ளங்கமதிற்ருவுமுனந்
தொக்காவிசயன் றுரோணம்பலவகுத்தான்
நற்காரசுரரிவ னக்கனெனநவின்றே
திக்கோடியேதந் திறலும்பெரும்புகழுங்
கைகோடியகணையாற் கம்மியிருளசுரர்
முக்கோடியுநொடிக்குண் முன்முருக்குவாறெனவே
முன்போர்க்கடன்னின் முனைந்தேமுனைமாறி
வென்போனவிந்திரன்போல் வீரனிவன்றெலையான்
பொன்போனம்மேனி பொடியாய்ப்பொருதழித்துப்
பின்போவானென்றுமொழி பேசினர்வாளசுரர்
மதிப்புற்றவீரனில்லாண் மானபங்கஞ்செய்தவன்று
கொதிப்பற்றிருந்த குணமேதெனச்சொலுவார்
நாட்டிலிருக்காம னற்செல்வமுங்கவர்ந்து
காட்டிலேயோட்டிவிட்ட காந்தாரிமக்கடனை
பொல்லார்சண்மெய்யைப் பொடியாகவேயவனைக்
கொல்லாமல்விட்ட குணமேதிவ்வீரனென்பார்
என்றசுரோச ரிசைக்கவிறல்வாகை
மன்றல்வரிவில் வளைத்துமழைமாரி
ஒப்பாகவீசி யுகாந்தப்பெரும்புயல்போல்
தப்பாக்கணைமாரி தான்பொழிந்தானர்ச்சுனனும்
மொய்த்தவசுரரங்க முழுதுங்கணைமயமாய்
தைத்துருவச்செங்கதிர்க டானுமிழும்வாறேபோல்
ஆயிரத்துக்காயிரம்பே ரம்பொன்றுதட்டுருவ
சேயிரத்தம்பீறெழும்பிச் செங்கதிர்க்காலொப்பாக
சாயிரத்தம்வெற்பிற் சரியுமருவியொத்த
மிக்கவிருட்பிழம்பாய் மெய்மாறிவேடமத்தாய்
செக்கர்வான்போலாசத் தேசம்படைத்தனரோ
என்முன்னெனமுன் றிகலசுரரவ்வவர்கள்
முன்முன்னெருக்கி முருக்கினான்ராகவன்போல்

தன்முன்னுமற்றுந் தரிதலற்றுவீரரெலாம்
வின்முன்னிகராகார் வில்விசயனக்கணமே
செப்பெரியபல்கோடி தேர்முகத்துந்தோன்முகத்துந்
துப்புலவுமாமுகத்துஞ் சூழ்பதாதிமுகத்தும்
எங்கெங்குந்தானு மிவன்றேருமாயிகலாய்
அங்கங்காய்நின்றே யமர்செய்தானர்ச்சுனனும்
ஆளொன்றுதேரொன் றனந்தமாயெம்முகத்துங்
கோளொன்றசுரர் குலமெல்லாம்வேர்களையத்
தோன்றியேசசன் றுடர்ந்தானரன்வடிவாய்
ஆன்றமகவா னருந்தவத்தாலென்றுசொல்வார்
இங்கிவனோடே யிகல்செய்வாராரெனவே
புங்கம்படப்பற் புழையாயுயர்ந்துநின்றார்
வீரன்கொடுங்கணைகண் மெய்முழுதுஞ்சல்லடைக்கண்
சாரமெனத்துளைத்துத் தானேதுறந்தமையால்
ஆரும்பொரமெலிந்தே யஞ்சினார்நெஞ்சழிந்து
தேருந்திப்போர்மூண்டா தெண்ணிற்றெயித்தியர்கள்
என்னேயொருவ னிகலுக்கேதான்பயந்து
கொன்னேநம்மாண்மை கொடுத்துமெலிவதுவோ
இன்னேயிவனுவி இறியவிழித்திமையோர்
முன்னேவயவாகை முற்றுவோமென்றெதிர்த்தான்
ஆர்த்தாரகல்வானு மாழ்கடலுமெத்திசையுந்
தூர்த்தார்கொடும்படையாற் சூரரினும்வல்லசுரர்
தேர்த்தானுந்தோற்றுமற் றேவரொலாமெய்மறந்து
வேர்த்தாரினிமேல் விளைவேதெனமெலிந்தார்
கூற்றொத்தபல்படையுங் கொண்டலெதிர்த்தேபொருப்பிற்
சீற்றமுடன்மூச்சுவிடா தேசொரிதற்போற்சொரிந்தான்
வேற்றொப்பிலாவிசயன் மேவார்படைத்தேரு
மாற்றிச்சரமாரி மாமுகில்போலேசொரிந்தான்
சுற்றவிசயன் சொரிந்தகணைமாரியெல்லாம்
பற்றலார்தங்கள் படைகளாற்றுனறுத்து
கொற்றமணித்தேருங் கொய்யுளையும்பாகனுமே
உற்றபொறிக்கலங்க வுன்னிக்கணைபொழிந்தான்
விரவியசுரரெல்லா மேலோடிவாரதினால்
பிரமன்கணையதனைப் பேராளன்றான்றொடுத்தான்
காற்றுயவூழி வடவைக்கடுங்கனலாய்க்
கூற்றுயுயிராக் குடித்துழுதுசெந்நீரின்
சேற்றுலெப்பாருஞ் சிவந்ததேசெம்பாதி
எற்றுனேப்போலா யிசைந்தகளமானார்கள்

கண்டங்களண்ட கடாகமுகடுரேஞ்சி
அண்டங்கண்முட்ட வழிந்தபிணமலையே
கோடியசுரர் குலவுகூடும்படையு
நீடுநீருக நிமிஷத்தின்மாய்ந்ததுவே
ஒருகோடிவாளசுர ருற்றபடைசாக
இருகோடிமாபடையு மிங்கிவன்மேற்பொங்கியவே
மண்ணிருண்டவிண்ணிருண்ட வாரிமலையிருண்ட
கண்ணிருண்டதேவர்பதிக் காவிருண்டகோலமதாய்ச்
செங்குருதிவெள்ளந் திரையிற்புரண்டுசெல்லத்
பொங்கியேமொய்த்தனர்கள் பொன்னகர்வேந்தன்மகனை
எங்கெங்கேவல்விற் கிறையென்றசுரர்மொய்க்க
அங்கங்கவரவர்முன் னாகியமர்புரிந்தான்
சங்கங்களாஞ்சிமிறு தானொலிக்குந்தார்மார்பன்
சிங்கமனையான் ஜலம்போற்கணைமாறி
வீசினுன்றிக்கும் விசும்பொன்றுந்தோற்றுமல்
ஏசினன்வாளசுர ரெவ்வெலாந்தான்மாற்றி
வாசியும்பாகு மணித்தேருந்தான்மயங்கி
பாசசுரர்மூண்டு படைசொரிந்தாரம்மானாய்
போர்முகத்தொப்பில்லாப் பொருவில்வலியானுங்
கார்முகத்துமாயன் கணைதொடுத்துவீசிவிட்டான்
கூற்றுமிடிதிசையுங் குண்டலமுமண்டலமுங்
காற்றும்வடவைக் கனலுநடுங்கியதே
ஒன்றுய்ப்பலவா யுயர்கோடிசங்கமதாய்
அன்றேயனந்த மகாவனந்தவற்புதமாய்
சென்றேயகல்வெளியுந் திக்கெலாந்தானாகி
நின்றவசுரர் நிரைத்தமுகில்போலவிடும்
பாணமும்பல்படையும் பற்பமாநீறுக்கி
நாணுந்தனுபரித்தேர் நாகமெல்லாநீறுக்கி
துன்றியசுரரமர் துடங்கினோர்துண்டுதுண்டாய்
நின்றநின்றபாலி னெடியோன்படையறுக்க
பொருப்புப்பொருப்பாய்ப் பிணக்காடுதானாக
உருத்தேயவுண ருயிரெல்லாந்தான்குடித்து
சிரமற்றகமுகங்க டிண்புயங்களொண்கரங்க
உரமிக்கிருகரங்க ளுந்தியிடையூருசழல்
பற்பலுருப்பிணங்கள் பற்பலதுண்டாய்நறுக்கி
வெற்புவெற்பாக வெளியடைத்ததம்மானாய்
விசைகொண்டசெந்நீரின் வெள்ளப்பெருங்காற்றிற்
றிசைகொண்டநாலுவகைச் சேனைசுழியிற்சுழல

அறுத்தறுத்துவீழ்த்த வசுராதிமாசேனை
வெறுத்துப்போருக்கரிதாய் வென்னிட்டார்போலாக
அந்தரமுந்திக்கு மலைகடலும்போலாக
மந்தரத்திலொன்றி மறைந்ததொருகோடியுமே
மூன்றிவிருபாக முடியவொருகூறசுரர்
வான்றிசையிலோடியதான் மால்வாளிமீண்டதுவே
நாரணன்வாளி நரனிடத்திற்போயதற்பின்
போரசுரரொல்லாப் புணரிபோற்பொங்கிவந்து
மதியத்திரவிதனை வந்துபுயற்கம்மியபோற்
சதியுற்றுத்தேர்பரிமா தானசைவற்றேறமூடி
எற்றிசையுந்தோற்ற திருட்படலம்போற்கவிந்து
சற்றசைவில்லாமற் சரமாரிதான்பொழிந்தார்
விட்டகணைகளெல்லாம் வெண்சுண்ணம்போலாக
வட்டமுறுஞ்சிலையில் வாளிமகேந்திரத்தை
வீசியவரவர்கை வெம்படையெல்லாமறுத்து
ஆசிலாவீரனுருத் தார்த்தேயசுரரொலா
மாளும்படிக்கே வடிக்கணைகடான்விடுத்தான்
கோளினசுரர் கொடுங்கோபந்தானுகி
வஞ்சரயன்மாய்கை வாளிதனைவிடுத்து
சஞ்சலமிலான்கைத் தனுவாளியுமாற்ற
காற்றுங்கடுங்கனலுங் காரிடியுங்கன்மழையுந்
தோற்றுந்திசைவெளியுந் தோற்றமலைபரவி
கூற்றும்வெருவிக் குளறக்கொடுமாய்கை
எற்றகணையைவிட்டா ரிகல்விசயன்றன்மேலே
சென்மழையஷ்ட திசையெங்குமேபரவி
வின்மழைவல்லானை விரவியதேவெம்மாய்கை
சோதிவிரதத் துரகதமுந்தான்மயங்குஞ்
சூதனுந்தேரூர் தொழின்மறந்தேசோர்ந்துவிழ
தாதவிழ்பூமார்பனந்தச் சாரதியைத்தான்றேற்றி
தீதுறுமோகச் செழுங்கணையைக்கோர்த்துவிட்டான்
மாய்கையிருட்சிதற வானிரவிச்சோதியைப்போல்
தீயவடவையெனச் சென்றுநின்றுதாங்கிடவே
வல்லசுரர்மெய்போன்ற மாய்கையெல்லாந்தான்மடித்து
தொல்லையிருண்மாய்கை தொலைத்தான்மோகாஸ்திரத்தான்
மாய்கையகன்றதன்பின் வல்லசுரர்தான்மயங்கி
சாய்கைநிலந்தோய்த்தான் றுனவமாயோர்மனிதன்
வெல்வானேவென்று வெகுண்டேகொடும்படையாற்
கொல்வோமெனவே குழுமிப்படையெறிந்தார்

சூலமழுவுஞ்சொரிகணையுஞ் சோனையென்ன
சாலநரன்மீதே தான்வீசியார்த்துநின்றார்
கடுங்கார்முகவீரன் கைவிசையாய்மென்மேலும்
விடுங்கூர்ச்சரத்தின் விசையுங்கரவிசையுந்
தேவர்களுமின்னதென்று திட்டியாற்கண்டறியார்
மூவர்களும்விற்கு முனியிலநாமென்றுரைத்தார்
கொடும்போரசுரர் குலைந்துகுறைந்துடலம்
படும்பாடிவன்சரத்தாற் பாரிலெவர்காணவல்லார்
வேந்தன்கொடும்பகழி மீறியனந்தமென
தோய்ந்தசுரர்வெள்ளஞ் சுவறவேதாக்கியதே
மாய்ந்தவரல்லாது மற்றோரும்போர்மூண்டார்
இன்றேயிவனுடைய வின்னுயிரைக்கொல்வமென்று
அன்றேசினந்தா ரருச்சுனுங்கூர்மழுங்கான்
வடவைக்கனலை மடிக்குங்கொடுங்கணையை
மிடலுற்றசுரர்கடன் மெய்சிதறவீசிவிட்டான்
உரங்கண்முகங்களந்தோ ளுதரமதரநகைச்
சிரங்கபோலஞ்செவிவாய் செங்கையிடைதுடையும்
வரங்களும்பெற்றவுயர் மற்படையும்வன்கழலும்
புரங்கண்டதுண்டமெனப் போதமுறத்துணித்தான்
தீர்த்தோம்பகையெனவே சிங்கநாதமுழக்கி
மாற்றார்மதிக்க மலர்ந்தான்முகம்விசயன்
அற்றவவையங்க ளானதெல்லாமொன்றாகி
முற்றியுருவாகி மூக்கோடிராக்கதரும்
ஆர்த்துவரக்கண்டா னடர்பரித்தேர்மாதலியுந்
தோற்றெழுந்தமாய்கைகண்டே சோபித்தயர்ந்துவிழ
இதற்கென்னசெய்வோமென் றிராமனனையவிசயன்
மதிக்குந்திறலான் மயங்கியயர்ந்தெழுந்து
சிந்தைதெளிந்து சிவனைமனதுணர்ந்து
ஐந்தெழுத்தையுன்னும்போ தந்தரத்தோர்சொல்லெழுந்த
செருவிற்பெரியநர சிங்கமெனும்வில்விசயா
உருவொத்தவாளசுர ரோடேயமர்பொருத
நாழிகைக்குனூறுதர னையவேகொன்றாலும்
பாழினசுரர்வெள்ளம் பண்டுபோலுண்டாகும்
மும்மூர்த்திகளிடத்து முற்றபலபேரிடத்தும்
இம்மாத்திரமென் றியம்பரிதுகூற்றிடத்தும்
பெற்றவரமும் பெருமாய்கைமெத்தவுண்டு
இற்றைப்பொழுதி லிவர்கடனைத்தொலைக்க
முற்றும்படப்பகழி மூட்டிடக்காலம்போது

பாசுபதம்விட்டவனைப் பற்பமேயாக்கினிமேல்
தேசுடனேயின்று செயமுனக்குக்கிட்டுமென்று
அசரீரிசொல்லு மளவிலேவில்வளைத்துப்
பசுபதியீபாசு பதம்வைத்திழுத்துவிட்டான்
வில்விசயன்பாசுபதம் விட்டவிதந்தேவர்களுஞ்
சல்லியமாய்வந்தெதிர்த்த தானவருங்கண்டறியார்
அஞ்சினன்போருக் கவனிமனிதனென்று
துஞ்சியெழுந்தோர் தொடுகடலைப்போன்மூடி
வென்றிடுவேனிப்போ வெனவேவிரதமொடு
துன்றிப்பலசபதஞ் சொல்லியேகுறையென
மொய்த்தாசுகங்கண் முனைப்போர்சருகலுற்றார்
எய்தியிவனை யினிவிடப்போகாதெனவே
சொல்லியிவனை துணித்தான்முதலெனவே
வல்லகைவாய்வைத்தார் வலங்கொண்டியார்த்துருத்துச்
சிரித்துப்புரமெரித்த தேவனிவனெனவே
மருத்துப்பெருநெருப்பு மாறாதெழுப்புதல்போற்
சரத்தைச்சினந்துவிட்டுந் தானெதிர்த்துநின்றாரே
அன்றுபுரம்பட்ட வவதியசுரர்பட
சென்றுசரம்பொங்கிச் சினந்துதேபாசுபதம்
உருத்ததுவண்ட முகடுறவேதான்கொதித்து
சிரித்ததசுரருடல் சேரவேபற்றிமொய்த்து
எரித்தேயிமைப்பி லெழிற்கங்கையின்மூழ்கித்
தரித்ததேமீண்டு தனஞ்சயன்பாலுற்றதுவே
சங்கரனீய்ந்த சயக்கூரியவாளி
செங்கையில்வந்ததற்பின் றேர்விசயனுமகிழ்ந்தான்
ஆர்த்தாரமர ரலர்மழைபாலேவிசும்பைத்
தூர்த்தார்மதித்தார்க ளேள்ளிநரனைத்துதித்தார்
போர்த்தானவர்செருக்காற் புன்மைபடுந்தீவினையைத்
தீர்த்தானிவனெனவே தேவர்களிகூர்ந்து
நிவாதகவசரெல்லா நீறாய்மடிந்துயிரும்
அவாவினிமபுரத்தி லன்றுகுடிசேர்ந்தாரே
கூரும்படையுங் குடையும்பரிகொடுத்து
தேருங்கரிபரியாள் சேர்ந்துநிரைதோறுமுந்தி
உப்புக்கடன்மே லுதிரக்கடற்பெருகித்
துப்புற்றுப்போர்பொருதச் சூழ்தலைப்போலொத்ததுவே
பாறுங்கொடியும் பருங்கழுகுநாய்நரியுந்
தேறும்பெரும்பேயுஞ் செங்களத்தின்மொய்த்ததுவே
இடிக்குலமியாவு மெழுதிரைகாற்றேழ்முகிலும்

வெடிக்கவொருத்தொலித்தே மீள்வதுபோலொத்ததுவே
தாலியிழந்தபல் தானவர்கடேவியெல்லாங்
கோலியிழவுகண்டு கூக்குரலிட்டேயழுதார்
அசுரர்மடந்தையக ளகங்களைந்தேவீழ்ந்தரற்ற
நிசியஞ்சனவரிக்கண் ணீர்வாரிபோற்பரவ
ஆயந்தவசுர ரடங்கலையுங்கொன்றமின்னுந்
தீர்ந்திலான்மூண்ட சினமும்விழிச்சிவப்பும்
அன்னார்நகரத் தளவுமரண்பார்த்து
மன்னுமாதலிதன் மாமுகத்தைத்தான்பார்த்து
நன்னகனூர்க்கே நடத்துதேர்மீளெனவே
சொன்னவுடன்மாதலிதேர் தூண்டினானுண்மதியால்
அந்தரங்கமாய்ப்பொன் னணிநகரான்சொற்படியே
சிந்தையுடன்றேரைச் செலுத்தினனந்தரத்தே
எண்ணத்தைமுந்து மிவுளிநடத்தையிலே
அண்ணற்குநேராக வந்தரத்திலோர்புரிசை
மாற்றலுயர்ந்தகதிர் வண்ணவிரணியத்தால்
தோற்றவேபார்த்தனந்தச் சூதன்முகநோக்கி
இந்தவலங்கார விஞ்சிநகரோதனவே
மைந்திலுயர்ந்தவனே வண்மையுடன்சொல்கவென்றான்
கறுத்தவிருட்களெலாங் கன்னியிரண்டாகியபோல்
திறத்தவசுரர்குலத் தேன்மொழியாடானிருவர்
அனந்தநெடுநா ளயனையேதானோக்கி
அனந்தலுணவுதவிர்த் தம்பொன்மலையிடத்துச்
சந்ததமுஞ்செய்யுந் தவசேயுணவாக
அந்தமுள்ளமாத ருருந்தவசுசெய்தார்கள்
அரியதவத்திடத்தி லந்தணனும்வந்தணுகி
விரைதங்கியகுழலீர் வேண்டும்வரமியாதெனவே
அவர்கள்சிறுவரிய லாறுபதினாயிரற்குந்
தவருஞ்சரமுஞ் சகலபலபடையும்
உரமும்வரமுமெழி லுற்றநகருங்காப்பும்
பரமுமனமிசைந்த பல்வரமுந்தான்கேட்டார்
இறையன்றளித்த வியல்பாம்வரங்களெலாங்
குறையின்றியென்றுற் கொடுத்தன்முடியாதுகண்டாய்
அன்னாளிலிப்புரத்தை யந்தரத்திலுண்டாக்கி
மின்னார்கள்வேண்டு மிருவரமுந்தானீய்ந்தார்
அவ்வரம்பெற்றசுர ராறுபதினாயிரப்பேர்
வெவ்வசுரருண்டவர்கள் வீரமெவர்சொல்லவல்லார்
இப்போதிறந்தவர்க ளெல்லாம்ஒருவனுட

துப்பாந்திறலினுக்குச் சோடொக்கப்போகாது
அலத்தினற்காலனேயு மன்றுபுறங்கொடுக்கப்
பலத்தினல்வென்றதனற் பல்காலகேயரென்போர்
இரணியத்தாலே யெழினகருமாளிகையும்
அரணும்படைத்தே யதிலேயிருந்தமையால்
மன்னுமிரண்யபுர வாதியென்றேபேரவர்க்குப்
பின்னுமவர்கள் பிரபலம்பல்கோடியண்டு
முப்புரத்திலுள்ள முரனேரிலுமுண்டே
இப்புரத்தையாள்வா ரிவர்க்கிணைகள்வேறுமுண்டோ
சலத்தாற்றவத்தாற் சமர்த்தாலமர்த்தானர்
குலத்தால்வலுத்தோர்கள் கொற்றவனேயென்றுரைத்தான்
இங்கிவரைக்கொன்றலது வெந்தைபதிக்கேகனெனத்
துங்கமுடன்சபதஞ் சொல்லித்தேர்தூண்டுகென்றான்
சாரதியும்வாளசுரர் தன்புரத்தைத்தானேக்கித்
தேரதனையேநடத்திச் சென்றானேயந்தரத்தில்
அந்தப்பதியை யடுக்கமுடுக்குமுன்னே
கந்தற்கிசைந்ததிறற் காண்டீபன்வில்வளைத்து
சிறுநாண்குணத்தொனியே செல்தானிடிக்குலங்கள்
விறலாய்க்குமுறுதல்போல் விசயனுடநாணெலியே
அனந்தவிடியோவேலை யாரபாரத்தொலியோ
சினந்தப்புரத்தைச் சிரித்தெரித்தான்பேரொலியோ
கந்தன்மயூரங் கடிதூர்ந்திடுமொலியோ
இந்தவொலியேதென் றெயிருகடித்தசுரர்
தீயதெனக்கண்கள் சிவந்துருத்துவார்ப்பரித்து
காயசினம்பொங்கக் கனமீசைதான்திருத்தி
களித்தார்சினந்துபொங்குங் காளகூட்டம்போலே
ஒளித்தோடிப்போகாம லூடாடவேணுமென்றார்
ஓடுவானுடுவர்நீ ஷோசைகொண்டுதானுருக்கி
நாடுவார்நம்மாண்மை நன்றுநன்றென்றேநகைப்பார்
ஆடலாற்பொன்னு டழிக்கவிறலாயுதங்கள்
தேடுவாரெண்ணிறந்த தேரேறுவார்சிலரோ
கோடியாளியானை கொண்டபலமுடையோர்
கோடிமாப்பூண்ட கொடித்தேரின்மீதேறி
எண்ணரியகோடி யிவுளிபுடைசூழ
திண்ணியர்கள்பல்கோடி சேனைபுடைசூழ
அந்தரத்திற்றிக்கு மகல்வெளியுந்தோற்றுமன்
மந்தரமுமிந்துவி மாகமுருத்தோற்றுமல்
திசையெழும்பொங்கியுயர் சேணளவுமூடியபோற்

கலைகாணுச்சேனைக் கடல்வந்துமூடியவே
மூடியசுரர் முனைந்தேதுசொல்லலுற்றார்
நீடுநெடுங்காலனுமே நிற்கறியானம்மோடே
அபயமபயமென வன்றோடியமகவான்
உபயதளத்தோ டொருக்காலுமூண்டறியான்
கந்தனெனிலாறிரண்டு கண்கரமுந்தானுமில்லை
உந்திதனில்வந்தானே லோர்நான்குயானனமில்
தாமனெனிலோ சதுர்ப்புயம்பஞ்சாயுதமும்
வாமமுளகருட வாகனமுந்தானுமில்லை
அரனுகிலந்தா னனமூன்றுகண்களில்லை
கரமதனிற்சூலங் கபாலமழுமானுமில்லை
பின்னெந்தவீரனிவன் பேய்மதியாலிங்குவந்தான்
முன்னுந்தினேனை முனிவீரன்றான்பார்த்தான்
மேகத்திடையில் வெயினிலவுமேவுதல்போல்
ஆகத்திற்பல்பூ ணழகாமுடியிலங்க
மின்னுமணித்தூசதனுன் மெய்கிரணம்போலொளிர
மன்னுமதனன் வனப்பிலதிகமெனக்
கண்டார்விசயனையே ககனேர்க்குமிவ்வடிவு
மிண்டுகெதிர்ப்பூணு மெய்யெழிலுமில்லையென்று
என்பாவமிங்கிவனை யீடழித்துக்கொல்வமென்று
வன்பாஞ்சபதம் வழுத்தினேமுன்பாக
எதாகச்சொன்னே மிவர்வலியையோராமல்
வாதாகச்சொல்லி மயங்கல்பழுதெனவே
எண்ணித்துணிதல் கருமந்துணிந்ததற்பின்
எண்ணுவதெல்லா மிழுக்காமெனக்கருதி
அஞ்சாதனெஞ்ச னடலேறனைவிசயன்
வெஞ்சாபந்தொட்டு விறலாகநிற்கையிலே
நீலக்கிரியை நெடுமுகிலொன்றாய்க்கூடிக்
கோலிவளைந்ததுபோற் கோபித்தவர்கவிந்தே
புலிகண்டமான்போலப் பொன்னுலகிற்றேவரொலாங்
கெலிகொண்டேயெங்கள்பெயர் கேட்டோடியேமறைவான்
ஏவல்கொண்டுவந்தனையோ யேழைநீதேர்கடவி
தாவிவருவதென்ன தான்கிருதடமூரடா
பூவிற்சிறிய புழுவாமனுக்குலத்தோர்
ஆவிமுடிவுனக் கடாநடவடாவசடா
ஊதுமுன்னுன்றேரோ டொக்கப்பறப்பாயே
நீதனுக்கொண்டேபொருதி நிற்பாயோயெங்கண்முன்னில்
எங்கடாபாதைதப்பி யிங்குவந்தையோசிறுவா

உங்களினத்துக் குரித்தாய்ப்பிழைத்தோடி
ஒப்புடனேயிப்போதே யோடிவிடாயாமாகில்
எப்படியுங்கொல்வோமென் றேகாலகேயர்சொல்ல
போவேனுனுங்கடனைப் போக்கடித்துமிக்ஷணமே
சாவோனாயுங்களைநான் றப்பவிடேனென்றுரைத்தான்
போர்க்காலகேயர் புகல்விசயன்சொற்கேட்டு
கார்க்கோலமாகக் கணைமாரியாய்ப்பொழிந்தான்
சூலமுதற்பல்படையுந் தொட்டேசொரிந்துநின்றார்
ஆலகாலம்போ லசுரர்நடுங்கிடவே
விண்ணெண்டிசையதிர வேலையலைசுவற
மண்ணுஞ்சுழன்ற வரையினம்வானோர்நடுங்க
பற்றார்தொடுத்த பலபடையுந்தூசியெனக்
கற்றான்விசயன் கணையதனுனீறுக்கி
பொங்குதிரையொத்த பொருநர்முகந்தோறும்
வெங்கணைகள்பல்கோடி வீசியிமைப்போதில்
கன்னங்கறுத்த கரியவிருட்குழம்பாம்
என்னுஞ்சரீர மெரிபோனிறமாக
அங்கங்கடோறு மனந்தங்கணையேவி
எங்கெங்குஞ்சல்லடைக்கண் ணென்னத்துளைத்துவிட்டான்
வில்லுக்குராகவன்போன் மேன்மையுறும்வில்விசயன்
மல்காலகேயர் மரணத்துயிர்ப்புடனே
தீயிலிடும்புழுப்போற் றேகந்துடித்துழல
வாயும்வறண்டுபல மாய்கைகளைமேல்வீசி
ஆர்த்தரந்தேயந்தரத்து மாழியினும்பாதலத்துந்
தூர்த்தர்செய்தமாயவஞ்சஞ் சொல்லின்முடிவதுண்டோ
கூற்றதிர்ந்துமங்கக் குலகிரியினுண்மறைந்தும்
மாற்றமெவராலும் வழுத்திமுடிவதுண்டோ
அன்னதேர்முன்னு மளவிறந்ததேர்க்குலங்கள்
விணணிலமெல்லாம்பலதேர் வெற்பிடத்துமேபலதேர்
கண்ணினேராம்பலதேர் காணரிதாகுங்கணத்தில்
எண்ணிலிந்திரஜால மெனுமாய்கைசெய்துநின்றார்
காணுதுபோகுமொரு கண்ணிமைக்குன்முன்பணுகுந்
தோணுதுமீண்டுமெங்குந் தோற்றமாய்க்கண்முன்வரும்
அந்தவஞ்சமாயை யளவிலசுரர்செய்ய
சிந்தைகன்றிக்கண்சிவந்தே தெய்வச்சிலைவளைக்க
மைந்தன்பெரும்புயலும் வாயுவுமேசேர்ந்ததென
அந்தவுலகெங்கு மாலியாய்வீசிநின்றான்
சோனைமேகம்போற் சொரியுஞ்சிலைவிசயன்

கானல்வடவைக் கடுங்கனலுங்கைவிசையுங்
கொடிதிற்கொடிது கொடுங்கார்முகமிதென்பார்
வடவைக்கடுந்தீப் வடவையிவன்வாளியென்பார்
சிட்டிக்குநான்முகன் கைக்குதிறற்செங்கையென்பார்
எட்டுத்திசைக்கு ளிவன்கைவிரசில்லையென்பார்
மாயன்வேளீசனயன் வல்லமையையொக்குமென்பார்
தேயுவொடுருத்திரன் சினத்திலதிகமென்பார்
வில்லுக்கிறைவன் விசையில்விசயனென்பார்
கல்லுகளுமிருகக் கண்டித்தனெஞ்சனென்பார்
போருக்குப்பின்வாங்காப் பொற்புநரசிங்கமென்பார்
ஆருக்கும்வெற்றிகொடா னுண்மையிவனுண்மையென்பார்
நன்றுநன்றுநன்று நான்வின்மையென்றுசொல்லிக்
குன்றிவிழிநெருப்பைக் கொட்டியேயாக்கிர்மித்து
கருமுகிலொத்தே கடுகிமிகநெருங்கிச்
சரமுகிலொத்தே தழலிடிபோலேசொரிந்து
கணைகள்கணைகளொடுங் கௌவிச்செருமூண்டு
பணிகொளுலகமுதற் பௌவங்களுங்கலங்க
மூலபலத்தோடு முனைந்தசிலைராமனெனக்
காலகாலன்போலக் கண்சிவந்துகாண்டீபன்
மண்டுசினங்கண்டு மயங்கியேவாளசுரர்
பண்டுசெய்தமாய்கையிலும் பதினாயிரமடங்காய்ச்
செய்தார்கண்மாயை செறிந்தேயிருட்பிளப்பாய்
வெய்தாகவெங்கும் விரிந்தசுரர்கூட்டமொய்த்து
இருகண்ணுமூடி யிருந்ததுபோலல்லாது
பொருவரியமின்பூச்சி பொற்றோற்றங்கண்டதில்லை
இரவிதினாவான்பூமி யெண்டிசையுந்தோற்றமற்
பரவியிருண்மூடியதாற் பார்த்தன்மனந்திகைத்து
சோமன்கணையுந் துலங்குகதிர்க்கணையும்
வாமக்கனற்கணையும் வாயுவடிக்கணையும்
வருணன்கணையு மகவான்பெருங்கணையும்
பிரமன்கணையும் பிறங்கவேவிட்டுநின்றான்
விட்டகணைகள் விறற்போர்புரிவதையுந்
துட்டவசுரர் துகள்படவேமாய்வதையுந்
தோற்றுமன்மாய்கைத் தொகையாயிருட்படலம்
போர்த்தேயிருந்தமையாற் போர்மீளிதான்சினந்து
மாலளித்தமோக வடிக்கணையைத்தானிழுத்து
சாலவிருண்மாயத் தனஞ்சயனும்விட்டுநின்றான்
முன்விடுத்தபாண முனிர்தசுரர்மெய்சிதற

மன்விருக்கம்வெட்டி மலியச்சரிவதுபோற்
கரமும்புயமுங் களமுமிடைதுடையுஞ்
சிரமும்பதமுதலாய்ச் சின்னப்படவறுக்க
அறுத்துவிழுமுனமே அக்கணத்திலேபொருந்தி
மறுத்துருவாய்வாளசுரர் வந்துவந்துபோர்மூண்டார்
இங்கிவைக்கெல்லா மிவர்சாவதில்லையென்று
சங்கரன்கைவாளி தனைநினைத்தானேவிசயன்
மூன்றுசிரமாக மூவிரண்டுதிண்புயமாய்த்
தோன்றியெதிர்வரவே தோத்தரித்துத்தான்வணங்கி
கைக்கொண்டுவேதமுடன் கார்முகத்திணுணில்வைத்து
மெய்க்கொண்டுபோர்த்தன் மிகுவிசையாயெய்துவிட்டான்
ஒன்றனந்தமாகி யுலகெங்குந்தானாகி
நின்றநின்றபார நிசாசரனைத்தான்முடுகி
அண்டகடாக மகடுமுகடுடைய
மண்டலமுந்திக்கு மலையுநிலைகுலைய
சேடனடுங்சத் திரையேழுமேசுவற
நாடியேசென்று நகைத்தேயெரிபரப்பி
மாத்திரைப்போதினுள்ளாய் வாளசுரரையெரித்து
தீய்த்திரளாநீறுக்ச் செய்தோதிமூழ்கி
பரமனளித்ததொரு பாசுபதம்பார்த்தன்
கரகமலத்தின் கண்வந்துறைந்ததுவே
மலைகண்மலைகளென வண்மையுடனுற்றிசையு
நிலைகளாய்வானளவி நின்றபிணமலையே
சாகரமுமஞ்சச் சலதிகுருதிநதி
சேகரமாய்ச்சென்று திரையிற்பொருந்தியதே
பேரசுரர்மாண்ட பெருமலையின்சிக்கலிலே
சீர்பரிதிபாதை தெரியாதலமலந்தான்
விசயன்சிலைவலியால் விருந்துசமன்றனக்கு
அசுரர்களையே யறுத்தவரலாறுகண்டு
அருணன்றனித்தே ரடலாய்க்கடப்பவல்ல
விரவுதொழிற்சாரதிக்கும் வேந்தனெனுமாதலியும்
நீபிடித்தவில்லே நிலைபட்டவில்லதல்லால்
பூபிடித்தமன்னர்வில்லும் புல்லாகுமென்றுரைததான்
வில்விசயனென்றபெயர் மிக்கவுனக்கல்லாது
வல்லரெவரானாலும் வாய்க்குமோமற்றோர்க்கே
வின்மனிலைகண்டென் விழிகளித்தேனென்றுசொல்லித்
தன்மனதுகூர்ந்தே சரணம்பணிந்தெழுந்தான்
சஞ்சலமுந்தன்றுயருந் தானொழிந்ததின்றோசவே

துள்ளினாரார்த்தார் சுரருஞ்சுரர்பதியும்
கள்ளுலவும்பூமாரி காண்டீபன்மேற்பொழிந்தார்
இரண்யபுரமு மெழிற்காலகேயரும்போய்
அரணுமழிந்தே யசுரரெனுநாமம்
இன்றேயொழிந்த திடுக்கம்பெருஞ்சலிப்பும்
என்றேமகிழ்ந்தா ரிமையோர்ருஷிமுதலாய்
அமரர்துயர்நீங்க வசுரர்கண்மின்னூல்வாங்க
சமர்விசயன்வில்வாங்கித் தான்வாகையும்பூண்டான்
பார்கொண்டசுரருடற் பரந்தகுருதிவெள்ளங்
கார்கொண்டகல்விசும்புங் கடலெங்குங்கொண்டதுவே
மேர்கொண்டவாகாயம் விண்கொண்டமரருட
ஊர்கொண்டமீண்டு முயிரிப்படியானல்
விண்ணோர்க்கெவ்வாறு விசயன்கொடுங்கணையால்
நண்ணாரைக்கொன்ற நலஞ்சொல்வோமம்மானாய்
அசுரர்குலம்வே ரறவேயறுத்ததற்பின்
விசயன்பெருந்தேரின் மேற்கொண்டான்மாதலியும்
தேனைநடத்துமுனஞ் சித்திரசேனன்றனையே
வீரன்சௌரியத்தை மேலோர்க்குரைக்கவிட்டான்
தூதனாற்சொல்லாற் சுரருஞ்சுரர்கோவும்
போதவேமேன்மேற் புளகித்திருமாந்து
பொன்னகரியாவும் பொலியச்சிறப்பியற்றி
காட்சிபெருகக் கனகரச்சோடினைசெய்
மீட்சிபெற்றோமைந்தன் விசயனெலென்றுரைத்து
எட்டுத்திசையு மிமையோர்குழாஞ்சூழ
மட்டுலவுதார்மகவான் மைந்தன்றனையெதிர்ந்தான்
வரிசையுடையபஞ்ச வாக்கியங்கடான்முழங்க
இருடிமுதலிமையோ ரின்புற்றேயாசுரைக்க
யோசனையொன்று வுயர்கானடையாக
வாசவன்சென்முன் மகன்றேர்விட்டேயிரங்கி
தந்தைபதந்தோயத் தனையன்றனைத்தழுவி
கந்தமுடன்கிருபைக் கண்ணீர்மிகச்சொரிந்து
அன்புபெருகி யனந்தமுபசாரம்
இன்பமுடன்சொல்லியுன்னை வின்றெதிரியற்றமென்று
வெள்ளிமலையொத்ததொரு வெள்ளானைமீதேற்றி
வள்ளனகரி வலஞ்செய்தான்பார்த்தனையே
நள்ளாரைவென்ற நரனைமிகப்புகழ்ந்தே
வெள்ளையிபத்தேற்றி வீதிவரும்போது
பூமணிதற்கீது பொறுக்குமோவென்றுசொல்லி

தேமலர்ப்பூந்தார்மார்பன் றேவேந்திரன்றனக்கு
உம்பர்தனிலே யொருவனிதுவுரைக்க
வெம்பிச்சினந்தே விழியானெருப்புகுத்தான்
நஞ்சொத்தசொல்லாயென் நற்காதிற்றீய்சொரிந்தாய்
நெஞ்சொத்தறிவுகெட்டு நீதியற்றுநேயமற்று
நாக்குத்தாங்காம னடுங்காமற்கேட்டனையே
மூக்குமுகமு முனையுமுனக்களித்தால்
ஈதோவுரைப்பா யிதற்குமேலுமுரைப்பாய்
போதாதோநீங்கள்பட்ட புன்மையிதுவரைக்கும்
உங்களைவெற்றி னுழைபோகவேவிரட்டி
இங்குள்ளசெல்வ மெடுத்துச்சிறைபிடித்து
சுரரைத்துரும்பாகத் தோணமதியாரையெல்லாம்
புரமேயெரித்தான்போற் பொருதித்துயர்தீர்த்து
பெண்டாளவைத்தாளீர் திண்டாடமாட்டீரோ
அண்டர்நரக ரசுரர்ப தினுயிரம்பெண்
பொன்னுலகிலேபிடித்துப் பூவுலகிற்சென்றவப்போ
என்னசெய்தீர்கண்கண் டிருந்தீரோமீட்காமல்
மாமாயனெங்கோன்பூ மாதுசுமைதீர்ப்போன்
கோமானிராமனைப்போற் குவ்விலருச்சுனனுப்
பூவிலேதோன்றிவளர் பூபாரந்தீர்ப்போனே
நாவினுற்புன்மை நரனென்றேயோதுகின்றாய்
எந்தன்சுதனென் றிவனைப்பகர்ந்திருக்க
நிந்தனையாப்புன்மை நிகழ்த்துவதுமுறையோ
ஒறுக்காதினிநரனென் றும்பரெவர்சொலினும்
பொறுக்கேனினிமேற் புலவீர்காளென்றனனே
வானவர்களஞ்சி மகவானைத்தான்போற்றி
நானறியாதோதிவிட்டே னுதாபொறுத்திடென
மகவான்மகிழ்ந்தே மகன்மேன்மலர்மாரி
ககனூரைக்கன்னியரைக் காட்சியுடன்வீதிமலர்
சொரியும்படியாய்ச் சுராரிவிடைகொடுத்தான்
விரவிமலர்மாரி வீதியெங்குந்தான்சொரிந்தார்
எந்தத்தெருவு மெழில்வீதிசுற்றியபின்
சந்தமுள்ளசிங்கா தனத்தின்மகிழ்ந்துவைத்தான்
சொன்னதமிழ்ப்பாவின் சோர்விலர்த்தங்கேட்பதுபோல்
மன்னவனுமிந்திரனும் மாதலியைத்தானோக்கி
என்மகன்றீர்ந்தவெற்றி யெல்லாமிமையோர்கள்
தன்மனதுமென்மனதுந் தான்களிக்கக்கூறுகென்றான்
திரையொத்திமையோர்கள் சேர்ந்தசபைதனிலே

இரதத்தொழிற்கடவு ளிந்திரனைத்தானோக்கி
ஐயர்க்கரசான வண்ணலேயுன்மகன்றான்
செய்யுமுயித்தஞ் சிலைவிசையுமென்னாலே
சொல்லிமுடிவதுண்டோ சூரனைவேலாயுதன்றான்
வெல்லுந்திறந்தனிலு மிக்கலாற்றாக்ஷியுண்டோ
நான்முகன்றிட்டிப்பு நரன்கைவிசைக்கொவ்வாதே
பான்மதியவங்கிஷத்திற் பார்த்தனுக்குமொப்புமுண்டோ
இமைப்பதன்முன்னந்தரமு மெண்டிசையுந்தோற்றாமல்
சமைத்தசரக்கூடந் தானாய்நிறைத்துநின்றார்
ஆயுதமுங்கையு மதட்டினோர்வாய்களிலுந்
தீயொப்பதாகச் சினந்தோர்கள்கண்களினுந்
தகமையுடன்விசையாய்த் தாவுதிரளுந்தியினும்
இகலநினைந்தோ ரிதையங்களும்பிளந்தான்
தயித்தியர்செய்தவிந்திர ஜாலமெனுமாயையெல்லாம்
பயித்தியங்கொண்டே பறந்தோடப்பாணம்விட்டு
ஒல்லையிலேதன்கணையா லூயத்தான்சேனையெலாம்
பல்லவருமீண்டு பழையபடியுயிர்த்தார்
மயங்காதனெஞ்சனொரு வாளிதனையெடுத்து
தயங்காதுவிட்ட தனுத்தொனியுநான்காணேன்
நீறாய்ப்புரத்தை நிமலனெரித்ததென
மாறாயறுத்ததற்பின் வல்விற்றொனிகேட்டேன்
ஈதுநிகழ்ந்த விரணியவூரசுரர்
ஓதுமிவைப்பிலவ ருய்யாதுவாளிவிட்டான்
மாயமோவின்மை மகிமையின்னதென்றறியேன்
ஆயனயனீசனுநீ யன்றறிந்ததோவலதோ
கற்றோன்புகழுடையோன் காண்டீபவீரனென்றல்
பெற்றோனுக்கன்றோ பெருமையுனக்காயதென்றான்
எவ்வுலகின்வீரரெலா மேகவடிவாய்ப்பார்த்தன்
இவ்வுலகிலேபிறந்தான் கொண்டதவக்குறையோ
மனிதனெனவே மதியாதுரைப்பேர்கள்
புனிதமில்லாக்கொடிய புல்லறிவினீனரன்றோ
சொன்னசூதன்மேற் சுரர்பூபதிமகிழ்ந்தே
கன்னபாகங்குளிர்ந்து காக்ஷிவெகுமானநல்கி
தன்மகன்செங்கை தனையெடுத்துக்கண்ணில்வைத்து
வின்மகனேயுன்வில் விசையமெனச்சொல்வனென்றான்
தாவுதேர்ச்சாரதிமுன் சாற்றியசொற்றான்கேட்டு
தேவர்களெல்லாஞ் சிந்தைமகிழ்ந்தாசுனைத்து
தனித்தனிவந்தே தழுவிக்களிகூர்ந்து

இனித்தமறையோ டிகற்படைகடானீய்ந்தார்
தேவர்வரமுஞ் சிறப்பருளும்பெற்றபின்பு
காவலன்றந்தை கழலிணையைத்தான்பணிந்து
எந்தையேயென்னுயிரே யேற்றதருமனடி
சந்ததமுமியான்வணங்கத் தான்விடைதாவென்றுரைத்தான்
பிள்ளைப்பிரியமுன்போற் கொள்ளக்கிடைக்காதே
வள்ளற்குணமுடைய மைந்தாவின்னஞ்சிலநாள்
இங்கிருந்துபோவென் றிதையுமுறத்தழுவி
துங்கமுளதெய்வச் சுரமாதரைவரொடு
ஆயிரம்பெண்பே ரழகானரம்பையரும்
சேயினுக்கேத்ததொரு செம்பொன்மணிமாளிகையும்
வரத்தினாற்பெற்றதொரு வண்ணப்பலபடையும்
புரத்தையெரித்தோற்குப் பூபதியுந்தானீய்ந்து
சதுர்யுகமிரண்டா யிரந்தானொருநாளாய்
மதியினானூறு வயதிருக்குநான்முகன்றான்
மாண்டாலொருரோம மங்கும்பெருமையுளான்
பூண்டாதிகாலம் பொருக்குந்தவமுடையான்
உரோமமகாரிஷியா முற்றபொறைக்கடலை
சரோருகக்கண்ணா யிரத்தோன்றனித்தழைத்து
பார்த்தன்றவசு பலித்தவரலாறும்
கூற்றையுதைத்தோனற் கூர்வாளியீந்ததுவும்
என்பகையையெல்லா மிவன்வில்லறுத்ததுவும்
அன்பினெனதிடத்தி லண்ணலிங்குவைகியதுந்
தருமன்முதலான தம்பிமார்தங்களுக்குக்
குருமுன்னிலைமுனியே கூறிமனக்குறையை
நீக்கிமகிட்சிசெய்ய னீமுனியேயேகுகென்றான்
வாக்கின்படியே மகாமுனியுந்தான்போனான்

## புட்பயாத்திரைச் சருக்கம்.

### காப்பு-விருத்தம்.

மற்கொண்டு வகுத்தனைய சிகரத்திண்டோள்
வாளரக்கன் குலத்தோடு மடிய முன்னம்
விற்கொண்டு சரந்தொடுத்துப் புணரியிற்கேள்வி
விண்ணவர்தந் துயர்தீர்த்த வீரராமன்
கற்கொண்ட வகலிகைதன் னுருவமீளக்
கவின்கொள்ளக் கொடுத்த திருக் கமலப்பாதஞ்
சொற்கொண்டு துதித்தெழுந்து துள்ளியாடித்
தொழுமவரோ யெழுபிறவித் துடக் கற்றாரே.

வில்விசயன்பொன்னுலகின் மின்னார்கள்போகமெய்தி
கல்விகளைகண்டோன் களித்திருக்குநாளையிலே
தருமனுடனிளைஞோர் தானழலார்கானகத்தில்
விரவிச்சருகருந்தி வெங்கான்றனிலுலைந்து
பார்த்தன்பிரிந்ததினாற் பாண்டவர்களல்வர்களு
நீத்தபிரிவென்று நெருப்பவர்கணெஞ்சுசுட
ஜீவனிழந்தபெருந் தேகமெனுக்கூடாகி
ஆவியனைய வருச்சுனன்மேலாதரவாய்
சிறகற்றபக்ஷியென சிந்தைதடுமாறி
அறமுற்றசிந்தையனு மன்பானதம்பியருங்
கணமொருநாளாய்க் கடிகையோராண்டாக
தினையுளோருகமாய்த் திங்களோரூழியதாய்
எண்ணுதுமெண்ணி யிடைந்துபெருமூச்சுவிட்டு
புண்ணாகிச்சிந்தை புழுங்கித்தடுமாறி
கானங்கடோருங் கலங்கியலமலந்து
வானவர்கோன்சேயான் மகிழ்வுறுமரக்கமன்றி
மன்னுமிருடிகடன் வாக்கான்மனந்தேறி
பின்னும்பிரிவின் பெருநெருப்பானெஞ்சயர்ந்து
சஞ்சலமென்னுஞ் சலதிதனிலாழ்ந்து
கஞ்சமுகங்கள் கருகுமந்தக்காலையிலே
கப்பலுடைந்தோர்க்கோர் தெப்பங்கிடைத்தாற்போல்
ஒப்புறவந்தோ னுரோமமகாரிஷியைக்
கண்டார்தெளிந்தாற் கருணைப்பதஞ்சிரசிற்
கொண்டார்விழிகளினுங் கூசாமற்றானணிந்தார்
தவமுற்றமாமுனியே தானிங்குவந்ததென
கவனத்தைத்தீர்ப்பதற்கா காண்டீபனுக்குவதில்
என்னைமகவானு மேவினானுன்னிடத்தில்
உன்னுடையசிந்தைதனை யோர்ந்துநான்வந்ததென்றான்
ஐயாவுன்பாத மடியேங்கள்பெற்றமையால்
மெய்யாவென்றன்ப வியாகூலம்விட்டதென்றான்
என்னுயிரன்ன இளவனுடசேதியெல்லா
மன்னுதவமுனியே வாகாகக்கூறுமென்றான்
தன்மன்னவத் தபசிலிருந்ததுவும்
துரிதமுடன்றவசை சோதிப்போர்வந்ததுவும்
எச்சோதனைக்கு மிவன்றிறத்தேநின்றதுவும்
மெச்சியரன்மகிழ்ந்து வேடன்போனின்றதுவுந்
தானுபரியமாமூக தானவனையெய்ததுவும்
மோனமுனிதபசை முக்கண்ணன்மாற்றியதும்

விற்போர்புரிந்தானு வில்லினடியேற்றதுவும்
நற்பாசுபீச னரனுக்களித்ததுவுங்
கோபதிகொண்டேகியதுங் கூடவைத்துவுண்டதுவும்
மாபதவியான மகுடமுடிசூட்டியதுந்
தேவரிடுக்கண் சிலையான்களைந்ததுவு
நாவலர்கள்போற்ற நகரிவலம்வந்ததுவும்
ஆசனத்தில்வைத்தே யவன்கரத்தைக்கண்ணில்வைத்து
வாசவனுமுத்திகொண்டு மைந்தனைமெச்சியதும்
நின்னாலென்வாழ்வு நிலைப்பட்டதென்றுசொல்லி
தன்னாவியன்றவரஞ் சந்ததிக்குநல்கியதும்
பார்த்தனுன்பாதம் பணியவிடைகேட்டதுவும்
யேத்தவெந்தன்கண்குளிர விங்குசிலநாளிருந்து
போகலாமென்று புனிதாவுனைத்தேற்ற
எகலாமென்றே யெனைவிட்டானுன்னிடத்திற்
கற்றோனுடன்பிறந்த காளையற்கிவ்வாசையென்றால்
பெற்றோனுக்கெந்த பிரியமாய்த்தானிருக்கும்
ஆதலாலுங்களுக்கு வன்பாந்திருத்துணைவன்
நாதனேயெய்துமட்டு நானிருப்பேனென்றுரைத்தான்
பன்னுதலாசப் படிப்படியேசொன்னமையாற்
தன்னுட்களிகூர்ந்துத் தழைத்துப்புளகமுற்று
உற்றதுணைவனுக்கு முற்றவெற்றிதான்கேட்டு
மற்றவர்களெல்லா மகிட்சிகடற்குளித்தான்
இப்பாலவர்களைக்கொண் டேகிலாமாமுனிவன்
துப்பானகந்தர்ப்பச் சோதிமலைகாட்டுதற்கு
மேலுலகம்போன்ற வியன்வனமுந்தான்காட்டி
சாலப்பெருநதிக டன்னின்முழுக்காட்டி
இந்திரநீலக்கிரியி லெய்தியதனிலுள
சந்தநதியுந் தடாகங்களுமாடி
அந்தக்கிரியி னதிசயமுந்தான்பார்த்து
சிந்தைக்கிசைந்த சிலநதியுந்தானாடி
வெள்ளிமலைத்தென்பாலில் வில்விசயன்றன்முயன்ற
தெள்ளுந்தவசின் சிறப்பாமிவடமென்றார்
அவ்விடத்தைக்கண்டே யவன்றனைக்கண்டோன்போலே
செவ்வியரும்பத்தினியுஞ் செங்கமலக்கண்குளிர்ந்தார்
காட்சிகொடுத்துக் கணையளித்துப்போனசிவன்
மோட்சபதந்தோய்ந்த முன்பூமியைப்பணிந்தார்
மற்றும்பெரிய மகாதவங்கள்செய்தோர்கள்
உற்றமலைச்சார்பி லுலாவியவரவர்கள்

பாதம்பணிந்து பகராசிபெற்றுகந்து
வேதங்கமழ்நாவோர் மீண்டப்பாற்றானடந்து
எங்கெங்குமுள்ள வெழிற்புனலுந்தானாடி
பொங்குதியிற்சுழன்ற பொன்வரையுர்தான்காட்டி
மந்தரமுங்காட்டி மகாகங்கைதான்பாயும்
இந்தொளிசேர்கந்தற்ப மென்னுமவரைகாட்டி
முந்தமகவான் மொழிந்தவுரைப்படியே
அந்தவரைச்சார்பி லருந்தவங்கள்செய்தோர்கள்
சிந்தைப்பெரியோர் சிறப்புகளுந்தான்காட்டி
கந்தமுனிவர் கருதுமகாலையமும்
காட்டியிதனைக் கருதியோராண்டளவும்
வேட்டமுடனே விரும்பியிருங்களென்றான்
உருதியெமையா ளுடையான்வரையிதிலே
பொருந்தியுடனிருக்கப் பூண்டமுனிதானியம்ப
சம்மதியாகித் தருமன்முதன்மற்றோரும்
அம்மலைச்சார்பி லமர்ந்திருந்தாரம்மானாய்
கற்பமொருரோமங் கழியுமகாமுனிவன்
சொற்படியேயங்கிருந்து துய்யகனிகாயருந்தி
கணிதமுறுநாட் கழித்துவருநாளையிலே
அணிததாமகவா னடிமுடியின்மீதிருந்து
இதழாயிரத்தோ டிமயமலைச்சார்பில்
விதமாஞ்சரோருகப்பூ மீதுவிழுந்ததுவே
அந்தமலரை யழன்மானுடானெடுத்துக்
கந்தாவகன்மகன்றன் கையிலவடானகொடுக்க
மறையோனுதித்த மலரோமலர்மாது
உறையுமலரோவீ தொத்தநறைமலரோ
எவ்வுலகுங்கிட்டா திதழாயிரத்தோடே
ஒவ்வியசெவ்விமல ருற்றெனக்குவேண்டுமென்றாள்
சுசியிற்பிறந்தாளுஞ் சொன்னமொழிகேட்டு
முசியற்றரோம முனியிடத்திற்கொண்டுசென்று
எங்குளதுவிந்த மலரெனக்குக்கூறகென்றான்
துங்கமலர்ப்பெருமை சொல்லிமுடிவதுண்டோ
வானிலுளதலது மற்றளகையூரிலுண்டு
ஈனமனிதற் கெய்தாதிதுமலரே
எளிதாயுனதிடத்தி லெய்தரிதென்றேயுரைப்ப
அளகாபுரியி லணுகியான்கொள்தனிசம்
என்றுசொல்லித்தன்முன் னிளையோர்க்குமோதாமல்
மன்றன்மலர்கொண்டுவர வாயுசுதன்றணிந்து

வரிவில்லுத்தூணியொடு வச்சிரக்கதைபெடுத்து
உரியதகப்பனைப்போ லோடினான்வீமனுமே
வீசியகைக்காற்றுமிரு வெற்பின்புயக்காற்றும்
நாசியிற்காற்று நடுமார்ப்பெருங்காற்றும்
உகசண்டமாருதமா யூழிக்காற்றுவெழும்பி
பகருமலைக்காடும் பாரவனக்காடுந்
தலைசுற்றிப்பம்பரம்போற் றான்சுழன்றுவேரோடும்
நிலையற்றுச்சாய்ந்து நிலத்தின்முறிந்துவிழப்
பண்டுமுடியைப் பவனன்பறித்தெறிந்த
துண்டுபோற்பன்மலைக டுண்டித்துயர்ந்தெழும்பி
அந்தரமுட்டி யடியோடேதான்வீழ
கந்தரங்களஞ்சிக் கலைந்துசிதறிடவெ
இலங்கைநகர்க்கனும னேகியரக்கன்காவைக்
கலங்கமுறித்தடித்த காக்ஷிபோல்விர்க்ஷமெலா
நிலங்கள்குலுங்க நெடுவரைகளுஞ்சிதற
சலங்கொடிரைகலங்க சத்தமுகிலுங்குலைய
விலங்கும்பறவைகளும் வெருக்கொண்டேற்கலங்க
அலங்கமுடன்மேரு மஷ்டகசநடுங்க
செயலால்வயவீமன் சிங்கக்கொடிவீரன்
இயல்காஞ்சனப்பே ரொழில்வனமுந்தான்கடந்து
அவ்வனத்தைவிட்டன் பதின்காதந்தான்கடந்து
வெவ்வனத்தோடங்கிபுகை வீசுஞ்சுரங்கடந்து
வீமனெனத்திக்கு மிகமதிக்கும்வில்வீரன்
மாமதத்தியானை மடற்காதுடன்மருப்புந்
தோற்றுமிலைவாழைச் சுடர்வனத்தைச்சேர்ந்தனனே
ஏற்றபிரசண்ட மெனுங்கால்போலேகையிலே
பாழிக்குரும்பனையே பற்றியரக்கர்வளைந்தார்
ஏழித்தரக்க ரிமைப்போதிற்றான்மடிய
அந்தவனங்க ளனையக்குருதிவெள்ளஞ்
சிந்துவெனப்பெருக்கிச் சிங்காரதங்குரித்து
பல்லுயிரினெஞ்சம் பதைத்தேமிகக்கலங்க
மல்லிலுயர்வீமன் வளைமுழக்கிச்செல்கையிலே
அந்தவனத்தி லரியதவமியற்றும்
விந்தப்புபத்தனுமன் மிக்கோசைதான்கேட்டு
மாருதிவார வழியிலிருமலைமேல்
காரதனைத்தாவக் காலிரண்டையுநீட்டித்
திரையைக்கலக்குஞ் சிகரகிரிபோனிமிர்ந்து
வரையெத்திசைமாக மட்டுலவுவால்பரப்பி

விண்டுதனக்கலது வேறொருவர்தானறியாக்
குண்டலமுந்தானிலங்கக் கொற்றவனுமானிருந்தான்
குகைபோற்குவடிருதோள் கோட்டியார்த்தார்ப்பரித்து
நகைத்துமூவெட்டான நாசங்களுநடுங்க
மிகைத்தோடிவந்ததொரு வீமன்விழிநோக்கித்
திகைத்துநின்றுபார்த்தான் திறல்வீமனுஞ்சயனை
அண்டரசுர ரரக்கரணுகாவனத்தில்
எண்டிசையுமேநடுங்க விப்படிக்குமேயொருவன்
மண்டியிங்குவந்த மனிதனீயார்கொலென்றான்
சண்டபவனனருள் சந்ததியைத்தன்றமையன்
துன்னுசிலைவலியோ தோள்வலியோவாள்வலியோ
என்னரியகாவலினு மென்னாதுறவாயோ
உன்னைநீதானே யுணர்வறியமாட்டாயோ
மன்னுமென்தன்வால்கடக்க வல்லாயோயேகுகெனத்
தெய்வச்சிலைக்கரசன் ஸ்ரீராமன்றன்றூதன்
பௌவத்தைத்தாண்டிப் பரிதிக்குமுன்பாய்ந்தோன்
தென்னிலங்கைமாநகரைச் செந்தீயினாற்சிதைத்தோன்
அன்னவனென்றமைய னவனலதுமற்றுமொரு
மற்றகுரங்கினுட வால்கடப்பதோவரிது
உற்றுநீயந்த வுருக்கொண்டிருந்தாக்கால்
மாயாதிக்காகவுந்தன் வாறனையுமேகடக்கேன்
வீயாதிப்பாதை விலகுவிலகாயேல்
நீபடும்பாடு நிமிஷத்திற்பாருமென்றான்
பூபதியாந்தம்பி புகலுரைகேட்டுண்மகிழ்ந்து
நன்றுநன்றுசொன்னாய் நரராமனைச்சுமந்து
புன்றொழிலேசெய்திருந்த போரறியாப்புன்குரங்கை
எனக்குச்சரியென் றியம்பினையாதலினால்
உனக்குச்சிறிதேனு மோர்மதியுமில்லையென்றான்
வீமனிவைகேட்டு விழியானெருப்புகுத்து
தாமனெடியோன் சலதிதனிற்றுயில்வோன்
தேவரபயர் திடுக்கந்தனைத்தவிர்த்தோன்
பாவியரக்கர்தனைப் பாரிலறுத்தெறிந்தோன்
சலதிசுவறச் சரமொன்றுதான்தொடுத்தோன்
வலியதொருவாலியையும் மண்ணின்மடித்துவிட்டோன்
மனிதனெனவிகழ்ந்தாய் வல்விலிராமனையே
புனிதமுளசஞ்சிவியைப் போய்ச்சிணத்திற்கொண்டுவந்தோன்
ஐந்துமலைபேர்த் தணையடைத்தவென்றமையன்
மைந்துச்சயனைமுன மாய்த்துத்திலதமிட்டோன்

பாரக்கடையதனுற் பற்றியேதானிறுக்கி
ஓரடிக்குப்போரரக்க ரோராயிரமடிய
பாரிலடிதொடுத்துப் பண்புவலிபெற்ருனைப்
போரறியானென்றதுமுன் புன்மதியென்றேயுருத்தான்
தம்பிஇவைசொல்லத் தமையன்மனகிழ்ந்து
இம்பர்தனினீயாரு யெங்குனீவந்ததென்ருன்
நீதியறமு நிறம்பப்புவிபுரக்கும்
ஆதிதரும னவனிளைஞன்வீமன்
திக்குவிசயஞ் செலுத்துவிசயனுக்கு
தக்கதமையன் சதாகதிக்குச்சந்ததியான்
பஞ்சவர்களியாங்கள் பரிதிமதியுள்ளளவும்
வஞ்சமிலானெஞ்ச மதித்ததருமன்சொன்மாருேம்
என்றவன்சொல்ல விருசெவியுந்தான்குளிர
நன்றனுமன்சீர்த்தியையுமி ராகவன்றன்வில்வலியும்
ஒன்றுபட்சசொன்னதுமெய் யோதுனக்கார்விண்டதென
வென்றித்துரோணனிட மேன்மேலுங்கேட்டோமென்ருன்
அஞ்சனுதேவிசுத னவ்வார்த்தைத்தான்கேட்டு
விஞ்சையிலங்கைநகர் மெய்ப்பாயெரித்தவனும்
எம்பெருமான்மாலுக் கிணையேவற்செய்வோனும்
அம்பரமட்டு மரக்கர்களைமாய்த்தோனு
மருத்துமலைகொணர்ந்தே வானரத்துக்காவிமுன்னுள்
பொருந்தியளித்தோனும் பூபனேயானுகும்
உன்னைப்பயந்த வுயர்வாயுமைந்தனுமியான்
என்னப்புகல விகல்வீமன்ருனேடி
வாரிகடந்த மலர்ப்பாதந்தான்ருெழுது
சீரியனேயுன்றனைநான் செய்தவமோகண்டனென்ருன்
நன்னுைத்ததம்பிதனைத் தானிருகையாற்றழுவி
பொன்னுற்றமார்பும் புயமும்பூரித்தனனே
கருணைக்கண்ணீருகுப்பக் காதற்றிருத்துணையை
எரிவனத்தினிற்றனித்தே தேதுவந்தாயோதுகென்ருன்
தாயத்தாற்காகச் சகுனியெனுங்கொடியோன்
மாயச்சூதாடியெங்கள் வாழ்வனைத்துமேகவர்ந்து
காட்டினிற்செல்லக் கருதார்களோட்டிவிட்டார்
ஈட்டப்புகழண்ணுசொல் லிசைந்தேகான்வந்தடைந்தோந்
திசையெங்குமேகமழுஞ் செந்தாமரைச்செழும்பூ
விசயன்பிதாவின்முடி விட்டெம்மெழில்வனத்தில்
அழகேசெறிந்தவித ழாயிரமுந்தானிலங்கத்
தழன்மீதினிற்பிறந்தா டானெடுத்தேயிம்மலர்போல்

எந்தனுக்குவேண்டு மெனவுரைத்தாளிங்குவந்தேன்
உந்தன்பதங்கிடைத்த துத்தமனேயென்றுரைத்தான்
வீராவதுகேள் விறற்றனதனூரதனிற்
பேரானவாவி பெருகும்புனலிடத்து
உண்டதனைக்கொண்டுவர வும்பரான்முற்றாதே
மண்டும்வலியரக்கர் மாறாதுகாத்திருப்பார்
பொய்யர்பேரில்லார் பொருளில்லார்தங்களுக்கு
ஐயனேயங்கு வணுகமிகவரிதே
அறிவன்பருண்ஞான மாண்மையதிகேண்மை
பொறைசீரொழுக்கமுயர் புந்தியுனக்குள்ளமையால்
பெறலாமுனக்கரிதென் றாலும்பெறலரிதே
முன்னாலுரைத்த மொழியெல்லாந்தான்கேட்டு
பின்னோனுமன்பாய்ப் பெரியோன்பதந்தொழுது
பொறைசேர்முரசுயர்த்தோன் புண்ணியத்தின்பேராலும்
நெறியாலெனையாளும் நின்கடாக்ஷத்தாலும்
உன்போலுமுற்ற வுறத்தோள்வலியாலும்
வன்பேயடக்கி மலர்கொள்வேனென்றுரைத்தான்
தேவர்காத்தாலுந் தெயித்தியர்கள்காத்தாலும்
மூவர்காத்தாலு முளரியலர்கொள்வனென்றான்
சொன்னோனுறுதியையுந் தோள்வலியுந்தான்பார்த்து
மன்னாநீவேண்டும் வரங்கேடருகவென்றான்
என்னுடையதம்பிக் கெழிலுன்றசமதனால்
உன்னுடையகோலமதி லுற்றபெலத்துடனே
கோலுமுயுத்தமெலாங் கூடவந்துகூத்தாட
சாலவுனதருளுந் தானவனுக்குண்டாக
வேணுமெனவுரைத்தான் மிக்கோனதற்கிசைந்தான்
தானுமேவயின்னனந் தயவோர்வரம்வேணும்
நீட்டிலங்கைமாநகரை நீருக்கிவிட்டவருக்
காட்டுகவென்றோதிக் கமலப்பதந்தொழுதான்
வாமனனைப்போலாக மண்விண்ணிடநிமிர்ந்து
நாமப்புவிநாக நற்பதத்திலேயடக்கி
மிடலாமுடன்முடியின் மேன்மையார்விள்ளவல்லார்
அடியின்றிவேறொன் றறியானடல்வீமன்
திசையெங்கும்வாலோடிச் சென்றேகொழுந்துவிட
விசைகொண்டுவிம்மாந்து மீண்டுமுடற்சுருக்கி
பண்டுபோலானான் பணிந்திறைஞ்சினான்வீமன்
தொண்டனுனையறியேன் சொன்னபிழைபொறுப்பாய்
என்றுபணிந்திடவே யெண்ணினோற்கன்புடையோன்

உன்றுணைவர்தங்களுட னுற்றேயிசைந்திருந்து
அந்தத்திலென்பா லணுகுவாயென்றிசைத்தான்
சிந்தித்தோர்க்குற்றபெருந் தெய்வமேயுந்தனருள்
எங்கிருந்தாலு மெனக்குண்டியக்கனகர்ச்
செங்கமலந்தான்கொணரச் செப்பெனக்குப்பாதையென்றான்
இந்தவனத்தெல்லை யிருநூற்றியோசனைகாண்
சிந்தையுடனப்பாற் சிலயோசனைகடந்தால்
மன்றல்கமழ்சோலை வாயிலதிற்சென்றிடலாம்
வென்றியரக்கர் வெகுபேர்பொழில்காப்போர்
பாரவரக்கர் பராக்கிரமமெத்தவுண்டு
தீரவனைச் செயித்தான்மலர்பெறலாம்
அல்லதனைக் கரசுதனைக்கேட்டாலும்
மல்லன்மலர்தருவி னோடைவழங்கிடுவான்
ஒன்னார்வலியு முயர்பாதையும்விரித்துச்
சொன்னேனைப்போற்றித் துணைத்தாடணையிலுஞ்சி
விடைகொண்டெழுந்து விறல்வீமசேனனுந்தான்
நடைகொண்டேயோடிவிற னாசிங்கம்போலாகக்
கடிகையிற்குள்ளாக் கதலிவனங்கடந்து
முடிகியேவிஞ்சையர்கண் மொய்நகாந்தானடைந்து
சக்கரநாகந் தனையுமேதான்சார்ந்தான்
மிக்கதிவாகரனு மேவுமலைசார்ந்தான்
மருத்தும்புதல்வன் மகிழ்ந்தேகும்வேளையிலே
அரக்கனொருவனிய லன்பானசோலையின்வாய்
அஞ்சனமேக மகல்வான்புவியடைத்த
வஞ்சனைகொண்ட வனுத்தவிருட்டேகன்
குஞ்சிகள்வானிற் கொழுந்தோடியேதவழ
செஞ்சுடர்க்காலன் றிகழுந்திணிசிரத்தான்
ஆறிருகாத மகன்றபெருந்தோளான்
நூறிருகாத நொடிக்குணடக்கவல்லான்
எண்டிசையுமேதிறைகொண் டிவ்வுலகுந்தானாண்டு
வண்டத்தொழிற்குதால் வாழ்விழந்தேகாமெறைந்தோன்
திண்டிறலின்மிக்க செயல்வீமசேனனைத்தான்
கண்டனன்செந்தீய்க்கொழுந்து காட்டுஞ்சுடர்விழியான்
உருத்தார்க்கரித்துமுக டெட்கிழிபவெட்கிவிழச்
சிரித்தானிதழ்கடித்தான் றின்றுவிடுவான்போல
அரிக்கேதனனையிரு வக்கமதாற்றுநோக்கி
கருத்தாகச்சீறிமிகக் கண்டிப்பாயேதுசொல்வான்
தானவரும்வானவருந் தானடுங்கியேயணுகார்

யானுறையுங்கானின்மன மஞ்சாமன்மானுடநீ
வந்தாய்முதலிடவோ வாணுளையெந்தனுக்கு
அந்தோவுனக்கிறுதி யானதோவின்றளவில்
என்றேயரக்க னியம்பமனம்வெகுண்டு
குன்றின்புயங்கள் குலுங்கவிஷம்போனகைத்து
இன்றுன்னுயிர்க்கே யிறுதிநாளென்றோர்ந்து
கொன்றுனுடனுய்நரிக்குங் கூளிக்குமியவந்தேன்
மற்றதுகூற மரத்தோடரக்கனடல்
உற்றெதிரோடி யுறுக்கிநெருங்கிவந்தான்
கொற்றவனும்வச்ரக் கொடுங்கதையைத்தான்சுழற்றி
அற்றரக்கன்வீழ வடித்தான்வயவீமன்
குன்றுடன்குன்று கொதித்தேயிகல்வதுபோல்
நின்றுவெகுண்டே நெடும்போதுபோர்பொருதி
வன்றிறலும்வாகும் வலிமைகளும்பாராட்டி
ஒன்றியிருவலியு மொத்திருந்தகளத்தே
யெல்லையிலாவெம்போரா யிங்கிவர்களிவ்வாறு
ஒல்லையின்மோதி யுடற்றுஞ்சமர்முகத்திற்
தொல்லையுறமுனிவோன் சொன்னதொருசாபமதை
மல்லலசரீரி வழங்குகின்றதம்மானாய்
ஒன்றினுமாவி யுனக்கேயிவனருளால்
நின்றிடுதோளை நெரியவேதான்புடைத்து
கொன்றுவிடுவாயு குமராவதிசூரா
என்றசரீரி இயம்பியதேயக்கணத்தில்
சாபமசரீரி சாற்றியசொற்றுன்கேட்டு
கோபமொடுதன் கொடுங்கதையைத்தான்சுழற்றி
வீரமுடன்மேரிற் குமுரியிடிவீழ்ந்தாற்போல்
பாரமுளதிண்புயங்கள் படியின்முரிந்துவிழ
வட்டக்கடலில் மருத்தெறிந்தமாமலைபோல்
பட்டுப்பதைத்தரக்கன் பார்வீழ்ந்தானம்மானாய்
எற்றத்துடனிகலி யிவ்வாரிடைவழியில்
சிற்றத்துடனெதிர்ந்தோன் றேகந்தனைநொறுக்கி
பேய்க்குநரிக்கும் பெருங்கழுகுவன்கொடிக்கு
நாய்க்கும்பறந்தினுக்கு நல்விருந்துதான்கொடுத்து
ஆறுபோர்ச்செந்நீரா யாழிக்குத்தானனுப்பி
தேறுநரசிங்கமெனச் சென்றனன்காண்வீமனுமே
அண்டமதிக்கு மளகாபுரியடைந்து
திண்டிறலானன்னகர்க்குத் தேன்பாவிலோர்பொழிலை
திளையமுதற்கடைந்தோன் செப்புகின்றசொற்படியே

நிருதப்பெருங்கூட்ட நிற்குந்தடம்பார்த்தான்
வாவித்தடத்தை வளைந்துநிதங்காப்போர்
பாவியர்கோலமதைப் பார்த்தாலுடன்மறிப்பார்
அண்டங்கண்முட்டி யரவனையும்வன்சிரத்தோர்
குண்டலமுட்டுங் குவடொத்ததிண்புயத்தோர்
பாரவிசாலம் பறந்தபெருமார்பர்
கூரியவான்பிறையைக் கொண்டவெயிற்றுடையோர்
இருட்பிழம்பஞ்சு மிருண்டசடைமுடியோர்
நரர்பூவுலகையெல்லை நாழிகையிற்சுற்றிடுவோர்,
மசத்தில்வலியார் மகாவரத்தாலும்பலத்தோர்
புகத்துமுகமுடையோர் பொங்கழல்சிந்துங்கணினோர்
ஓராயிரந்தலையோ ரோராயிரங்கழுத்தோர்
ஈராயிரம்புயத்தோ ரீராயிரங்கணினோர்
வரமாயிரத்தோர் மறையாயிரத்தோர்கள்
சரமாயிரத்தோர் தனுவாயிரத்தோர்கள்
வேல்வாள்மழுத்திகிரி மிக்கதொருபல்படையும்
மேல்வாயினோடு விறற்கரத்திலேதரிப்போர்
மானுடர்நாற்றம் வரநாசிப்பட்டளவில்
கான்மயிலுஞ்சோலையுறுங் காவலர்கண்மொய்த்தனரோ
எங்கெங்கேமானிடவ னெங்கெங்கேயென்றிரைந்து
அங்கங்கேகோலியிடி யார்ப்பதுபோலார்ப்பரித்து
வாயுகுமாரன் மயங்கவேதான்வளைந்து
தேயுவனையார் செருமினர்காணம்மானாய்
எற்றென்பார்சூலத் தெரியென்பாரோடாமற்
பற்றென்பாராவி பறியென்பார்கையில்வைத்து
சுற்றென்பார்சென்னி துணியென்பார்தண்டாலே
மொற்றென்பார்நெஞ்சை முறியென்பார்கையாலே
குத்தென்பார்பற்களெல்லாங் கொட்டென்பார்வாளாலே
செத்தென்பார்மூக்குமுகஞ் சிந்தென்பார்திண்புயத்தை
பித்தென்பார்கொண்டதிவன் பேயென்பாரிப்படியே
யுத்தனர்காணாரு யிரருருத்தேபோரரக்கர்
இந்திரனுவானேரு மிங்கணுகாரீசன்முதற்
றந்தபொழிற்றடமுந் தானேக்கவுங்கருதார்
வந்ததென்சற்று மதியறநீயுன்னுவி
சிந்துமுனஞ்செப்புகெனச் செப்பினர்தீயோர்கள்
கடலுமிடியுங் கலந்தமுழக்கமென
கொடியவரக்கரிவை கூறவொன்றும்பேசாமல்
மிகைத்துக்கதித்துவரும் வீரனாயுமெண்ணாமல்

நகைத்துப்புயங்குலுங்க நாணாதுமுன்புநின்று
பதைத்துக்கொடுகொடுத்த பாதகரேயுங்களுடல்
தகர்த்துத்தகர்த்து சரத்தாலுந்தண்டாலுங்
உங்களுடலி லொழுகும்பிரளயமாஞ்
செங்குருதியெல்லாந் திரைகடலுக்குட்படுத்தி
வாசப்புனிதமலர் வாவிதனிற்கவர்ந்து
நேசமுடனே நிமிஷத்திற்சென்றிடுவேன்
எத்திசையும்வில்லா லிகலிற்பொருதழித்து
இத்திசையும்வந்தே னியக்கரரக்கர்முதல்
சதுரங்கசேனையெல்லாந் தானேபொருதழித்து
உதிரந்தனைப்பெருக்கி யுருத்திரசேனன்றனைமுன்
தேரிலேகட்டிச் செயகம்பந்தானிறுத்தி
மேரிலேதன்பேரு மேலெழுதிவெற்றிபெற்றான்
அசுரனோராக்ஷசனோ வம்பரத்திலுள்ளானோ
வசையினரனோ மறந்துமதிகெட்டிரோ
சித்திரசேனனைமுன் றேர்க்காலிலேபிணித்து
உருத்திரசேனனையு முங்கழலின்வேந்தனையும்
வென்னிட்டேயோடிவர வில்விட்டவாழ்வீரன்
வன்னபலமிக்க மனிதனோவானவனோ
என்றிவன்சொல்ல விவனோநமக்கெதிரி
நன்றுநன்றுசொன்னதிற னம்மையிவன்போர்பொருதி
கொன்றுநறுமலருங் கொய்வேனெனவுரைத்தான்
நின்றனனோவின்னோர நீதிகெட்டோனென்றுரைத்தான்
நாவிந்தநேர நவின்றிருப்பனோவெகுண்டு
கோவிந்தன்றானெடுத்த குன்றின்மழைசூழ்ந்ததுபோற்
சூழ்ந்தார்கடுங்கணையைச் சோனையெனச்சொரிந்தார்
ஆழ்ந்தவாயாலதட்டி யார்ப்பரித்துநின்றார்கள்
வானுமறைய மறப்படைகடான்வீசி
சேனைப்பெருங்கடல்கள் சேரவளைந்திடவே
கானற்றொடையலனுங் காலனுக்கேயாவியன்ன
தானுத்ததண்டெடுத்துச் சாடினன்காணப்மானுய்
தண்டினால்விட்ட சரமெல்லாந்தான்றகர்த்து
மண்டினான்றேற்கழுவின் மாவுமடங்கலென
விண்டொன்னார்தங்களுடல் மெய்த்தலைகடன்னிலொன்றை
கிண்டிமூளைச்சேற்றிற் கிடக்கப்படுத்தினனே
தாக்கிச்சிலைத் தடக்கையாற்றான்றிருகித்
தூக்கிச்சிலைச் சுழற்றியேதானெறிந்தான்
உருக்மிமிதித்தா னுரத்தோடுறக்கிழித்தான்

நொறுக்கிநொருக்கிவைத்தா னூற்றினன்பற்பலரை
பிடித்தான்சிலரைப் பிசைந்தான்சிலரைமண்ணில்
அடித்தான்சிலரையங்க மாக்கினன்பற்பலரை
கரத்தாற்பிளந்துங் கதையால்விழவொடித்தும்
வரத்தாலுதைத்து மராமரத்தினாலடித்துந்
திரத்தாற்மகர்த்துந் திண்புயத்தினாற்சதித்தும்
அரக்கரையெல்லாஞ் செருக்கினன்காணம்மானாய்
செனத்திற்செருக்கிச் செங்குருதியாறுக்கி
துணித்தனன்னூறு யிரஞ்சூழரக்கரையே
இப்படிக்கொன்றே யிணையில்லாமல்வீமன்
துப்புடனின்ற துணிவுறுதிதான்பார்த்து
மைப்படலம்போல மடிந்தோரினும்வலியோர்
கைப்படைகொண்டே கணத்தினூறுயிரம்பேர்
மொய்த்தாரரக்கர் முழுப்பாரிருட்பிழம்பா
மைத்தாரைமேக வழங்கமிருட்போலே
ஆர்த்தானகைத்தான்மூ தண்டமுகடெங்கிழிய
பார்த்தான்றிகைத்தான்பின் பாரவில்லைநாணேற்றி
சரகோபசாகை சரபஞ்சரமாக
மாகோபமாக வருஷித்தானம்புமழை
சிரங்கள்குமிழ்வாய்ச் செம்மற்றகநெரிவாய்
கரங்கள்கவுள்காது கண்டம்புயமுரங்கள்
மற்றவுருப்பினமும் வன்சரங்கடட்டுருவ
கொற்றவரக்கர் குறைந்தனர்காணம்மானாய்
முண்டமுதற்பாத முழுதும்பலதுளியாய்
கண்டகண்டமாக கணத்திற்றரித்தெறிந்தான்
நொடிக்குளரக்கிரு னூறுயிரம்பேரை
படிக்குளொருக்கி பரப்பியதைக்கண்டோடி
தனதன்றனையரக்கர் தாள்வணங்கியேதுரைப்பார்
மனிதனொருவன்வந்து வல்லரக்கர்சேனையெல்லாம்
கொன்றான்மனம்போற் கொளும்பொழில்வாயென்றுரைப்ப
அன்றேமரகதனு மங்கிபோற்கண்சிவந்து
புயங்கள்குலுங்கப் புகழுளகையானகத்து
செயங்கொளரக்கரையோ செற்றான்மனிதனென்று
சேனாபதியைத் திரளானசேனையொடும்
மானாபரனேபோய் வன்மனிதறன்னைவெட்டிக்
கொண்டுவாவென்னக் குரிசிலடியிணையில்
முண்டமதுசேர்த்து முனைத்துகடற்சேனையொடும்
பூமிநடுங்கப் புயங்கமுடனெளிய

மாமலர்ப்பூம்பொய்கைதனை மன்னிவளைந்தனரோ
சங்கொடணனுந் தளக்கடலுந்தான்சூழ
வெங்கோபந்தானுகி வில்வளைத்துநாணேற்றி
நாலுவகைச்சேனை நரலைபோற்றான்வளைந்து
கோலிமுரசங் குமுறவேதான்முழக்கி
பன்மேகமொன்றாய்ப் பரவிச்சொரிந்தாற்போல்
வின்மாரியாய்க்கணைகள் மென்மேலுமேசொரிந்தார்
சாகரச்சேனை சலமாய்விடுஞ்சரத்தை
வேகமுடன்றன்னை விறற்கணையினால்விலக்கி
சதுரவிதமான சலதிப்படைகளெல்லாம்
உததிதனைக்கலக்கு வுத்தரமேரனையான்
கரங்கள்படைகளொடு காசினியிலேவிழ
உரங்கடரிய வுருப்பினமெலாமுறிய
சரங்களறுத்தறுத்துத் தானுமுறத்துடனே
அந்தரமுந்திக்குவிற லம்பாகத்தானிறைத்தான்
வந்தபடையின் மடிந்தவர்கடான்போக
மிஞ்சியபேரெல்லா வெருக்கொண்டேயோடினரோ
அஞ்சவெமதகத்தி லானவிறற்றண்டாலே
எற்றினன்சேனைக் கிறைவன்றனைவீமன்
மற்றவனுஞ்சீயமதைக் கண்டமதவாரணம்போல்
மிகரற்றவீரனெதிர் நிற்காதழன்றோடி
பகருத்தனன்றனத பார்த்திபன்முன்றாேடி
மனிதனுருவெடுத்தே வந்தானுருத்திரன்போல்
கனதியுடன்மனதிற் காணுதவன்குறித்த
பொருளிக்ஷணமளித்துப் போகவிடாயாமாகில்
எரியுற்றிடுநகர மிப்போதேயென்றுறைத்தான்
புன்மனிதனெனறே புனிதாமினைக்கரிது
வின்மதிக்குவீர விசயன்போனிற்கலுற்றான்
அன்றான்றுணைவரிலொன் றாகவுபேதோணுதிவன்
என்னுமகனை யிருமிதியான்றான்பார்த்து
நீசென்றுசிக்கிரத்தி னிதிப்பேருர்கேட்டு
வாசவன்சேய்க்கு மகிழ்துணைவனுமானுல்
கேட்டபொருணல்கு கிரீடிதுணையல்லவெனில்
வாட்டிறலான்றன்னை வதைத்துவாவென்றுணாததான்
தாதைதாள்போற்றிச் சலதிப்படையுடனே
ஓதைரணமுரச முன்னவெல்லாந்தான்முழக்கி
பூங்காவிற்சென்றே புயவீமனைப்பார்த்து
பாங்காகவெத்தன் படையெல்லாந்தான்வீணில்

கொன்றவகையேது கூறுநீயாமெனவே
வென்றிக்கதைவீமன் வேந்தன்மகனைப்பார்த்து
தன்முன்பெயர்பொறையுந் தம்பிவிசயன்றிறமும்
பின்னிருவோர்கள் பெயருமவர்வல்லமையும்
மாயன்சகாயமது மாறாதநற்றுணையுஞ்
சேயுருத்திரசேனன் செவிகுளிரத்தான்புகன்றான்
வில்லிக்குமூத்தோனே விண்டுவுக்குமைத்துனனே
மல்லுற்றேவந்த வகையேதெனக்கேட்டான்
தான்வந்தவாறு தனைமெய்ப்பாகக்கூற
கான்வந்தநாண்மலருங் கைக்கொண்டமட்டாகக்
கொண்டுபோவென்றியக்கர் கோமானுநண்பாக
முண்டகப்பொற்பானமலர் மொய்ம்பானனுக்களித்து
நற்குணமாய்ப்பேருரு நண்பாகவேயுரைக்க
பற்குனற்குமூத்தோனே பன்மலர்கொண்டேகாமல்
வீணிலுயிற்சேதம் வீராகச்செய்துவிட்டாய்
தாணுசகாயமெந்தன் றந்தைக்கிருப்பதையுங்
கண்டிருந்துமிண்டுசெய்தாய் காவலனேயேகுகென்று
வண்டலவுதாரான் மகாபதியைச்சென்றுகண்டான்
உருத்திரசேன னுதவுமலர்த்தருவை
மருத்துச்சுதனு மகிழ்வாகத்தான்வாங்கி
பாற்சடற்போன்ற பருவாவிநீர்குடித்து
தீற்சமுளவீமன் றிகழோர்தருநிழலில்
சற்றிளைபாரத் தனித்திருந்தானப்போது
வெற்றித்தருமனுமே வீமன்றனைக்காணமற்
றூமக்குழலா டுரோபதையைத்தான்கேட்க
மாமத்தகவிதம்போல் மன்னளகைசேர்ந்தவிதம்
ஓதிநூள்கன்றி யுதிட்டிரனுமெய்மறந்து
சாதுவாய்முன்போர் தம்பிபிரிந்ததுயரும்
போதிலாதிங்கிவனும் போனபெருந்துயரும்
ஒன்றாகக்கூடி யுதிட்டிரனைக்கம்மியதால்
நின்றானயர்ந்தருங்கண் ணீருகுத்தேவாய்வரண்டு
காதலுறவீமனருள் காளைகடோற்கயனை
ஆதரவாய்நெஞ்சி ல்றன்மைந்தன்றனினைந்தான்
வாளிபரித்தேரின் மன்னன்கடோற்கயனும்
கூளிக்குழாமுளங்கக் கோலக்கொடியுடனே
வந்தான்முன்னின்றான் மலர்ப்பாதமும்வணங்கி
எந்தாயேநீநினைந்த தென்னென்றேகேட்டுநின்றான்
யுற்றமகனே யுனைப்பயந்தோனென்சொலன்றி

மற்றுமளகைநகர் மன்னினுன்புன்மதியாய்
எம்பிக்கிடையூறு யெய்தாமுனம்விறைந்து
உம்பர்க்குயரளகை யூர்க்கிளையோருமியானும்
அவ்வாவிக்கெய்தி யணுகுவோமங்கெனவே
ஒவ்வாவரக்க னுயர்தேரிலேறினனே
கப்பவிகடக் கடாயானைமன்னவரும்
அம்பன்னரோமத் தரக்கனுடனாகாய
வீதியேபாதையென்ன வெய்யோன்றன்றேர்போல
நீதியாய்வானி னிமிர்ந்தோடிச்சென்றதுவே
கடிகையொருநாலிற் காரானபொற்றேரும்
முடிகிமலர்வாவி முன்னின்றதம்மானாய்
அந்தமலர்க்காவி லணிதேரைத்தானிறுத்தி
சந்தமுளவீமன் றனைத்தேடியேயரக்கன்
தாளில்விழுந்தான் றடக்கையாற்றான்றழுவி
வேளையனையானு மெய்யன்கரந்தனிலே
வாசமலர்ப்போது வண்மையுடன்றான்கொடுத்துத்
தேசினறன்மைந்தன் சினம்பார்த்துளநடுங்கி
முக்காலுஞ்சுற்றி முதல்வன்மலரடியில்
மிக்காமலர்சொரிந்தே வீமன்றொழுதெழுந்தான்
எக்காலுந்தன்னாவி லேறாதவன்சொலினால்
தொக்காய்ச்சினந்து சுடுசொற்பலவுரைத்து
என்னேவலின்றி யிமையோரெய்தாப்பொழிலில்
உன்னேவல்செய்கின்ற வும்பியர்க்குங்கூறாமல்
மன்னானின்புத்தி மனமேதெனவெகுண்டான்
என்றுசினக்க விவனெதிரிற்சொல்லாமல்
நின்றுபசார நிறைத்தானைத்தான்றழுவி
அந்தமுளவாவி யதனிற்குளித்தலருஞ்
சந்தமுடன்புனைந்து தான்றடந்தேர்மீதேறி
நாலுகடிகைதனி னண்பாயிருந்தவிடம்
வலமுன்போல்வந் திரங்கிமுனிபாதம்
நால்வரும்போற்றிசெய்தே ராக்ஷதனைத்தானனுப்பி
சேல்வரிக்கண்ணாட்குஞ் செய்யமலரளித்தான்
தருமன்முதலான தம்பியருந்தொகையுடன்
வரமுந்திமாமுனிதான் வாழ்த்திச்சிவன்கதைதன்
கான்னபாகங்கள் கவிக்கவேதான்கேட்டு
மன்னவர்களங்கே மகிழ்ந்திருந்தாரம்மானாய்

புட்பபாத்திரைச் சருக்கம் முற்றிற்று.

## சடாசூரன்வதைச் சருக்கம்.

அழுதுவான்முருவ லரும்பியுங்களித்து மாடியும்பாடியு மகிழ்ந்துந் [தான்
தொழுதுமா தரித்தும் விழுந்துமே லெழுந்துந் தித்திடத்தன் பதந்தந்
முழுதுமாயெங்கு முச்சுடராகி மூலமாய் ஞாலமாய் விண்ணாய்
எழுதொணு மறைக்கு மெட்டொணுவடிவத் தெம்பிரானும்பர் நாயகனே.

இந்தவனத்திலிவ ரின்புற்றிவ்வாறிருப்ப
அந்தவனச்சூழ லருந்தவஞ்செய்மாமுனிவர்
தந்தியுழுவையாளி சல்லியங்கோலஞ்சீயம்
உந்தும்பலவிலங்கு மூடாடிமேலாட
அரசர்க்கபயமென் றங் குள்ளமுனிவரெலாம்
விரவிமுறையாய் வெருவியழுசாற்ற
என்னுமக்குவந்த விடுக்கணெனக்கேட்க
மன்னும்விலங்கின் மகாவிடுக்கந்தீர்த்திடென்றார்
அறன்மைந்தன்வாயு வருள்சேயைத்தான்பார்த்து
திறங்கொண்டவரிடுக்கந் தீர்த்துவாவென்றுரைத்தான்
சொன்னசொற்கேட்டு தொழுதேவிடைவாங்கி
துன்னியவீமன் சோராதுதானடைந்தான்
மாருதிசெல்லவறன் மைந்தனிருந்திடவே
சாருமரக்கன் சடாசூரனென்போனும்
மாமுனிபோல வடிவாகியவ்வனத்தில்
தாமமலர்க்குழலா டாளிருக்குஞ்சார்பணுகித்
தன்னுருக்கொண்டே தடவானுறவளர்ந்து
கன்னிதனையெடுத்தா காயமுறவேகிடவே
அந்தரத்தில்வன்னி யளித்தாளபயமிட
மந்தரப்பொற்றிண்புயத்தின் மாநகுலசாதேவன்
யாளிபோற்பாய்ந்தே யவன்மீதில்வில்வளைத்து
மீளிபலவெங்கணைகள் மென்மேலுமேசொரிந்தான்
சரமாரிவீசித் தருகணனைத்தானோக்கி
மரமேயனையாய் மறையோனைப்போலவந்து
பிரர்தாரநீகவர்ந்தாய் பித்தாற்பெருமையற்றாய்
மரமாகவந்தரத்தின் வாவுதனன்றோவுனக்கு
அன்னாளரக்க னணியிழையாற்பட்டதுயர்
இன்னாளுநீபடவோ விச்சித்தோவந்தெடுத்தாய்
என்றுசரமாரி வெழிலியெனவெய்துநிற்ப
கன்றிவிழிசிவந்து காய்ந்தோனெதிர்ப்பளவில்
மறையோர்துயரோட வல்விலங்கெலாநொருக்கி
கறையாய்ப்பலதிசையுங் காணாரோயோட்டுவித்து

திறலாகவீமன் திரும்புமளவதனிற்
உறமாககுல னுற்றசகாதேவன்
அரக்கன்கொடும்போற்கண் டக்கினிபோற்கண்சிவந்து
சரத்தின்கதிதனிலுந் தாவியேயோடிவந்து
ஊழிக்காத்தொப்பாய் யுருத்தாக்கரித்துவந்து
பாழிவேரெல்லாம் பறியமராமரத்தைத்
தாவிப்பிடுங்கித் தடக்கையாற்றான்சுழற்றி
பாவிதடமார்பு பதியவேமேலெறிந்தான்
வல்லானெறிந்த மரமெய்யினைப்பிளக்கப்
பொல்லான்சினந்தெடுத்த பூவைதனைவிட்டுவிட்டு
வெற்பொன்றுதன்னை விசையாகத்தான்பிடுங்கி
துப்பென்றேமெய்யான்மேற் சோராதுதானெறிந்தான்
வீசியெறிந்தவொரு வெற்பைப்பொடிப்பொடியாய்
ஆசுகன்மைந்த னதட்டியேதான்பிடித்தான்
மற்றுமேன்மேலு மலைபிடுங்கிவீசுதலு
முற்றுங்கதையால் முடுகொதுறப்பொடித்து
தண்டத்தைவிட்டுச் சரவேகமாயோடி
மண்டுற்றகோபமொடு மார்பிலேதானுதைத்தான்
மீண்டிவனைவந்து விறன்மார்பிலேயுதைக்க
தாண்டியெழுந்திவனுந் தாக்கினான்மார்பிலுதை
ஒற்றறத்திற்குத்தி யுரமாகத்தான்சேர்ந்துங்
கொற்றவனுராக்ஷதனும் கூடினார்மற்போரில்
கூடிக்குரங்கைக் குரங்கினாலேவீசி
சாடியெதிர்த்துரமுந் தன்னுரமுந்தான்பொருத
ஓட்டியொட்டிமுட்டி யுலகநடுநடுங்க
கட்டிகட்டிவீசிக் கதாயுதன்மேலாய்விழுந்தான்
சகடதெனப்புவியிற் றனிரண்டுபேர்களுமாய்
விகடமுடனுருண்டு வெற்படவிதுட்படுத்தி
முன்னாளின்வெள்ளிமலை மொய்ப்பரக்கன்மெய்யறல்போல்
இன்னாளிற்பொன்மா விரும்பரக்கன்மெய்நசுங்கத்
தானேறியபோற் சடாசுரன்மேன்மல்வீமன்
வானோர்மதிக்கவவன் மார்பின்மேலேயிருந்து
புறத்திற்கழுத்துறவே பொற்கரத்தான்றான்திருகி
வெறுத்துக்கறுத்து மிகைத்துப்படபடத்து
அழுத்துப்புயமார் பதுகிழியத்தாளாலே
இழுத்துப்பறித்துவிழுக் கெல்லாங்குலைந்திடவே
தெவ்வனுருத்துநிற்பச் சீறியும்பின்மால்வீமன்
அவ்வியன்றன்மே லடர்ந்துபின்னும்பொருதி

பொருப்பைநிலம்வீழ்த்தல் போலவேதான்வீழ்த்தி
உருத்துப்பதத்தா லுறத்தினுற்றன்மிதித்து
குஞ்சரத்தின்கொம்பையன்று கோவிந்தன்பற்றியபோல்
வெஞ்சினத்தின்மால்வீமன் வெண்பிறைபோலேதிசழுஞ்
சிங்கப்பன்னூலுந் திறமாய்ப்பிடுங்கினனே
துங்கக்கதுப்படங்கச் சோரவேதான்புடைத்து
காதிரண்டும்பிய்த்தெறிந்து கைமூக்கும்பிய்த்தெறிந்து
மோதியிருதாளு முரணுகத்தானொடித்து
ஆதவனுந்தானடுங்க வந்தரத்திலேயெறிந்தான்
தோதகவானெல்லைத் துலையளவுமேலெழுந்து
வீழ்ந்தானனுமன் விசைத்தெறிந்தகுன்றமென
தாழ்ந்துநிலத்தின்மிசை சடாசூரனும்வீழ்ந்தான்
அந்தவதிர்ச்சியிலே வந்தராமுமந்தரமும்
விந்தையட்டநாக மெல்லாநடுங்கியதே
தேகநிலத்தில்விழ ஜீவனமன்கைக்கொளவே
தோகைதனைப்பிடித்தோன் றஞ்சினன்காணம்மானாய்

மணிமான்வதைச்சருக்கம். இஃதுபுதிதாகவியற்றியது.

அடடாவெனவவ் தடாதுசெய்சடாசுரனை
விடடாசிறையையென வீமனெருக்கவவன்
கொடடாவவனுயிரைக் கோவேயெனவிரப்ப
படடாவென்றுவி பரித்தவனுக்கேயீந்தான்
படாமுலைகடாமுடைய பத்தினியைப்பற்றினனை
தடாவமர்விடாதுடைய தமபியனாத்தையலனா
கடாமதகுடோரிமகி டாசுரனைக்காணவென்று
பிடாரிபிடரோசுமந்த பேராளன்றன்மகிழ்ந்து
தான்முன்னிருந்தவனச் சார்புவனமடைந்து
கான்மூந்துமார்பன் கருணையறன்மைந்தனுட
பாதம்பணிந்து பரிவாகத்தானிருந்தான்
வேதமுனிவனிட மேவியேதானிருந்தார்
அந்தமுனிவ னருட்பாதமேபணிந்து
சிந்தைகுளிரச் செவிகானமேகேட்டு
தம்பியருந்தானுந் தழலிற்பிறந்தாளும்
உம்பரனுப்பு முரோமமஹாமுனியும்
அவ்வனம்விட்டு வறன்மைந்தனுதரவாய்
திவ்வியயாழ்நாரதன்வாழ் சிராச்சிரமநண்ணி
முனியுமுனியு முகவணக்கமுற்றியபின்
பனிவெண்குடையுடைய பார்த்திபருந்தாள்பணிந்தார்

அந்தமுனிமன்னவருக் காசுமிகவுரைக்கச்
சிந்தையுறப்பெற்றுஞ் சிற்சிலநாளங்கிருந்து
மற்றுமுனிவன் வளராச்சிரமமதிற்
கொற்றமுனிவருடன் கூடவேவாசமுற்று
பற்பல்வனாயும் பலகானுங்கண்டுவெந்து
வெனில்வனமார்ப ரிமையோர்புகழுமெட்டுக்
கோனுண்முனிவன் வனங்குறுகியன்னுன்றன்
மானுற்றபாதம் வணங்கியிவர் துதித்தார்
தானுற்றமாமுனிவன் றன்னைமுனியெதிர்ந்தான்
உரோமமுனியு முயர்கோணமாமுனியு
நராதிபருந்தையலுட னன்னியினிதிருந்தார்
அன்பினொருநாட்போ லனேகநாளங்கிருந்து
இன்புற்றவருரைத்த வெக்கதையுந்தானுணர்ந்து
துன்பகன்றுநாளுந் திரௌபதியோடங்கிருந்து
பின்புநிகழ்ந்ததொரு பெறறியுரைத்திடுவோம்
அங்குறைந்தநாளி லரிவைதிரௌபதியுந்
துங்கமுனிவனுட தோகையருந்தான்சேர்ந்து
பொங்கிவருமாநதியிற் போயிறங்கிமெல்லியகன்
பங்கயஞ்சேரப்பதனிற் பாய்ந்துவிளையாடினரோ
அப்புனலிலோர்பா லரிதானவாசமுடன்
மெய்ப்புனிதப்புட்பம் விரைந்துவரக்கண்டவர்கள்
கைப்பதுமத்தாலே கடிமலரைத்தானெடுத்தாள்
எடுத்தமலர்கொண் டிமைப்பிலுவப்பாக
அடுத்தவயவீம னங்கையில்வைத்தந்தமலர்
வெடித்தநறைக்குவமை மேதினியிலில்லையென்று
தொடுத்தவாகைப்புயத்தான் றோகையுடனேதலுற்றான்
செந்தாமரைப்பூவுஞ் சேயிழையேமுன்பளித்தேன்
மந்தாரையிம்மலரை மாதேயுனக்களிப்பேன்
இந்தமலரந்திர புரத்தினினுமின்றேகி
கந்தமுறுநின்றன் கருங்குழற்கீயேனுகில்
முந்தவரவுயர்த்தோன் முதலாம்பெரும்பகையை
எந்தவிதநான்முடிப்ப தென்றேவிரைந்தெழுந்தான்
என்றுசபதமிசைத்திகலி லெந்நாளும்
வென்றிதருந்தண்டுசில மிக்கபடைபலவுந்
தன்றுணைவர்க்கொன்றுமிவை சாற்றுதெடுத்தணிந்து
குன்றந்திரண்டுருவாய்க் கொண்டபுயவீமன்
சென்றனன்காண்வென்றித் திறல்வீமசேனனுமே
மன்றன்மலர்கொண்டு வருமாநதிவழியே

சென்றுபலயோசனைக டிங்களொடுஞாயி
றென்றும்வலம்வந்தருண்மி ரத்னகிரியெய்தினனே
மரகதத்துங்க மணிமாளிகையொருசார்
அரியமணியழுத்து மாலையங்கடானொருபால்
கின்னரிராகங் கிளர்கீதமேயொருபால்
மின்னுமியக்கர்மடந்தை மேவுப்பரியொருபால்
தண்டரளமானநவ ரத்னவொளிதானே
எண்டிசையுமேவிளக்கு மிந்தமலைவியப்பே
கண்டுகளிகொண்டே கமலவிழிகுளிர்ந்து
புண்டரிகராக்ஷசனைப் போரிற்பொருதழித்தான்
அக்கிரியின்மிக்க வளவற்றசெல்வமுள்ள
மிக்கவளகேசன்கர் மேவினான்வீமனுமே
தொக்கமணிவாயிற் றோன்றவொருநாளிற்
புக்கிவடமேற்றிசையி னின்றேதிவன்புரியை
சீர்த்தாளைகளுதிரத் திசைமேவிபஞ்சிதற
ஆர்த்தானாகவந் தடன்மாருதமனையான்
அந்தத்தலத்தா ரளகாபுரியுறைவோர்
சிந்தைத்துயரணுகார் செவியிலிவைகேட்டு
இந்தத்தொழில்புரிவா னெவனோவெனவெகுண்டு
முந்திக்கரிபரிதேர் முந்நீர்போன்மொய்த்தனரே
அவ்வேலைவிஞ்சையரி லஞ்சாதநெஞ்சுடையோன்
வெவ்வேலையோதையினும் மிகவோதைசெய்தவன்முன்
வந்தோனிவன்றன் வலுவெல்லாந்தான்பார்த்துக்
கொந்தார்குழலாள்சொற் கோரிவந்தோனாகுமென்று
வீமன்வரவை ·வினவியவன்சொல்லறிந்து
தாமதமில்லாதவனுந் தான்மீண்டுயேதுசொல்வான்
மேனாளொருமலர்க்கே மிக்கவரக்கரெல்லாம்
வானாடன்போலாய் மறலிக்கிணையிடுவோன்
மானாபரர்மீண்டு வந்தான்வன்கண்ணனெனச்
சேனாபதிமா துலனிடத்திற்செப்பினனே
அவன்வந்திசைப்ப வதிவேகந்தானாகி
சிவனண்பனன்பன் விழிசெந்தழல்செறிய
பவனன்சிறுவனிவன் பாரினிலுமிக்கான
புவனந்தொழுமுதல்வன் புரியிலிவைசெய்வானோ
இந்தக்ஷணமிவனை யீறுசெய்வோமென்றுருத்துச்
சிந்தையுடனாலுவகைச் சேனைபுடைசூழ
கோடிசமரப் பறைகுமுறியேமுழங்க
நீடுந்துளைக்கருவி நேரிட்டெதிர்முழங்க

பண்ணருஞ்சேனைப் பரவைக்கதிபதியாம்
எண்ணாயிரமா மியக்கேசருஞ்சூழ
தண்ணார்மதிக்குடையின் சாலோதினர்முதலோர்
விண்ணாடரும்வெருவச் சென்றார்வினைமுகமாய்
நாமப்புரிசையின்வாய் நாமெழுந்தசேனையெல்லாம்
நேமிக்கிரிநெரிய நேர்வெள்ளமேநிகர்ப்ப
தூமக்கனற்கண் சொரிந்திடவெண்ணாயிரரும்
சேமக்கவசத் திறல்வீமசேனனைத்தான்
பொங்காழியேழும் பொருப்பொன்றைச்சூழ்ந்தாற்போல்
வெங்கோபமாக வீரற்சேனைசூழ்ந்ததுவே
உதிக்குஞ்சுடரோரா யிரமுருக்கொண்டென்னவொளிர்
விதிக்குஞ்சமர்தோலா விச்சாதரர்கள்வெள்ளங்
கொதிக்குங்கடலைக் குழப்புமகாமேருவென
மதிக்கும்வயவீமன் வல்விதியாற்றுமுனூறும்
சேனையைப்பார்த்தே திறற்கைக்கதைதனக்கிவ்
வீனப்படைபோதா தென்றேமனங்கொதித்து
வரிவில்வளைத்தே மழைமாரியொப்பாக
விரைவிற்கணைமாரி மேன்மேலுமேசொரிந்து
நிற்கவிறலோ னிலையறிவானப்போரிற்
தக்கபுகழ்ச்சாலேந்திர னரன்சேனையைத்தகையாக்
கைக்கார்முகவயமா ருதிமுன்கடிதோடித்
தக்கதொருதேரிற் றானிருந்தேசாற்றலுற்றான்
சிவனேதிசைமுகனே திரையாழியிற்றுயில்கூர்
பவனேவளையைப் பகிருஞ்சுடர்வடிவே
லவனேநரவா கனன்கைவினில்வருவோன்
எவனேவுயிர்போமுன் னியம்பெனக்கென்றோதினனே
என்னவவனுரைப்ப விவனின்புறநகைத்தே
முன்னாளொருமலர்க்காய் முனைவோருயிரையெல்லாம்
பொன்னுலகிற்போகவிட்ட போர்வீமனென்னும்
இன்னமலரொருக்கா லீய்ந்திரோலுங்களுயிர்
தருவேன்பொருவில்வந்தாற் சண்டனகர்க்கின்றுவுறப்
பொருவேனெனவயமாப் பொற்கொடியோன்றானுரைத்தான்
என்றுவயவீம னிசைத்ததிறற்கேட்டு
வென்றிவயவாகைபுனை விஞ்சையர்கடங்கள்பிரான்
கன்றிமனங்கொதித்துக் கண்கடழல்சொரியக்
குன்றனையதோள்கள் குலுங்கிடவேதானகைத்து
தேனிடரும்வாசத் திருத்தாமரைமலரை
மானுடர்கள்சூழ வருவர்களோபுத்தியற்றோய்

வானிடரென்வாளிக் குணவாகவுன்னுயிரைத்
தானிடுவேனென்றுருத்துத் தன்சேனையைக்கூவி
சுற்றுமிகவெம்படைக வேயிகலோனைப்
பற்றும்வினாவி லெனப்பகர்ந்தானசேச்னைகளைச்
சுற்றிவந்தேதன்னைச் சூழ்ந்தோருடலமெலாங்
கொற்றமிகுங்கணைகள் கூர்புகமெய்யிற்செலுத்தி
முன்னாட்புரமெரித்த மூர்த்தியைப்போனின்றுருத்து
மின்னார்ப்பெனச்சிரித்தே மிக்குருத்தவாறுகண்டு
வீமன்பொழிந்தவடி வெவ்வாளியினியக்கர்
மாமெய்வளியே வருங்குருதிவெள்ளமதிற்
படிந்தேயலமலரப் பார்த்தேதுவிஞ்சையர்கள்
கடிந்தேவரிவிற் கணைமாரிசள்சொரிந்தார்
அன்னவர்தன்விட்ட கணையனைத்துந்தன்கணையாற்
சின்னப்படுத்திச் சிதையப்புயமார்புந்
தன்னைப்பிளந்தே சரணடுத்தறித்து
பன்னெற்றிசையும் பலபிணமாய்ச்செய்தனனே
மண்டுதிறல்விஞ்சையர்கண் மடிந்ததொருசெய்கையெல்லாங்
கண்டுசிலசா ரணர்தேர்கணைத்திலுந்தி
எண்டிசையாவு மிடிபோனின்ருர்ப்பரித்து
தண்டமொடுதானெதிர்த்தார் தண்டத்தான்றன்னுடனே
சாரணைக்கண்டே தடக்கைவரிவின்னீத்து
போர்செய்கதையோடு புகுந்தான்வயவீமன்
மட்பாத்திரக்கடையின் மத்தகயமுற்றதென
புட்பகத்தேரோன்படையைப் புட்காத்திலேற்றினனே
தண்டினொடுதண்டந் தகர்ப்பவெழுபொறியு
மண்டுமுடியோடுமுடி மன்னவெழுபொறியும்
திண்டிறலின்வல்லவர்கள் செங்கணுமிழ்பொறியும்
அண்டமெழும்புதுளி மீதுபுகுமப்பாலு
மட்டவிழுமாலை வயவீமன்றன்னுடனே
தட்டுமமர்புரிந்து தலைவேறுடல்வேறாய்
பட்டவர்களெத்தனைபேர் படாமலுயிர்ப்புடன்வென்
னிட்டவர்களெத்தனைபே ரியக்கர்படைகளெல்லாந்
தொடிக்கையிழந்தும் துணைப்புயங்கடானறுந்தும்
இடிக்குரலின்விஞ்சையர்க ளீடழிந்தாரம்மானாய்
அன்னநிலைகண் டடலரக்கரோடியக்கர்
பின்னருமேனைப் பிரபலர்கடற்சூழ
கன்னமதமாவிரதங் கர்க்கிபொருகாலாள்
என்னும்பலபடையோ டெதிர்த்தேவயவீமன்

தன்னைவளைத்தார்ப்பரித்தே தங்கடங்களூர்திகளைத்
துன்னிவீமன்மேற் றடங்கினார்பெருயுத்தம்
விஞ்சையர்கண்மேன்மேல வினைப்போர்துடங்கியதைக்
கஞ்சமலர்க்காகவந்தோன் காணவயத்தொனியுங்
காரணியையொத்த கயத்தணியுங்கந்துகத்தின்
சண்டபவனனெனத் தண்டாயுதத்தாலே
மண்டலரும்விஞ்சையர்கள் வாகனங்கடேர்முதலாய்
சரிந்துசரிந்து தவிடுபொடியாகி
விரிந்துபறந்திடவே விண்ணிடிபோற்றாக்குதலால்
நெரிந்தேரதமழிந்த நேமியுடன்வேழஞ்
சொரிந்தகுடரைத் துரகதங்கடோள்கடலை
முரிந்தனபோரின் முனைவிஞ்சையருரங்கள்
விரிந்தனவிரத்தவெள்ளம் மேன்மேலுமவ்விடத்தே
வேலையெரித்தவன்போல் வீமசேனன்வெகுண்டு
மூளைநிணங்கொட்ட முருக்குதலினான்மார்பிற்
றுளையுறும்பவனன் றன்விசையினாற்பறந்தப்
பூளைவனமென்னப பொருநரெல்லாந்தட்டழிந்தே
அந்தகனூரி லடைந்தவர்களல்லாதோர்
தந்தம்பதிக்கே தடைகளின்றியோடினரோ
ஒருவர்செலும்வழியி லுற்றொருவர்செல்லாமல்
வரியுழுவைகண்டுடையு மானினம்போலவெருவி
மாமந்தரப்புயத்தின் வல்வீமசேனன்வெற்றித்
தாமமணிந்தார்ப்பரிக்குந் தருணமதில்விஞ்சையர்கள்
வெருவித்தனுவெறிந்தே மேன்முதுகிற்கால்சாட
பொருவிலளகா புரிநோக்கியேநடந்து
மஞ்சனையமேனி மணிமானிடமடைந்து
கஞ்சமலர்பொய்கையதிற் காண்மகன்வந்தெய்தியதும்
புட்பத்தில்வண்டு பொருந்தாமற்காப்போரை
நுட்பமணுப்பொடியாய் நோக்குமுனஞ்சாடியதும்
தப்பிப்பிழைத்தோடித் தங்கண்வந்தவாறினையுந்
துப்புடனேயாவுந் தொகுத்துரைத்தாரோவீரர்
விஞ்சையர்கள்சொன்னமொழி வேலைத்தழல்காய்ச்சி
தஞ்செவியிலூட்டுந் தகைமைபோற்சார்ந்ததுவே
ஊழிக்கடுங்கனலை யொத்திருகண்டீய்ச்சொரிய
ஆழியெனக்கொதித்தே யுங்கவனைப்பார்த்துரைப்பான்
சிங்கத்தைக்கண்டுடைந்த சிந்துரம்போலோர்மனிதன்
புங்கத்தினொந்து புறமிட்டீருங்களைப்போல்
வீரர்களில்வீணர் வேறிலையென்றேநகைத்து

காரனையமும்மதத்துக் கைமாவிற்ருனேறி
ஒன்றுபடவெவ்வுலகு மூந்திரதமியானையெனச்
சென்றுபடைகளுடன் றெண்டத்தாளுேடெதிர்த்தான்
மண்டியெதிர்த்தே வருமணிமான்றன்றிறலைக்
கண்டேநகைத்துமிகக் கான்மகனின்ருனுலவி
செங்கதிரைமூடுந் திமிரப்படலமென
வெங்கைப்படையெறிந்தே மேகமெனச்சூழ்ந்தனரோ
ஆலமெனக்கொதித்தே யங்கவர்கள்விட்டபல
கோலமுள்ளவாயுதங்கள் கூடிவரவேவீமன்
காலாந்தகன்போற் கடையூழிமாருதம்போல்
சாலமனத்தீய்மூளத் தானிடிபோலார்ப்பரித்து
நெருக்குங்கரும்பொருநன் கிர்த்தூளியாய்ப்பொடியத்
தருக்கடனைமுறித்துத் தான்வீமன்சாடினனே
காயெரிபோலார்ப்பரித்தேக் காற்றின்சுதன்போனா
மாய்கைமணிமான் மலர்ந்திருக்கனுனேக்கிப்
பங்கமிஃதென்றுருத்துப் பற்பல்படைசிந்திமுந்திச்
சிங்கமெனவுறுக்கிச் சென்ருனேவாயுசுதன்
வேகமுடனவன்றன் மெய்மார்பகங்கிழிய
சோகமுற்றநெஞ்சந் துணுக்கிடக்கையாற்புடைத்தான்
முன்புமருமத் திடைவீமன்மொய்த்தலுமே
என்புநிணமிந்திரிய மென்றவையங்கண்முதலாய்
நிலைசிந்திடக்கலங்கி நெட்டுயிற்புத்தானெறிந்து
தலையினுறுமுற்றசர்ப்பந் தன்னைநிகர்மட்கிமனம்
புண்ணுகிநெஞ்சம் புரிமாயப்போரதனுல்
ஒண்ணுதெளிதீயா னுயிரிவனென்றேதேர்ந்து
சூட்சியாய்வஞ்சத் தொடர்பாற்கதுவெனவே
மாட்சிமைசேர்விண்ணின் மறைந்தேமணிமானும்
ஆகாயம்பூமி யகல்வெளிகளெத்திசையும்
வாகாயனல்பரவ மாய்கையுற்றுநின்ருனே
எண்டிசைபால ரிமையோர்களுநடுங்கச்
சண்டன்பரியூருஞ் சாரதியுங்கையோய
அக்கினிக்கால்போலுமென்மே லார்ப்பரிக்கமல்வீமன்
சக்கரத்தானீய்ந்த சரமொன்றைத்தானேவி
தினகரன்முன்னுற்ற திமிரப்படலமெனக்
கனவிலுறும்பொருட்போற் காணரிதாய்மாற்றினனே
மாயமணிமானவன்றன் வஞ்சனையின்றுஞ்சலெலாந்
தூயமுராரி சுடற்கணையான்மாய்ந்ததுவே
துஞ்சலுறுமாய்கைத் தொருப்பெனவயுநீங்கிடவே

வஞ்சகனைநாகமிசை மால்வீமன்கண்டுருத்து
வார்வில்வளைத்து வடிக்கணைகடான்றெரித்து
மேர்வில்லிநண்பனன்பன் மீதினவையங்களெலாஞ்
சோரியொழுகத் துணைப்புயங்கடைத்துருவ
மூரிவயவீமன் மூண்டகொடும்போரை
இயக்கர்பதிநண்ப னிருவிழியாற்கண்டுருத்து
வயக்கைக்கதைமுதலாய் மற்றபெரும்பல்படைகள்
விட்டெறிந்தேயக்கன் விசைத்துவிடுங்கோல்களெலாந்
தட்டழிந்துநட்டமுறத் தாக்கினான்போர்வீமன்
விறல்வீமன்விஞ்சையினு மேன்மேலுரசுடனே
நிறையம்புவிவிசும்பி னின்றுருத்துச்செய்தமரைக்
கண்டமராரிந்திரசித்துங் காகுத்தன்பின்னவனும்
பண்டுசெய்தபோரிப் படியாகாதென்றிசைத்தான்
வயமுற்றபற்பல்கணை மால்வீமன்றூனேவ
செயமுற்றவிஞ்சையர்கோன் சிதைத்துவிட்டவாறுகண்டு
ஒன்றுதசநூறு யுயருஞ்சகஸ்திரமாய்க்
குன்றிலக்கம்பத்திலக்கங் கோடிசங்கம்பத்மமதாய்
மாகத்தொலித்துநின்ற வஞ்சன்மெய்யைச்சல்லடைக்கண்
ணாகத்துளைத்துருத்தே யார்ப்பரித்தவாறுகண்டு
காலகாலன்போற் கடுத்துருத்துக்கண்சிவந்து
ஆலமொன்றைவாயுசுத னாகமெறிந்தார்ப்பரித்தான்
பாவியிவன்றன்வலியைப் பார்த்தேவயவீமன்
மூவிலைச்சூலமவன் மூடும்படிக்கேவ
பொடிபட்டிடப்பிரமன் புங்கமதைத்தானெடுத்து
வடியிட்டவில்லினிடம் வைத்தாலமுங்குளிர
வீசினனண்டம் வெடிக்கவெழுந்தார்க்கரித்து
ஆசினிற்சென்றியக்க னங்கமயிற்காறூறுஞ்
சிற்றெறும்புதேனிற் செறிந்தவிதம்போலசப்
பற்றிப்புறத்திற் பறிந்திடவேமெய்முழுதுஞ்
சின்னப்பட்டெங்குஞ் செயல்போய்நிலைகலங்கி
வின்னப்பட்டாவியற்றே விண்ணூற்றிமெணிமான்
புடவிநடுங்கப் பொருப்பிடிந்துவீழ்ந்ததென
அடல்சிந்தக்கீழ்விழுந்தே யக்கணத்தின்மாயுமுனம்
இறந்தோர்களன்றி யிருந்தவர்களெல்லோரும்
பறந்தோடினார்காண் பரிரதமாமீதேறி
உந்திக்கனவிசையா யூர்புகவேமுந்தினர்க்கு
முந்தச்செலுத்தி முடுகினரேமாவீரர்
விரியுநதியுவரி வேலையெனவெங்கரடக்

கரிபரியாளெல்லாங் கலந்துகுத்தமெய்க்குருதி
பேராற்றிலோடப் பிரசண்டக்காலளித்த
வீராதிவீரன் விறலரிநாதங்குரித்தான்
இவ்வகைவீம னிகல்புரிந்தேயிங்கிருக்க
கொவ்வையிதழ்த்திரௌபதியைக் கோதருமபூபாலன்
என்னுயிரன்ன னிளையவனுமெங்கெனவே
மன்னகேளிந்நதியில் வந்தவரும்புனலில்
நீராடச்சென்றேன் ரிஷிபத்தினிகளுடன்
ஓராயிரத்தெட் டியரிதழின்கோகனகம்
பரிமளவாசப்பூ பரவிவரக்கண்டோடி
கரமுறவேயானெடுத்துக் காற்றின்சுதனுக்களித்தேன்
முன்னுமெனக்கிம்மலரை மோகமுடனளித்தாய்
இன்னுமொருக்கா லெடுத்தளியென்றேனதற்காய்
மன்னளகேசன் வளநகரிதானேகி
அன்னவன்சென்றானென் றழன்மாதுரைத்தனளே
மன்றற்குழலாடன் வாசகத்தினஞ்சதனற்
பொன்றுதல்போன்மன்னன் புலம்புகின்றபோதவன்பால்
ஒன்றுமுனிரோம னுரையானபேரமுதாற்
துன்றுந்துயர்நீங்கிச் சோகமுடனேயுரைப்பான்
கூற்றநிகர்நாகக் கொடியோன்முதலாய
நூற்றுவரையு நொறுக்கியேவிண்ணுலகில்
ஏற்றுமளவும்பபத்தை யென்கரத்தாலுண்ணெனன
ஆற்றுதியேசீவனையா வம்மொழிதான்வீண்போமோ
துணைக்கடலாடையெனச் சூழவருமேழ்பூவோர்
நினைக்கெழுமிந்தமலர் நன்றுநன்றென்றேநகைத்து
உனையொருவன்றன்னை யுளனென்னிலோர்வீணுக்
கனைவர்களுமுளரிங் கியானுமுயிருற்றுறைவேன்
முந்நாட்பவமோ முடிவிலுறுநல்வினையோ
என்னுவறியே னெழிலர்ச்சுனனகன்றான்
தாய்போலுங்காக்கவல்லத் தண்டத்தானும்பிரிந்தான்
தூயோயான்செய்வதினிச் சொல்லென்றரோமசன்றன்
கஞ்சமலர்பதத்திற் கலங்கிமன்னர்மன்னன்விழ
அஞ்சலஞ்சலென்றே யருண்முனிவன்றான்றேற்றி
உன்னனுசன்வீம னுயிரழிவில்லான்றனதன்
தன்னுரியசேனைத் தலைவன்மணிமானை
அவமாகப்பல்படையோ டந்தகனூரேற்றிவிட்டான்
சிவனன்பன்றானிவன்மேற் சேனையொடும்போர்க்குறுமுன்
யாமங்குறல்வேண்டு மனிலன்சேய்தன்சேயைத்

தாமதமின்றிமனந் தன்னிலுன்னென்றேமுனிவன்
சொல்லத்தருமன்மனத் துன்னுமுனமோர்தேரில்
வல்லக்கடோர்கயனும் வந்தெந்தைநாயனையேன்
என்னுற்செயுமேவ லியம்பென்றடிதொழுதான்
சொன்னான்றருமன் றுணைவனிலைமையெல்லாம்
அக்கணந்தன்ம னறையுமொழிகேட்டு
இக்கணமெந்தைக் கிடையூறெழும்பிடுமென்
றேதியமன்சே யுயர்நகுலசாதேவன்
மாதினுடன்ரோம மாமுனிவன்றன்னையுமே
முக்கணனண்பன்வளர் மூதூர்தனைநோக்கித்
தக்கதேர்மீதேற்றித் தானடந்தானக்கணமே
ஆகாயமார்க்கமதா யத்திசையுந்தானிலக்காய்
வேகமுடன்செலுத்தி வீமன்போர்செய்திடத்திற்
கிட்டுமுனமே கிரீடிக்குமுன்னோனும்
மட்டவிழ்தூய மலர்தூவித்தன்முனடி
முடிமீதுறப்பணிந்து மோகமுடனேதொழலும்
பொடியாய்மணிமானைப் புத்தியின்றியேவீணாய்ச்
சதித்தாய்வதைத்தாய்நீ தம்பிநிதித்தலைவன்
கொதித்தவன்சேனையுடன் கூடிவருமுன்னநந்தேர்
பொற்றொடியின்சொல்லாலிப் போதேபொருளாக்கிச்
செற்றனையேயீசனண்பன் சேனைதனைநீயுமின்றே
கொற்றவன்றன்பின்னவன்மேற் கொதித்தேயுமாக்குமக்கால்
உற்றவைகளெல்லா முரைக்கவென்றேயோர்தூதன்
கண்ணுற்றராளங் கலுழக்கனிந்திரங்கி
புண்ணுடன்முழுதும் புங்கமுற்றகாயமுடன்
சென்றியக்கர்கோமான் றிருத்தாளிணையிறைஞ்சி
மன்றன்மலரான் மணிமானன்பல்படையும்
வீய்ந்தனவொன்றேயவனும் விள்ளுமவைகேட்டு
மாய்ந்தனையோவென்கண் மணிமானேயந்தோவென்
றழுங்கித்தனத னறிவாவியுங்கலங்கி
மழிங்கினன்றேகம் வல்விடத்தைமேன்மேலும்
விழுங்கினனென்னநனி வெய்துயிர்த்துநெஞ்சமுறப்
புழுங்கியிவன்வீரம் புகன்றபலவாய்ப்புலம்பி
ஒருநாளுமானிடர்க ளோதையுறுமாநகரில்
வருவாரோவென்றிமணி மானவன்மூன்றுனெதிர்த்துப்
பொருவானுமன்னவனைப் பொன்றிடவென்றேயிடாத்
தருவானுமெந்தன் பெயரோதனதனுமாம்
அடுப்பவனேவந்து யாளைதனைப்புன்மனுடன்

தொடப்பனும்வெய்யசரஞ் சூழ்ந்தெதிர்த்தசேனைபொன்றில்
ஈசனலனு மிபங்காத்தோன் றன்னலனும்
வாசமலரோனலனும் வாசவனுந்தானலனும்
பாசாங்குசனலனும் பன்னிருகையானலனுந்
தேசாருஞ்சந்திரனுஞ் செங்கதிரோனுநலனுந்
தருமனலனுந் தழலவனுந்தானலனும்
வருணனலனிருதி வாயுவுமேதானலனும்
அற்பனறிவுபொறை யற்றவொருபுன்மனுடன்
சற்பனையாய்வந்தெதிர்த்தென் றானைகளைச்சங்கரிக்க
வல்லனோசித்தர் வளரியக்கர்விஞ்சையர்கள்
நல்லிசையாழ்க்கந்தருவர் நான்குவகைசேனையுடன்
மற்றும்பலபடையும் வானிருதரும்படையிற்
சுற்றுகின்றகின்னரருஞ் சூழ்ந்தேயம்மீளிதனைப்
பற்றிடுமினென்றே பகர்ந்தியக்கர்கோமானும்
மற்றும்படையினுடன் வன்போர்க்கெழுவதன்முன்
உருத்திரசேன னுணர்ந்தோடித்தாதையின்முன்
திருத்தாமரைப்பதத்திற் சென்னியுறப்பணிந்து
மருத்துமகன்றன் வரலாறுமற்றவன்றன்
திருத்துணைவர்தன்செயலுஞ் செப்பவகையாக
எந்தைமனுடனென வெண்ணவொண்ணுதிங்கிவனா
முந்தித்திரிபுரத்தை மூண்டெரித்தான்றன்னருளால்
இந்திரனைப்ப திவனாவர்பூமகடன்
தொந்தனைமாற்றவந்து தோன்றினார்பூவதனில்
தருமனெனுமன்னன்முன்னோன் றம்பிவயவீமனிவன்
வரிவெஞ்சிலைவிசய னென்றொருவன்மற்றவன்றான்
புரிவெந்திறலசுரர் பொன்றிடவென்றிந்திரன்றன்
திருமாநகரமெலாஞ் சீர்திருத்திவைகினனே
வேடமோமானுடமாம் வெகுண்டபோதல்லாமல்
ஆடவர்கடன்பெருமை யறிவதெளிதன்றோதான்
நாடுஞ்சிறியகுற னொன்றுநம்பகோனெழுந்தே
நீடியவிண்முகட்டி னின்றுநிமிர்ந்திலையோ
மற்றுமெத்திக்கின் வரைக்குலங்களுநடுங்க
கற்றைப்பிறைவேணி யன்கைலைமாமலையை
யுற்றேயெடுத்தோ னுயிருமவன்வாழ்வுஞ்
செற்றவருமானுடரோ தேவர்களோவையாவே
வாசமலர்த்தார் மணிமானையோர்முனிவன்
காசினியில்வாழு மனுடனுடன்காத்தால்
பட்டழிவாயென்றே புகர்ந்தகொடுஞ்சாபம்

விட்டிடாதுற்றதெந்தை மீதிரங்கனியவர்க்காய்
விதிவலியாலாவியிவன் வீய்ந்ததன்றிவேறொருவர்
சதியால்வயப்போரிற் றானழிக்கவல்லர்களோ
முன்னொருக்காவிம்மலர்க்காய் முடுகியேநம்படையைச்
சின்னப்படுத்தியந்தத் தேமலருங்கொண்டகன்றான்
வீராதிவீரன் விறல்வாயுவின்புதல்வன்
போராலிவன்முன் புராரிமுதனிற்கரிதே
அருத்தியேதென்றே யளித்தவருக்கையாவிங்
கிருத்தியேலுன்வாழ்வு மின்னுயிருந்தான்பெறலாந்
திருத்தியேசேனையுடன் செருச்செய்வேயாமாகில்
உருத்தாற்படும்பா டுரைக்கவென்னான்முற்றாதே
என்றிவைதன்மைந்த னியம்பியேயேத்திடவு
நின்றிலனென்னாவி நிகர்த்தமணிமானைக்
கொன்றவன்றன்னுயிரைக் கொள்வனியானென்றுருத்து
சென்றான்விமானத் திருத்தேரிலேதனதன்
சாகரமேழுந் தடம்புரண்டாகாயமுட்டி
ஏகமாயெத்திசையு மெவ்வுலகுமூடியபோல்
மண்ணெலாந்தேருங் களிருவயவாசிகளும்
விண்ணெலாம்புட்ப விமானமன்பதாதிகளும்
பண்ணெலாந்தான்முரலும் பல்பணையினுண்மணலை
எண்ணலாகாத வியக்கர்பெருஞ்சேனை
இவ்வகையாய்த்துன்றி யெழுந்தபெருஞ்சேனைக்
கவ்வையுற்றுவாரதுவைக் கண்டேயறன்மதல்வன்
உணங்கினான்றனபே ருளமுணரவாவியற்றுப்
பிணங்கினான்பின்னோன்மேற் பேதைபங்கன்றன்னோடும்
இணங்கினான்றன்பெருமை யாவுமெடுத்தோதி
வணங்கித்துதிக்கலுற்றான் மன்னர்மன்னனம்மானாய்
அனகனேசீர்சா லளகாபுரிவேந்தே
தனதனேசாம்பசிவன் றன்னுரியநண்பினனே
புனிதனேமேன்மைப் புலத்தியன்றன்வங்கிஷத்திற்
செனகனேதேவர்கட்குத் தேவேநிதிக்கரசே
வெறுப்பதோமிக்க வினைவிளைந்ததானாலு
மறுப்பதோவெந்தன்மொழி மாறுகொண்டேதானெதிர்த்துச்
செறுப்பதோபுத்தியிலாச் சிறியவன்செய்தீமையினால்
பொறுப்பதுவேதக்க புகழ்புஷ்பகவூர்தி
என்றறன்சேய்மேன்மே லியம்புகின்றநன்மொழியால்
கன்றுமனத்தின் கடுங்கோபந்தானீங்கி
மன்னுமனமகிழ் கொண்டெதிர்ந்துமார்பிலுற

தன்மன்றனைத்தனதன் றழுவியெடுத்துரைப்பான்
நிலத்திற்பொறைசேர் நிதியுள்ளோய்மாமதியின்
குலத்தைவிளக்கவருங் கொற்றவனீயாகையினல்
என்னகரஞ்செல்வ மினியபடையுள்ளவெல்லாம்
நின்னதுவாமின்றமுத னீங்களென்றுமுற்றுறையுந்
தொன்னகரமென்ன தெனத்துணைவர்தங்களொடு
மன்னவனைத்தன்னகரிற் கொண்டேகிவாவிகளுங்
கற்பகக்காவுங் கடவுளர்களாலயமுஞ்
சிற்பரதிசயிக்குஞ் சித்ரமணிமண்டபமும்
விற்பரவுமாமணிகண் மேவுகின்றகுப்பல்களும்
பற்பனிதியும் பகரவொண்ணுச்சீர்சிறப்புங்
காட்டினனந்தக் கருணைப்பெருநீத்தத்
தூட்டினனம்பொற்கலத்தி னமுதமன்பினலவர்க்கே
யூட்டினன்மேன்மே லுபசரித்துச்செங்கையிருல்
நீட்டினனடை நிதிமற்றுந்தானீய்ந்தே
பூதலங்களெல்லாம் புரக்குமன்னர்மன்னவனீ
மாதரசியோடுமிங்கே வந்ததுமென்நற்றவமென்
ரேதியேயெந்த னுயிரனையநேயகன்பின்
ஆதிமுதற்கடவு ளாற்கிடைத்திராவலுடன்
தன்னருகிலேயிருத்தித் தார்வேந்தேயிந்திரன்றன்
பொன்னகரந்தன்னினென்னற் போயவையிலுற்றிருந்தேன்
மாரனைவென்ற வடிவழகனங்கொருவன்
சாரலுமிச்செம்மலுமியார் சாற்றுமெனயான்கேட்டேன்
அன்னேன்பெருமை யவன்வின்மைவன்மைகளு
மன்னுங்குருகுலத்து மன்னனிவனென்பதையு
நிவாதகவசரையு நீள்காலகேயரையும்
திவாமுன்றமாயச் சிதறுவித்தானென்பதையும்
தேவர்கள்சொற்றுற் செவிகுளிரயான்கேட்டேன்
ஆவலுறுகின்றுணைவ னவ்வானவர்வாழ
வச்சிரபாணி யுடன்வருவானுளையினி
எச்செகமுநின்ன திடருற்றிரங்கலென்றோர்
முளரித்திருமலரு மோகமுடன்றான்கொடுத்தே
அளகைக்கரசன்விடை யன்புடனேநல்கினனே
விடைபெற்றெழுந்தறன்சேய் மென்மேலுபசரித்து
சடையிற்பிறைமுடித்த சங்கரன்றனன்பினனே
ஐயனேநின்னை யறியாமனின்னகரத்
தெய்தினன்சின்னஞ் சிறியனிவனின்றுவிவன்
செய்தீவினையனைத்துந் திருவுளத்திற்கொள்கவெனத்

துய்யமன்னர்கோமான் றெருழுதேயிளைஞரொடெ
தையற்கரசி தவவன்முனிவனுடன்
மைதவழுநீள்புரிசை வாயில்வந்தானம்மானாய்
உரியோராய்ப்பற்றி யுடன்வருவோர்தம்மிடத்தும்
பெரியோரிடத்தும்விடை பேணியேதான்வாங்கி
மாசின்முடிமன்னர்மன்னர் வந்தடைந்தமாமுனிவர்க்
கேசிலாதீரெட் டெனும்பூசைகளியற்றி
காசின்மணியுங் கலனுடையுங்கொடுத்தே
ஆசியுடன்விடையு மங்கவர்பாற்றான்வாங்கி
பந்திபந்தியாய்க்கோடி பாரிடங்சடான்பூட்டி
மைந்தினுடன்செலுத்து மாமுடித்தேர்மீதேறி
ஒருநொடிக்குண்முன் னுவாயுநந்திசேனன்வனத்
திருமன்னுகர்வதனிற் சேர்ந்தனர்காணம்மானாய்
எய்தினநந்தி யெனுமுனிவன்றாளிறைஞ்சி
செய்தியெலாமன்போ டுறைசெய்திருந்தபின்னர்
அறமுற்றுமோருருவ மானோன்கடோற்கயன்றன்
திறன்முற்றுமியாவர்கட்குஞ் செப்பியேயிப்போது
வெங்கராவாய்ப்புகுந்த வேழமன்றமூலமென்ப்
பொங்கராப்பள்ளிவிட்டுப் போதசமாக்காத்தவன்போல்
சூரசங்கார சுடர்வேலவன்போலத்
தேரில்வந்துநின்றானை ஜீவனையின்றீய்ந்தனையே
என்றுபுகழ்ந்தளகைக் கிறையளித்தபொற்றகிலும்
மன்றற்றொடையு மணிமுத்தவெண்குடையுங்
கொற்றமுறப்பல்படையுங் கொடுத்தேயறன்சுதனும்
வெற்றியுண்டாக வெனவிடையுமீய்ந்தனனே
விடையன்புடன்வாங்கி மெய்மகிழ்ந்தமன்னவனைத்
தடையின்றிமூன்றுபிர தக்ஷணங்வத்தேயெயிற்றிற்
றன்மாமிஷம்வழியுந் துணைக்கையொருகோடிதுள்ளி
மின்வான்மிசையே விசைந்தூருந்தேரதனின்
மீதேறியல்லிடும்பன் மெய்வனத்தைத்தான்சேர்ந்தே
மாதாவின்பாதம் வணங்கியிவனுற்றவெல்லாஞ்
சொல்லியினிதிருந்தான் றாயநந்திசேனன்வனத்
தில்லி லிவர்களிருக்குமந்தக்காலையிலே
இந்திரலோகத் திருந்தேதிறல்விசயன்
மந்தரப்பொற்றோளான் வந்தடைந்தானவ்வனத்தில்
செப்பரியபஞ்சவருந் தேவியுடனேயிசைந்த
ஒப்பரியதெய்வவனத் துற்றேயினிதிருந்தார்

இஃதுவரையிலும் புதியகவிகள்.

## தூர்வாசமுனிச் சருக்கம்.

நாடாண்டவைவர்களு னல்லோர்பதம்வருடி
காடாண்டெழிலாய்க் களித்திருக்குநாளையிலே
செய்நன்றிதான்மறந்த தீயதுரியோதனன்றான்
பொய்நின்றநாவான் புகன்றேவினமுறையே
கோபத்தின்மிக்க கொடியதூர்வாசமுனி
சாபத்தைச்செய்யவெனத் தானினைந்துகாவடைந்தான்
வந்தமுனிபாத மகிழ்வாகப்பஞ்சவர்கள்
சிந்தையுடன்பணிந்து சென்னிதனிற்சுமந்து
மாதவனேயுன்னை வரக்கண்டேயிக்காவிற்
பாதகமலம் பணிவதற்குபெற்றமென்றார்
ஆசுனாத்தேமாமுனியு மைவரையுமேபார்த்துத்
தேசினுடனுச்சியிலே செங்கதிருந்தானுச்சு
இந்தக்ஷணமே யெனக்கரசர்போசனமாய்
சந்தப்பதார்த்தமுடன் றனல்கவேண்டுமென்றான்
தாமதமாய்ச்சொன்னாற் சபிப்பனெனப்பயந்து
கோமகனுநன்று குளித்துனதுபூசைமுற்றி
வாவென்றுமன்னன் மறையோனைத்தானனுப்பி
ஆவென்றேநெஞ்ச மழுங்கினார்தேவியுடன்
பெருமூச்சுவிட்டிடைந்து பேதித்துத்தான்வாடி
அருளேயுருவான வறன்மைந்தன்வாடியதால்
மாற்றார்சொற்கேட்டவனு வந்ததென்றுமால்வீமன்
மூற்றோனைப்பார்த்து மொழிவான்றரியோர்கள்
பண்ணாததீமையெல்லாம் பண்ணிப்பொறுத்தமையால்
யெண்ணாதுமேன்மே விடாரோசெயத்துணிந்தார்
அங்கவரையெல்லா மரைநொடியினீறுக்க
இங்கெனக்குமுத்தார மிப்போதருளுகென்றான்
வீமனிவைசொல்ல வில்விசயனேதுசொல்வான்
கோமுனியையிங்குவைத்துக் கூசாதொன்னாரிடத்திற்
போருக்குபோனாற் பொறுக்கான்சபித்திடுவான்
ஆருக்குமேற்கா தவனைவைத்துயேகலென்றான்
நகுலன்றன்றம்பிதனை நாடியேதோதலுற்றான்
முகில்வண்ணனையிதய முன்னியழைத்திடென்றான்
அவனுக்கிளையோனு மவ்வாறேதானுரைத்தான்
கவனப்பரித்தேரான் கண்ணன்றனைநினைந்தான்
எண்ணுவோராமொன் றிதயத்தினிலிருப்போன்
அண்ணல்நெடியோ னறன்மைந்தன்முன்புவந்தான்

தும்பிமுன்வந்தாற்போல் றூணிலெழுந்தாற்போல்
தம்பியருமூத்தோனுந் தான்குளிரவந்தளவில்
பஞ்சவரும்பைங்கொடியும் பாரளந்தான்பாதமதில்
சஞ்சலங்கடானீங்கத் தான்றொழுதாரம்மானாய்
கருத்தறிந்தோனுங் கருதியதென்கூறகென்றான்
வருத்தமுடன்முனிவன் வந்தவறலாறுரைத்தார்
பதரிநெடுமால் பயந்தோனைப்போலாக
உதயனளித்த வுயர்பாத்திரமெடுத்து
இந்திரனுக்குற்ற வெழில்போசனப்போல
கந்தமுறுமாயிரத்தெண் கறிபதார்த்தங்களுடன்
வேணுமெனச்சொலவே வெய்யோனருளாலே
தாணுவுன்னின்றாற்போல தான்பொலிந்ததம்மானாய்
ஆயிரத்தெட்டுக் கறிபாழிதமமுதும்
வேயிதழில்வைத்தோன் விறற்பஞ்சவர்க்கருள
அம்முனிவந்தே யமுதுகறியும்பார்த்து
விம்மிதமாக மிகுந்தபூரிப்பாகி
மதுரமுற்றும்பதும வாய்கமழவுண்டனனே
மாவீரபூபனருண் மங்கைபூபாலகன்றான்
பாவாணருக்குதவும் பண்பானபோஜனநேர்
உண்டுகளிகூர்ந் துடல்களிருமாந்தி
மண்டலமன்னன் மதிமுகத்தைத்தானோக்கி
செகதீசுரனாகத் திக்கெல்லாந்தானாண்டு
மகதைஸ்வரியமுடன் வாழ்வாயெனவாழ்த்தி
உன்னதேயிந்த வுலகமெலாமல்லாமற்
பின்னொருத்தற்குண்டோ பெருமானருளாலே
என்மந்திரத்தா லிவ்வுலகில்வந்தோரோ
தன்மந்தழைக்கவருஞ் சந்ததியேசேட்டருண்மோ
நென்னலரவுயர்த்தோ னீள்சபையிற்புக்கிருந்தோம்
அன்னமுதுற்றெட்டோ டரியகறியுடனே
ஈந்தானுடல்குளிர்ந்தே யென்னவரம்வேண்டுமென்றேன்
பூந்தாராயுன்னிடத்திற் போசனங்கேளென்றுரைத்தான்
அந்தவரமீய்ந் தனுகினேனுன்னிடத்திற்
சந்தமுடனே சதமடங்காய்நீயளித்தாய்
என்றுமுனிசொல்ல விறைஞ்சியுதிட்டிரனும்
உந்தனருளா லுணர்பெற்றேமியாங்ளென்று
மாமுனியைமேன்மேல் வணங்குவதைத்தான்பார்த்து
கோமுனியுமுன்றனக்குக் கொள்கையுளவரந்தான்
இன்னதென்றுகேட்டு யென்னிடத்திற்பெற்றிடென்றான்

ஒன்னலர்சொற்கேளாதே யோர்பொழுதுமென்றுரைத்தான்
அவ்வசனங்கேட்டே யருண்முனியுந்தான்மகைத்து
தெவ்வரைக்கொல்லுந் திரமொன்றுங்கேளாமல்
அறங்கொண்டசிந்தை யரசனிவைவறிந்து
திறங்கொண்டதுவளித்தேன் றேவையுண்டோயின்னம்வரம்
கேளென்றவனுரைக்கக் கேவலமில்லாதோனுந்
தாளெங்கள்சென்னி தனில்வைக்கப்பெற்றோமே
ஈதொன்றுபோது மினிமேலொருக்காலும்
மாதுங்கமாமுனியே மற்றுனதுவன்கோபம்
எங்களிடத்தி லிசையாமற்காத்திடென்றான்
துங்கமுரசுயர்த்தோன் சொன்னமொழிகேட்டு
நன்றென்றேயவ்வரமு நாடியேதானுதவி
அன்றுதருமனுக்கே வன்பாகவாசுரைத்து
சிந்தையெல்லாநன்மை திரண்டகுடியுடைய
சந்ததியேயுன்றனுக்குத் தாழ்வொருக்கால்வாராது
மனநன்மைமன்னுயிரைக் காக்கும்வழிமுறையால்
உனைவெல்லமூவுலகோ ரொத்தாலுமுற்றாது
பஞ்சவரேநீங்கள் பகருஞ்சபதமுடன்
அஞ்சனடையா ளளித்தசாபப்படியே
கைகூடநாளுங் கடவதெனவாழ்த்தி
வெய்கூர்வேன்மன்னவரோ வெற்றியுடன்வாழ்வீர்
என்றுதூர்வாச விருடியகன்றதற்பின்
அன்றுதுவாலா யடைந்தார்திருமாலுங்
கலக்கந்தெளிந்தார்கள் காவலருங்காரிகையும்
இலக்கமுடன்கானி லின்பமுடன்வாழ்ந்திருந்தார்
வன்னிதனில்வந்தாளு மன்னவர்களைவருமாய்
கன்னல்பலநாளாய்க் கழித்துவருநாளையிலே

## பழம்பொருந்து சருக்கம்.

செல்லளவுமோங்கித் திகழுமவனந்தனிலே
வல்லியால்வந்த மகாதுன்பந்தானுரைப்பாம்
அமுதெனமித்திர னரிதாசக்காத்திருந்து
நிமிஷமுடனருந்து நெல்லிநறுங்கனியை
எய்துராவென்றேந் திழைசேட்கவெண்ணமல்
வெய்திலருச்சுனனு வெங்கணையாற்கொய்தெடுத்தான்
கண்டரிஷிகள் கலங்கினடுடுங்கி
மிண்டுவினைசெய்தாயே வேந்தனேயிக்கனிதான்
உண்போனுங்கண்டா லுனதுதுயரறியான்

பண்பாளாசாபம் பலித்ததெனவென்றுரைத்தார்
அவ்வார்த்தைகேட்டே யர்ச்சுனனுந்தானடுங்கி
எவ்வாறுயாம்பிழைப்போ மென்னவேகண்கலங்கி
மூத்தோன்பதத்தின் முடிசாய்ந்திமையோரைக்
காததோனுநெல்லிக் கனிமுதல்வன்முன்புவைத்து
புத்தியில்லாதெய்துவிட்டேன் பூவைமொழிக்கிணங்கி
சத்தியவானேயிதற்குத் தானேதுசெய்வனென்றான்
காட்டிலிலையருந்திக் காலங்கழிக்குநம்மை
ஈட்டமிடையூறோ யெந்நாளுந்தேடிவரில்
என்செய்வோநாமிதற்கென் றெண்ணிமிகக்கரைந்து
புன்செய்கைமாதர் புகன்மொழியைமிக்கோர்கள்
கேளார்களென்போலக் கீழ்மையுள்ளார்கேட்பரன்றி
வாளால்வலியவன்போல் மன்னவர்கள்கேளார்கள்
திருச்சந்திரமதிமுன் செப்புமொழிதட்டாமல்
அரிச்சந்திரன்கெழ லன்றுபிடிக்கத்துணிந்து
பட்டவவதிகளும் பாரமுறுந்துன்பமெல்லாங்
கட்டழகாவுந்தனுட காதிறைற்கேட்டிலையோ
பொன்மானைச்சீதை புகன்றமொழிதட்டாமற்
துன்னரியதுன்பமதிற் சோர்ந்துமயங்கிலரோ
வள்ளலுமைசொல்லாலே மன்னுபிரமன்சிரசை
கிள்ளியேபட்ட கிலேசமதுகேட்டிலையோ
துன்பமேவந்தோந் துலைப்பாவிசாரமதால்
அன்பென்னுயிரனையா யார்விதியைவெல்லவல்ல
மும்மூர்த்திகடனையு முன்விதிவிடாமையினால்
எம்மாத்திரநா மியல்விதியைத்தள்ளுறுமோ
விதிபோம்வழியே மதிபோம்விதமானால்
அதிபாவருவ தனுபவிப்போமென்றுசொன்னான்
என்றுதருமனியம்பவே வில்விசயன்
நின்றுகலங்கி நினைவழிந்தானம்மானாய்
வீமனவைகண்டே மெலிந்துவிசாரமுற்று
தோமிலாமூத்தோன் றனைத்தாடனையிறைஞ்சி
இன்னேரமாமுனிவ னெம்மைச்சபிப்பதன்முன்
மன்னாநயந்தமொழி மாமுனிக்குத்தானுரைத்து
பாதந்தனைப்பணிந்தே பஞ்சரித்துக்கெஞ்சிநின்றால்
சாதகமாய்க்கோபந் தணிந்துபொறுப்பனென்றான்
பொறுத்தானெனின்யாம் பிழைப்போம்பொறுக்காமல்
வெறுத்தேசபித்துவிட்டால் மேலேதுசெய்வமென்று
குன்றிமெலிந்து குலைந்துதருமன்சொலவே

வென்றிசெறியும் விசயனெழுந்தேதுசொல்வான்
எல்லோருமஞ்சி யிடைவதேனெண்ணுமல்
வில்லாலேயெய்துவிட்டேன் மிக்கரிஷியென்னையன்றி
சத்தியமாகச் சபித்திடான்மற்றோரைச்
சித்திமுனியிடத்திற் செல்வேனெனவுரைத்தான்
பின்னவன்றன்னைப் பெருமானெதிர்பார்த்து
நின்னையிழந்து னிலத்திலிருப்பதுவோ
வருத்தமுரைநீயாங்கள் வைகியுயிர்வாழ்வோமோ
உருத்துடையாய்நீவிரைந்தோ வோடிப்பிழைத்திடென்றான்
அம்முனிவன்வந்தவொரு வாபத்திலுங்கொடிதாம்
இம்முனிவனுண்டிகொண்ட தென்றநகுலன்சொலுவான்
நாம்பிழைத்துமேன்மைபெற நாடிநெடுமாலை
தேம்பாவுதாராய்நீ சிந்தித்திடென்றுரைத்தான்
தமையனுரைத்தவிதந் தானேசகாதேவன்
அமையுமால்வந்தானம் மாபத்தகலுமென்றான்
என்னாலேவந்தவிட றென்றுளங்கலங்கி
மின்னாணடுங்கி மெலிந்தயர்ந்துகீழ்வீழ்ந்தாள்
மாதுபடுந்துயரு மற்றோர்படுந்துயருங்
கோதிலாதான்பார்த்துக் கோவிந்தனைக்குறித்தான்
எண்ணுமுனமே வெதிர்ப்பட்டான்மாயவனும்
அண்ணலவன்று னடியைமுடிபுனைந்து
தங்களிடுக்கந் தனைக்கூறத்தான்கேட்டு
உங்கண்மனநிலையை யோர்ந்துரைப்பீராமாகில்
ஆமலகமென்னு மரியபெருங்கனிதான்
தாமதமில்லாது தரிக்குமந்தக்கொம்பிலென்றான்
காகுத்தன்சொல்லக் கலக்கந்தெளிந்தாற்போல்
வாகுத்தங்கண் மனத்தியல்புகூறலுற்றார்
வெல்வதறமும்பொறையும் விண்டுவேமேயல்லாமல்
செல்வனேபொய்பாவந் தீமையேதேயுமென்று
தன்னினிகழு மெனத்தருமன்சாற்றினனே
அன்னதுகேட்டே யவனுக்கிளையோனும்
பிரர்தாரமாதாவாய் பிரர்பொருள்களோட்டியதாய்
பிரர்கள்வசையுரைத்தால் பேயின்குணமெனவும்
பிரர்துயரையென்றுயராய்ப் பேணிநினைந்திருப்பேன்
இருதினாளுள்ளவு மென்றானியல்வீமன்
பெய்யுமுகிற்போற் பிரசண்டமாருதம்போல்
எய்யுஞ்சரத்தனுவா மிகல்கொண்டவில்விசொல்வான்
ஊனிலிருக்கு முயிர்துறந்தும்பூணுன

மானம்புரப்பதுவே வரிசைமரபுந்தோற்றம்
ஞானம்புகழெனவே னற்சிவனைப்பேறாமல்
ஈனமெவர்க்குமென வெண்ணியிருப்பனென்றான்
குலமேன்மைசெல்வமெழிற் கொற்றவரேயானாலும்
நலமீறுவனொனினு நற்கல்விஞானமிலார்
மருக்கேண்மையில்லாது வண்ணமுடன்சிவந்த
முருக்கலரொன்றேயிசையு முன்னமெனக்கென்றுரைத்தான்
நகுலனுரைக்க நயந்துசகாதேவன்
பகர்வான்மனநேர் பகவான்றனைப்பார்த்து
தாயாகவாய்மை தருமந்திரிதுணையாய்
நேயமேதோழ னிகழ்சாந்தமேதாரம்
பொறையேநன்மைந்தன் புகல்ஞானமேதாதை
உறவீதெனக்கென் றுருதியென்றுஞ்சிந்தைதனில்
வைத்திருப்பதென்றான் மனதிற்குடியாக
நெய்த்தவழும்வேலோய் நெடியோனேயென்றுரைத்தான்
ஒருவரேயைந்து வுடலுயிர்கொண்டேபுணர்ந்தால்
மருவுதற்குவாறுருவாய் வந்தாலுநன்றெனவே
ஐவர்புருஷ ரமர்ந்தோர்களாருகத்
தெய்வமேவந்திலராற் சிந்திப்பேனென்றுரைத்தாள்
எந்தன்மனதினிலே யீதன்றிவேறுமிலை
அந்தவடமீ னனையாளுரைத்திடவே
மஞ்சாரும்பஞ்சவரே வண்மையாமொன்றினுக்கும்
அஞ்சாதீரென்றவுட னக்கனியுமேபொருந்த
மாயனகல மனக்கவலைதானொழிந்து
நேயமுடனைவர் நிலைகொண்டினிதிருந்தார்

## நச்சுப்பொய்கைச் சருக்கம்.

> சேயபங்கயச் சிறுவிர லங்கையிற் றிரட்டிய நறுவெண்ணெ
> ஆயர்மங்கைய ரிடவிட வாடிய திருக்கூத்து
> நேயமுங்குறு முறுவலும் பார்த்தருளிய நெடுங்கண்ணு
> மாயவன்றிரு வடிவமு மனதைவிட் டகலாவே.

அறங்குடிகொண்டோ னடல்வீமன்வில்விசயன்
திறல்வெம்பரிநகுலன் றீரன்சகாதேவன்
ஒன்றாயைவோரு மொழிமயிலினொடு
குன்றார்வனந்தனிலே கொற்றவருவீற்றிருந்தார்
விண்டுவிந்தனென்னுமுனி மேவியதோர்சார்பதனில்
வண்டலவுந்தாரார் மகிழ்ந்திருக்குநாளையிலே
மாசெல்லாமோருருவாய் வந்ததுரியோதனனும்

தொசிசகுனிகன்னன் றுச்சாதனனுடனே
ஆலோசனையாகி யைவரைக்கொல்லாதிருந்தான்
மேலாடிப்பூமியெல்லா வென்றுகோள்வானென்றுரைத்து
கொல்லவுபாயங் குறித்தந்தநால்வர்களும்
வல்லதொருகாள மகாமுனியைக்கூட்டிவரத்
தூதாவொருமுனியைச் சொல்லியனுப்பிவிட்டான்
கோதாய்க்கொலைபடுத்துங் கோள்காளமாமுனியைக்
கண்டுவணங்கியந்தக் காவலன்றன்சேதிசொல்லி
கொண்டழைத்துககூட்டிவந்து கொற்றவன்றன்முன்புவிட்டான்
ஒருமுனிக்குமீயா துபசாரமெய்வரிசை
பெருமுனிக்குத்தானுதவிப் பேணியேதானிறைஞ்சி
என்னுணேமாமுனியே யென்னையீடேத்தெனவே
சொன்னான்மென்மேலுந் தொழுதான்பழுதுடையோன்
எவ்வருலகமெல்லா மெனக்களிப்பாயென்றறிந்து
ஒவ்வரியநின்பதத்தி லுற்றடைந்துவீழ்ந்தனென்றான்
நன்கலாதோனழைத்த நாட்டமெல்லாந்தானறிந்து
மாமனேநோக்க மதிப்பறிந்தேவன்சகுனி
கோமுனியைத்தாள்வணங்கி கொற்றவராம்பஞ்சவருஞ்
சூதாடிப்பஞ்சவர்க டோற்றூர்வனமடைந்தார்
வாதாடிமீண்டுலகின் வந்தாற்புவிகேட்பார்
தோரார்வழக்கரொரு சொல்லுறுதியில்லாதார்
போராட்டக்காரரந்தப் பொல்லாரிங்கெய்தாமற்
காட்டகந்தன்னிற் கழுகுபருந்துக்கிரையாய்
ஈட்டியவோமத் தியற்றுகின்றவஞ்சனையால்
வாகெடுத்தவெற்றிதரு மன்னரைவர்மாய்ந்தழிந்தால்
நீகொடுத்தபாராய் நிருபன்புரந்திருப்பான்
அன்னதுகேட்டே யழல்கொண்டநாராசங்
கன்னமதின்வைத்ததெனக் காதிரண்டுந்தான்மூடி
மின்னினேறுண்ட விடங்காலரவதுபோற்
தன்னுடலமெல்லாந் தயங்கிநடுநடுங்கி
செய்தபெருந்தவங்கள் சோமடிந்ததின்றே
வெய்தேழ்பிறவி வினைவந்துமூண்டதென்று
எண்டிசையுமோர்குடைக்கீ ழேபுரக்குமன்னவனே
மண்டலத்திலிச்சொல் வழுத்துதனன்றோவுனக்கு
பாதகமான பழிச்சொல்லெனக்குரைத்தாய்
நீதியல்லவென்ன நிருபன்முதனால்வர்களும்
உன்பாதமேகதியென் றுற்றடைந்தோமெம்மொழியை
வன்பாகச்சொல்லி மறுதெங்களைக்காப்பாய்

வேழ்விச்சமத்திலுன்போன் மிக்கோர்களியாவருளர்
வாழ்விலெனைப்போல மன்னவர்களியாவருளர்
என்றுபலசொல்லா விதமாகத்தான்றுதித்தான்
அன்றவர்கள்கெஞ்சி யறைந்த்தார்சொல்லவல்லார்
சொல்லால்வசப்படுத்தி சோராதுகட்டியதால்
பொல்லாதான்சொற்கடக்கப் போகாதறமயங்கி
பஞ்சவர்கடன்சபதம் பத்தினியாடன்சபத
நெஞ்சதனிற்சற்று நினைப்பற்றமாபாவி
கோபத்தாலுஞ்சாபங் கூறகினுமெண்ணறியான்
சாபத்தின்மேற்சாபந் தானிடவுமொண்ணாதே
ஜீவனிலாமற் செபித்திடவும்போதே
ஜீவனிருக்கச் செபித்தோமேயானாலும்
பவமோருருவெடுத்த பாவியிவனீதியிலன்
றவமாமுனிவனென்றுந் தான்மனதிலேமதியான்
அவமாகநம்மை யலக்கழிப்பான்றப்பாது
இவனோடேநாமு மிடரிமுடியாது
மகாபாரதமுடிக்க வல்லதொருபஞ்சவனை
இகமீதிற்கோறல்செய்ய வெம்மாலுமுற்றாது
என்றெண்ணியேகொடிய வின்னறனைப்பார்த்து
நன்றென்றுநீங்க ணவிலன்மகாதுரோகம்
தீவினையான்செய்தாலுந் தீரமுள்ளபஞ்சவர்கள்
வீய்வாரோவியார்கள் மேற்பாரதமுடிப்பார்
சுடுதீவினைவிளைத்தாற் சுடுமேயெனையலது
திடமானபஞ்சவர்முன் சேருமோசேராது
மாயனவராலே மாபாரதமுடிக்க
நேசமுடனே நினைந்துசகாயமுற்றான்
மூலப்பொருளா முகுந்தன்முயற்சிதனை
சாலவிலக்கிவிக்கத் தக்கவனோயான்மடிதன்
மெய்யென்றேசொல்ல மிகவெல்லோரும்பணிந்து
செய்யென்றார்தீய்மைதனைத் தீய்மையுருவெடுத்தார்
தட்டிச்சொல்லாமற் றவமுனிவனின்றதற்பின்
முட்டுப்படாமன் முயற்சிக்குளபொருளும்
அங்கவனுக்கேற்ற வரியவெகுமதியும்
புங்கமுள்ளபல்பொருளும் பூரணமாய்த்தான்கொடுத்தான்
இன்னமுனக்கே யிசையும்பொருட்களெல்லாஞ்
சொன்னபடிதருவேன் சோராதேயேகுகென்றான்
தீயானைக்காண்பதுவுந் தீதேதிருவிலகுந்
தீயார்சொற்கேட்பனவுந் தீதேயத்தீயவர்கள்

தன்மனைபுக்கிமிக்க தன்குடிக்குஞ்சேதிசொல்லி
புன்மதிகொண்டு புறப்பட்டானம்மானை
விலங்கினினங்கள் விரவும்வனங்கடந்து
கலங்குமழற்பாலைக் கான்சேர்ந்தான்காளமுனி
கழைமுத்தஞ்சிந்திக் கனற்போலொளிபிறங்கும்
அழகுற்றவெற்பி னணித்தாயொருசார்பில்
அண்டர்முனிவோ ரகலிடத்தோரியாவர்களுங்
கண்டவுடன்வெருவக் கடும்பலியுந்தானீய்ந்து
முகடுதடவ முழுநெருப்பைத்தான்வளர்த்து
விகடிதமான வியன்மந்திரமோதி
நேயமுமற்று நிரந்தரமாய்நெய்சொரிந்து
தாயமுடன்மந்திரங்க டானேயுருக்கொடுத்து
ஒன்றுந்தவராம லோமந்தனைவளர்த்தான்
அன்றத்தழலி லடர்ந்தோர்பெரும்பூதம்
விரவியெழுந்த வெயிறுநிலவெழவே
இருகட்புரமு மெறியுமெரியெழவே
அடுக்கலெனவெடுத்த வக்கினியிலேயுருவாய்
திடுக்கமுடன்முனியுஞ் சிந்தித்தானம்மானை
இந்தவோமத்தி னிடைபூதமேயெழுமுன்
அந்தவனத்திருந்த வைவர்முயற்சிசொல்வோம்
முப்பாறனக்கு முதற்பாலாய்மூவுலகுந்
தப்பாதவாய்மை தருமாதிபக்கடவுள்
எண்குணன்சித்த னறவாளிபொன்னெயிற்கோன்
புண்ணியன்சாந்தன் புனிதன்முதல்வன்றனதன்
சீரனந்தஞ்சோதித் திகழனந்தஞானியின்னும்
பேரனந்தங்கொண்ட பெருமானிவையறிந்து
தன்மைந்தனை தருமனுடன்றம்பியரைச்
சொன்முந்திக்காக்கத் துடங்கினன்காணம்மானை
பஞ்சவர்கள்சேர்ந்திருக்கு பாரவனச்சார்பருகில்
தஞ்சமுடனோர்முனிவன் றானுணரும்போதகத்தை
சாரங்கமாகவந்து தன்வாயினுற்பறித்து
சீரொங்கன்மாய்கையெனச் சென்றதுகாணம்மானை
செங்கையுறுமாங்கிழத்தைச் சிறிப்பறித்தேகுஞ்
சங்கமெனக்கவர்ந்து காணும்லோடியதே
வேதக்கலைய வினாந்துமான்கொண்டேகக்
கோதுற்றமாமுனிவன் கூக்குறலிட்டோடிவந்து
அபயமபயவிற லவர்க்கபயமென்றான்
விபரமதெல்லாம் வினவக்கேட்டைவர்களும்

ஒருழைபயைபந்து வுயர்வேங்கைசூழ்ந்தாற்போல்
பாருததியெங்கும் பறக்குமந்த மா[illegible]பிறங்க
சிலையம்புகொண்டடர்ந்தே தேடிவிளைவாக
கலைகொண்டமான்பிறகே காதலருந்தான்றொடர்ந்தார்
அகப்பட்டதுபோ[illegible]ற்றவர் தொடர்ந்தால்
மிகைபட்டேயோடிவிடு மீண்டிமைக்குண்முன்னாகும்
பின்னுங்கரந்துவிடும் பேதிக்குமுன்பனாகும்
மன்னவருமிளைக்க மாய்கையாயோடிவிடுந்
தடங்கானுவானுமலைச் சார்புகளுந்தாழ்விடமும்
அடங்காதவனை யலைப்பித்தலக்கழித்து
துடங்காதசூட்சித் தொழின்மாய்கையின்குணத்தான்
அடங்காதவாயிரநா வா[illegible]றைச்சமான்மாயை
ஐவர்முயற்சிகளு மாங்காரமுந்துலையத்
தெய்வமானெட்டுத் திசையெல்லாங்கொண்டழைத்து
செயலுணர்வற்றுத் திகைத்துமயங்கியபின்
தாயப்பெரியபுலி சான்பாய்ந்தவாறுகண்டு
மாய்கைப்பெருமான் மரிவேடந்தானீத்து
ஆலாலப்பொய்கைதனை யவ்வனத்திலுண்டாக்கி
மேலானபார விருக்ஷமதைச்சூழ்ந்துநிற்க
திட்டித்திருந்தான் றிகைத்தயர்ந்தபஞ்சவர்கள்
முட்டிபபெருந்தாக மூற்சையுற்றேயைவர்களுந்
தாகித்துச்சோபமுற்றுத் தானோர்தருவிருந்து
பாகொத்தசொற்றருமன் பண்பிளையோனைப்பார்த்து
தண்ணீர்கொணர்கெனலுஞ் சாதேவன்றானெழுந்து
க[illegible]ணீர்சொரியவந்தக் கானகமெல்லாமலைந்து
ஓர்பொருப்பிலேறி யுயர்விழியாற்றானோக்கி
நீர்பெருத்தவாவியொன்றை நேராகக்கண்டிறங்கி
உவகையுடன்சென் றுயர்வாவியி[illegible]றங்கி
புவனத்தைக்கையாலேப் பூரிப்பாய்வாரியுண்டான்
உண்டகடுநீ ருதரத்தைச்சேருமுன்னே
மண்டுபுனற்கணாயில் மாய்ந்தனன்காணம்மானாய்
நஞ்சாலிளையோ னவிந்ததறியாமன்
மஞ்சார்நகுலனையு மன்னனனுப்பிவிட்டான்
நம்பியைப்போலே நகுலனுமே[illegible]ய்ந்துவிட்டான்
வெம்பிபற[illegible]னு வில்விசயன்றன்னைவிட்டான்
தன்னைப்பணிகின்ற தம்பியிருவரையும்
இன்னற்றடாகமதி லெய்தியேதான்பார்த்து
எடுத்தான்கரங்களினா லேந்தினேர்ந்துகொண்டான்

துடித்தான்பதைத்தான்பின் சோபித்தான்கோபமுற்றான்
வீழ்ந்தானெழுந்தான் வெதும்பினான்வெய்துயிர்த்தான்
தாழ்ந்தானிதெல்லாந் தரியர்கொடுமையென்று
இன்னீர்த்தடாக மிடரானநஞ்செனவும்
நன்னீரின்றாகமதை நாங்கள்பொறுக்காமல்
உண்டோமடிந்தோ முதிட்டிரனுக்காதரவாய்
தண்டார்வலியோனே தண்ணீருண்டாமிடத்தில்
நீயழைத்துக்கொண்டேகி நினைகாப்பதுபோல
வாயுவருள்சுதனே வாழ்ந்திருங்களென்றெழுதி
ஆலநீருண்டே யயர்ந்துமடிந்தனனே
சாலவெகுநேரந் தம்பியர்வாராமையினால்
அறவாளிமைந்த னயர்ந்தேயலமலந்து
மறவாததம்பியரொன் வாராததென்றேங்கி
சோர்ந்தான்மயங்கித் துயராழியிற்சாய்ந்தான்
சார்ந்தேபின்வீமன் றமையன்றனைத்தேற்றி
சோகமுடனவனுந் துக்கித்தேயோடிவந்து
தாகந்தணியத் தடக்கரையைத்தான்பார்த்து
சோர்ந்துமடிந்த துணைவரையுந்தான்பார்த்து
வேந்தனெழுதும் விபரம்விரித்துணர்ந்து
திக்கெல்லாம்வென்று செயகம்பந்தானட்டி
மிக்கமகமேரில் வில்விசயனென்றெழுதுங்
காரைக்கலக்கினின்ற கனிட்டனோசாவதென்றும்
ஆரைநானம்பியிந்த வாவிதரிப்பனென்றும்
காண்டவனமெரித்த காளையோசாவதென்றும்
மூண்டேமாலோடு மூனாந்தானோசாவதென்றும்
தேவரிடுக்கமெல்லாந் தீர்த்தோனோசாவதென்றும்
ஆவிற்சிவனை யடித்தானோசாவதென்றும்
பல்திசைபுவீரம் படைத்தானோசாவதென்றும்
கல்விகரைகண்ட கடவுளோசாவதென்றும்
வல்வில்விசயனையே வாரியேமோர்ந்துகொண்டு
தன்கண்ணீராலே தானவனைமூழ்கவிட்டு
புன்கண்ணுடனே புலம்பிப்பரிதவித்தான்
சாய்ந்தானகுல சகாதேவனைநோக்கி
மாய்ந்தானைப்போலே மறுகிமனமழன்றான்
இன்றுனையானிழந்தோ வென்சீவனிற்குமென்பான்
மன்றல்விசயாநான் வந்தேன்பின்வந்தேனென்பான்
அஞ்சாதுன்றுவிகொள வந்தகனோவென்றுசொல்வன்
வெஞ்சாயகத்தால் வென்கொடுத்தான்விட்டுவனோ

அண்ணனுக்கிவ்வார்த்தை யாருரைப்பானென்றுசொல்வான்
எண்ணியெண்ணிநொந்தே யெழில்விசயன்போலாக
மண்ணிலெழுதிவைத்தான் வஞ்சநஞ்சுப்பொய்கையென்று
தண்ணீர்குடித்திவனுந் தான்மாய்ந்தானம்மானாய்
நெருப்பென்றால்நாவே நினைத்தால்வேம்நெஞ்சகமும்
விருப்புமுயிர்போம்போது விண்ணமுதுநஞ்சாகும்
என்றுலகஞ்சொல்லு மியல்புமுடிந்ததுவே
நன்றிமிகுந்தம்பியர்க ளல்வருவாராமையினால்
கன்றிமெலிந்து கரைந்தானொருவனுமாய்க்
குன்றியுயிருங் குறைந்தான்பரதவித்தான்
உற்றமொழிசொல்வதற்கா யோருயிருந்தான்காணான்
மெத்தமயங்கி வெகுசோபந்தாகமுடன்
சாய்ந்தானிருந்த தருச்சந்தனநிழலில்
சோர்ந்தான்சுழன்றான் சரணையொன்றுமில்லாமல்
சல்லையுடலின்மிசை தானூர்ந்தபுன்சிவன்
இல்லையுண்டென்னு மியல்பாயிவன்கிடந்தான்
இங்கிந்தவாறு யிவர்கள்கிடப்பளவிற்
பொங்கியவோமப் புகையூடொருபூதம்
ஆங்காரமாக வனலூடுதானெழுந்து
தாங்காதகோபமுடன் சத்திகரத்தேந்தி
அம்முனியைநோக்கி யழைத்தாயெனக்கேவல்
விம்மிதமாயிப்போ வினையவேகூறுகென
பூதமோரைந்தும் புரிந்தவுடலெடுத்தோர்
ஓதியதோரைந் துயிருமொருபேருடலாம்
அங்கவரையோரிமைப்பி லாவியழித்திடெனப்
புங்கமுனிமுகத்தைப் பூதமெதிர்நோக்கி
கான்கத்திலவரையுங் காணாதேபோனேனால்
ஈனமுறவுன்னுயிரை எற்றுவேன்விண்ணிலென்று
இன்றையிற்குள்ளேவர்களு மென்கணெதிர்ப்பாரேல்
கொன்றிடுவேனென்றுறுதி கூறிக்கொடும்பூதம்
அந்தக்காலத்தி லடரூழிமாருதம்போல்
சிந்தப்பலதருவுஞ் சேணுமுட்டவேயுயர்ந்து
ஓர்நொடிக்குள்ளே யுலாவித்திசைகளெல்லாம்
பார்நிலைசெய்பஞ்சவரைப் பார்த்துவரும்போது
சந்தனநீழ றனிலேபுன்சிவனொடு
நொந்துகிடந்தோனை நோக்கியேதானணுகி
ஒல்லைப்பொழுதி லுதிட்டிரனுஞ்செற்றிவோன்
இல்லைச்செயன்முயற்சி யேதுமில்லையென்றுவிட்டு

நால்வரையுந்தேடியந்த நச்சுத்தடாகமதில்
மால்வலியுந்தானிழந்தே மங்கிமடிந்தோரைப்
பார்த்துத்திகைத்தசட்டுப் பாவிநச்சுப்பொய்கையிலே
மாத்தலாக்கொன்றுவிட்ட மாபாவிசொற்கேட்டு
காளமுனிவன கனலினமையுற்பவித்து
ஏளனமாயேவிவிட்டா னென்னநினைந்தென்னசெய்தான்
நஞ்சூட்டிக்கொன்றுவிட்டு நம்மைப்பிணத்திடத்தில்
அஞ்சாமலேவுவனோ வற்பமாயெண்ணிநமை
முனிவன்கெறுவி முனிந்தமதமென்னவிந்த
அனிதமதெல்லா மறிவோஞ்செணத்திலென்று
வெவ்வடவையொப்பா மிகமுனிபான்மீண்டேகி
சௌவுமெயிற்றுடனே காளமுனிபாலணுகி
காலமோர்மூன்றுங் கருத்திலுணர்முனியே
ஞாலமதிற்பொல்லா நராதிபதிசொற்கேட்டு
ஆலமதிலருத்தி யைவரையுங்கொன்றுவிட்டு
செத்தவரையாவர் செகத்திலேகொல்வதுண்டு
பித்தனேயென்னைப் பிணத்திலனுப்பினதேன்
மாய்ந்தார்கண்மேன்மேலு மாய்வரோவையகத்தில்
ஆய்ந்தோய்ந்துபாராய்நீ தான்சாவவந்ததென்றுந்
தீயோன்சொற்கேட்டமையால் தீதுனக்குவந்ததென்று
நீயேயெனக்கிலக்காய் நேர்ந்தாயெனவெகுண்டு
செங்கண்ணெருப்புச் சிதறவேதான்சீறி
அங்கிக்கொழுந்தா யடரெயிறுதான்காட்டி
சிங்கப்பற்கண்டு திகைத்தமுனிதன்றலையைத்
துங்கத்திரிசூலத் தாலேதுணித்தெறிந்து
காளமுனியுடலைக் காலாலேசேருக்கி
நிளவுட்லோடு நெருப்பின்மறைந்தபின்னர்
படீரநிழலிற் படுத்தயர்ந்தபார்த்திபனுங்
கொரேதவனத்தாற் குலைந்தேநலிந்திருந்தோன்
தென்றற்பெருங்காற்றாற் றேறியுயிர்பெற்றான்போல்
பன்றற்புயத்தான் மனந்தெளிந்துதான்றேறி
தம்பியர்கடான்போன தாட்சுவடுதானோக்கி
அம்பகமுமங்கி யலமலந்துதானடைந்து
வட்டக்கரையின் மடிந்தசகோதரரைத்
திட்டிகளினீரொழுகச் சென்றுகண்டுதான்வீழ்ந்து
பிளனவரையெல்லாம் பெரியோனுந்தான்றழுவி
என்னைவிட்டுப்போனீரோ வென்மேலிரங்காமல்
ஆருதவியென்றே யகத்தினினையாமல்

ஒருதவியின்றியேனு னுய்வேனோபாவியென்று
நிலத்தினெழுத்தை நிருபன்வாசித்தறிந்து
தலத்தையிழந்தீரோ தம்பியரோயென்றிரங்கி
வீமன்வலிபம் விசயன்பெருவிறலும்
வாமன்சகாதேவன் வண்மைகளுந்தானியம்பி
ஒவ்வொருத்தவீர் மொருகோடிதானியம்பி
செவ்வியுடையோன்றன் சீவன்விடவேநினைந்து
காளம்பொதிந்த கமலத்தைகையாலே
நீளும்புகழா னிறையவேயேந்தினனே
அன்னேரம்வானின் றசரீரிவாக்கெழுந்து
மன்னோர்கண்மன்ன வளர்தருமபூபாலா
அனுசர்கள்சிங்கி யறலுண்டவிந்தமையால்
வினவுமொழிக்குத்தரநீ மீண்டுரைத்தன்னீரருந்தாய்
அன்னைபோற்பூவி லனைத்துயிருங்காக்கவல்லோய்
என்னுரைச்சற்றேகே ளெனவுரைத்தானம்மானய்
தாதையரூபமொடு தானுரைத்தசொற்கேட்டு
மேதையுடன்கைநீர் விடுத்தேதுகூருகென்றான்
சொல்லியதுலிற் சுருதியோதான்பெரிது
இல்லறத்துக்கில்லவளே யெந்நாளுமேபெரிது
மல்லன்மலரின் மணமுள்ளதேயதிகம்
நல்லதவந்தன்குலத்தோர் கல்வியல்பின்மிக்கதில்லை
சிந்தித்தபோதிடரைத் தீர்த்திரக்ஷிக்கவெதிர்
சந்தித்ததெய்வமதே தான்வணங்குதற்கரிய
மாதற்கழகு மடநாணுகற்புமதாம்
மேதைக்கழகு விரிவாகியகேள்வி
ஆசைப்படைத்தோர்க் கழகுதானம்பகுத்தல்
தேசுசெவிக்கின்பஞ் சிறியகுதலைமொழி
நிற்கப்படுத்துவதே நீளும்பெருங்கீர்த்தி
அற்பமேயேற்ப ததுவல்லாலீனமில்லை
சிற்பநீகையேத்த தீம்புனறீதென்றுரைத்து
இவ்வாறுவான்சொல் வியம்பவேதான்கேட்டு
ஒவ்வாதகீர்த்தி யுறவோனெதிருரைப்பான்
என்னுயிரின்மிக்க விளையோர்களையிழந்து
பினனுயிர்நான்வைப்ப பிழைபிழையென்றேயுரைப்ப
இந்தவிதமா யியம்புந்திருமகன்முன்
வந்துசொரூபமுடன் மார்போடேதான்றழுவி
தெவ்வர்விரகுமவர் செய்தகொடுந்தீவினையும்
எவ்வமகல வெதிர்விரகுசெய்ததுவும்

ஒறுதற்கெண்ணி யுறவோனைத்தான்பார்த்தான்
தாதையிவனாகுமெனத் தாளிரண்டுஞ்சென்னிவைத்தான்
பணிந்தமகனைப் பரிவாகத்தான்றழுவி
துணிந்தேவுனக்கான தோட்டுணையாந்தம்பியரில்
ஒருவனுனதுமன தொத்தோனிடத்தணுகிச்
சுருதியிவைநாச் சொல்லியெழுப்புகென்றான்
தந்தைசொன்மிக்கதொரு மந்திரமிலாமையினால்
முந்தவுயிர்விட்டோனை முதல்வோனெழுப்பினனே
சந்ததியைப்பார்த்து தருமாதிபனுரைப்பான்
விந்தநிகர்வீமன் விசயனையுங்கூவாமல்
வளமைப்பிரபலனா மன்னுவெழுப்பாமல்
இளையவனைச்சியிசைந்த தென்னென்றுகேட்சலுற்றான்
குத்திரமில்லாததொரு குந்தமாதேவியர்க்குப்
புத்திரன்யானொன்று புனிதாவிருக்கலுற்றேன்
மத்திரைக்குத்தானோர் மகன்வேணுமாதலினால்
உத்தமனேசாதேவனை யுகந்தியானழைத்தேன்
என்றுநடுநீதி யிவனினைவுதானறிந்து
வென்றியுடற்புளக மேன்மெலுமேயேறி
எந்தன்மனம்போ லிவனினைவதப்பிலென
சந்ததிமேலன்பு தழைத்துக்களிகூர்ந்து
வெல்லும்பலமறையு வெற்றிவரிவில்லுடனே
வல்லபலசாயகமு மற்றுமொருகூர்வேலும்
நல்லதனிலீய்ந்தே யுயருமறைபயிற்றி
வில்லினிகரில்லா விறலுமிகவளித்தான்
மைந்தனுக்கன்பாய் வரங்கள்பலவீய்ந்து
உந்தனுக்கின்ன முதவிக்கொரு துணையை
அழைத்துநீகொள்கென் றனகனுரைத்திடவே
விழித்தானகுலனையே மேலானசீர்த்தியுள்ளான்
உதவிக்கிசைந்த வுறமாந்துணையைவிட்டு
சதிருத்தமாநகுலன் றன்னையழைத்தவிதம்
என்னமதியென் றியற்றாதைதான்கேட்க
மன்னர்கோன்றாதை மனமகிழ்ந்துயேதுசொல்வான்
எந்தையேயன்னை ரிறந்தமுறையல்வாமல்
நிந்தையாய்த்தானெழுப்ப னீதியோவென்றுசொன்னான்
இவ்வாறுகேட்டே யிருகண்மலைழத்துளியால்
ஒவ்வாதகீர்த்தி யுதிட்டிரனைமூழ்காட்டி
விசயன்றனையெழுப்பி வீமனையுந்தானெழுப்பிச்
சிசையனைத்துங்கீர்த்தியுள்ளோர் திட்டமாய்னீங்கவென்று

காளமுனியைக் கவரனழைத்தேயண்ட
கோளமளவக் கொடுவேள்விசெய்ததுவும்
உருப்பட்டப்பூதமதி லுற்பத்தியானதுவும்
கருப்புத்திரனேயான் காக்கும்பொருட்டாக
மானாகவந்து மருட்டிமயக்கியதுந்
தானலப்பொய்கைதனைத் தானுகச்செய்ததுவும்
நால்வராருந்தியதி னல்லாவிமாய்ந்ததற்பின்
சாலவலுப்பூதம்வந்து சவமாகிவிட்டதென்று
அந்தமுனிவனுட வாவியைப்போய்மாய்த்ததுவும்
வந்தவிதமெல்லா வகுப்பாய்விரித்துரைக்கத்
தந்தைதிருப்பாதமதிற் றனைவரும்விழுந்தார்
சிந்தைமகிழ்ந்தவனுஞ் செங்கையாற்றானணைத்து
வாழ்வீரென்மென்மேலு மக்கடனைவாழ்த்திவிட்டு
தாழ்வேதுமில்லாதான் றனகன்றானம்மானாய்
புண்ணியனும்போனதற்பின் பூபதிகளைவர்களும்
வண்ணத்திரௌபதிதான் வைகுமிடத்தணுகி
பட்டவவதி பலதும்விரித்துரைத்து
சட்டழகனைவருமக் கானத்தில்வீற்றிருந்தார்

## விராட பருவம்.

### நாடு காந்துறைச் சருக்கம்.

அங்கையினேமிசங்குவா டண்டோடடற் சராசனந் தரித்தருள்வோள்
சங்கையின் மறைகளாயிரங் களுக்குஞ் சாற்றுதற்கரிய தத்துவத்தோன்
கங்கையினரலுங் காளியன்முடியுங் காளிந்திக் கரையுமேகமழும்
பங்கயமலர்க ளிரவுநண்பகலும் பணிந்துபாடுது மவன்புகழே.
ஆறிரண்டாண்டா யலைந்துவனந்தனிலே
மாறிரண்டுபேசாத வாய்மையுள்ளோர்தானிருந்து
நான்மூன்றிரண்டிலுள்ள நாளெல்லாந்தான்கழிந்து
மாமூர்த்தியைவர்களும் வன்னிசருங்கன்னிகையுங்
காட்டிற்றிரியுமென்ற காலங்கழித்தோமே
நாட்டிற்கரந்திருந்து நாடியேயோராண்டு
போக்குதற்குநல்ல புகழ்நாடேதோதுமென்று
வாக்கிரண்டுசொல்லாத மன்னவனுங்கேட்டளவில்
தேவர்கோன்மைந்தன் சிந்தைகளிகூர்ந்து
யாவருக்கும்வள்ளலென வாதரிக்கும்பேருடையோன்
வள்ளன்மூவேழினுக்கு வண்மைமுதன்மையுள்ளான்
தெள்ளுபுகழ்வேள்வித் திறலான்விராடனுழை
மச்சனுடெய்தி வரிசைபெறுவமென்றே

அச்சமிலான்மற்றுளநா டாகாதெனப்புகன்றான்
விலலால்வலியான் விளம்புமொழிநன்றெனவே
செல்லார்கரன்றருமன் சிந்தைகளிகூர்ந்து
மூதவஞான முனிவோர்களைவணங்கி
மாதவத்தோராசுமாயும் வண்மைகளைப்பெற்றுகந்து
பண்ணுகுறிஞ்சிநிலம் பாலைநிலந்துலைத்து
மண்ணுகமழ்முல்லை மருதஞ்சிலகடந்து
ஓயாக்கவிகை யுதவுவிராடப்பெருமான்
சாயாக்கவிகைநிழற் றங்குகின்றநாடடைந்தார்
கரவாயிரவதனிற் காவலன்றன்னூடடைந்து
இரவோர்க்கோமாதருப்போ லீயும்விராடனகர்
பொற்புரிசைகண்டோர் புறத்தின்மயானமிசை
விற்பனுவின்மிக்கோர் விரவியினிதிருந்து
சூரிகௌமாரிதிரி சூலிமகமாயியுயர்
வீரிகௌரி விறற்குமரிவேதாளி
ஆரணிகங்காளிதிற லியாமளைமாகாளிசெய
நாரணிமுக்கண்ணி நடனப்பதக்காளி
மாதரிசண்டிகையிவ் வண்ணப்பெயருடைய
சீதரன்றங்கை திருவாலயத்தின்முன்னே
நிற்கின்றவன்னி நெடியபெருந்தருவில்
விற்கடியபல்படையு மெய்க்கவசமும்பலவும்
உயர்ந்தபெருங்கோட்டி லொளித்தார்மறைமொழியால்
வயஞ்செறியுமாகாளி வண்ணப்பதம்பணிந்து
எம்படைகணிந்த னிடத்திலபிமானமென்று
செம்பவளவாயா டிருமுன்பரஞ்சாட்டி
தம்பியர்கடன்வணக்கந் தன்றுளிலேதரிக்க
கம்பமதயானைமன்னன் கங்கனெனப்பேர்படைத்து
முன்னூலிலங்க முனிவன்வடிவாகி
அன்னூட்டரசிடத்தி லறன்மைந்தனுமடைந்தான்
மச்சர்கோன்கண்டு வருமுனியைத்தாள்வணங்கி
மெச்சியையாநீயார் விளம்புகெனக்கேட்டான்
பாராளுதிட்டிரற்குப் பாங்காயுடலுயிராய்ச்
சீராயிருந்தேன் நிகழ்வனமெல்லாந்திரிந்தேன்
பாண்டவர்கடான்வெளியாய் பாரில்வருமளவும்
ஆண்டடளவுநின்ற னருகிலிருக்கவென
வந்தேனிடங்கொடுத்தே வண்மையுடன்காத்திடென்றான்
சந்தோழமாகித் தருமனையேகண்டான்போல்
என்மனைநீவந்திடயா னென்னதவஞ்செய்தனென்று

தன்மனங்கூர்ந்து தனதேழ்பிறவியையு
நீத்தேனின்றென்று நெடிதாயுபசரித்து
மூத்தோனேயிங்கிருநான்., மோக்ஷமுறவென்றுரைத்தான்
மல்லுக்குவீரன் வயக்கதைக்குமேதீரன்
வெல்லும்பிரசண்ட வீமனுமேதானெழுந்து
மண்டலமன்னன் வளர்சபையின்முன்புவந்து
தண்டமெனக்கங்கனிரு தாளிணையைத்தானோக்கி
வீழ்ந்தான்மடையனென வீமனுக்குயானிருந்தேன்
தாழ்ந்தேன்பசியாலே தானேனீயாதரித்தால்
நளபாகமாயடிசி னற்கறியுமியான்சமைப்பேன்
வளமானவென்பாகம் வானோர்க்குங்கிட்டாது
வாராதுவென்பெயரு மன்னுபலாயனென்றான்
வீராயிருந்திடென வெகுமதிபொற்பூணளித்தான்
வீராதிவீரன் விசயனெனப்பேர்படைத்தோன்
ஓராதுருப்பசியா ளுகந்தளித்தசாபமதை
உன்னியோராண்டு முறக்கழிக்கவேநாடி
கொன்னையறப்பேடியுருக் கொண்டான்கோதண்டமன்னன்
மாமகுடமன்னன் வளநகரைத்தானோக்கிக்
கோமுனிவன்பாதங் குறித்தொருசார்தான்வணங்கி
பார்த்தனரண்மனைவாழ் பண்பானபேடியுமியான்
எத்தமுளகீத மியலுந்தருநடநூல்
நடந்தொழினூரியற்கு நன்றாய்ப்பயிற்றுவிப்பேன்
இடமுற்றவென்பே ரிருகணையென்றோதுவர்கள்
ஆதரிப்பாகீயுன் னரண்மனையிற்றானிருக்கப்
பேதமற்றியானிருப்பேன் பின்புனக்குகீர்த்தியென்றான்
மன்னன்விராடன் மகிழ்ந்தவடன்சொற்கேட்டு
நின்னைநிகரொப்பார்க ணீணிலத்திற்கண்டதில்லை
என்றவனைமெச்சி யிழைமாமணித்துகில்கள்
வென்றிபெறவளித்து மிக்கவுயர்புத்திரியாள்
உத்தரைக்குனீயே யுயர்பாங்கியாயிரென்று
வித்தகநற்பேடிதன்னை வீட்டிலனுப்பிவிட்டான்
பின்னுமற்றுநாட் பேராளன்றானகுலன்
மன்னன்சபைதனிலே வந்துபரிச்சாரதியாய்
நின்றேமுனியை நிகரிலான்றான்வணங்கி
நன்றானமன்னு நகுலன்பரிநடத்தும்
சாணியான்வெம்பரியின் றன்னினைவெல்லாமறிவன்
கோணற்சுழிதுற் குணமெல்லாமியானறிவேன்
என்றானவனுக் கியல்பாம்வெகுமதிகள்

அன்றேயளித்து யடற்பரிக்கெல்லாந்தலைமை
செய்தானதற்பின் சிலநாளுந்தான்கழிந்து
வெய்தாகக்கிதாரி வேடப்பலிப்பாக
அறமோர்வடிவான வந்தணனைத்தான்வணங்கி
இறைசகாதேவ னிடையனெனவுரைத்தான்
அன்னவனுக்கே யரியவெகுமதியும்
மன்னவனுக்கீய்ந்தே வன்பொதுவரியாவருக்கு
நீயேதலைமையென நேசமுடனேவிடுத்தான்
தாயேயனையவன்றன் சார்பதனில்வீற்றிருந்தான்
மாமயிறிரௌபதியும் வண்ணமகடானுமி
தேமருவுதாரான் றிறலார்விராடனகர்
கோமகளையெண்ணியவள் கோயிலிடைபுக்கினளே
அழகான்மிகுந்த வரிவையருமப்போது
பழகாததாதியர்கள் பண்புடையாளைப்பார்த்து
சுதேட்டிணையின்று துரோபதியின்மிக்கான
இதத்தவழகுடையா ளிங்குவந்தாளென்றுரைக்க
அங்கவளைப்பார்த்தே யழைத்துவாவென்றுரைக்க
துங்கமுடையாளைச் சுதேட்டிணையின்முன்புவிட்டார்
மன்னன்றிருத்தேவி வந்தமின்னைத்தானிருத்தி
பொன்னனையாளின்னகரிற் போர்ந்தமொழிகூறுகென்றாள்
தான்விரகுமாய்கைச் சகுனிபொருசூதால்
கான்விரதமாய்ச்சேர்ந்த காவலர்கடங்கோயில்
மான்விழிப்பூவல்லி மருங்குற்றினிதிருக்கு
நான்விரதசாரணியா ணங்கையரோயென்றுரைத்தாள்
பூசுதலுங்கட்டுதலும் பூண்பதுறமுடித்தல்
தேசோடலங்கரிக்குந் திட்டவட்டமியானறிவேன்
மங்கையணைப்பொற்பாக்கும் வண்ணமகளெனயான்
துங்கமுள்ளயெங்கையிடந் தோகையேவாழ்நாளிற்
கந்தருவர்காவல்புரி கற்புடையாளியான்காணும்
இந்துநுதலாய்மாந்த ரியார்முகமுநோக்கெனியான்
எந்தனையேயாடவர்க ளிச்சையுடனோக்குவரோல்
செந்தழலிற்பூந்தவரோ திட்டமாயென்றுரைத்தாள்
முந்தவெந்தன்கற்பழிந்து மோசமறக்காப்பையென்று
வந்தனனின்மாளிகையில் வைகவெனவோதினளே
வண்ணமகள்கூற மகிழ்வினொடுகேட்டுத்
துண்ணென்றாண்டு சுதேட்டிணைமின்னைவிரும்பி
விண்ணவர்கள்காவல்பெறு மெல்லியேநீயெனக்கு
கண்ணிணையுநீயெனது காவலெனதுயிரின்

அன்னையெனமகிழ்ந்தே யன்பாயருகிருத்தி
என்னருகேவாழ்கென் றிதமுற்றினிதிருந்தாள்
பஞ்சவருந்தேவியரும் பண்பாய்க்குறித்தபடி
மிஞ்சவிதவிதமாய் மென்மேலுஞ்செய்திருந்தார்
ஆருதொழிலு மவரவர்கண்மிக்காக
வீருபெறச்செய்திருந்தார் வேந்தன்மகிழ்ந்திருந்தான்
சீராற்சிறப்பானுஞ் செல்வத்தாற்கல்வியினுற்
பேரான்மகிமையினுற் பெய்யுமுகிற்பொருட்டால்
நாடெங்குமேவிளங்கி நல்விளைவுமுண்டாகிச்
சேடெங்கும்பொங்கிச் சிறந்தேசதமடங்காய்
பஞ்சவர்கள்வந்துறைந்த பண்பானபாக்கியத்தால்
சஞ்சலமின்றித் தழைத்தான்விராடபிரான்
தாழ்வில்லாமன்னன் றனதுபெருநகரில்

## மற்போர்ச் சருக்கம்.

ஆயிரமல்லற் கதிபனொருமுதியோன்
தீயிலுந்திய சினத்தாற்கரிப்பலன்கள்
பத்தாயிரமுடையான் பண்பாகியநிழற்போல்
வித்தாண்மைமல்லர் விறலாயிரர்சூழ
வந்தான்விராடன் மகாசபையின்முன்பாக
எந்தாய்நின்மல்லனைவிட் டென்றெழில்பாரொன்றுரைத்தான்
குத்திரமீதிற் குடிகொண்டிகலாடி
தத்திக்குதித்தெழும்பித் தாவுபெருஞ்சிங்கமென
வந்துநின்றமல்லர்களை மன்னன்முகநோக்கி
சிந்தைவெருவித் தெளிந்தவனையங்கிருத்தி
தன்னிடத்திலுள்ள தைரியஞ்சேர்மல்லர்களை
முன்னிடத்திலேயழைத்து முட்டியுத்தஞ்செய்யவிட்டான்
ஆயிரம்பேருக் கதிபனவனைப்பார்த்துப்
பாயிருட்போன்றதொரு பப்பரனையேவிவிட்டான்
அந்தமல்லன்சென்றே யரசனுடமல்லர்களைச்
சந்தமுடனின்றயுத்தந் தான்செய்தேவெற்றிபெற்றான்
ஒன்றொன்றய்நூறு வுறமானமல்லர்களை
வென்றன்றுநின்றான் விராடன்மிகப்பயந்து
மல்லவொருநூறு மடிந்தவகைக்கிரங்கி
வெல்லவகையில்லான் விசாரம்பெரிதாகி
பூசுரனுந்தன்மனையே பூபாலகனுக்க
ஈசனனையா னிறைவன்றனைப்பார்த்து
இன்றைக்குப்போனா யிதமாகத்தானிறுத்தி

வென்றியுறுமல்லனுக்கு மிக்கவெகுமானஞ்
செய்துநாளைப்போர்க்குத் தேடியாட்டான்பார்த்து
வெய்திலுடன்மற்போர் விடுநீயெனவுரைத்தான்
அந்தணன்சொல்லை யடவானபுத்தியென்று
சிந்தைமகிழ்ந்துமிரு செங்கைநிதிசொரிந்து
இன்றுயுத்தம்போது மெனவேயிவனிறத்த
நன்றென்றுமல்லர்களு நாடியேசம்மதித்தார்
ஆடாயிரமு மரிசிகறிபருப்பும்
ஈடானகாய்வகைக ளெத்தனைபதார்த்தமுடன்
வீமனிடமீய்ந்தே விருந்திவற்குச்செய்திடென்றான்
தாமமணிமாருதியுந் தானவையெல்லாவாங்கிக்
கல்லோடசனங் கருதியேவேசவைத்து
வல்லான்முழுத்தகராய் வாட்டினனக்கினியில்
காய்வகைகளெல்லாங் கருதிமுழுசாயவித்தான்
தியவிதமாகச் சேரவேதான்சமைத்தான்
மல்லர்களைக்கூவியந்த மாருதியுமேதுசெய்தான்
கல்லைதனைக்கொண்டு கடுகவேவாருமென்றான்
எங்கேயிலைபிருப்ப தெங்களுக்குகூறுகெனக்
தங்காதொருவடவா றன்னையேகாட்டினனே
மேகமளாவ விரிந்தவடவாலதனை
தாகமுடன்கண்டவர்க டானேநடந்தனரோ
எட்டாதுயர்ந்த வெழிலானவாலதனைக்
கட்டானமல்லர் கலங்கியேபார்த்துநின்றார்
மடையன்குடமெடுத்தே மல்லருகேகுதலுந்
தடையின்றியிம்மரத்திற் றுனுரிலைபறிப்பார்
என்றுமல்லர்சொல்ல வெழின்மடையன்றானாலே
அனறியேதான்மிதிக்க வாலமரஞ்சாய்ந்ததுவே
இந்தமரத்தி லிலைபறிக்கவேலாதோர்
வந்தீர்கண்மற்பொருத மல்லரென்றுபேருமிட்டு
என்றிவன்சொல்ல வெறியழற்கண்ணுற்பார்த்தான்
நன்றுயிலைபறித்து நாழிகையின்மீளுமென்றான்
ஆயிரம்பேரும்பிடித்தே யாயுமிலைக்கொம்புகளை
ஒருகையிற்பற்றி யொருகரத்திற்கிள்ளியிலையும்
விரவியிருக்க விசைத்தெழும்பகாலெடுத்தான்
அந்தரத்திற்கொம்புகளி லாயிரமாமல்லர்களும்
உந்துவெளவாற்றெங்குதல்போ லொத்திருந்தம்மானாய்
ஆலமரத்தமர்ந்த வாயிரமாமல்லர்களும்
ஓலமெனவாய்விட் டொறினர்காணப்போதே

மல்லராரற்றியபின் வாய்வுதருங்குமரன்
மெல்லவேயாலே விரலான்மிதித்திடவே
ஆலமரம்விட்டே யவரவர்கள்கிள்ளிலையால்
கோலியேகல்லேவைத்துக் கொண்டிருந்தாருண்பதற்கு
சோறுமுழுத்தகராய் சுட்டதையுமுன்புவைத்து
வேறுமுழுக்காய்வகையு மென்மேலுங்கொட்டினனே
பார்த்தார்திகைத்தார்கள் பற்கடித்தாருக்கிரமாய்
வேர்த்தார்கொதித்தார்கள் வெந்தழல்போற்கண்சிவந்து
முட்டாண்மடையனிட மூரற்கிசைந்தமென்று
கட்டோடேமல்லரெல்லாங் கைதொடாதேயெழுந்தார்
மடையனுபசார வார்த்தைசொல்லக்கேளாமல்
தடையறமல்லர் தலைவன்சபையடுத்தார்
மன்னனையுமெண்ணாமல் வாய்த்துடுக்காய்மல்லர்சொல்ல
என்னகுறையேதுகுறை யென்றரசன்றான்கேட்க
நடந்தசெயல்கள் நரபதிக்குக்கூறினரோ
படர்ந்தபுகழான பலாயன்றனைச்சினந்து
கொண்டுவாவென்ன குரவனுரைப்பதன்முன்
கண்டுபலமல்லரெல்லாங் காவலனைத்தான்பார்த்து
உண்டதுபோது முனதுபடைமல்லர்களை
தண்டிவிகல்புரியத் தான்விடெனக்கூறினரோ
மல்லரிவையுரைக்க வாய்வரண்டேமன்னவனும்
வெல்லுவதற்கேற்றமதி வேதியனைத்தான்கேட்க
அஞ்சுவதேன்மல்லர்களோ ராயிரம்பேராலும்
விஞ்சைபயின்மடையன் வென்றிவெனென்றுசொன்னான்
சொன்னவைகேட்டுத் துரைராயன்றான்மகிழ்ந்து
அன்னமடைய னவன்வரவென்றாள்விடுத்தான்
தூதன்வருமுன்பாகச் சோறுமுழுத்தகரும்
போதமுடன்கறியும் பூபதியுமுண்டுவிட்டு
சிங்கக்கொடியான் ஜெயவிஜயகெம்பீரன்
புங்கமுடன்மன்னன் பொலிந்தசபைக்கேகினனே
மாருதியைத்தான்பார்த்தே மல்லருட்னீடாக
போர்பொருதவுன்னாலே போதுவியோவென்றுரைத்தான்
எந்தனுடனே யெதிர்த்துவருமல்லர்களை
சிந்திப்பிளப்பேன் செணத்திலேயென்றுசொன்னான்
மனவைரங்கொண்டிருந்த மல்லர்களைப்பார்த்துச்
சினமடையனோடே சினந்துபோர்செய்யுமென்றான்
மன்னனுரைத்திடவே வைப்புருதிமல்லரெல்லாம்
சின்னம்படப்பொருதச் சீறினர்காணம்மானைப்

ஆயிரம்பேர்நீங்க ளடர்ந்தேயொருவனிடம்
மாயுயுத்தஞ்செய்தன் மனுமுறையோவென்றலுமே
கேளாதவர்போற் கிளர்ந்தபெருஞ்சினமாய்
கோளாகவந்து குறுகியேதாக்கலுற்றார்
சிரத்திற்புடைத்திடுவார் திண்புயத்திற்றாக்கிடுவார்
உரத்திற்புடைத்திடுவா ரொண்முகத்திலேபுடைப்பார்
காதடைக்கத்தாக்கிக் கபாலத்திற்குத்திடுவார்
மீதவயவங்களெல்லாம் விம்மியேதாக்கலுற்றார்
உத்தபுகழ்வீம னுடல்களொன்றுந்தோற்றுமல்
மொய்த்தனர்கண்மல்லர் முசுற்றுப்பெரும்படைபோல்
சீறிப்பலாயன் றிறமானமல்லர்களை
மீறிப்புவியில் விளவேயுலுக்கிநின்று
உருண்டேபுரண்டு வுயர்கூட்டமாப்பதுபோல்
திரண்டுவந்தமல்லர்களைச் சேரவளைத்துவிட்டான்
நூற்றுப்பத்தான றுவலரியமல்லர்களைக்
காற்றுப்புதல்வன் கணத்திலளைத்திடலும்
பார்த்தான்றிகைத்தான்பின் பப்பரவருக்கரசன்
காற்றன்மகன்மேற் கடுந்துசெருமூண்டான்
பொருப்பொத்ததிண்புயங்கள் பூரித்திருமாந்து
நெருப்பொத்தகண்சிவந்து நின்றார்கண்மற்போரில்
மல்லனுக்குமன்னனென வாயுதருங்குமரன்
கொல்லனிவனந்தே குறுகிமிகப்பதறி
கரங்கடனைமுறித்துக் கண்டந்தனைத்திருகி
உரங்களறக்கிழித்தே யொண்ணுதரந்தான்பீற
சரியவுடறுவைத்துச் சண்டநரசிங்கமென
கிரியைநிகர்த்தபுயன் கெம்பீரமாகநின்றான்
ஆங்காரமாயதட்டி யத்தியென்றமல்லனைத்தான்
பாங்காய்விராடன் பரிந்தேமிகத்தழுவி
ஆருக்குமிக்கா யதிகப்பலமுடையாய்
போருக்குனைப்போற் பொருந்துதுணையாரெனவே
வரிசைபலவு வளமாயுகந்தளித்து
பிரியமுடன்றன்னிடத்திற் பேதமறவிருத்தி
என்றும்பிரியா திருக்கும்பெருந்தலைமை
மன்றலணிமன்னன் மகிழ்ந்துகொடுத்துகந்தான்

## கீசகன்வதைச் சருக்கம்.

அன்றுள்விராடனுக்கே யன்பான்றிருத்தேவி
மின்றுரிடையாடன் மிக்கசகோதரர்கள்

ஆற்றுநால்வோர்களினு நோக்கிமுதற்பிறந்தோன்
சாற்றுமழகிற் சௌரியத்தின்மிக்கானோன்
திண்மைவிராடனுக்கே சேனைபதித்தலைவன்
உண்மையிடும்பனையே யொத்தபுஜபலத்தான்
வான்றருவையொத்திலங்கும் வள்ளல்விராடன்மனையாள்
ஆன்றசகோதரிமூத் தாளடியிற்கீசகனும்
வந்துபணிந்தே மகிழ்வாய்த்திரும்பையிலே
கந்தருவர்காவல்பெறு கற்புடையபொற்பாவை
நந்தவனத்திலுறு நன்மலர்கடாளுய்ந்து
சந்தமுடனேவிரத சாரணியாளங்குவந்தாள்
தேனோவழகொழுகுஞ் சித்திரமோதெள்ளமுதோ
மானோமயிலோ வரிக்குயிலோவஞ்சகமோ
காரோசிலையோ கணையோமுழுமதியோ
வாரோதுடியோ வராலோநற்புத்தகமோ
கேசாதிபாதமெனக் கீசகனுந்தானினைந்து
பேசாதகலநிற்கும் பெண்களுடனேவினவ
வண்ணமகள்கற்பின் வலியாலெனவுரைக்க
பெண்ணரசிபாதம் பிரியமுடன்மூன்றெழுது
என்னுவிபோகாம வின்றெனையேகாத்தாயேல்
பொன்னேயுனது புழுக்கையான்றப்பாது
என்றுபலவா யிரமாயுபசாரம்
அன்றவன்சொல்ல வதுக்கொன்றும்பேசாமல்
மெய்மறந்தேநின்று வெடுவெடெனத்தானடுங்கி
கைமறந்துநெஞ்சங் கலங்கியகண்ணூறோட
தேறுபவமிம்மை மறுமைதெரியாதான்
மாறுபகர்ந்துமிகு மையன்மொழிபிதற்ற
இந்தவரசுமுந்த விவனுயிர்க்குங்கேடுவந்தோ
சிந்தைகெட்டோயிவ்வாய்மை செப்பினுய்தீயோனே
மாரன்கணையான் மடிந்தாலுவேறுபிறர்
தாரம்விரும்பார்சு டக்கோர்தகாதுனக்கு
எண்ணுமல்வந்தா யிமைக்குமுனநின்னுக்கை
மண்ணாய்ப்பொடிந்திடுவாய் மன்னுவெனவுரைத்தாள்
பேதையிவைசொல்லப் பெருங்காதல்வெள்ளமெனு
நோவதுகொண்டே நொடிக்குள்ளழிந்தாலும்
உந்தனதாத் தளியமிர்தமுண்டானல்
எந்தனுயிர்செத்தே யிறக்கினுமேமோக்ஷமென்று
கல்லுமிரும்புங் கரைந்துருகுமென்றுயரால்
வல்லுருக்காறைலு மனதிளகவேணுமென்றான்

பொற்பதத்திற்சென்னி பொருந்தவேதான்வீழ்ந்தான்
கற்பின்வலியாள் கடுகடுத்துக்காலுதறி
கைநடுங்கிக்கானடுங்கிக் கண்ணடுங்கியுண்ணடுங்கி
மெய்நடுங்கிரண்டு விழிவழியேயாறோட
பதறிச்சுதேட்டிணைமுன் பாவிசொன்னதீமையெல்லாம்
உதறியுரைத்துநிற்க வொண்ணுதல்கண்ணீர்துடைத்தாள்
உந்தன்மனையி லுறுமுன்னெனைக்காக்குங்
கந்தருவர்காவல்பெறுங் காக்ஷியெல்லாமுன்புரைத்தேன்
இச்சியார்யாரு மெனதுகற்புக்காவலினால்
நச்சினனென்னைமிக நாடியுயிரிழந்து
அரமாதர்தோள்சேர்வ தற்கேதுவாகிநின்றான்
விரைவாயுனதுபின்னோன் வீணிலுயிர்மாளாமற்
தக்கமதிசொல்லியவன் றன்னையனுப்பாதிருந்தால்
ஒக்கவுனக்கு மொழியாததுன்பமென்றாள்
இடியுண்டநாக மெனவேநடுநடுங்கி
வடியுண்டகண்ணோடு மன்னன்றிருத்தேவி
கதுமென்றுசென்றிளைய காளைமுகநோக்கி
பதறிச்சினந்தே பகராதெல்லாம்பகர்ந்து
இனிமேலொருக்காலு மிங்கேவராதேயென்று
கனிவாய்ந்தசொல்லாள் கழறமனம்பயந்து
சென்றுமனையடைந்தே சித்தசன்றன்பூங்கணையாற்
குன்றிமெலிந்துருகிக் குத்துயிர்ப்பட்டான்போல
பித்துப்பிதற்றிப் பெருங்காமநோய்க்காற்றால்
சத்திகெட்டுமேன்மேற் றவித்தயர்ந்தானம்மானய்
அக்கங்குலோர்யுகமா யன்னோன்றுயிலிழந்து
துக்கங்களாகிச் சுழன்றானேகீசகனும்
பாவிமனைச்சேடியர்கள் பாராளுமன்னனுட
தேவிதனைவணங்கித் தேனேயுனதுமுகங்
கண்டுதென்சிந்தைக் கலக்கமொழிந்தேனான்
மண்டுங்கனற்காச்சல் மாறுமுயிர்பிழைப்பேன்
என்றானுனக்கே யிளையோனெனவுரைக்க
நின்றாளுஞ்சென்று நெறிகெட்டசிந்தையுள்ள
கீசகாவென்றே கிளர்த்துமொழிகேட்டுப்
பாசமாய்மூத்தாள் பதமலரைத்தானிறைஞ்சி
வண்ணமகளை வருந்தியெந்தன்முன்புவிட்டால்
கண்ணினாற்கண்டாலென் காமனோய்தீருமென்றான்
உருகிக்கருகி யுருகெட்டறத்தயங்கி
அருகிலுப்புப்பாண்ட மாயிருந்தகாளைசொல்லால்

அருந்ததியன்ன ளடியிலவள்வணங்கிப்
பொருந்தியுனைக்காணிற் போகுநோயென்றுரைத்தான்
நெருப்பிற்புழுப்படுமோ நின்கற்போமங்குவது
இருப்புத்தூணைச்செல் லிசைந்தேயரிப்பதுண்டோ
ஆதலானீபோ யலங்கல்கரத்தளித்து
நோதலகற்றி நொடிக்குள்வாவென்றுரைத்தாள்
சொல்லாதசொல்லைச் சுதேட்டிணையாடானுரைக்க
வில்லார்ந்தமெய்யாள் விழிநீர்மிகத்ததும்பி
பாதகமான பழிமொழியென்முன்புரைத்தாய்
நாதனுடனின்கிளைக்கு நாசமிதென்றெண்ணுமல்
முன்சொன்னகாவல் முறைமையுமேயோராமல்
என்சொன்னையென்மே லினிக்குறைகள்சொல்லாதே
உன்றுணையையின்றிழந்தா யுற்றதுநான்சொற்றதென
மன்றன்மனைகொண்டுசென்றாள் வண்ணமகள்கண்ணெழுக
தோகையுரைத்தகடுஞ் சொற்கள்செவிதுளைப்ப
ஆகமெலிந்தா ளரசன்றிருத்தேவி
வெல்வதெவர்தந்தம் விதியையெனமெய்மறந்து
செல்வவரசன் றிருந்தேவிமெய்மறந்து
வன்கீசகன்மனையில் வண்ணமகளேகுமுன்னே
நன்காயுதயகிரி நண்ணினனாதவனும்
ஆதவனைக்கற்புக் கருந்ததியாள்பின்றுதித்து
மாதவனேயெந்தன் மனநிலையுங்கற்பறிவாய்
எந்தனுடன்கற்புக் கிழிவொருக்கால்வாராமல்
உந்தனருளா லுகந்தெந்தனைக்காப்பாய்
என்றுபுகழ்ந்தே யிலங்குகரமாலைகொடு
மன்றலணிகீசகன்முன் வந்துநின்றாளம்மானை
மாலையனலாய் மலர்ச்சந்தனமனலாய்
சாலப்பணிமணிக டன்பஞ்சணையனலாய்ப்
பாத்துக்கலங்குமந்தப் பாதகனிப்பாவையெழில்
தோத்தமதுகண்டான் றுயர்தீர்ந்துடறெளிந்தான்
எந்தவமேயென்றயவே யெந்தன்பெருவாழ்வே
வந்ததென்னையாள்கவென வந்ததுவேபோதுமென்றான்
வருகவருக மதுரமொழிவாய்மை
தருகத்தருகவுந்தன் றன்வாய்த்திவலையெனக்
கிடந்தானெழுந்தானக் கேட்டைநினையாமன்
மடந்தைதனைத்தழுவ வந்துநெருங்கலுற்றான்
நடந்தோடினாண்முயலாய் நாய்போலிவன்விரைவாய்த்
துடர்ந்தானறிவுகெட்ட சூரன்மகாபாவி

ஓடினான்மன்ன னுயர்ந்தபெருஞ்சபையிற்
கூடினான்பொல்லாக் கொடும்பாவிகீசகனும்
மன்னன்பெருஞ்சபையின் மாதுவிழுந்தழவே
பின்னும்பயமுறவே பெயர்ந்துகரம்பிடிக்கக்
கிட்டினான்மன்னன் கிளர்ந்துபயந்திருந்தான்
வட்டப்பருதி வடிவாகியவரக்கன்
கோபமுடனே கொதித்தேயோர்சிங்கரனைச்
சாபக்கணைபோலத் தானேவியேவிடுத்தான்
சூறைப்பெருங்காற்றாய்த் தோன்றியந்தக்கிங்கரனும்
மாறுதரக்கீசகனை வந்தெடுத்தேவீசினனே
அந்தரமாக வவனெழும்பிவீழ்ந்ததையுங்
கந்தமலரணியுங் காவலனும்பார்த்தயர்ந்தான்
எறிந்தவிசையா லிவன்வீழ்ந்தவன்மையினாற்
பிறிந்தொன்றும்பேசாமற் பேதித்துளமெலிந்தான்
மெலிந்துங்களைதீர்ந்து மின்னாளைத்தீண்டுதற்கு
நலிந்தேயவனெழும்ப நாரியாற்றுதலும்
பார்த்திருந்தமன்னர் பலருவிலக்காமையினால்
காத்தருளுமைந்தன் கடுகடுத்தேபோர்மடையன்
கோடையிடிபோற் குமுறியேகொக்கரித்து
வேடையொடுவோர்தருவை வேரோடுதொன்பிடுங்கிச்
சாடையறமோதவெனத் தாவினான்மாவிசையாய்ப்
பீடையடைந்தோன் பிறங்காட்டியோடலுற்றான்
மாருதியைப்பார்த்தே மறையோனெனுந்தருமன்
பாரமுடன்விலக்கி பார்த்திபனைத்தான்பார்த்து
தீண்டற்றகாதெனநீ செப்பாதிருந்ததென்கொல்
பூண்டபதியாளுகின்ற பூபதினீதானலவோ
கண்கண்டஞாயங் கழாறுதிருந்தமையால்
விண்கொண்டசீர்த்தியென்ன மேன்மைதருங்கீர்த்தியென்ன
நின்முன்னேயிந்த நெறிகேடுண்டானமையால்
பன்முகநின்சீர்மையென்ன பாடுபடுமென்றுரைத்தான்
பூசுரனிவ்வாய்மைசொல்லப் பூவையெழுந்திருந்து
ஏசுவதுபோல விராசன்றனைநோக்கி
அன்புறுந்தேவிக் கருகானதோழியென
நின்பெருங்கோயிலிட வீங்காதியானிருந்தேன்
வன்புடையகீசகனின் மைத்துனன்றான்மாலாகி
தன்புயமிக்காற் றழுவவெணைத்துடர்ந்தான்
நின்புகழென்னின்கொடையென் நீவள்ளலாகியதென்
நீதிச்சொல்லொன்று நிகழ்த்தப்பயந்திருந்தாய்

ஆதித்தன்வம்மிஷத்தி லாரசடர்நின்போல
எதிலாருந்தமரு மேயொன்றுபோலாக
பூதலத்தையாள்வோர் பொறுத்தலன்றோபூபாரம்
தெண்டியாமன்னவர்கள் செல்வம்பெருவாழ்வும்
மண்டலத்திலோர்நொடியின் மாய்வதறியாயோ
என்றனந்தஞ்சொல்லி விராசன்றிருத்தேவி
தன்றிருமுன்வந்ததுபோற் சாற்றினளூறுபங்காய்
அந்தணன்சொல்லு மரசன்பகர்மொழியுஞ்
செந்திருமார்பன் செவிகேட்டுறத்திகைத்து
மன்கூட்டமான மகாசபையில்வன்பான
புன்கேழ்விகேட்டுப் பொறுக்கான்மனம்புகைந்து
இல்விடஞ்சேர்ந்தே யிறைவிதனைநோக்கிப்
புல்லென்றுங்கீசகன்றன் புன்மையெல்லாந்தானுரைத்தான்
எண்ணமில்லாம விராஜசபைநடுவில்
கண்ணச்சமில்லாமற் கன்னிதனைத்துடர்ந்தான்
கூடியமன்னர் குலத்தோரெல்லாநகைக்க
நீடியவெந்தனையே நிந்தாஸ்துதிகள்செய்தார்
விலங்கினம்போலானன் வெட்கமில்லானுணமற்றான்
கலங்கிலாக்கீசகனென் கண்ணில்விழியாமற்
போரவிடந்தான்றேடிப் போய்விடச்சொல்லென்றுரைத்து
எரிடிபோற்சீறி யெரியெழவேகோபமுற்றான்
வள்ளல்சினத்தை மனைவியருந்தான்பார்த்து
உள்ளகநொந்தே யுருகினள்காணம்மானை
தன்மரபிலுற்ற தலைவன்றனைவெறுத்து
வின்மருவுவெய்யோனும் மேற்றிசையிலேயடைந்தான்
குந்திமக்களைவர் குலைந்துமிகச்சோபமுற்றார்
அந்தனகருள்ளோ ரடங்கலுமேசோபமுற்றார்
மச்சவிராடன் மன்னன்மனைவியுடன்
அச்சமாய்ச்சோபித் தகந்தளர்ந்தானப்போதே
நன்னகரோரெல்லா நடுங்கியேசோபமுற்ற
தன்னில்விடங்கடொறுந் தான்றுயின்றாரன்றிரவே
ஓயாக்கலக்க மொழுகியகண்ணீரோடு
காயுமழற்பிறந்த கன்னிகதாயுதன்முன்
வந்தெனதுதுக்க மனத்துயரைத்தான்றீர்த்தல்
எந்தனுக்கேயல்லா னிலத்தின்முடிப்பதெவர்
நின்றுபுலம்பினின்ற வேந்திழையைத்தானமர்த்தி
கன்றிக்கனன்று கதாயுதனுமேது சொல்வான்
பொறையென்பதாடவர்க்குப் பூஷணமேயானாலும்

முறைதப்பினோ முருக்கன்முழுப்பூணும்
நறைமாதற்கானகற்பு நாணமேபூஷணமாம்
அரசர்சபையி லனிதமுற்றநாளுமென்னை
முரசக்கொடியோன் முறையாய்விலக்கினின்றான்
இன்றைமுறையே யிடராய்விலக்கினதே
நன்றவன்கண்காண ஞடியதேசெய்யவொட்டான்
கீசகனோடு கிளர்நூற்றுநால்வரையும்
ஆசுடனேர்போதே யறக்கணத்திற்கொல்வனென்றான்
வாயுகுமாரன் வழுத்தல்கேட்டுண்மகிழ்ந்து
தூயோனேயின்னமொரு சொல்லுரைப்பேன்கேட்கவென்றாள்
ஓராண்டிற்கின்னு ளொழியமற்றெல்லாங்கழித்தோம்
பாராண்டமன்னன் பகைக்காதொருபாதை
எந்தனைக்கந்தருவ ரெப்போதுங்காப்பரென்று
முந்தவேயாவருக்கு மோசமறச்சொற்றேன்காண்
இவ்வளவினோடே யிசையாதவனிடறிற்
கவ்வையுடனெந்தனையே கற்பழிக்கநாடுவனேல்
பின்பொறுக்காமற் பிளந்தெரியுமென்றுரைத்து
முன்பழலில்வந்தாண் முசிப்போடேபோயிருந்தாள்
ஆசுகன்மைந்த னரிவைமொழிகேட்டுத்
தேசுடயகந்தருவர் செற்றாரெனும்படியே
கீசகனைகொல்லத் கிழவோனினைந்திருந்தான்
பாசவுலகிற் பல்காலந்தான்போக்கி
இருந்ததினத்திலந்த வேந்திழையாளோர்நாளிற்
பொருந்துமலரொடுக்கப் பூங்காவிலேயணுகி
பன்மலருங்கொய்து பலவாய்த்திரும்பையிலே
வன்மமுள்ளகீசகனும் வந்தெதிர்ந்தானம்மானாய்
மாதவனைக்கண்டே மனநடுங்கிநிற்கையிலே
தோதகமாய்ப்பஞ்சரித்துத் தோகைபதம்பணிந்து
என்னுவதீர வெனதுமயதீர
உன்னுதரவா யுகந்தளிப்பாயென்றுசொன்னான்
மாபாதகமான வார்த்தையெந்தன்முன்புரைத்தாய்
ஆபாதகனே யனியாயமேதுணிந்தாய்
கந்தருவர்கைக்கிரையாய் காவலனேனீனேர்ந்தாய்
உந்தன்முடிவா லுன்னியெந்தன்முன்புவந்தாய்
வேண்டாங்கொடியானீ வீணிலேசாகாதே
மாண்டிலென்னுசை மறவாயெனவுரைத்தாள்
தேனேவுன்னாலேநான் செத்தாலுமெத்தநன்று
மானேயுனைச்சேர்ந்தான் மண்ணில்யான்சாமளவும்

மின்றுணையும்பாரேன் வேறொன்றையுநோக்கேன்
மாதேயான்வீணின் மடியாதருள்புரிந்திப்
போதேயுன்பாதம் பிடித்தேனியான்பிழைக்க
நோக்கொன்றுதந்தெனது நோய்நீக்கியால்பிழைக்க
வாக்கொன்றுதந்து மருவென்றடிதொழுதான்
மீறியுரைத்தால் விடமாட்டேனென்றழுங்கி
தேறியவளைத் திருமாதுந்தான்பார்த்து
இன்றிரவிலிந்த வெழிலானமண்டபத்தின்
நன்றியுடன்வந்திருப்பே னற்கந்தருவர்கையால்
சாகத்துணிந்தானீ தடங்காலின்மண்டபத்திற்
போகத்துடனீ புணரவாவென்றுரைத்தாள்
இம்மாத்திரநீ யிரங்கியதேபோதுமென்று
அம்மாதைவிட்டே யகன்றான்காண்கீசகனும்
மாண்டாருடல மறுத்துயிரைப்பெற்றாற்போல்
மீண்டுவிளைந்ததெல்லா வீமனுக்குத்தானுரைத்தாள்
அந்தவகையெல்லா மனிலன்சேய்தான்கேட்டு
நிந்தன்பெருந்துயரை நீக்குவேனேகுகென்று
துணிவுற்றிருந்தான் றுயரற்றசிந்தையினான்
அணிபெற்றசூரியனு மன்றுகுடகடைந்தான்
பூலோகமெல்லாம் பொங்கியிருண்மூங்கியபின்
நாலாகலைதெரிந்தோ னரிபோல்வேடமுற்று
கூறுவாயான கொழும்பொழிலின்மண்டபத்தில்
ஏறிபோலொத்தோனு மேந்திழைபோலேயிருந்தான்
தண்மையுடைய தலையின்விதிப்படியே
வண்மையுடையோன்றன் மைத்துனனுங்கீசகனுஞ்
சோலைநடுவிருக்குந் துய்யமணிமண்டபத்தைக்
காலனமக்கென்றே கருதியறியாமல்
மான்வேடமாக வரிவேங்கேயொப்பான
மீன்வேல்விழிக்கினிய வீமனுறைமண்டபத்தைத்
தேடிநடந்தான் செழும்பொழிலினுட்புகுந்தான்.
நாடிமணிமண்டபத்தி னண்ணியேதான்பார்த்தான்
பொன்போலெழிலோங்கும் பொன்னுலகின்கன்னியென
மின்போலிலங்குகின்ற மெல்லியனைக்கண்டவுடன்
பாதம்பணிந்து பரிந்துபசாரங்கள்செய்து
காதலெனக்களித்த கன்னியேபெண்ணரசே
முன்செய்பெருந்தவமே மொய்குழலேவெட்கையினால்
மன்சபையிலுன்னை மதியிலாதியான்றொடர்ந்தேன்
வன்பிழையான்செய்ததெனை மதியிலேகாணாமல்

புன்பயல்செய்தீமை பொறுத்தருள்செய்பூங்குழலே
என்றுவியுய்யவென்றே விங்கிரவிற்சாரனே
மன்றுவியன்னாய்நீ வந்ததெனப்பஞ்சரித்து
ஆவியுந்தெய்வமுநீ யாருந்தலைமையுநீ
பாவியுனது பதம்பணிந்தேன்காத்திடென்றான்
நண்டுசிப்பிவேய்கதலி நாசவருங்காலங்
கொண்டகருவழிக்குங் கொள்கைபோலொண்டடியீர்
போதந்தனங்கல்வி பொன்றவருங்காலம்
மாதர்மேல்வைப்பார் மனமென்றறியாதான்
சொன்னவைகேட்டுச் சுவேதவாகன்றமையன்
கன்னிபோலேதான் கனிவாய்கொடுனகைக்க
தன்னுயிர்பெற்றான்போற் றுவியேகைச்சரசம்
உன்னியேசெய்ய வொருப்பட்டவாறுகண்டு
திரையைக்கடைந்த திகிரியனையானும்
வரையொத்தகீசகன்றன் வன்கரத்தைத்தானிருகப்
பிடித்தான்குரங்கைகிசர் பேசாதுதான்சுழற்றி
அடித்தானத்தூண்கடொறு மங்கவனுங்கைபறித்து
முடியுங்கலங்க முகங்களுநுங்கலங்க
கடியசினமாய்க் கரங்கொண்டுமொத்தினனே
அதிர்ந்தானுருமெனவே யாரவாரங்களொடு
முந்தந்தானமரு முறுமுலவைதன்குமரன்
கிட்டியேகீசகனுங் கேவலமிலாதெழும்பி
ஒட்டியேமார்பி லுதைத்தானுரங்கலங்க
மேலாடியேவீமன் விணணிடியையொப்பாகக்
காலாற்கரத்தாற் கலக்கினனம்மானய்.
கரங்கள்கரங்களொடு கட்டியுறச்சேர்ந்தும்
உரங்களுரங்களுட னொன்றவமர்புரிந்தும்
சிரங்கள்சிரங்களொடு சிக்கியமர்புரிந்தும்
மரங்கடனைப்பிடுங்கி வன்போர்தொடங்கினின்றுஞ்
சோடானசிங்கந் தொடங்கியமர்மூண்டாற்போற்
கேடானகீசனுங் கேசரிக்கெய் தப்பொருதார்
கையிலிருந்த கனதருக்கடேய்ந்ததற்பின்
மெய்யினொடுமெய்சேர்ந்தே வெம்போர்தொடங்கினரோ
முட்டியுத்தஞ்செய்தே முரணுகமால்வீமன்
திட்டெனவீழ்த்தித் திகரிமிசைவீழிடிபோல்
மொத்தினன்வன்கையினான் மூசியேயோயாமற்
பத்தியேதூக்கிப் படியிலேதான்டித்தான்
மார்பைப்பிளந்தான் மணிக்குடலைத்தான்சரித்தான்

காரொத்தகைத்தலத்தாற் கையிரண்டும்பிய்த்தெறிந்தான்
வாய்கிழியக்குத்தியுறு வனப்பெல்லாந்தான்றகர்த்தான்
பாயக்குருதிபொங்கப் பருப்பதமெல்லாமொடித்தான்
சிரத்தைத்திருகிவைத்தான் றேகமெல்லாங்கூறுசெய்தான்
வருத்தமிகுத்தவழன் மாதையருகழைத்தே
பூங்கொடிபொற்பாதமிசை பொல்லானுடற்பிழம்பை
பாங்குடன்வைத்தான் பவனன்றருங்குமரன்
தெரிவைபெருந்துயரந் தீர்த்தானின்றூர்த்தெறிந்து
பெரியமலைபோற் பின்வீமனிற்கையிலே
மண்டமரினின்ற வயவர்திறலோதை
மண்டபத்திலோதை மலர்ப்பொழிலினோதைகளுங்
கீசகன்றன்பின்னோர்கள் கேட்டுக்குலைகுலைந்து
காசுத்தமங்கையினாற் கந்தருவர்கையாலே
பட்டானோவென்று பதைபதைத்துத்தம்பியர்கள்
மட்டாருமார்பரெல்லாம் வன்னிவெளிச்சத்துடனே
காவில்வரவே கதாயுதனுமேமறைந்தான்
பாவியாங்கீசகனார் பட்டபகோளத்தை
கண்டார்திகைத்தார் கலங்கினார்மூச்செறிந்தார்
பெண்டாசையாலே பெலக்கந்தருவர்கையால்
காய்ந்தானைவெல்லவல்ல காளையோவின்றிரவில்
மாய்ந்தாயோவென்ன மறுகியேமெய்மறந்தார்
தம்பியர்வெம்பத் தமக்கைசுதேட்டியெனையாள்
அம்பகமுமாறோட வன்றழுதுநின்றாற்ற
மைத்துனனைத்தானிழந்த மன்னன்மனங்கலங்கி
எய்த்தயர்ந்தேயென்வாழ்வை யின்றிழந்தேனென்றுசொல்லி
தக்கவனேயென்னரசைத் தானிறுத்தவல்லாரியார்
திக்கரசரெல்லாந் திறங்கேட்டுளங்கலங்கு
மன்னவரென்னை மதிக்காரினியெனவே
தன்னைமறந்தே தலைவன்புலம்பலுற்றான்
கன்னிதனைக்காக்கவல்ல கந்தருவர்காக்கவென்று
நன்னகரோரியாரு னடுங்கிமெலிந்தயர்ந்தார்
பழுதுற்றபொல்லாத பாதகனுமாண்டமையால்
அழுதெய்த்தவனை யடக்கமனதினைந்து
காவகத்திலோர்புறத்திற் கட்டையடுக்கையிலே
பேய்வருத்தகீசகற்குப் பின்னோர்கடான்சினந்து
உன்னியவண்ண லுயிர்க்குமறலியொத்த
கன்னிதனைக்கட்டையுடன் கருதியேவைத்தேயெரிக்க
வன்னிதனில்வந்தாளை வளைந்துபிடிக்கத்துணிந்தார்

அபயமபய மனியாயமோமருவார்
சபையோவெனைக்கூடித் தான்றழலில்வீழ்த்ததற்கு
கட்டையுடனே கருதியேதானடுக்கத்
துட்டர்களெல்லாந் துடர்ந்தேபிடிக்கவந்தார்
என்னையகலாதே யெந்நாளுங்காக்கவல்ல
தென்னுலவுகந்தருவத் தெய்வங்காள்வந்திடுங்கள்
என்றிந்தச்சொல்லை யெவற்குமேதானறிய
நின்றங்கரற்றுதலு நேரிழைமுன்கந்தருவர்
கோலமுடனே கொதித்தோர்மராமரத்தைச்
சாலவேதான்பிடிங்கித் தண்டால்வலியோனும்
அம்பரமெல்லா மடர்ந்தேசுழலெறிய
கெம்பிவளைந்தெழுந்த கீசகன்றன்பின்னோரை
ஓடத்துரத்தி யொருநூற்றுமூவரையுஞ்
சாடியடித்தார்த்தான் றூவுசண்டமாருதமாய்
செய்யாதுசெய்தமையாற் றீய்மையுற்றான்கீசகனும்
ஐயோவினையோரறிந்து மடாதுசெய்தார்
கற்புடையாள்சொற்கேட்டுக் கந்தருவர்வந்துவிட்டார்
நிற்பரோமானுடரி னீதிகெட்டோமென்றுரைத்து
வந்தசனமெல்லா மயங்கியவரவரோ
தந்தமனைச்சார்பு தானடைந்தாரம்மானாய்
சண்டபவனனிகர் தானூற்றுமூவரையும்
துண்டதுண்டமாகத் துடையையெல்லாந்தான்முறித்து
போதுவிடியுமுனம் பூவையுடன்மடையன்
சாதுவாய்த்தம்முடைய சார்படைந்தாரம்மாறாய்
ஆதலையற்ற வணங்கென்றுகீசகனு
நோதலைப்பெற்று நொறுங்கினான்றம்பியரும்
வீம்பினாற்பட்டு வீழ்ந்திறந்தார்மெய்விதியால்
ஆம்பல்வாய்க்கன்னி யனலொக்குங்கற்பிலென்று
நன்னகரிமாக்க ணடுங்கியிதுபேச்சாய்
பன்னிமருகெங்கும் பகர்ந்திருந்தாரன்னகரோர்
சிங்கம்போலொத்த செருவீரன்மைத்துனன்மார்
அங்கமடிந்து வடவியிலேமாய்ந்தமையால்
துலையாவிசாரமுடன் றுக்கமிகப்பெருகி
அலைவாய்த்துரும்பா யகஞ்சோர்ந்துளமுருகி
வீரங்குறைந்தோம் விறலற்றோமிற்றையென்று
தாரமுந்தானுஞ் சலித்திருந்தான்மன்னனுமே
மன்னன்சலிப்பு மனக்கலக்கந்தான்தீர
பன்னுமறையோன் பலமொழியாற்றான்றேற்றி

மகிட்சிபெறும்படியே மாமறைச்சொல்லாலுணர்த்தி
இகட்சியில்லாம லினிதிருந்தாரம்மானை
அந்தணன்சொல்லா லரசன்மகிட்சிபெற்று
சந்தணிதோளான் றரணிபுரந்திருந்தான்
பஞ்சவருந்தங்கள் பணிவிடையிலேயிருந்தார்
சஞ்சலமில்லாமற் சகலோரும்வாழ்ந்திருந்தார்

நிரைமீட்சிச் சருக்கம்.

> தொழுவார்தம் வினைதீர முற்காலமாய் வேலை சூழ்பாரெயிற்
> றழுவானை நன்னும மொன்றுயினுங் கற்றோ ருறுவோதினோர்
> வழுவாத சுரராக நரராக புள்ளாக மாவாகபுன்
> புழுவாக வொன்றிற் பிறந்தாலு நரகிற் புகார்காணுமே.

சூதாடிச்செல்வமெல்லாந் தோற்றேவனஞ்சேர்ந்து
மூதாரழற்பாலை முட்காடுந்தானலைந்து
ஈராறியாண்டு மெழில்வனத்திலே துலைத்து
ஓராண்டுநாட்டி லுறைகின்றார்பஞ்சவர்கள்
இன்னாட்டிலுள்ளா ரெனுஞ்சேதிகேட்டதில்லை
பன்னாடுந்தேடிப் பரிந்துவந்துசொல்லுமென
மன்னவர்கோமான் வணங்காமுடிப்பெருமான்
தன்னவர்களோடிருந்து தானுமுலாவித்திரிந்தும்
ஓராயிரங்கோடி யொற்றரனைவிடுத்தான்
வாராழிசூழுலக மற்றெங்கும்பஞ்சவரைத்
தேடியலைந்து திரும்பியேயெல்லோரும்
வாடியேமன்னவன்முன் வந்துரைத்தார்காண்கிலென்றே
என்றொற்றர்சொல்ல விராசன்விசாரமுடன்
குன்றொத்தவைவர் குறுகுமிடமெங்கெனவே
பாராட்டும்போது பகீரதியாள்பெற்றசுதன்
சீராட்டும்பஞ்சவர்கள் சேதிசொல்லவே துணிந்தான்
மாரிபொழியும் வளநாடெல்லாவிளையுஞ்
சீருடன்செல்வஞ் செழித்தோங்கும்பஞ்சவர்கள்
தாங்கியநாடு தழைக்குமிதுவிரகாய்
எங்குனின்றனெற்றனை யேவென்றவனிசைத்தான்
கங்கைசேய்சொன்ன கருத்தைவிரித்தறிந்து
அங்கொருதூத னரசன்பதம்பணிந்து
என்னாட்டின்மிக்காய் விராடன்வளநாடு
பொன்னாட்டையொத்துப் பொலிவுற்றதென்றுரைத்தான்.
கன்னனவைசேட்டுக் காவலனைத்தான்பார்த்து
ஒன்னலார்விராட புரத்திருப்பதேவுருதி

அந்தநாடேகி யணிநிரையைக்கொள்ளையிட்டால்
வந்துநிரைசாய்த்தே வலுக்கொண்டுமீண்டிடுவார்
மீளார்களாகில் விராடபுரந்தனிலே
கோளரிருப்பதில்லைக் சொற்றவனேயென்றுரைத்தான்
தக்கோர்சொற்கேளாத் தறுகணனேவலினால்
திக்கோதைகொள்ளத் திரண்முரசந்தான்முழங்க
மிக்கோனையோத்திகர் வேந்துதிரிகர்த்தனென்போன்
அக்குரோணிசேனையுட னனவெட்சிதான்புனைந்து
பொன்சேர்விராட புரநாட்டினிநிரையைத்
தன்சேனையோடடர்ந்து சாய்த்திடெனவேவவவன்
கடலொத்தசேனைக் கணங்கூடியேநிரையை
மிடலொத்தேசாய்த்தான்காண் வேந்தேயுன்னாட்டிலென்று
பூபதிமுன்வந்து பொதுவர்முறையிடவே
கோபதியுமெச்சுங் கொடையான்சினமூண்டு
திரிகர்த்தனோநமது தேசநிரையைச்சாய்ப்பான்
அறிவத்தவனை யமர்பொருதிவெல்வனென்று
மன்னர்புடைவளைய மந்திரிகடற்சூழத்
துன்னவோரக்குரோணி சூரப்படைசூழ
உட்பேடியல்லாத வோர்நான்குசேனையுடன்
நட்பாய்விராட னடந்துதுடந்தேறிக்
கொட்பேறிவந்த குருசேனைதன்னுடனே
பெட்பேறிவிந்தைகட்டிப் பெருயுத்தமூண்டதுவே
தாவுமணித்தேருடன்றேர் தந்தியுடன்றந்தியுமாய்
மாவுடன்மாவு மலைந்துயுத்தமூண்டதுவே
நெருப்பொத்தகோபமொடு நேரலர்மேற்சாடுதலுந்
தரிப்பத்தணிமுறிந்து தான்முதுகிட்டோடினரோ
கோன்சேனைக்கஞ்சி குருசேனைபின்னிடவே
ஆன்சேனையான வணிநிரைமீட்டார்த்தனரோ
மெய்யெல்லாம்புண்ணாகி வெஞ்சேனையோடுதலும்
தொய்விலார்மேலாய்த் தொறுமீட்டேயார்ப்பதுவும்
திரிகர்த்தன்பார்த்து திகைத்துநகைத்தார்த்து
விறலுற்றதேர்கடத்தி வெல்விராடன்றேர்மேல்
பத்தாறுவெய்ய பகழிவிடுத்திடவே
மைத்தாவுங்கையான் வரிவில்லைநாணேற்றி
ஆறைந்திரட்டிகணை யாலவன்றனம்பறுத்து
வேறைந்துபாணம் விராடன்விசைத்துவிட்டு
தேர்பாகுஞ்சாரதியுந் தேர்க்கொடியுந்தானறுத்து
சார்பானவில்லுந் தகர்த்தன்பதுகணையால்

அம்புயமுமெய்யு மவயவமெல்லாநிறைத்து
செம்புலவினீராலே தேகமதைப்போத்திவைத்தான்
தேனுவுக்குவந்த திரிகர்த்தனுந்திகைத்து
மானமுற்றும்வில்வளைத்து மற்றுமொருதேரேறி
நாலந்துவாளி நமன்போலத்தான்வீசி
மேலுந்துதேர்கொடியும் வெம்பாகுந்தானறுத்து
வில்லறுத்துநாணறுத்து வேங்கைபோற்றான்பாய்ந்து
மல்லலுற்றுநாணாலே வள்ளறனையும்பிணித்து
சண்டனெனக்கெழுமித் தன்சேனையார்ப்பரிக்க
மண்டமரின்மிக்கோன் வழிகொண்டானம்மானாய்
அந்தணன்கண்டே யவன்றம்பியைநோக்க
சிந்துரத்திலேநோக்குஞ் சிங்கம்போலேபாய்ந்து
மடைத்தொழில்வல்லானு மண்செண்டமாருதமாய்
இடிக்குலமஞ்ச விரைந்தார்ப்பரித்ததட்டி
அண்டங்களெல்லா மதிர்ந்துசுழன்மேலாடத்
தண்டந்தனைச்சுழற்றித் தாங்காமலேயடித்தான்
பேரிடியொன்று பெருமலையில்வீழ்ந்தாற்போல்
ஓரடியினாலவன்றே ருடைத்தெறிந்துமாற்றானைப்
பற்றிப்பிடித்துமிகு பங்கப்படப்பிணித்து
கொற்றத்தேர்மீதே குரிசிலையுந்தானேற்றி
மன்னன்விராடன் மணித்தேரிலேறியபின்
ஒன்னலனைத்தேரி லுற்றுருக்கிகட்டினனே
தன்னைப்பிணித்தோன் றனைப்பிணித்தோனைப்பார்த்து
மன்னவன்சென்று மணிமார்புறத்தழுவி
என்னுயிருமென்வாழ்வு மெல்லாமுனையலது
பின்னுரியருண்டோவிப் பேரமரினீயுதவுஞ்
செய்நன்றிதன்னைத் தெரிந்தேதெனவுரைப்பேன்
உய்நன்றிசெய்தா யுனக்கொருகைமாறறியேன்
போர்முகத்தினீயுதவும் பொற்பாமுதவியைப்போல்
ஓர்முகத்துமில்லை யுனைப்போலுரியரென
சந்தமடையன் றனையேமிகப்புகழ்ந்து
அந்தணன்பாவி லணுகினன்காணம்மானாய்
தேரினுடனே திரிகர்த்தனைப்பிணித்துத்
தாருவனைய தலைவனையுமீட்டுவந்து
மலர்த்தாள்பணிந்த மடையன்றனைச்சினந்து
இலக்காகக்கட்டவிழ்த்து விப்போதேவிட்டிடென்றான்
ஐயனுரைக்க வயோத்திமன்னைக்கட்டவிழ்த்தே
துய்யதொருதேர்கொடுத்துன் றென்னகரிக்கேகுகென்றான்

புலிவாயுழைதான் பிழைத்தபொருட்டாக
மெலிவாயுளங்கருகி வெய்துயிர்த்தேயோடினனே
போரடலின்மிக்கான் புறங்கொடுத்தேயேகியபின்
தேரிரவியின்குலத்தான் சேரப்பெரும்படைகள்
இன்னவருமென் றெழினால்வகைச்சேனை
தன்னைநிறுத்தியங்கண் டங்கினன்விராடபிரான்
சீராயப்போதத் திரிகர்த்தனைப்பிணித்து
வீராதிவீரன் விராடனிரைமீட்டதுவும்
படைகெட்டுடைந்தவிதம் பார்தட்டுசென்கேட்டு
விடியப்பலசேனை வெள்ளம்புடைசூழ
அடக்கமுடையா னரியநகரோயிலக்காய்
வடக்குமுகமாக வந்தேகவிந்தனரோ
வளைந்தபடையை வளநாடெல்லாம்பரப்பி
விளைந்தவிளைவுகளில் வெங்கனலைத்தான்மூட்டி
ஆனிரைகளெல்லா மடங்கவேசாய்த்திடலும்
கோனிடையரஞ்சிக் குலைகுலைந்துயோடிவந்து
நின்றுதவித்து நிறைந்தலறிக்கோட்டைபுகுதி
அன்றுவிராட னரண்மனையிலேசேர்ந்து
உத்தரனென்று முரவோன்றிருமகன்முன்
சித்தங்கலங்கித் தெரிசித்திடையர்சொல்வார்
றென்னனிரைமீட்க நின்றகப்பன்றென்றிசையில்
கன்னல்வேளன்னாய் கருதியவருறைந்தார்
சாகரமேழுந் தடம்புரண்டவாறேபோல்
சேகரமான திரள்சேனைதற்சூழ
அரவக்கொடியோ னணித்தாய்வடபாலில்
விரவிப்பன்னாட்டின் விளைவெல்லாந்தானழித்து
நாட்டிடையிலுள்ளபல நற்பொருளுங்கொள்ளைகொண்டு
காட்டிலுறுமாவின் கணங்களையுஞ்சாயத்ததற்பின்
நின்னகருநாடு நிலைக்லங்கநீர்க்கடல்போல்
பொன்னகராநின்றன் புரிசைதனைவளைந்தார்
கூட்டப்பனிப்பகையின் குஞ்செனவேயஞ்சாதோய்
வீட்டுள்ளுறைந்ததென்னோ வேந்தன்றிருமதலாய்
என்றிடையர்சொல்ல வெழிற்சுதனைப்பெற்றெடுத்தான்
நின்றநன்மங்கையனை நேசமுடன்றானோக்கி
போனதிசைமன்னன் புரிசைக்கொருநொடியில்
தானணுகுவார்நந் தலைவன்வருமளவு
நொச்சிதனையணைந்து நொச்சிதனைக்காத்து
அச்சமறமிச்சமுட னசீராய்த்தான்பேணி

ஒன்னார்நமதரனை வொப்புக்கொள்ளாதபடி
மின்னார்களெல்லோரும் வெம்போர்மிகத்துடங்கி
கற்பதனைக்காப்பதுபோற் காப்பதனைக்கார்மினென்ற
பொற்புடையாள்சொன்னளவே புத்திரனுமுத்தரனும்
விரைந்தன்னைபாத மிகவருடியேநகைத்து
நரந்தங்கமழ்சாந்து நற்புயத்திலேபூசி
ஆடைபணிக ளழகொளிரவேபுனைந்து
பீடுபெறவென்றோன் பிறங்கவளர்ந்ததுதான்
மாதர்படைபோர்பொரவோ மாதாவேயென்றுரைத்து
கோதினமதுபடை கொண்டமருவார்களுடல்
வாரிப்படையும் வயவீரமன்னரையுஞ்
சேரப்பொடிபடுத்திச் செங்களத்திலேகிடத்தி
மற்றோர்களெல்லா மனமருகிவென்கொடுக்கப்
பற்றார்களெல்லாம் பதைக்கப்பொருதழிப்பேன்
வினைமுகத்திலென்றேர் விரைவாய்செலுத்துதற்கு
நினையொத்தசாரதியரய் நேர்ந்திலையேயென்றுரைத்தான்
உத்தரன்சொற்கேட்டொப் பனைக்குரியவண்ணமகள்
குத்தரஞ்சொற்கூர்வேற் குமரன்றனையணுகி
விந்தரவில்லிக்கு விரகிற்றேருரவல்லான்
கந்தரங்கொள்பேடி யெனவவனைக்காட்டினளே
சுதேட்டிணைமைந்தன் றுடர்பேடியைப்பார்த்து
விதத்தின்விரகாய் விடுதேரொனவுரைத்தான்
பாகுக்கிசைந்தோன் பரிநான்குதான்றெரிந்து
வாகுற்றதேரதனில் வண்மையுடன்பூட்டிடவே
பல்லாயுதமும் பரிவாயெடுத்தணைந்து
வில்லாயுதமு விறற்றூணியும்புனைந்து
தேருதயபானுவெனத் திண்டேரின்மேற்கொளவே
சாரதியுமேயருணன் றன்விரகின்மேலாட்
பல்கோடிமாந்தர் பரிந்துமிகவாழ்த்த
மல்காவனையானு மணித்தேர்நடாத்தினனே
விலங்கன்மதிற்புறமும் வீதிகளுந்தான்கடந்து
தலங்கணடுங்கத் தடந்தேர்நடாத்தினனே
காஞ்சிபுனைந்து கடுகிரதநடத்தி
தேஞ்சொன்மொழியார்க் டிட்டிகளிகூற
உத்தரனென்பா னுத்ரதிசைதானணுகி
எத்தலமுமொன்று யெழுவாருதிப்பெருக்காய்ச்
சேனைப்பெருங்கடலைத் திட்டியார்க்கண்டவுடன்
ஈனத்துடனெஞ் சிளைத்தேவெருவியவன்

கைநடுங்கிக் கானடுங்கிக் கருத்துமிகவழிந்து
மெய்நடுங்கநாவுலர்ந்து வெய்துபெருமூச்செறிந்து
சொன்னடுங்கிநெஞ்சந் துணிக்கிமுடிசேர்ந்தான்
மன்னடுங்குஞ்சிங்க மனையவிராடன்மகன்
உள்ளச்சங்கண்டே யுலகெல்லாம்வெல்வீரன்
வள்ளற்புரவலன்றன் மைந்தன்முகநோக்கி
மச்சர்கோமான்றன் மகனீமகாவீரன்
அச்சமாய்நிற்பதுமுன் னுண்மையோசேவகமோ
ஊக்கம்விடாம லொருப்பட்டசிந்தையுடன்
நீற்க்முடன்கணைநீ செல்போறசொரிந்துநின்றால்
மன்னர்களும்வீரர்களும் வாரிப்பெரும்படையுஞ்
சின்னபின்னமாகத் தெரித்தோடிப்போவதுமெய்
தேர்களிவைதோல்களிவை சீறும்படைகளிவை
பார்புகழும்வீரப் பதாதிப்படைகளிவை
சிந்தைதேறென்று திறற்பேடிதானுரைக்க
இந்தவிதமொன்று மிருசெவியிற்சார்ந்ததில்லை
சதுர்விதச்சேனைத் தளக்குறிப்புங்கண்டதில்லை
சிதமுற்றதிக்குத் திசைக்குறிப்புங்கண்டதில்லை
வென்னிடுவன்றேரோடு மீளவிடென்றேயுரைத்தான்
பின்னிடுவோர்தன்முகத்தை பேடிவிழித்தறியேன்
நன்போலும்பேடி நகைப்பரேவென்கொடுத்தால்
நின்போலும்வீரர்முக நீவிழிப்பதெவ்வாறு
அஞ்சாதேயென்று யணித்தேர்தனைநடத்த
கஞ்சாக்குடித்தாற்போற் கண்கலங்கிமெய்மயங்கி
கொம்பேறிநின்று குதித்தோடும்வானரம்போல
செம்பானதேரைத் திறந்துகுதித்தோட்டலுற்றான்
கொடித்தேரைவிட்டுக் குதித்தேகதிப்பாக
அடிக்கால்பிடர்சாட வன்றோடப்பின்றொடர்ந்து
தடக்கார்முகவீரன் றன்றடுத்துப்பற்றிவந்து
வடத்தாற்பிணித்தே மணித்தேரைவிட்டிறங்கி
வன்னிமரப்பொதும்பில் வைத்தசிலைதூணியையும்
வின்னிலமைவல்லான் விரைந்தெடுத்துத்தேரில்வந்தான்
மூவுலகிலுள்ளோர் முதுகிடுமிப்பாரவில்லும்
ஏவுசெறிதூணியுமி தேதென்றவன்கேட்டப்
தனஞ்சயன்முன்னாட் டனஞ்சயனுக்கீந்ததென்றான்
கனஞ்செய்மழைபோற் கணைவீசியகரத்தான்
எங்குளானென்றே விராசன்மகன்கேட்க
துங்கமாலன்னாய் சுவேதனையோகேட்கலுற்றாய்

மறையோன்மடையனிவர் மற்றெனக்குமூத்தோர்கள்
இறைசாணிகிதாரி நேரிளையதம்பியர்கள்
மற்றியர்ன்பற்குனன்காண் வண்ணமகன்வன்னிவந்தான்
உற்றகடிகை யொருநான்கிலென்னுருவை
சற்றுங்கல்ங்காமற் றாவுதேர்னீயூர்ந்தால்
பற்றலனாநெஞ்சம் பதைக்கப்பொருதழித்து
இமைக்குமளவி லியல்பானிரைமீட்பேன்
சமற்குள்விடுவிடுதேர் தான்றாண்டுவொன்னுரைச்
செய்யுந்திரம்போலியான் செய்யுஞ்சமர்வலியும்
எய்யுங்கணைவிரசு மிப்போதுபார்த்திடென்ற
கட்டவிழ்த்துவிட்டான் கலக்கங்கள்விட்டோடி
திட்டெனவேபாதந் தனிலேசிரசேற்றி
மாயப்பெருஞ்சிறப்பை மன்னன்மகன்பெற்றதற்பின்
ஜெயமெனத்தேர் செலுத்தினன்காணம்மானை
சண்டவாயுபோற் றடந்தேரவன்செலுத்தி
மண்டியெரிதேயுவென வாளிதனைவீசினனே
ஓயாமலேழ்முகிலு மொத்தேசொரிவதுபோல்
சாயாதுபார்த்தன் சரமாரிவீசுதலால்
சிரசுபதமீருய்த் தேகமெல்லாந்தான்செறுமி
உருகியேபுன்பே ருடற்றடரிடத்தோட
ஓராயிரம்பேரா யோர்கணைகடைத்துருவ
தேராயிரஞ்சிதைந்து சின்னபின்னமாகிவிழ
பத்தாயிரத்திறுக்கும் பத்தாயிரங்கரிகள்
வைத்தானையொண்கணையால் மாய்ந்துமலைபோற்குவிய
நூருயிரத்திறுக்கு நூருயிரம்புரவி
நீருயெத்திக்கு நிமிஷத்தில்மாய்ந்ததுவே
கோடிக்கிக்கோடி குறித்தபதாதிகளுஞ்
சாடித்ததிபோற் றலைசிதறிமாய்ந்ததுவே
ஊழிப்பெருங்காற் றருமூலவையைப்போல
பாழிப்படையாம் பரவையறக்கலக்கி
சாய்த்ததிரையினங்க டன்னையெல்லாமீளவிட
வலித்ததெனப்பொதுவர் வாரிபோலாற்பரித்து
கோலெடுத்துத்தானதட்டிக் கோக்குலத்தைச்சாய்த்திடவே
வாலெடுத்துத்துள்ளி மருவும்பெருந்தலத்தை
நாடிக்கனவிசையால் நன்ருகவோடுதலுங்
கூடிப்பொதுவர் குரவையிட்டுத்தான்றடர்ந்தார்
ஓடிஞனித்தே ருதைத்தூர்வலனெனவும்
பேடிகாண்டேரிருந்து பெருயுத்தஞ்செய்வதென்றும்

நாடிவலம்புரித்தார் நாதன் மனைநோக்கி
நீடுதுரோணன்முத லின்றோர்க்குந்தானுரைப்பான்
தேராதசிந்தைச் சிறுவன்வெருண்டோடியதும்
வீராயவனை விறற்றேரினிற்பிணித்துப்
பேடியெனும்பெண்மைதனைப் பேராண்மைதானுக்கி
நீடியவில்லு நிகரற்றவெங்கணைபல்
கோடிபிறங்குகின்ற கொற்றமணித்தூணிகொடு
வாடியேயோடுகின்ற மன்னனையுங்கட்டவிழ்த்து
தேற்றித்திறப்பயிற்றித் தேரூரப்பண்ணிவித்துக்
கூற்றுக்கணைமாரி கொண்டல்போலேசொரிந்து
தேர்குலமுங்கார்க்குலமுஞ் சீறும்பரிக்குலமுங்
கார்க்கடலையொத்தணிந்த காலாட்குலங்களெல்லா
நீறுக்கிகூறுக்கி ரொத்தக்கடலாக்கி
பாருக்கங்கொள்ளப் படுத்தினன்போர்க்களத்தில்
பெண்டுகளென்றே பெயர்ந்துநினையாதே
சண்டனுனது தளநான்கினுக்குமவன்
தேவர்நடுங்கும் தெயித்தியரைத்தான்களைந்து
யாவருமெய்க்க வயிராவதத்தேறிப்
பொன்னகரின்வீதிவலம் போகமுடன்வந்தகெடி
மன்னவனும்போகி மணிமகுடம்பெற்றவனும்
மற்றவனுக்கிந்த வலுவுண்டோமன்னவென்று
விற்றிறலின்மிக்க விதுரன்பகர்ந்தனனே
தெய்வவிரதன் சிலைக்குருவுஞ்சேயோனுந்
தேருந்தனித்தேரோ தேறினின்றேனும்பேடி
யாருமேநெஞ்சழிந்து யஞ்சுவதேனென்றுகன்னன்
சொல்லிமுனைந்தான் றுரோணனசுவத்தாமன்
சல்லியனுஞ்சற்பக் கொடியானுந்தம்பியரும்
வில்விதுரன்கங்கைமகன் வெஞ்சூதின்வன்சகுனி
பல்விஜயம்பெற்ற பகதத்தன்மற்றேரும்
நரலைக்குமிக்கான நான்குவகைச்சேனையுடன்
முரசக்குலங்கண் முழக்கியேபோர்மூண்டார்
கூராழிமாயவற்குக் கொற்றமுள்ளமைத்துனனும்
மீட்டநிரையை விரட்டுமெனப்பொருதுவர்
கூட்டத்துக்கோதி குலவீரகேசரிதான்
தேரைத்திருப்பித் திகைக்கத்தரியார்கள்
போராமதிக்காமற் போர்மூண்டானம்மானுய்
கன்னலொருநான்குங் கழித்ததிதனிடையே
அன்னபொழுதே யருச்சுனன்றன்கோலமுடன்

உன்னியனுமனையு மோர்மறையுமேபுகல
முன்னமனுமக்கொடியு முடித்தேரும்
வந்தபொழுதே மடங்கல்போற்றேரேறி
உந்தியேவத்தேனா வுத்திரனுந்தான்செலுத்த
ஆதித்தன்முன்னிருப்போ லச்சாபப்பெண்வடிவம்
பேதித்துவர்ச்சுனன்றன் பீடுறவந்தானே
இந்திரஜாலம்போ லிந்திரவிமானத்தேர்மேல்
வந்தபோல்வந்தான் மகிழனுமகேதனத்தான்
திக்கயமுநாகந் திகிரிநடுநடுங்க
தக்கபுவிநடுங்கச் சாகரமுந்தான்சுவற
தேரொலிக்கும்வில்லுத் தெரிக்குங்குணத்தொலிக்கும்
காரொலியுமேழு கடலொலியுமேனடுங்க
அண்டகடாக வகடுமுகடுடைய
சண்டவனுமன்றற் றடங்கொடியிற்கூத்தாட
சேனைக்கடலரசர் சேரவேதானடுங்க
ஞானமுறத்தேர்மே னராமன்றேன்றினனே
சிங்கநாதத்தொனியாற் றேர்த்தொனியால்விற்றொனியால்
அங்கமர்ந்தேதேர்மே லணியுத்தரன்சாய்ந்தான்
சாய்ந்தோனைத்தேற்றித் தடந்தேர்மிசைநிறுத்திக்
காய்ந்தானைவெல்லக் கடுகினன்வில்விசயன்
நாகக்கொடியர் னாலைப்படையுடனே
வேகித்ததம்பியுடன் மேலாடிப்போர்புரிந்தான்
நகைத்துவில்வீர னடனப்பெரும்புயல்போல்
பகைத்துச்சரமாரி பாரமாய்வீசினனே
அங்கமெலாம்புங்கமுற வாறெனச்செங்கீரோட
எங்கும்பிணமலைக ளெத்திசையுமேனிறைந்த
தம்பிமாரெல்லாந் தடந்தேருவில்விழுந்து
கம்பிவலைபோலக் காயமெல்லாந்தானறுந்து
கணத்திற்புறங்கொடுக்க கட்செவியின்கேதனத்தோன்
இணக்கியதேர்விட் டெதிர்த்தான்பின்னிட்டகொடி
மேனனென்றுதைவென்றான் மேருமுடியைத்தறித்துப்
போனான்மெலிந்து புறங்கொடுத்தேயுன்றகப்பன்
இன்றனைவெல்வே னிமைப்போதிலென்பதுபோல்
அன்றவனும்க் கொடியடர்ந்தேயாடியதே
அம்பெடுத்தேவில்லி லணிவதற்குமுன்பாக
வெம்பரியோர்நாலும் விறற்சாரதித்தலையுந்
தேருங்கொடியுஞ் செனத்திற்பொடிப்படுத்தி
மாருமிடக்குறைத்த வாயினிலுஞ்சோரிகக்க

வாளியீரெட்டுவிட்டு வன்சிலையுந்தானறுத்து
மீளிபோற்கஞ்சி வெருக்கொண்டேயோடினனே
கானடையாகக் கலங்கிமன்னனோடுவதைப்
பானுசேய்கண்டே பதைபதைத்துத்தேர்செலுத்தி
உற்கையெனா ரொளிர்வெங்கணையேவ
விற்கைவலியானும் வெங்கணையைத்தானறுத்து
வாரமுநாலு மணித்தேர்கொடிபாகும்
ஈரமறவறுத்தா னேங்கிமறுதேரேறி
கூர்வெங்கணையறுபான் கோபதிசேய்மீதேவ
நேர்வெங்கணைபா னிமிஷந்தனிலறுத்து
பொற்றேரும்பாகும் பொருவிற்றுசமறுத்து
கற்றோர்நகைக்கக் கடுகடுத்துத்தானகைத்தான்
மீண்டொருதேரில் வெகுண்டேறிவில்வளைத்து
தூண்டியேவாளி சொரிந்தடர்ந்தான்சூரன்மகன்
பல்லம்பலவும் படியிற்பொடியாக
வல்லம்பினாலறுத்து வாசித்தேர்வில்லறுத்து
மன்சபையிலன்றொருநாள் வாய்மதமாய்ச்சொன்னாற்போல்
வன்சமர்நீசெய்ய வருமாயிழிகுலத்தோய்
நாகபாசத்தா லரனையான்கொல்வனென்று
வாகைபகர்ந்தாய் வடுக்கொண்டபாம்புதனை
ஏவடாபார்ப்போ மிடக்குமாக்கும்புத்தியில்லோய்
காவடாமூடா கசடாமுழுவசடா
அந்தப்பாம்பென்னிடத்தி லாடாதுனீபோடா
தொந்திப்பாயென்னிடத்திற் றேய்ந்துயுத்தஞ்செய்யாமல்
இன்னஞ்சிலநா ளிருக்கமனதிருந்தால்
சன்னனென்றபேரைக் கவலாதகலுதில்லாய்
என்றிவன்சொல்ல வெரிபோன்மனந்தீய்ந்து
குன்றியோர்தேரேறி குறுகிற்றனுவளைத்தான்
வளைத்தபெருஞ்சிலையு வாகனமுந்தான்மாற்றி
இளைத்திளைத்தோடும்வகை யெட்டுத்தரஞ்செயித்து
முன்மகுடபங்க முனைமுகத்திற்பண்ணிவைத்தான்
வின்மகனுக்கஞ்சி வெருக்கொண்டகன்னனுடன்
ஆசாரிமைந்த னஸ்வத்தாமாவுரைப்பான்
கூசாதேயோடுவது கூறியதோர்வீரியமோ
நேரொருவன்வில்லொருவன் சிந்திப்பதென்னெனவே
பாரசர்முன்னே பகருகின்றவாய்போலே
கார்முகத்தைக்கையேற்றுற் கைசெய்யவேண்டாமோ
போர்முகத்திலேர்வெதுன் புத்திகெட்டவாறேதான்

சிங்கந்தனித்தாலுஞ் சிந்துரங்களாயிரந்தான்
பொங்கிவளைந்தே பொருதிச்செயிப்பதுண்டோ
சொல்லலாஞ்சொல்லாற் றுரைமக்கள்மெச்சம்வகை
வெல்லலாமென்னல் விதிக்குமரிதாமே
என்றிவன்சொல்ல விருகண்ணெருப்பொழுக
நன்றுவேடிக்கை நயனத்தாற்பார்த்திதொன்று
சற்பக்கொடியான் றடந்தேரினைச்செலுத்தி
வெற்பொத்தவில்வளைத்தே வீசினனூறுகணை
நூறுகணையு நொடியிற்பொடியாக்கி
நீறுபடுத்தி நெடுந்தேரைவிற்றுணித்து
மார்பிலொருகணையும் வன்புயத்திலீர்கணையும்
நேர்படவாய்க்கோர்கணையு நெற்றிதனிலோர்கணையுந்
தட்டுருவவெய்தான் சலபஞ்சபாணமெனக்
கட்டழகன்சோர்ந்தே களத்திலேதான்வீழ்ந்தான்
சல்லியனைவில்லழித்தான் சாதனனைத்தேரழித்தான்
வல்லபகதத்தனையும் வாரமுடன்றேரழித்தான்
மாமன்சகுனியையு மார்பிளந்தேதேரழித்தான்
அரவக்கொடியோ னனுசரடங்கலையும்
இரதத்துடன்றேர்வில் லெல்லாமறுத்துகுத்தான்
மண்கொண்டபூவின் மடிந்ததல்லான்மற்றோர்கள்
புண்படாருண்டோவப் போர்முகத்தில்வந்தோர்கள்
சோர்ந்துவிழுந்த துரியோதனனைவந்து
வேந்தர்பலர்கள்வந்து விரைந்தெடுத்தேயேகினரோ
கையிருக்கமெய்யிருக்க கையிலேவில்லிருக்க
உய்யப்புறங்கொடுத்தே யோடுவதோமன்னர்மன்றோ
எங்களைக்காட்டி னிடையேவிரட்டிவிட்டு
இங்குலகமாண்டதுநீ யிச்சவுரியங்கள்கொண்டோ
நூறுபெயர்நீங்க ணொடியிற்பொடியாக
நீறுபடச்செய்வே னெடுங்கூர்க்கொடுங்கணையால்
வாயுசுதனன்றுரைத்த வஞ்சினமேதப்புமென்று
தியவரோயுங்களுட சீவனையான்விட்டுவிட்டேன்
முன்கொண்டபோரின் முதுகிட்டேயோடுமுனம்
மன்கொண்டநீயுன் வளநகரின்வீதிவந்தால்
மாதர்நகையாரோ மன்னவர்கண்மன்னவனே
கோதைமகன்றண்டாற் கொலைக்களத்துக்கேயிரையாய்
நாளைநீசாவதுமெய் நன்றிமறந்தவனே
பூளைபோலேபறப்பாய் போர்க்குநீவல்லாயோ
இப்போரினையோ ரியற்றூதுவர்புலவோர்

விருத்தர்மறையோர் விறற்போற்குவென்னிடுவோர்
குரவர்குருமார்கள் குற்றமிலாரைக்கோறல்
துரோகந்துரோகமிகு தோஷமிகுந்தோழமன்றே
என்றிவன்சொல்லி யெளிதிலிரண்டுகணை
மன்றல்செறியாசான் மகன்விதுரன்கங்கைசுதன்
பாதந்தனைநோக்கிப் பற்குனனுந்தான்விடவே
தோதகமாய்முக்காலுஞ் சுற்றித்தொழுதகன்ற
தாளிறைஞ்சுகின்ற சரங்கண்டுளங்கூர்ந்து
தோள்புளகங்கொண்டு துரோணன்முதன்மற்றேரும்
எப்போற்குவெற்றியுனக் கெய்தக்கடவதென்று
தப்பாதவாய்மையுள்ளோர் தான்வாழ்த்திவிட்டதற்பின்
வேதக்கொடியோன் விறற்றேரைத்தானடத்தி
தாதுற்றமார்பன் றனஞ்சயன்முன்றேன்றினனே
தேசிகனைக்கண்டிறைஞ்சி தெண்டனிட்டுக்கைதொழுது
பூசுரனேயுன்பாதம் பொற்சிரசிற்றுன்சுமந்து
காட்டினிலீராறு கருதுவருடங்கழித்து
நாட்டிலேயோராண்டன் னற்கடாக்ஷப்பொருட்டால்
செல்லக்கழித்தேயுன் சீர்பாதபாக்கியத்தால்
வெல்லப்போர்செய்யவந்தேன் வேதியனேநின்னேடு
நிந்தன்சுதனேடு நீடந்தைபாட்டனெடும்
எந்தையேயான்பொருத லெந்தனக்குத்தான்முறையோ
ஏதுமறியா வெளியேனைமேன்மைபெற
ஓதுபலபடையா லொப்பிலாவித்தைதந்த
தெய்வமேயென்னிதயஞ் சேருஞ்செழுஞ்சுடரோ
கைவருமோ வுன்மேற் கணைநான்றெடுப்பதற்கு
பஞ்சபாதகத்திலொரு பாவியாகாதளிப்பாய்
அஞ்சனின்பாத மலதுகெதிவேறுமுண்டோ
ஏழைப்பயனு னிலக்கோநின்விற்போர்க்கு
ஆழிப்புவியா லடியேனென்செய்வனென்றான்
இன்பமுடையதொரு வென்சேய்க்குமிக்கான
அன்பனேகண்போ லணிசேர்மணிமகனே
உன்னலேயென்பே ருலகெலாந்தான்விளங்கும்
மன்னுவுனக்கெதிரி வான்பூவுலகிலுண்டோ
உன்னைநிகர்நீயலதே யொப்பில்லாவில்வீரர்
கன்னன்போர்சோற்றுக் கடனைக்கழித்தனிசம்
ஆதலாலென்னலே யானமட்டும்பெருயுத்த
நாதனேசெய்வேனீ நற்றேசிகனெனவே
கைதாழ்க்கிலென்போலக் காசினியிலாயிரரைக்

கொய்தார்கள்பாவமெல்லாங் கொள்ளுவாயுள்ளபடி
வன்போர்புரிந்தாயேல் மற்றுனக்கோர்பாவமில்லை
நின்போர்வலியா னிலைப்பட்டானிந்திரனுந்
திக்கெல்லாம்வென்றே திறவிற்போர்நீபுரிந்தால்
கற்கலாமென்றுவந்தோங் காண்டீபாவென்றுரைத்துத
தானவனைவென்ற தனுவவிலையயான்கான
வானவர்கோன்மைந்தா வளைவில்லெனவுரைத்துப்
பல்கோடிவாளிபரப்பினன் பார்ப்பானுஞ்
செல்கோலியபோற் சிதறினான்பார்த்தனுமே
ஒரொருவர்பல்கோடி யொண்கணைகளேவியதால்
பார்திசைகளண்ட பகிரண்டமுமறைந்த
மிக்கவதிரதனை வீரன்மடக்கவொட்டாமற்
தக்கமுனியுந் தனஞ்சயனும்போர்மூண்டார்
அம்புடனம்பு மடன்மூண்டதல்லாமல்
வெம்புமிருவர்கடன் மெய்யிலொன்றும்பட்டதிலை
பார்த்தன்சரமாரி பாரண்டமுந்திசையுந்
தோத்தந்தெரியாது சோனைபோனின்றமையால்
தான்பயிற்றும்விற்றிறமை தன்னிற்சதமடங்காய்
மேன்பயிற்றக்கண்டுகுரு வெண்ணினன்கற்பதற்கு
ஐயர்பதனமினி யர்ச்சுனன்கைபார்க்கவென்று
வெய்தாய்ப்பரிபாகு வின்னுனுந்தேர்க்கொடியுங்
கொய்தானறுகணையாற் கோலிமெய்யிலாறுகணை
எய்தான்குருவு மிளைத்துமுதுகிட்டனனே
தேரிழந்துவில்லிழந்து தேர்க்கொடியும்பாகிழந்து
போரிழந்துதாதை புறங்கொடுக்கப்பொங்குசின
மூண்டான்கனற்போன் முடுகிக்கடுங்கொடுந்தேர்
தூண்டாமுனமே சுடுவெங்கணைமாரி
வீசினன்றிக்கும் விசும்புகளுந்தான்மறைய
கூசினன்றேவர் குலையச்சிலைவிசயன்
சோனையெனப்பெய்யுந் துரோணன்சேயம்பையெல்லாம்
மானப்பெருங்காற்றாய் வாளியால்மாற்றுவித்தான்
தங்களிற்றங்க டறமொத்தவில்வீரர்
பொங்குசினமாய்ப் பொருவிற்றொழில்புரிந்தார்
காற்றாய்க்கனலாய்க் கடுமாலகாலமதாய்
கோற்றூர்பலவாளி கோபாக்கினியேறி
ஆரியன்மைந்த னருச்சுனன்வின்னுனிதனை
கூரியவெங்கோலாற் குறித்தறுத்தானம்மானாய்
வடமற்றபோதே மகவான்மகன்சினந்து

திடமுற்றொருநாணைச் சிலையிலேதான்பூட்டி
இப்போருக்கெல்லா மிவன்சாகானென்றுருத்து
துப்பாய்ச்சிவனளித்த துய்யசரந்தொடுத்தான்
அண்டம்வெடிக்க வவனிதலைகுலைய
சண்டப்பவனன் றயங்கக்கொடுங்கனல்போல்
சேயனையான்விட்ட செருக்கணையைநீருக்கி
பாய்புரவிசாரதிதேர் பண்கொடியும்வில்லறக்க
ஆடல்விசய னடர்ந்துபோர்செய்தமையால்
ஈடிவனுக்காரொன் றிளைத்தோடியூர்புகுந்தான்
நூலோன்குமர னொடிக்குமுன்னேதானோடை
மேலோனகன்றதற்பின் விற்கிருபன்றேரறுத்து
பாகுகொடிதேர்விற் பற்பமெனப்பொடித்து
ஆகமிகக்கலங்க வையைந்துகோல்விடுத்தான்
கிருபனுடைந்தோடக் கேடிலாவில்வீரன்
நிருபர்பலகோடி நெஞ்சழியத்தான்பொருதான்
மாய்ந்தாரொழிய மறத்துள்ளமன்னரெல்லாஞ்
சாய்ந்தாரவர்க டனையேமிகத்திரட்டி
கங்கைசுதன்விதுரன் காந்தாரிபெற்றமக்கள்
அங்கர்பதிசிந்துபதி யாலப்பணிக்கொடியோன்
முன்னிற்குந்தேரோன் முராரிதிருமைத்துனனை
வன்னிக்கும்பொல்லார் வளைத்தனர்காணம்மானை
தேர்கோடி விற்கோடி சிந்துரமாப்பல்கோடி
நேர்கோலியோரொருவர் நீள்கோடிகோல்சொரிந்தார்
திக்கெலலாங்கோலிச் சிதறப்பொழிகணையால்
தக்கவர்கள்விட்ட சரஞ்சரத்தினாலறுத்து
வாயுவருண னிருதிமரலிகணை
தேயுபகவான் திகழ்தனதன்வெங்கணையும்
எண்டிசையின்பால ரொழிற்கணையுந்தானேவி
வண்டிசையுந்தாரான் மகவான்றருங்குமரன்
மோகனவாளி முரணாகத்தானேவி
சேகரமாய்நாலுவகைச் சேனையெல்லாந்தானறுத்தான்
சிந்துபதிதேரழிந்து தேர்ச்சாரதியழிந்து
மைந்தின்கொடியு வரிவில்லுந்தானிழந்து
அங்கந்துணியுண் டணியிழந்தேயோடலுற்றான்
அங்கர்கோன்றேர்வில் லழிந்தவனுமோடலுற்றான்
நூற்றுவருந்தேர்வி னொறுங்கியேயோடலுற்றார்
எற்றவரவுயர்த்தோ னென்றுங்கொடியோனை
மானபங்கமாக மகுடபங்கம்பண்ணிவைத்தான்

ஈனம்வந்ததென்றே யிதையநெருப்பெரிய
கோபமுடன்கங்கை குமரன்முகநோக்கி
சாபவிசயன்முன்னாட் டான்சொல்லுநாட்செலுமுன்
வந்தான்வெளியாக மற்றுமின்னங்காடுபுக
இந்தார்மணியே யிசைந்தனுப்பென்றேதினனே
தீயனுரைத்ததற்பின் றெய்வவிரதன்பகர்வான்
நேயமுடன்சொல்லியநா னென்னலேபோனதென்று
கங்கைமகன்சொல்லியபின் காண்டீபனேதுரைப்பான்
எங்களையல்லாதுலக் மின்னமுநீயாளுதற்கு
ஆசைமிகவானேயோ வன்றுனைத்தேரிற்பிணித்து
வாசவன்சேய்போனன் மதித்துச்சிறையிலிட்டால்
இன்னமுலக மிசைந்துநீயாள்வாயோ
பன்னுகுருகு பருகிலரசாள்வாயோ
செய்நன்றிகுன்றுகின்ற சீர்கெட்டமாபாவி
நெய்நின்றவெங்கதையா வீமடியுநாளாச்சு
தேறுமொருவுதவி செய்தோற்குமிக்கோர்கள்
நூறுபிழைசெய்தாலு நோக்கமுடன்பொறுப்பார்
எழுநூறுநன்றிசெய்தே யேதமொன்றுசெய்தாலும்
எழுநூறுந்தீதாக வெண்ணுவர்துற்புத்தியினல்
நன்மைதான்வெல்லுவது நாயனையாய்நீவிளைத்த
தின்மைதான்வெல்லுவதுந் தீயோனேநாளையறி
இன்றிவன்சொல்ல வெரிவனமேயுங்களுக்கு
நன்றிசெறிநாடெனக்கே நாயேபோவென்றுரைத்து
அரவக்கொடியோ னவனூரேபோய்ச்சேர்ந்தான்
விரதநதிமகனு மிக்கோரும்போனதற்பின்
வீரர்களைத்தானழித்தே வெங்கண்டவீரியனுந்
தீரமுடன்வெற்றிசெறி சிங்காதங்குரித்தான்
மங்கையபூபன் மருவுந்திசைகளெல்லாந்
துங்கமுளவெற்றி சொலும்பஞ்சவாக்கியம்போல்
வீரசிங்காத வியனொலியான்மிக்கோர்கள்
பாரடங்கவேசெவிக்கு பம்மினகாணம்மானை
உத்தரனைப்பார்த்தே யுனதுதாய்தானறிய
இத்தனைகளெல்லா மிடங்கொள்ளாதேமடிந்தார்
வீரர்சிகாமணியும் வெற்றிவிருதுள்ளதெல்லாஞ்
சேரவேகொண்டு செனத்தில்வாவென்றுரைத்து
வன்னிமரப்பொதும்பில் வல்லாயுதங்கள்வைத்து
மின்னுமுடித்தேரை மீண்டுமனுப்பிவிச்து
பேடிபோற்றன்வடிவம் பேதித்தேபீடுடையோன்

காடிவந்தவுத்தரன்றேர் நற்சாரதியாகி
வெற்றிக்கொடித்தேரில் மேன்மைபெறவேயணிந்து
உற்றதோருத்தரனை யொண்டேரின்மீதேற்றி
தேனைவினையத் திறலாகத்தானடத்தி
ஊனைநெருக்கி யொருசோலையிலிரங்கி
உத்தரனுந்தானு முன்மகிழ்ந்தேதானிருந்து
சித்தமகிழும்வகை செப்பிவிராடனுக்குத்
தூதனுப்பிவித்தான் றுரியோதனன்படையில்
சாதகமாயுத்தரன்போர் தாவிமிகப்புரிந்தே
சென்னியறுத்தே தோறுத்துவில்லறுத்து
கன்னமுடன்மும்மதஞ்சேர் காய்கரிமாக்காலாளுஞ்
சின்னம்படவறுத்துத் தேசினிரைமீட்டனென்று
மன்னனுக்குச்சொல்லி வரவிட்டினிதிருந்தான்
ஓர்கோடிதூத ரவனுக்குச்சொல்லவென்று
வார்கார்முகவீரன் வள்ளல்பால்விட்டிருந்தான்
இங்கிவர்களிவ்வா றெழிற்காவகத்திருக்கத்
தங்கியேதென்றிசையிற் றுன்முற்பகலுயுத்தஞ்
செய்திரவுதங்கிச் செருனர்தமைவென்றதற்பின்
வெய்தின்மறுநாள் விராடனகர்சேர்ந்தான்
தன்னகர்சேர்ந்ததற்பின் றன்மனைவிமுன்னில்வந்தான்
நின்னுரியமைந்தன் னெடுந்தேரின்மீதேறிப்
பேடிதேரூரப் பிறங்கிவரும்பல்கோடி
கோடிதேரூருங் கொடியோனரவுயர்த்தோன்
தன்மேலிகல்புரியத் தங்காதுதானடந்தான்
என்மான்மகன்போரி லெவ்வாறேவென்றுரைத்தாள்
மனைவியுரைக்க மனமறுகித்தள்ளாடி
நினைவுகுலைந்தே நெடிதுயிர்த்துக்கீழ்வீழ்ந்தான்
வீய்ந்தானைப்போல விராடனுடல்பதைத்துச்
சாய்ந்தானுணர்வறவே சங்கமுனிகங்கனென்பான்
பன்னீருவாசப் பரிமளநீர்தான்வீசி
நன்னீர்மையாகவந்த நாதன்றனைத்தேற்றி
தேரூர்ந்தான்பேடியெனிற் செம்மலேநின்குமரன்
பேராந்தகனனெனப் பேணலனைத்தானறுத்து
வென்றுவருவளிது மெய்யாகவென்றுரைத்தான்
அன்றுமுனிசொல்லா லவன்றேறியேயிருந்தான்
இன்னலான்மாய்ந்த விறைவனுக்குக்கங்கமுனி
கன்னன்மொழிசஞ்சீவி காதிற்பிழிந்ததற்பின்
சோபந்தெளிந்தே துணிந்திருக்குநேரமதில்

சாபவிசயன்விட்ட தாளுபதிகள்வந்து
வள்ளல்விராடன் மலர்ச்சரண்கடான்பணிந்து
தெள்ளமுதம்போலச் சிலமொழிகள்செப்பலுற்றான்
ஆசாரபோச னரவுயர்த்தோன்வென்னிடவே
பூசாபலனினது புத்திரனும்போர்பொருதி
எண்ணிறந்தசேனையிவ னேவுக்கிணைகொடுத்துப்
பண்ணிறைந்தமாத்தேர் பகடும்பொடியாக்கி
போனநிரைமீட்டுப் பொதுவர்வசப்படுத்தி
ஞானமுடன்வீரசிங்க நாதந்தனைமுழக்கி
வெற்றிப்பறைமுழக்கி வெற்றிக்கொடிபிடிக்க
உற்றசிங்கம்போலாக வுத்தரன்வந்தோர்பொழில்வாய்
தேர்விட்டினிதிருந்தார் தேர்வேந்தேயென்றுரைத்தான்
கார்விட்டகைத்தலத்தான் கன்னபாகங்குளிர்ந்து
சீதவமுதஞ் செவியிற்சொரிந்தாற்போல்த்
தூதருரைகேட்டுச் சோபதாபந்தவிர்த்து
தன்னையொழியச் சதுரங்கசேனையையு
மன்னரமைச்சரையு மகனையெதிர்கொள்ளவிட்டான்
சோரர்கருத்தன்கருவாய்த் தோளேந்திமோந்ததுபோல்
ஆரமுத்துமெய்யுருகு மஞ்ஞைகள்போலாக
வீரன்போர்வெல்ல விராடன்மகன்வென்றனென்று
ஊரையலங்கரிக்க வுத்தாரம்பண்ணினனே
வீதிவிளக்கி வியன்பூழிதானடக்கி
தாதுகமழுமிகு சந்தமுறும்பந்தரிட்டுப்
பூரணகும்பம் பொலிவாமலினிறைத்து
தோரணங்கட்டித் துசங்கண்மிகநிறைத்து
எவ்வீதிதோரு மெழிலாயலங்கரித்து
அவ்வூர்களெல்லா மடைவாய்ச்சோடித்தனரோ
மைந்தன்வருமளவு வன்சூதுதானுட
அந்தணனோடு மரசனெதிராடினனே
பன்முறையுமென்மேலும் பார்த்தன்முன்னோன்வென்றமையால்
என்குமரன்வென்றதுபோ லென்னாட்டவெல்லவென்று
வன்கருணைமன்னன் வலிந்துகயறெறிய
பேடியேவென்றுலென் பீடாட்டம்வெல்கவென்று
நீடுமுனிவெல்ல நிருபனேதோற்றுவந்தான்
என்மைந்தன்வெல்ல வெழிற்பேடிவென்றதென்று
சொன்முந்தியோதுவதைச் சொல்லித்துடங்குமென்றான்
வென்றவனும்பேடியின்று விண்மண்மதிக்கவெனறான்
நன்றுநீசொன்னமொழி நன்குமரன்வென்றனென

உற்றவர்கள்சொல்லுகின்ற வுண்மைதான்பொய்யாமோ
கற்றவனேயென்சேய னூடியேயென்றதென்றான்
சேகரமாகத் திரையேழும்பொங்கியபோல்
மோகரித்தசேனையெல்லா முன்குமரன்வெல்வானோ
நாகக்கொடியோ னரவப்படைநடுங்க
வாகுத்தேவென்றவனும் வள்ளலேபேடிகண்டாய்
இருகணைப்பேடிதனை யேளிதமாயெண்ணுதே
வரமுற்றகாண்டா வனமெரித்தகாளைகண்டாய்
திக்குவிஜயஞ் செலுத்தினவன்பேடிகண்டாய்
மிக்கதயித்தியரை வென்றவனும்பேடிகண்டாய்
சித்திரசேனனைமுன் றேரிற்பிணித்தவன்காண்
அத்திக்குருகை யறுத்தவன்காண்மன்னவென்றான்
கோடானகோடி கொடித்தேர்புறங்கொடுக்க
பீடாகவென்குமரன் பேணுவென்றதற்கு
தூதயொருகோடி சொன்னமொழிபொய்யாக்கி
சாதனையாய்ப்பேடியென்றாய் சம்மதியோமாமுனியே
பேடியைநீகொண்டாடிப் பேசுதனன்றோவுனக்குப்
பேடிக்கிளைத்தவனோ பீடுடையவென்குமரன்
பெண்டுகளிற்றாழ்வாசப் போனவென்மகனை
மண்டமரின்வெற்றிபெற மாட்டானென்றோதனன்றோ
புன்னவையாமாற்றம் புகன்றேனேயானாலும்
இன்னவைநன்றென்றே யிதமாகச்சொற்றமுறை
மன்னவைபுக்கின் வழிப்படாமாந்தர்மன்னர்
சொன்னமொழிமாறிச் சொல்வரோவென்றுசொன்னான்
என்னவேமீண்டு மிடங்கொடாதேதுரைப்பான்
கன்னன்றுரோணன்மகன் காங்கேயன்வில்விதுரன்
பகதத்தன்சிந்து பதிசல்லியன்சகுனி
மகதத்தரெண்ணேழின் மானகரின்மன்னவர்கள்
கிருபன்கிருதன்சற்ப கேதுவுடனூற்றுவர்கள்
விருதிலுயர்ந்தபல மேலானவீரியரும்
அக்குரோணிபத்துக் கதிகமுள்ளசேனையையுந்
தக்கதாயுந்தன் றனையனோவெல்லவல்லன்
சொல்லுவார்சொன்னாற் றடர்ந்தமதியிலையோ
வென்றதுவும்பேடியல்லால் வெல்லவல்லார்வேறுளரோ
எந்தலேயுன்மகன்மு னெந்தப்போர்வென்றுவந்தான்
சாந்தகமாயின்னஞ் சணத்திலறியென்றுரைத்தான்
வில்லாண்மையாலெனது மெய்யன்செயித்ததெல்லாம்
புல்லாண்மையென்று புகன்றாய்மருவார்போல்

பல்காலுந்தர்க்கம் பகர்ந்திகழ்ந்தாயென்றரசன்
மல்காலகாலமென வன்கோபமேலாடி
கயத்தைநிலத்திற் கரத்தால்விசைத்தெறிந்தான்
வியப்புத்துதைத்தெழும்பி வேதியன்றனெற்றியிலே
தாக்கியிரத்தஞ் சழியுமந்தநாழிகையில்
நோக்கியேவண்ணமக ளுய்திற்கலைத்தலையாற்
சோரிதனையேற்றாள் சுரபியனையான்வாழ்வும்
வாரியனைய வளர்சேனையுங்கிளையும்
தாங்கண்முன்னீய்ந்த தவம்பலவுமாயுமென்று
ஏங்கியகண்ணீரோ டிரங்கிரத்தமேற்றனளே
முந்தானையெங்கு முழுகிரத்தஞ்செம்மல்கண்டு
நொந்தான்கலங்கி நுவன்றேதும்பேசாமல்
தன்னையேநொந்து தலைகவிழ்ந்துமன்னர்பிரான்
இன்னல்பெருங்கோப மேபாவியென்றிருந்தான்
அன்னோரஞ்சோலை யடைந்தபெருங்கூட்டமுடன்
மன்னுனவுத்தரனு மானகரைநோக்கிவந்தான்
சேனைபுடைசூழத் திறல்பல்லியமார்ப்ப
மானநெறிமாதர் வாழ்த்தெடுப்பவீதியெல்லாம்.
பேடிதேரூரப் பெருமான்றிருக்குமரன்
நாடியேவீதிவந்து நன்மனையைக்கிட்டுமுன்னே
ஓடியெதிர்சென் றரவோனுமுத்தரனை
வாடில்மகிட்சியுடன் மார்போடுறத்தழுவ
தழுவியதாதை சரணஞ்சிரசேற்றி
குழுவினுடனேகி கோலமனைபுகுந்து
பழுதிலாவாய்மைமறைப் பண்டிதனைத்தான்பணிந்து
செழுமைமுகநோக்கிச் செய்யனுதலூறுகண்டான்
திகழ்ந்தநுதற்காயஞ் செய்தவர்களியாவரென
நிகழ்ந்தவைகளெல்லா நிகழ்த்தவவன்றுணிக்கி
இகழ்ந்தையென்கோனின்னி லேழையோவங்கவன்றான்
மகிழ்ந்தெம்மையும்புரக்கு மன்னவனல்லோதேவர்
நாழுநிகழ்ந்த னவில்வதவரோடெதிர்த்து
ஆமோதான்றற்க மனாதன்முறைநெறியோ
என்றுபிதாவுக் கிசைத்திறைவனுஞ்சேயும்
அன்றந்தணன்பாத மன்பாகத்தான்போற்றி
செறுத்தல்சிறுமை சிறியவர்கள்செய்தீமை
பொறுத்தல்பெருமைபெரும் புண்ணியனேயென்றுரைத்து
மறையோன்மனது மகிழவுபசரித்து
பொறையோன் பொறுத்ததற்பின்பூபதிகளிற்பூந்தார்

சுற்றரங்கமான சுதேட்டிணைகோயிற்புகுதப்
பெற்றாளுமன்றையிலே பெற்றாளைப்போற்றழுவி
வாழ்த்தியெடுத்தே மகனைமுகந்துகொண்டாள்
காழ்த்தமன்னர்வீரர் களத்திற்பலிகொடுத்த
வெற்றிப்பதாகை விருதெல்லாமுன்புவைத்து
வுற்றதாயேநீ யுடுத்தவெடுத்தவென்று
ஈந்தான்பிதாவோ டிளங்குமரன்றான்றனித்து
பூந்தாரணிபேடி போரின்வலிமையெல்லாம்
என்னென்றுசொல்வே னிறைவனேயென்றுரைத்து
மன்னன்றிகைக்கும் வகைசேயுங்கூறலுற்றான்
சிராமபாணஞ் செயவிசையன்கைக்கணைக்கு
நேராமெனில்யா நிகழ்த்தின்மகாபாவம்
அரன்கைச்சிலையு மரவணையான்கைச்சிலையுங்
குரங்குக்கொடியோன் கொடுமரத்துக்கொப்பாமோ
ஈசன்கைச்சூல மிபங்காத்தான்கைத்திகிரி
வாசவன்கைவச்சிரா யுதங்குமரன்வன்கூர்வேல்
ஒக்குமோசற்று முவமைவைத்துப்பார்த்தாலுந்
திக்குவிசயஞ் செலுத்தினேன்கைக்கணைக்கு
ஒன்றுபத்துநூறா யிரமொருபத்தாயிரமாய்
குன்றிலக்கம்பத்துலக்கங் கோடிமகாகோடியதாய்
சங்கமாய்விந்தம் பதுமஞ்சமுத்திரமாய்
வெங்கணைகடாமரையாய் வெள்ளப்பிரளயமாய்
பற்பறிசையும் பறந்ததவன்பகழி
கைக்கடுப்புவில்விசையுங் கைச்சிலையின்வல்லபமும்
முக்கியமுந்தேவர் முனிவர்களுங்கண்டதுண்டோ
பூவிலுள்ளதூசிப் பொருளறிந்தேயோதுகினும்
ஏவில்வலியான்சிலையா லெய்கணையாரெண்ணறிவார்
அண்டமுந்திக்கு மலைகடலுமந்தரமுங்
கொண்டதுவுமுங்கள்விழிக் கோவினற்கண்டிலிரோ
அரவக்கொடியோ னடங்காப்பெருப்படையும்
விருதுற்றமன்னரையும் வீரரடங்கலையும்
மாய்க்கவெனவெண்ணி மனவயிரங்கொண்டானேல்
தீய்க்கிடையின்கூளமெனத் தீய்த்திடுவேனோர்கணத்தில்
பூமியின்மிக்க பொறையாளுடன்பிறந்த
வீமற்கிளைய விசயன்பொருமையினால்
வேடிக்கையான விளையாட்டுச்சண்டைசெய்து
பீடுற்றதன்விசயன் பேணார்மனதறியத்
தொய்யப்படுத்திச் சுமக்குமட்டுமாற்றலர்கண்

மெய்யைச்சரக்கூடாய் வீசிமுதுகிட்டோரை
விட்டுமுனைந்தோரை வெங்களத்திலேமாய்த்து
மட்டடங்காவீரர்களை மானபங்கம்பண்ணுவித்து
காங்கயனெஞ்சங் கலங்கவிதுரனையும்
எங்கப்பொருதியும்வில் லேற்காமலும்பொருதி
விற்குநிலைபயிற்று வில்லாசிரியனையுஞ்
கற்கும்படிவெங் கணைமாரிதான்சொரிந்து
திகைத்துத்துணுக்கச் சிலைத்தேர்பொடித்தோட்டி
மிகைத்துவருமவன்றன் மெய்யன்றன்வில்லறுத்து
கன்னனையுமெட்டுமுறை கானடையாகத்துரத்தி
மன்னனையுமும்முறையாய் வாகனமாற்றித்துரத்தி
பின்னுமகுடபங்கம் பேராளன்பண்ணுவைத்து
வீராண்மையுள்ளான் விருதரசர்கெம்பீரன்
தீராண்மையோடுவகைச் சிங்கநாதங்குரித்தான்
விற்றொழிற்கேவல்லான்முன் வீரரென்றபேர்களெல்லாம்
புற்றொழிற்கேவல்லரல்லாற் போர்பொருதவல்லாரோ
என்றுமகன்சொல்ல வெழின்மச்சநாடதிபன்
ஒன்றுவிபர முணர்ந்தறியான்யோசனையாய்ப்
பேடிதேருராப் பெரும்படையினீபுகுந்து
சாடுமுயுத்தமொன்றுஞ் சாராமல்வில்விசயன்
வல்லாண்மையெல்லா வழுத்திறுயங்கவன்றன்
வில்லாண்மைவல்லான் விசயனங்கேபோது
சொல்லென்றேமன்னன் சுதனைவினவுதலு
நல்லென்றுசேயன் னரபாலனுக்குரைப்பான்
பேரானவில்விசயன் பேடியாய்த்தேரூர்ந்து
சேரச்சலதிச் செருச்சேனைமுன்புவிட்டான்
கண்டேன்றிகைத்தேன் கரங்கானடுக்கமுற்றேன்
உண்டோவுடலி லுயிரென்றுணர்வழிந்தேன்
தற்சரணையற்றநின்ற தன்னிலமைபேடியென்ற
அர்ச்சுனனுங்கண்டே யகந்தேற்றத்தேறுமல்
மீளவிடுதேனை வென்னிடுவேனென்றுரைத்தேன்
காளைபின்னுந்தேனை காற்றேறத்தூண்டலுற்றான்
இந்தப்படியி லிகல்செய்துயிர்பிழைத்து
தந்தைக்குந்தாய்க்குந் தனையானுய்மீளுவனே
என்றுன்னிநெஞ்ச மிளைத்திரதவிட்டெழும்பி
நின்றுகுதித்து நினைவழிந்தேயோடலுற்றேன்
வெய்தாகவோடுமெனை வீரன்றுடர்ந்துபற்றி
மைதாவும்வேலான் வரைந்திரதத்திற்பிணித்து

ழுகடனீரோ ரொரும்பருந்திவற்றுகினும்
பாழியுறுங்கணைகள் பற்றறுத்தூணியுடன்
சங்கரன்மெய்யுஞ் சகலசராசரமும்
எங்கும்பரவ விடிபோலதிர்ந்திடித்து
காண்டீபங்கொண்டே கணத்தில்வந்துகட்டவிழ்த்து
வேண்டாம்பயமுனக்கு வில்விசயனெனவே
சொன்னலொருநான்கிற் காண்டிபனுவனென்று
மின்னலொழிதிகழ வெய்யசரமாரிவிட்டு
பஞ்சாய்ப்பறக்கப் பாதாதியெல்லாநீருக்கி
அஞ்சார்களஞ்ச வடந்தெதிர்த்துவார்ப்பரித்துக்
கோவினங்களுள்ளதெல்லாங் கோன்கள்வசப்படுத்தி
பாவினங்கடேரினங்கள் பாணங்களைப்பிளந்து
பெண்டகன்சண்டை பெருஞ்சண்டையென்றயர்ந்து
மண்டலிகரெல்லாம் மயங்கியேநிற்பளவில்
உன்னினோர்மந்திரத்தி லுற்றனுமன்கூத்தாடும்
வன்னியளித்த மறைத்தேர்வந்துற்றதுவே
வீரவுத்தண்ட விசயன்வடிவெடுத்தான்
மற்றுளோரொல்லா மயங்கிப்புறங்கொடுத்துப்
பற்றுகிறனென்று பகர்வாகையும்பிளந்து
வந்ததேர்மீண்டு மறையவேதானனுப்பி
நந்தருவிற்றூணி நாயகனுமேகரந்து
வைத்துப்பழய வடிவானுன்பேடியைப்போல்
மெய்த்துப்புவைத்தருமன் வீறுநுசலூறுசெய்தாய்
மின்னூல்வலிய விசயன்காண்பேடியென்று
தன்முனிவனென்றுந் தருமடையன்வீமனென்றும்
மத்திரைசேய்கீதாரி வன்மைசரணியென்றும்
உத்தமனேதங்க ளுருவெடுப்பார்நாளையென்று
சொன்னலேயங்கவர்க ளோர்ந்தநாட்போச்சுதொன்று
இன்னலவர்க்கடவி யினியில்லையென்றுரைத்து
பண்பாமெனக்கிளைய பைங்கிளியாளுத்தரைக்கு
நண்பாளன்பார்த்தனென நாதனுடனுரைத்தான்
மைந்தனுரைக்க மனநடுங்கியேமீண்டு
தந்தைமகிட்சி தழைத்துக்களிகூர்ந்து
வெய்யோன்குடதிசையில் மேவியடைந்ததற்பின்
துய்யோரப்பஞ்சவர்க டோகையுமாயொத்திருந்து
ஆலோசனைசெய் தவரவர்கடற்சொருபம்
மேலாகப்பெற்றிருந்தார் வெய்யோன்குணக்கெழுந்தான்

## வெளிப்பாட்டுச் சருக்கம்.

எக்கடலுமெக்கிரிய மெவ்வுலகுமுலகிற்
தக்கபலயோனிகள் சராசரமனைத்து
மிக்கவிதியால்விதிசெய் விதியினைவிதிக்குஞ்
செக்கமலநாபிமுகில் சேவடிதுதிப்பாம்

பூதலமெல்லாம்விடியப் போதுதயமானதற்பின்
ஆதவனைக்கைதொழுதே யைவர்களுமெய்மகிழ்ந்து
புண்ணியவண்ணற் பொருப்பாகியதருமன்
அண்ணலெனவேயோ ராசனத்தில்வீற்றிருந்தான்
வாயுமகனு மகவான்றிருமகனும்
பாயும்பரிநகுலன் பண்புசகாதேவனுமாய்
முறைமுறையாக முதல்வனடிவணங்கி
விறலினுடனே விரவியேசூழ்ந்திருந்தார்
அந்நேரம்வில்லுக் கதிபன்றிறல்விசயன்
முன்னோனைப்பார்த்து முதலோன்றனெற்றியிலே
வடுக்கண்டெங்கொதித்தே வந்தவகையேதெனவே
திடுக்கென்றேழுத்தோனுஞ் செப்பாதுளம்பயந்து
பேசாதிருக்கப் பெயர்ந்துபெயர்ந்தேவினவக்
கூசாதுசாதகமாய்க் கோமானுரைத்திடவே
மாற்றமதுகேட்டு மனதுருகியேமயங்கி
சாற்றரியகோபந் தடம்புரண்டுமேலாகி
ஒல்லைதனிலின்னகரை யோராட்டாய்த்தானெரித்து
பல்கிளையுமன்னனையும் பல்படையுங்கொல்வனெனப்
பதறிச்சினந்தெழுந்து பார்த்தனைப்போய்க்கையாலே
மதியுற்றமாதருமன் வன்போடிறுத்தழுவி
உதறிப்படபடத்தே யுணர்வுதெரியாமல்
கதழ்வுற்றுருத்திரன்போற் காண்டீபனின்றளவில்
கோபமதுதீரக் குவளைத்திருமார்பன்
சாபவிசயன் றனைப்பார்த்தேயேதுசொல்வான்
விரதம்பகர்ந்ததற்கா மிக்கவன்செய்நன்றிதனை
கருதிமறந்துவிடக் காரியமோவீரியனே
நன்றியொன்றுசெய்தோர்க ளுடொருஞ்செய்தீமையெலாம்
பொன்றுமளவும் பொறுப்பரோமிக்கோர்கள்
ஓராண்டதாக வுரவோன்றருநிழலில்
சீராண்டிருந்தோஞ் சினம்பாவமென்பதுபோல்
எவல்செயும்பே ரிராசனுடன்றர்க்கமுற்றால்
கோவம்வருதல் குறிப்பீரதிசயமோ

மன்னவனிடத்தின் மறையோனுத்தாமிருந்து
சொன்னதெல்லாம்பல்காலுஞ் சோராதுதற்கமுற்றேன்
அதனுற்றுதுக்கவுறை யறைந்தானிலத்தெழும்பி
நுதன்மீதினிற்கவறு நொய்தின்வடுச்செய்ததென்ருன்
ஆனைக்குமுண்டு அபகடமொன்றென்பதுபோல்
ஞானமுடையோய்நீ நாரியுடசொல்லாலே
மித்ரமுனியுண்ணு மிருகாமலககனிக்
கத்திரம்போற்சிந்துசின மன்றமர்ந்ததேபோல்வாய்
வள்ளல்செய்தநன்றி மறந்துசிலையெடுத்தால்
எள்ளலுடனூறுதா மிங்கிவனைக்கொன்றதொக்கும்
என்றுதர்மன்சொல்ல விதையமனமெழுகாய்க்
குன்றியுருகிக் குரவன்பதம்பணிந்து
அண்ணலேயுந்த னறங்கொண்டசிந்தையினுல்
எண்ணியிடையூறுக் கிளையோரடங்கலுமே
இற்றைவரைக்கு மிசைந்துமனமொத்திருந்தோம்
பிற்றையிருப்பதுவும் பேர்புகணின்பாக்கியமே
மூத்தவனீசொன்ன மொழியையமுர்தமென்று
பார்த்தன்சினந்தீர்ந்து பாதம்பணிந்திருந்தான்
வாயுசுதன்வீமன் வடவைபோற்பொங்குசினந்
தேயுவப்பினுலமர்ந்த தேபோற்சினந்தவிழ்த்தான்
பரிக்குநகுலனெனும் பண்பாளன்ருனெழுந்து
விரிக்குபுகழ்தருமன் மென்பூவடிபணிந்து
அன்பாயெனக்கோ ரரியவரந்தந்திடென்ருன்
வன்பாயுனக்கென் வரம்வேணுங்கேண்மினென்ருன்
அறிந்தும்படுகுழியி லத்திவிழும்வாறதுபோல்
துறந்தெய்பெருவாழ்வைச் சூதாடித்தோற்ருேமே
அன்றுசொன்னசொல்லே யலதுமறவார்கள்
இன்றுமறுத்தே தியம்புகினுங்கேளோம்யாம்
பட்டோமேகோடியினிப் பாடுபடத்தள்ளாது
ஒட்டாரஞ்செய்தா யுயிர்விட்டான்மெத்தநன்று
இன்னமடவிதனக் கேகென்றெதிரிசொன்னுல்
அன்னதுகேளோமென் றரியவரமீயுமென்ருன்
நன்றென்றினியவர நல்கினுன்றர்மனுமே
குன்றன்னமன்னவர்கள் கோமான்குருகுலத்தோர்
எல்லோர்தனக்கு மிளையோனினிதெழுந்து
நல்லோனேநின்மனது நாடியபோலெந்தனுக்கு
நாட்டமேயல்லாது நம்மனம்வேறில்லையென்று
தாட்டீகமாகச் சரணந்தொழுதிருந்தான்

தொய்வருந்துன்பந் துலைத்தேநயம்படைத்து
ஐவருமன்பா யமர்ந்திருந்தாரம்மானை
தன்னகரிலேயோர் தலத்திலிருக்கும்வகை
மன்னும்விராடனுற்று மகிழ்வாய்த்திறைகளெலாந்
தன்புதல்வர்பெந்து சனங்களொடுதானும்
அன்பினுடன்வந்தே யறன்மைந்தன்றாடொழுதான்
வீழ்ந்தவிராடனையே மெய்மைசெறிநாவானுந்
தாழ்ந்தவனைத்தான்றூக்கித் தன்மார்புறத்தழுவி
அன்பாயிருத்தி யடிபணிந்தோரியாவரையும்
மன்பூரணமாய் மகிழ்வாகவாழ்த்திவிட்டான்
பாதகாணிக்கையெனப் பன்மணியும்பொன்னிதியும்
போதவிராடன் பொலிவாகவைத்ததையுங்
கண்ணுறப்பார்த்துக் களிகூர்ந்திக்காசினிக்குள்
அண்ணலேயுன்னையொழிந் தார்கொடுக்கவல்லாரோ
மும்முறையாம்வள்ளலுக்கு முன்வள்ளனீயதனால்
செம்மையுடன்முக்கொடையுந் தீர்க்கமுடனீய்ந்தாய்நீ
தாருவுமுன்கை தனக்குத்தமொறிச்
சோருமதுவெனவே சொற்றான்றருமனுமே
என்றுமச்சநாட்டுக் கிறையையவன்புகழ
அன்றுமகிழ்வா யறன்மைந்தனைப்பணிந்தே
என்வாழ்வுமென்குலமு மிவ்வுலகுமெவ்வுலகும்
உன்வாழ்வதாயிருக்க வுத்தமனேயென்னிடத்திற்
புன்றொழிலார்போலப் புகுந்தீர்கள்புத்தியிலேன்
நன்றயவாயுங்கடனை நாடவறியா திருந்தேன்
அறியாமையாலே யடர்தியான்செய்தவெல்லாம்
பொறையிலுயர்ந்தோய் பொறுத்தாய்புகழுனக்கே
புத்தியறிவும் பொறைகுணமிலான்செயலைச்
சத்தியனேநின்னையன்றித் தாரொருவர்காவாரோ
என்னவிராட னிசைக்கவறன்குமரன்
உன்னையலாலென்றனக்கு முத்தமர்கள்வேறுளறோ
நின்னகரிற்புக்கி நெடுங்கானிற்பட்ட துயர்
அன்னவைநீக்கி யகம்போலினி திருந்தோ
நின்புதல்வர்நின்கிளைஞர் நின்படையுநின்றுணையும்
என்புதல்வர்போல வெனக்குறித்தாநின்றாயேல்
வன்பினால்னாடுகவர் வஞ்சன்சயினியங்கள்
தென்புலஞ்சேரச் செருச்செய்வோந்திண்ணமென்றான்
என்னமுரசுயர்த்தோ னிவ்வாறுதானுரைக்க
தன்னுட்கலக்கஞ் சலிப்பெல்லாம்விட்டொழித்தான்

என்னைநினக்குறுதி யென்றுரைத்தவெந்தையன்னாய்
மன்னுலகெல்லாம்புரக்கு மன்னவர்கண்மன்னாகேள்
எத்தனையுநீயானா லித்தலம்வேறெங்குளது
உத்தரையும்வல்விசய னுக்குரியதுத்தமனே
என்னுடலுமென்னுயிரு மென்கிளையுமென்றுணையும்
என்னரியமைந்தர்களு மென்படையுநின்னேவற்
செய்வதன்றியார்க்கேவற் செய்யவிருக்குகின்றோம்
ஐவரோதெய்வ மனையவரோவென்றுரைத்தான்
மச்சநாடன்சொன் மகவான்மகன்கேட்டு
இச்சொலெலாஞ்சான்றோர்சொல் லெந்தனுக்கேபுன்சொலென்ன
உத்தரைக்குமியானே யுயிராவுயிர்த்துணையாய்
வித்தகநன்றாய்ப்போல் வீறாயிருந்தமையால்
என்னிலும்வல்ல னெழிலினால்வின்மையினாற்
பன்னுபலபடைக்கும் பற்றலர்க்கும்வெற்றிசுதன்
வாளபிமனுக்குன் மகளுரியாளென்றுரைக்க
ஆளழகன்சந்தோஷ மாயிசைந்தேநல்லதென்றான்
விசயன்றொகுத்து வியமாவிராடனுக்கு
இசையும்படிசொலவே யெல்லோருஞ்சம்மதித்தார்
திக்கெலாம்வாழுகின்ற தேசமன்னர்தங்களுக்கு
ஒக்கவானோர்களுக்கு மோலையுடன்றூதுவிட்டார்
ஓலைநிருப முலகிற்பரவியதால்
மேலானவைவர் வெளியானவைசேட்டு
துளசிபுனைவோன் றுணைவோர்களும்படையுங்
களபப்புயனபிமன் கார்முகசிவேதனொடும்
சென்றார்விராடன் செயநகரிசேருமுன்னே
அன்றெதிர்கொண்டேகினர்க ளைவர்களுமற்றவரும்
அறன்மைந்தனான வைவர்பதந்தனிலே
விறன்மைந்தபிமனுமே மேவியேகைதொழுதார்
மைந்தனையுந்தந்தையர்கள் வாழ்த்திக்களிகூர்ந்தார்
அந்தவிராட னடிசிவேதன்றொழவே
சிந்தைமகிழ்ந்து சிவேதனையும்வாழ்த்திவிட்டான்
நந்தகோபன்குமரன் நாராயணமூர்த்தி
பூவுலகின்வள்ளலெனும் பூபன்விராடனுக்கு
ஆவல்சிவேத னடல்வலியைக்கூறலுற்றான்
சங்கரனைநோக்கியிவன் றான்றவசுசெய்ததுவும்
பொங்கரவேணி பொருசிலையும்பல்படையும்
ஈய்ந்தபடியா லிவன்விற்பிடித்தானேல்
மாந்திப்புறங்கொடுப்பார் மன்னரெலாமென்றுரைத்தான்

கையிலிவன்விற்பிடித்தாற் கார்முகத்தின்வல்லமையால்
வெய்திற்செயிக்கரிது விண்ணோர்க்குமென்றுரைத்தான்
சந்ததிதன்வீரமெலாந் தந்தைசெவியிற்கேட்டு
சிந்தைமகிழ்ந்தான் சிவேதனுடதம்பியர்கள்
தன்முன்சரணந் தலையாற்றொழுதிறைஞ்ச
வின்மன்னவனும் விரவியணைத்துகந்தான்
துருபதன்பெற்ற துரௌபதியாள்புத்திரர்கள்
பெருகும்படையுடனே பீடாகவந்துகண்டார்
பஞ்சவர்கள்புத்திரரைப் பண்பாயணைத்துகந்தார்
தஞ்சமென்றுசந்ததிக டாதையர்கடாடொழுதார்
சேரனுடனிருவர் தேசத்தரசரெல்லாம்
பாரதின்மற்றுமுள்ள பந்துசனத்தோரும்வந்தார்
வந்தோர்களெல்லா மனதிரங்கிக்கண்கலங்கி
அந்தோவெங்கானி லலைந்தீர்நெடுநாளாய்
என்றழுதமன்னர்க் கெழிற்றருமனேதுசொல்வான்
நன்றும்விராட னகரிவந்துசேர்ந்ததற்பின்
ஆதித்தன்முன்பான வந்தகாரவிருட்போற்
சோதித்தகானிலுறந் துன்பகன்றேமென்றுரைத்தான்
சூதினாற்பட்ட துயரையவரவர்கள்
ஓதினார்கேட்டோ ருதிர்த்தார்கண்ணீரரசர்
மேகமெனவிரங்கும் வேந்தர்களைத்தான்பார்த்து
வாகின்றருமன் வருந்தியேசொல்லலுற்றான்
பண்ணுக்கிரங்கியகப் பட்டமான்போலாக
மண்ணுக்கிறைவன் மகன்செய்தவஞ்சகத்தில்
எண்ணுற்றழிந்தே னினிச்செய்வதென்னிவீர்
கண்ணுக்கிமைபோற் கலர்ந்திருக்குங்கண்ணிணையீர்
விண்ணிரங்கமண்ணிரங்க வேந்தரிரங்குஞ்சபையில்
சல்லியனென்றுந் தருகணனவன்பாவி
புல்லியனென்றும் புகலானழுங்குநெஞ்சான்
விரகிற்புகுந்தே விருந்துண்டசோற்றையெண்ணி
உரகக்கொடியோற் குதவிசெயவிரும்பி
இருந்தவிடத்தினுக் குத்தாரமியம்பால்
அருந்துப்புவேலா னவைநீத்துமேகினனே
புன்மதியின்றீயனவன் போயென்னிருந்துமென
நன்மதியாமன்னர் நவின்றிருந்தாரப்போதில்
மண்மதிக்கத்தக்க வளமைசிறப்பாகக்
கண்மதிக்குங்காசி சலியானமேன்மையுடன்
வில்லியபிமனுக்கு மெய்யழகியுத்தரைக்கும்

பல்லியங்ளாற்பப் பரிந்துமணஞ்செய்தனரோ
சமர்க்கொருப்பட்ட தைரியஞ்சேர்பஞ்சவர்கள்
அமைக்கும்பலிபலவும் அந்தரிக்குத்தானளித்து
வன்னிமரப்பொதும்பில் வைத்திருந்தபல்படையும்
இன்னலறக்கைகொண் டிசைந்திருந்தார்பஞ்சவரும்
மாயவனும்பஞ்சவரும் வந்தபலமன்னவரும்
ஆயுமதியுடனே யாலோசனைபுரிந்து
சூதினாற்கொண்டபுவி சூதினாலுங்கொளலாம்
மோதமரிற்கொள்வதெனின் மோதமரிலுங்கொளலாம்
அரவின்கொடியா னகமறிவோந்தூதிலெனக்
கரியனிவையுணாக்கக் காமபாலன்மகவான்
உற்றோரறிய வுலகுமன்னர்தாமறிய
கற்றோனேசூதில்வென்ற காசினியையாளலுற்றான்
துரியோதனன்புரக்குந் தொல்புவிக்குமாசைகொண்டு
கரியோனேீயழித்தல் காரியமோவீரியமோ
கொடிதுகொடிது குறித்தமதிதீதென்றான்
நெடியோன்றனக்கிளைய நீதிசெறிசாத்தகியுங்
கண்கடழல்சொரியக் கைபதறிமெய்பதறி
புண்கள்பட்டுநெஞ்சம் பொறுக்காச்சினமூண்டான்
மூத்தோனைப்பார்த்து முகங்கள்கடுகடுத்து
தோற்றுப்பெருமதியோ தோற்றியதேனுந்தனக்கு
ஓரமாயுந்த னுளமிருந்ததானாலும்
வாரமாநீயெழுந்து மாற்றநீசொல்வாயோ
நன்றிநடுவுணாக்கு நாவேநடுநாவு
அன்றுநடுச்சொல்லா தவனாவேசெத்ததென
உன்போலுமன்ன ருணாகேட்டரவுயர்த்தோன்
அன்பானவாழ்விழந்தா னந்தந்தனிலறிநீ
வெள்ளைமனிதனென்று மேனிகண்டவீணர்சொல்வார்
வெள்ளையாய்க்கொல்லுநஞ்சுன் மெய்கண்டார்வேந்தெலாம்
மெலியப்படுத்துகின்ற மேவார்க்குத்தூதுவிடல்
வலியப்பிடித்தே மடிப்பானவஞ்சனையே
எதுக்கவனாட்டை யீய்ந்தானேற்கைகொடுநீர்
வாதுற்றவீமன் மகிழ்ந்தருந்தலெப்போதும்
மையளகம்வன்னிதனில் வந்தாண்முடிப்பதெப்போ
தையறுயர்தீர்ந்தே தானிருப்பதெப்போது
இளையதமையனையு மிவ்வாறுதான்சினந்து
வளமைசெறிபஞ்சவனா மன்சாத்தகிபார்த்து
ஏழைகட்காசை யிசைத்துங்களைக்கெடுக்க

ஆழிக்கரத்தா னகரினைந்தான்பஞ்சவரோ
நாடாளவேண்டுமெனி னற்போரின்மூண்டிடுங்கள்
காடாளவேணுமெனிற் கண்ணன்சொற்கேட்டிடுங்கள்
என்றிவன்சொல்ல வெழிலானசோழனுடன்
நன்றிசெறிமன்னவர்க ணாரணனைத்தானோக்கி
நின்றமையன்சொல்லுகின்ற நீதியுமக்கேற்றதுவோ
புன்றொழிலோர்க்கும் பொறுக்குமோவிவ்வசனம்
என்னமனிதனிவ னிவ்வளவோபுத்தியென
சின்னமனிதர்களுஞ் செப்புவரோவிப்படிக்கு
நன்மைக்குடையதங்கை நற்றூலிமங்கனன்றோ
தின்மைக்குடையமகன் செல்வமேபோதுமன்றோ
மகளுக்குபயமுடன் மற்றிவனங்கேசேர்ந்து
இகலுற்றிமெருக னிவ்வுலகையாள்வானோ
பம்புமரவுயர்த்தோன் பாருலகையாள்வதற்கு
வெம்பியேபஞ்சவரும் விட்டுவிடப்போவர்களோ
என்றுசிலமன்ன ரிடிபோலுரைத்திகழ
ஒன்றுமறுசொல் லுரையாதேமாலிருந்து
தருமன்முகம்பார்த்துத் தானுலுகமாமுனியைத்
துரிதமுடன்றூதாய்ச் சொல்லியனுப்பெனவே
மாலுரைத்தசித்த மலிந்தழன்றேயூர்புகுந்தான்
கோலமுற்றநாஞ்சிற் கொம்படையானுமுற்று
தன்னையேநொந்து தனதுமதியையிகழ்ந்து
பின்னவனுமன்னவரும் பேசியசொன்னெஞ்செரிய
தலத்தையேநோக்கித் தானடந்தான்சாத்தகியும்
மற்றுமுள்ளமன்னவர்கண் மாறருமனைப்பார்த்து
உற்றுனதுதூதுக் கொழுங்கானேயாமாகில்
நின்னிருபங்கண்ட நிமிஷமேவாரனென்று
மன்னவர்களெல்லாம் வளநகரிபுக்கினரோ

## உலூகன்றூதுச் சருக்கம்.

மீனமாகியுங் கமடமதாகியு மேருவை யெடுக்குந்தாள்
ஏனமாகியு நாவரியாகியு மெண்ணருங் குறளாயுங்
கூனல்வாய்மழு தரித்தவராகியு மரக்கரைக் கொலைசெய்த
வானநாயக னாகியுநின்றமான் மலரடி மறவேனே.

அரசரகன்றதற்பி னச்சுதனுற்சொற்படியே
முரசக்கொடியோன் முனியுலுகனையழைத்து
கமலப்பதம்பணிந்தே கங்கைசுதனெந்தையற்கும்
எமதுதகவாசா னிருவர்கள்குருசேய்தனக்கும்

பாதகமலம் பரவினேமென்றுரைத்து
தூதுரைத்துமீளனவே சொன்னான்முரசுயர்த்தோன்
அந்தணனுங்கேட்டு வறன்மைந்தன்சொற்படியே
சிந்தைமகிழ்ந்திசைந்து சென்றானுலூகனுமே
போனமறையோன் புகழத்தினபுரியில்
ஞானமுடன்றிரித ராட்டிரன்பேரவையில்
புக்குமுடனே புடையிருந்தமன்னரொடுஞ்
சிக்கென்றெழுந்து சியோதனனுந்தாடொழுது
ஆசனத்தில்வைத்தா ருண்வீடுமன்விதுரன்
நாசவிழியின்னு ளமுனியைத்தாடொழுது
வந்ததெனவென்றே மறையோன்றனைக்கேட்க
சுந்தரமன்னர்மன்னு தூதாகவந்ததென்று
அரசரிருவருக்கு மந்தணரின்மூவருக்கும்
முரசுயர்த்தோன்வந்தனையை முன்னேயெடுத்தியம்பி
பன்னாளிற்சொன்ன படிகாடுதானுறைந்து
இன்னாளிற்பஞ்சவர்க ளின்றேவெளிக்குவந்து
செய்கைகளெல்லாந் திருவுளத்துநீயறிய
மெய்கமழவாயான் விளம்பென்றெனக்குரைத்தான்
ஆதலாலிங்ஙன் னவையுளோரியாவர்களும்
போதவறியுமென்று பூசுரனுந்தானுரைக்க
அன்றுரைத்தசொற்படியே யாண்டுபதின்மூன்றதன்மேல்
இன்றவர்கட்குள்ளநக ரிப்போதேயீய்ந்திடுவீர்
அல்லதுமுன்போற்சூது ஆடிடினுமாடிடுங்கள்
இல்லையெனிற்போருக் கிப்போதெழும்பிடுங்கள்
மலைவோமெனவே மனதுவைப்பீராமாகில்
நிலைபோந்தலைபோகு நின்குலமுமேமடியும்
பொருதவென்றைவரும்வெம் போர்மூண்டாராமாகில்
நிருதர்படுகளம்போ நீங்களெலாஞ்சாவதுமெய்
ஒங்களுக்குவெற்றியினி யோர்போதுங்கிட்டாது
அங்கவர்க்குவெற்றியுண்டா மந்தத்திற்கண்டறிவீர்
சொன்னானுலூகனெனுஞ் சொல்லிறிலேதோற்றும்
மன்னுவிதயமதில் வந்தபடியானுரைத்தேன்
உரித்தானபேர்களெல்லா மொன்றுமினிதிருந்து
கருத்தாய்ந்துதேறிக் கடிதிலொருமொழியாய்
இன்னபடியென் றியம்புமெனவுரைக்க
மன்னவர்களெல்லா மறுத்தொன்றுஞ்சொல்லாமுன்
ஆசாரிசெல்வ னறன்மைந்தன்சொற்படியே
பேசாதேநாட்டைப் பிரித்தீய்ந்தான்மெச்சநன்று

அல்லாதவன்மே லலம்புரிதனீதியல்ல
எல்லாருமொன்றா யிகலெதிர்த்தாரானாலுங்
கூர்கணைவாய்தோறுங் கொழுப்புங்குருதியெழப்
போர்பொருதியேமாய்ப்பன் புரந்தரன்சேய்வில்விசயன்
காசைவண்ணனோடுங் கலந்துநாளெண்ணிரண்டாய்
பூசலவனசெய்தவலி பூவுலகங்காணாதோ
ஈசனுடன்விற்போற் கெதிர்த்தானைவெல்வதெவர்
வாசவனைத்தானிலைக்க வைத்தானைவெல்வதெவர்
நின்படையுநீயு மினையடைந்தபேர்களுமோ
முன்பொருதவல்லார்யார் முராரிதிருமைத்துனனை
என்றான்றுரோண னிதுவேமகனுரைத்தான்
அன்றேகிருபனுமே யவ்வாறுதானுரைத்தான்
காடுறைந்தவைவர்களுங் காலந்தனைக்கழித்து
நாடுதாவென்றேகேட்க நல்கமனநாடாமல்
கேடுவருமுன்னமதி கெட்டுவருமென்பதுபோல்
நாடுகின்றாய்போர்பொருத நன்றுநாநாமனெதிர்
தேரோடுதேரொதிர்த்துச் செங்கையிலேவில்லெடுத்துக்
காரோடுகார்போற் கணைக்குக்கணைசெலுத்த
வல்லனெவன்சொல்லுகென மந்தாகினிபுதல்வன்
சொல்லுமெனவந்தகனைத் தூயோன்மிகக்கடுத்தான்
உறுதியுடன்வெகுண்டே யுத்தமனிவ்வார்த்தைசொல்ல
கறுவுசினமூண்டு கன்னன்கனன்றெழுந்து
பரசுமுனியிடத்திற் படித்தவித்தைபாராட்டி
உரசுபெறவென்ற வுரமொன்றேயல்லாது
என்னைவிடவல்லவனோ விந்திரன்சேய்சேவகனோ
பின்னவர்கண்முன்னவர்கள் பேரானநால்வரையும்
உன்னியிமைப்பொழுதி லோர்நொடியின்மாய்ப்பனென
பஞ்சவர்கள்பேச்சுகளைப் பாராட்டவேவேண்டாம்
அஞ்சுவதேனியான்போது மஞ்சாதிருங்களென்றான்
வாய்க்கேடன்சொல்ல மனம்பதறிக்கங்கைசுதன்
ஈற்காலேகீறுவதை வாய்க்காலாச்செய்வதுண்டோ
ஒந்தனுடனுக்கு முயிர்நாக்கோசெத்ததுவோ
சந்தமுடனரங்கந் தன்னிலன்றுவென்றனையோ
செருவிற்றுருபதனைத் தேரிற்பிணித்தனையோ
பொருவிற்சிலைவளைக்கப் போய்நீயுநின்மகுடம்
பங்கமுற்றுமண்ணிற் பதறியன்றுவீழ்ந்தனையே
சிங்கமெனமீண்டுஞ் செருச்செய்துவென்றாயோ
அங்கைவருமிருப்ப வல்லவென்றுங்கொல்லவென்றும்

பொங்கியவீரம் பொருபடையெல்லாமெடுத்து
யாகசேனன்றன் அணிநகரிலேசேர்ந்து
வாகுடனேபோர்பொருதி வந்தவனுநீதானே
அன்றுமுடிபோ யலைந்துலைந்துவோடிவந்தாய்
மன்றல்பெறக்காண்ட வனமெரித்தானீதானே
திக்குவிஜயஞ் செலுத்தினவனீதானே
மிக்ககுருகைவென்று வேந்தனையுமீட்டனையோ
சித்திரசேனனன்று தேரோடுமன்னவனைப்
பத்தியேபோம்போது பாசத்தான்மீட்டனையோ
கண்ணனுடனெதிர்த்துக் கார்முகத்தால்வென்றனையோ
அண்ணல்சிவனோ டலம்புரிந்தானீதானே
வானவர்க்காய்த்தானவரை மாய்த்துவிட்டோனீதானே
தானமுளவெள்ளானை தானேறிப்பொன்னுலகில்
வீதிவந்தானீதானே வெட்கமுனக்கிலையே
சோதிமுடியிந்திரனாற் சூட்டினதுமுன்றனக்கோ
சென்னலொருதேரில்வர நீளனந்தந்தேர்கூடி
அன்னவனைவென்றனையோ வம்பெய்தாயோகெடுவாய்
இமைக்குமுன்யான்காண வெட்டுத்தாமுறிந்தாய்
சமர்க்குநீ வீரனென்னத் தகுமோயிலகைஷயிலாய்
எப்போரிலாவதுவில் விகலிற்செயித்ததுண்டோ
ஒப்போநீபார்த்தனுக்கு வரமழிந்தவீணாபோ
அன்னாலுக்கீடென் றடர்பேச்சேயல்லாது
வின்னாணறுத்தனையோ வெங்கொடியைவீழ்த்தினையோ
தனித்தேர்முடுக்கித் தளமெல்லாந்தானறுத்து
நினைத்தபடிமுடித்து நேர்ந்துநிரைமீட்டு
எதிர்த்தோரடங்க விமைப்பிற்புறங்கொடுக்க
கதித்தேயமராடிக் கைசெய்துவாயுரைத்து
வீரசிங்கநாதம் விறலாகத்தான்முழக்கி
நாரசிங்கமாவிசயன் நடந்ததைநாங்காணோமோ
ஒற்றைத்தேர்க்காத்தா துடைந்தோர்களல்லாது
மற்றும்பேருண்டோ வலுமையாய்வெல்வதற்கு
என்னவேகன்ன னிதையமழிந்திடவே
மன்னர்கோன்கங்கை மகனோதிமீண்டுரைப்பான்
தான்சாகவேமருந்து தானருந்தச்சம்மதித்தீர்
நான்சாகவேபயந்தேன் நாடிப்போர்செய்யுமென்றான்
நாளைவிசயன்முன்னி னண்ணிப்போர்செய்யவல்லான்
காளையாங்கன்னனன்றிக் காவலர்யாரொன்றுரைத்தான்
கன்னன்தலைகுனிந்தான் கைகொட்டியேநகைத்தார்

மன்னரவையில் வணங்காமுடிவேந்தன்
கங்கைமகன்முதலாய்க் காவலனையெண்ணாமல்
அங்குவந்தலூகனைப்பார்த் தாரபாரத்துடனே
நானுண்டநாடெனக்கே நாடியந்தப்பஞ்சவர்கள்
தானுண்டகாடவர்க்கே தப்பாதிதேகுமென்றான்
அவ்வார்த்தையெல்லா மறன்மைந்தனுக்கடவாய்
வெவ்வாய்மையாவும் விளம்பிவிரித்துரைத்து
துவரைப்பதிபோய் துளசியானுக்கிதெலாம்
நவமுற்றிடவுரைத்தான் நாரணனுந்தான்கேட்டு
மகிழ்ந்தேகணத்தில் வயவிசயனிங்குவர
உகந்துரையுமென்றே யுத்தரமுந்தானளித்தான்
தூதுமுனிவன் சொலப்போனதின்பிறகு
வாதிட்டகன்னனுடன் மந்தாகினிமகனை
கோபங்களாற்றிக் குளிர்ந்தமொழியாற்றேற்றி
தாபரமாய்த்தானிருவர் சாந்தமாகச்சேர்த்து
மன்னர்பலர்களையும் வண்மையுடன்கூட்டிவைத்து
துன்னுமமைச்சரையுஞ் சோராதிருத்திவைத்து
எண்ணியெண்ணியாலோ சனையாயிராஜமன்னன்
மண்ணுலகிலெத்தேச மன்னருக்குந்தூதுவிட்டு
மாயவனைக்கூட்ட வளர்துவரைமாநகர்க்கு
தீயனையநெஞ்சன் றிரியோதனனடந்தான்
இலங்கையனைய வெழிற்றுவரையிஞ்சியெங்குந்
துலங்குந்துவசந் துளிர்மறித்ததொத்ததுவே
அக்குறியுங்கண்டே யரவுயர்த்தோனன்னகரில்
புக்கியெயில்வாயிற் பூபதியுந்தான்கடந்து
மாயன்றுயிலு மணிமாடக்கூடமதில்
வாயிலோர்மன்னை மறியாதுவிட்டமையால்
அண்ணறுயிலென் றரவுயர்த்தோனுமெயில்வாய்
எண்ணமுடனே யினிதிருந்தானம்மானை
மன்னனிருந்த வகைமாயவனறிந்து
இன்னமெனப்பார்த்த னிசைந்துவந்தானில்லையென்று
கள்ளநினைவான்மாயன் கண்டுயில்வான்போலிருந்தான்
தெள்ளியசொற்பார்த்தன் க்ஷணத்திலேயங்குவந்தான்
வந்துதிருமாலை வாகையுறப்பணிந்தான்
அந்தமுடைய வருச்சுனனைத்தான்பார்த்து
எங்குவந்தாயென் றிடத்திலேபார்ப்பளவில்
அங்குவந்துநின்ற வரவுயர்த்தோனைப்பார்த்து
வந்ததறிவிக்காமல் வந்ததேனென்றெழுந்து

சிந்தையுடன்மார்போடு செம்மறனைத்தழுவி
இருவரும்வந்த வியல்பேதெனக்கேட்டான்
விரவபடைத்துணைக்கும் வேண்டியேவந்தோமென்றார்
உத்தமனான வுதிட்டிரர்க்குமுன்வாய்மை
சித்தமகிழ்ந்துருகிச் செப்பினேனிப்போது
எந்தன்விழிக்கு மிலக்கானன்பார்த்தனென்றும்
பந்தமுடனேயான் பஞ்சவர்பங்கென்றுரைத்தான்
சார்ந்துரைத்தாயோநலது தான்சமரினீபடைதான்
போர்க்கெடுக்காதேயெனவும் பூபன்வரங்கேட்டான்
அவ்வார்த்தையைக்கேட் டரிபார்த்தனைநோக்கி
ஆயுதமில்லாதுனக்கு யான்செய்வதென்னெனவே
மாயவனேநீயென் மணித்தேரூர்ந்தாற்போதும்
வானவருந்தானவரும் வாளரக்கர்மற்றவருந்
தானவரும்வந்தென் றனுமுன்னேநிற்பாரோ
நீறுபடச்செய்வே னிமைப்பளவிலென்கணையால்
தேறும்பரிதூண்டித் தேர்ச்செலுத்தினூற்போதும்
விசயனிவையுரைக்க வேந்தன்றனைப்பார்த்து
இசையமணித்தே ரிவற்குநானூர்வதன்றி
படைகொண்டுனது படைபொருதேனென்றுரைக்க
தடைகொண்டயானொழியத் தம்பியுமேயல்லாத
யாதவருஞ்சேனைபடை யாவுந்தமையனையும்
தீதறவேமன்னா செருத்துணைகொள்ளென்றுரைத்தான்
கண்ணனருளியதோர் கட்டுரைகேட்டுண்மகிழ்ந்து
வண்ணம்வெளறியமெய் மாமனுக்கெல்லாமுரைத்து
பேருவகைகொண்டு பெரும்படையெல்லாந்திரட்டி
வாருமென்றுமாமனுடன் மன்னனுரைத்தகன்றான்
நாகக்கொடியோன் நகர்சேர்ந்ததின்பிறகு
வாகுத்தகண்ணனுடன் மால்விசயன்றேரேறி
தருமனிருக்குந் தலம்வந்துதான்சேர்ந்து
விரவிநடந்த விவரமெல்லாந்தானுரைசெதார்

சஞ்சயன்றூதுச் சருக்கம்.

ஒருதலத்திடை யவதரித்தணி பொதுவர்சிற்குடி லுறைவதோர்
மரகதப்புய றனையெடுத்தொரு மகவெனத்தன திறுதியால்
அரிதுபற்றிய வலகைசெற்றிட வணிமுகப்பய நுகர்வரு
மருதிடைத்தவழ் பொருவில்வித்தகன் மலரடிக்கண் வழுத்துவாம்

உரகக்கொடியோ னுலகளந்தோன்செய்கையெல்லாங்
குருடத்தகப்பனுக்குக் கூறினான்கேட்டவனுங்

அந்தகனுமக்க ளடங்கலையுந்தானழைத்து
கந்தனிகர்கன்னனையுங் காயுஞ்சகுனியையும்
ஓர்தலத்தில்வைத்தே யுசாவியொருவிரகாய்ப்
பார்தலத்தேவிட்டேகிப் பஞ்சவர்போகும்படிக்கு
மண்கொண்டான்வஞ்ச மனங்கொண்டேசஞ்சயனை
நண்பதாய்ப்பாத நமஸ்கரித்தேயேதுசொல்வான்
குருகுலத்துக்கொத்த குருவேநீயாதலினல்
வருகுலத்தோர்நின்சொன் மறுக்காரொருபோதும்
பெருகொலைத்தீயைவர்கடான் பேசுமாணக்கருத்து
ஒருகுலத்தின்மக்க ளுலகாசைசெய்யுமென்றான்
அங்கவர்கள்பூவாசை யற்றுவிடும்வாறாக
இங்குனதுபுத்தியினா லேற்றபடிதிருத்தி
அவர்கடவமே யருங்கானிற்செய்திருக்க
இவர்களுலகாள வேற்றுதவிசெய்திடென்றான்
நன்கண்ணிலாதான் நரருக்கும்பொல்லாதான்
வன்கணன்சொல்லை மறாதுமுனியெழுந்து
முரசக்கொடியோன் முதியோர்சபையணுகி
விரைவுற்றுப்பஞ்சவர்கண் மேவியடிதொழுதே
அந்தணனைமுன்வைத் தருள்வந்தவாறெனவே
அந்தகன்சொல்லை யடைவாய்விரித்துரைத்தான்
புவியாளுதறீது போலும்வனமணுகி
தவமேபுரிந்தீர் தவமேபெருஞ்சிறப்பு
அவமேயடற்போற் கவனிபுரந்திடுதல்
சிவமேபெருவீர்கள் சீர்தவமேசெய்யுமென்று
உலகமயக்கி லொழியாததுன்பமுற்று
கலசமுடனரகிற் காயம்வீழாதபடி
நற்றவஞ்செய்த னலம்வாழ்வெனநினைந்து
உற்றநன்மோக்ஷ முறும்பாதைதான்பாராய்
அரிதுமனுவாக லரிதுருவோடேபிறத்தல
அரிதுபலகலையு மாராய்ந்தேஞானமுறல்
அரிதுசிவத்துக் கடுத்துமுறைபுரிதல்
அரிதிவையெலாமெளிய தானதுனதறிவால்
எண்ணும்படியே யெழிற்றவமெல்லாம்பலிக்கும்
மண்ணிற்றுறந்தோர்க்கு மன்னன்றரும்புகண்டாய்
சார்ந்தசினத்துயிருந் தன்னுயிரும்போமளவும்
வேந்தனுனக்கான மேதினியையீய்வானோ
மிக்கதவஞ்செய்விசுவா மித்திரனைப்போலாகத்
தக்கதவஞ்செய்வதுவே தானதிகமென்றுரைத்தான்

பல்கோடிவாய்மை பகர்முனியைத்தான்பார்த்து
மல்காவனையான் மகிழ்ந்தோகைபுரிந்து
அனியாயமான வனீதனுலகாள
மனுநீதிகுன்ற வனமியாம்புகுந்துதவஞ்
செய்தாலுநற்றவமுஞ் சித்தியாகாதுலகோர்
வைதாலுந்தோஷநமை வந்துதொடாதாதலினால்
வன்மமேதான்றுடங்கும் வஞ்சகமேசெய்யுகின்ற
சென்மமபழிகாரர் சேரமாளப்பொருதி
மதத்துரைத்தவாய்களிலே வாயுசுதன்றாளாலே
உதைத்துச்சினந்து வுறுசினமெலாந்தீர்ந்து
பூவுலகமெல்லாம் பொருந்தவொருகுடைக்குண்
மேவியேயாளுமன்னன் மெய்யறிவுநீயுரைத்தால்
பாருலகையாளவொரு பாலனுக்குத்தானீய்ந்து
சீருடனேநற்றவங்கள் செய்வோமெனவுரைத்து
நீருண்டகாடாய் நிலவரமாய்நூற்றுவரை
போருந்திமாளப் பொருதுவதேநல்லதவம்
மன்னர்க்குப்போரோ வலியதவமென்றுரைக்க
பின்னுற்றதம்பி பெருமூச்சுத்தானெறிந்து
இந்தத்தருண மியம்பல்கடனெனவே
பந்தத்தையொத்தேயிரு பார்வைதழல்சொரிய
வாய்திரக்கவொட்டாமல் வன்சினமென்மேன்மூளக்
காய்திறந்தவீமன் கடுங்கோடைப்பேரிடிபோல்
வந்தமுனிவன் மனந்துணுக்கமெய்நடுக்க
சிந்தைகடுகடுக்கச் செப்பலுற்றானேவீமன்
எமக்குமவர்க்கு மிசைந்தகுருமுனியே
உமக்குமிதுதொழிலோ வோர்புறத்திலேசார்தல்
இடக்கண்வலக்கண் ணிரண்டுஞ்சரியெனவே
பிடர்க்கண்மலர்க்கண்ணிலிதன் பெற்றியாய்நீயுரைத்தாய்
கடற்படைகூடிப் களித்தணிந்தவந்நாளில்
அடற்றின்கதையா லடிக்குமருந்தவங்கேள்
தவமென்றுநீயுரைத்த தல்லப்பெருந்தவங்கேள்
சிவந்தபெருஞ்சோரி திக்கெல்லாந்தானூற
கவந்தச்சிரமக் களமெல்லாநின்றாட
பவந்தமெனப்பேய் பலதிக்குங்கூத்தாடச்
சோரிச்சுழியாற்றிற் றோன்றுதுறைசுற்றாட
காரொத்ததோல்பரிதேர் காலாள்சுழன்றாட
மேகங்கடொட்டகிரி வெம்பிணமேலாறோடக்
காகங்களாடக் கழுகுபருந்தாட

நாய்நரிகடேவையுள்ள நற்பிணங்களைப்பிடுங்கப்
பேய்நிலைகள்கொண்ட பெரும்போர்க்களந்தனிலே
கடலொத்தேவந்த கணப்படையெல்லாங்கடிந்து
மிடலுறத்தூற்றவனா வெம்படையாலேமடித்து
பூபாரந்தீரப் புவகமதைக்காத்து
மாபாரராஜசூய யாகமகமுடிக்கும்
வெங்கனல்வேள்வியந்த வீரமுனிதானடத்த
சங்கையுடன்செய்வேன் றவமேயெனக்கிதென்றான்
இன்னமுஞ்சொல்ல விசைந்தவனைத்தானமர்த்தி
பின்னவர்தன்னையொன்றும் பேசாமலேநிறுத்தி
மாமுனியையுட்சினமு மாறும்படியுரைத்து
காமன்றன்றாதைமலர்க கண்ணனுமேயேதுசொல்வான்
பயனிலாப்புன்சொற் பகர்ந்தோர்செயலிதெலாம்
வியனுற்றவெங்கோபம் விம்மிவீமனுரைத்தான்
பாராட்டலென்காண் பயனிலாப்புன்மொழியைப்
போராட்டமாகப் புகைவார்நீயிங்கிருந்தால்
என்றவைசொல்ல வெழிலவைவிட்டந்தணனும்
நின்றொன்றுஞ்சொல்லா னினைவைவற்கென்றறிந்து
சீரத்தினபுரிக்குச் சென்றந்தமாமுனியும்
பாரச்சொல்லெல்லாம் படிப்படியாய்த்தானுரைத்தான்
சஞ்சயன்சொற்கேட்டுத் தறுகணன்மக்களோடும்
வஞ்சமிருந்தே மனவயிரங்கொண்டிருந்தான்
அஷ்டதிசையு மளிக்குங்கருணையுளான்
கிருஷ்ணன்றாதோடு யுத்தங்கேட்பீரறிஞோரே.

ஆ_ பருவம் ௪-க்கு சருக்கம் ௨௰௬-ம்

முதற்பாகம்.



# ஸ்ரீ மகாபாரத அம்மானை

## சருக்க அகராதி.

